بسم الله الرحمن الرحيم

காலம் 28-03-2020



உலகத்தைப் பற்றி எதுவும் புரிந்து கொள்ளாமலே நாம் அன்றாடம் வாழ்க்கை நடத்தி வருகிறோம் .

உயிர்வாழ்வை இயலச் செய்கிற கதிரொளியை உற்பத்தி செய்யும் பொறிமுறை பற்றியோ , விண்ணில் சுழற்றி வீசப்படாமல் பூவுலகோடு நம்மை ஒட்ட வைத்திருக்கும் புவிஈர்ப்பு பற்றியோ , எவற்றால் நாம் ஆகியிருக்கிறோமோ , எவற்றின் நிலைத் தன்மையை நாம் ஆதாரமாகக் கொண்டுள்ளோமோ அந்த அணுக்கள் பற்றியோ நாம் அதிகமாய்ச் சிந்தித்துப் பார்ப்பதில்லை .

இயற்கை ஏன் இப்படி இருக்கிறது ?அண்டம் எங்கிருந்து வந்தது ? அல்லது அது எப்போதும் இஙகுதான் இருந்ததா ?

காலச் சக்கரம் என்றாவது ஒரு நாள் பின்னோக்கிச் சுழன்று காரியங்கள் காரணங்களை முந்திக் கொள்ளுமா ? அல்லது மாந்தர்கள் அறிந்து கொள்ளக் கூடியதற்கு இறுதி எல்லைகள் உண்டா ?
இப்படியெல்லாம் கேள்வி கேட்டு சிந்திப்பதற்கு நம்மில் பலருக்கு நேரமில்லை.

காலம் அழிப்பது தவிர வேறு என்ன செய்யும் ?

وَقَالُوْا مَا هِىَ اِلَّا حَيَاتُنَا الدُّنْيَا نَمُوْتُ وَنَحْيَا وَمَا يُهْلِكُنَاۤ اِلَّا الدَّهْرُ‌ وَمَا لَهُمْ بِذٰلِكَ مِنْ عِلْمٍ‌ اِنْ هُمْ اِلَّا يَظُنُّوْنَ
"இவ்வுலகத்தில் நாம் வாழும் வாழ்க்கையைத் தவிர வேறொரு வாழ்க்கை இல்லை" என்றும், "(இதில்தான்) நாம் வாழ்ந்து கொண்டிருக்கின்றோம்; பின்னர் இறந்து விடுகின்றோம். காலத்தைத் தவிர (வேறு யாதொன்றும்) நம்மை அழிப்பதில்லை" என்றும் அவர்கள் கூறுகின்றனர். இதைப்பற்றி இவர்களுக்கு யாதொரு ஞானமும் இல்லை. இவர்கள் வீண் சந்தேகத்தில் ஆழ்ந்திருப் போரைத் தவிர வேறில்லை. (குர்ஆன் : 45:24)

மனிதன் பிறப்பதே உலக இன்பங்களைத் துய்ப்பதற்குத்தான் என்று ஒரு கூட்டத்தினர் எண்ணி இருந்து கொண்டே இருக்கிறார்கள் . பாவ மூட்டையை மூட்டை மூட்டையாக அள்ளிக் கட்டிக் கொள்கிறார்கள்.

இன்று கூட நம்மிடையே " மறுமையும் இல்லை , மீண்டும் உயிர்ப்பும் இல்லை அட , மரணத்திற்கு பின் ஏதும் இல்லை" என்று நினைப்போரும் நம்மிடம் உண்டு .இந்த நினைப்புதான் துணிந்து பாவம் செய்ய தூண்டுகிறது .

" இறைவன் இப்படிச் செய்தான் " என்று அறிவுறுத்தப்பட்டால் , " அட , அது இயற்கையாகவே நிகழ்ந்தப்பா விடு கவலை" என்பர்

" சரி , அந்த இயற்கை என்றால் என்ன ?
அது எங்கிருந்து வந்தது ? ஏன் வந்தது ?
எப்படி வந்தது ? " என்று கேட்டால் அவர்களால் பதில் அளிக்க முடியவில்லை.

கடல் பிளந்து பாதை பிறந்ததும் ,
சந்திரன் பிளந்து பின்பு இணைந்ததும் ,
நெருப்பு பற்றி பின்பு குளிர்ந்ததும் இயற்கைதானே என விட்டு விட முடியுமா என்ன ?

" இந்த உலக வாழ்க்கையைத் தவிர வேறில்லை" என்று வாழ்ந்து வந்த மக்கத்து இணைவைப்பாளர்கள் , "காலத்தைத் தவிர (வேறெதுவும் ) நம்மை அழிப்பதில்லை " என்று அவர்கள் கூறினார்கள் .

காலம் ஏன் நம்மை அழிக்க வேண்டும் ?
பிரபஞ்சங்களின் படைப்பு , மனிதனின் பிறப்பு , அவன் வாழ்நாள் , அவன் மறைவு , பூ பூக்குவதும் காய்கனியாகி உதிர்ந்து போவதும் , சந்திர , சூரியன் , விண்மீன்கள் , விலங்கினங்கள் , ஊர்வன , பறப்பன - ஆகியவை பிறந்து மறைந்ததெல்லாம் பற்றி இவர்களுக்குத் தெரிந்தவை ,தெரியப்படுத்தபட்டவை யெல்லாம் மேலெழுந்தவையான சில சொற்ப செய்திகள்தாம்.

ஆனால் இந்த மேலெழுந்த நோட்டக்காரர்களின் கண்களில் படாமல் மறைந்து கிடப்பவை கோடான கோடி உண்மைகள் .

காலம் உள்பட பிரபஞ்சங்கள் அனைத்தையும் படைத்து , கண்காணித்து , இயங்க வைக்கும் இறைவன் மீது முழு நம்பிக்கை வைத்தால், இந்த கோடான கோடியில் நமக்குத் தேவையான உண்மைகள் பற்றி காலம் நமக்கு தெளிவை பிறக்க வைக்கும்

ஓர் இரவுப் பொழுதான காலம் (லைலத்துல் கதிர் இரவு) 83 வருடங்களுக்கும் மேலான பாவத்தை மன்னிக்க செய்யும் .

அரபா வெளி`லுஹர் பொழுதிலிருந்து மக்ரிப் வரையுள்ள ஒரு பகல் பொழுது காலம் அன்று பிறந்த பாலகனாய் அது தூய்மையாக்கி விடும் .

காலம் தூய்மையானதும் துல்லியமானதும் கூட ! காலத்தை மறந்து கோடிக்கோடியாய் அநியாயமாய் இன்பம் துயிக்க மனம் செய்யும் . அதுவரை காலமான மாயம் மாயமாகத்தான் இருக்கும் .

🖉 ரஹ்மத் ராஜகுமாரன்

டைம் டிராவல் (Time Travel ) 1



கனவுகளை நனவாக்கும் முயற்சியில் இப்போதைய அறிவியல் பயணிக்கின்றது என்றும் சொல்லலாம் காரணம் மனிதன் விஞ்ஞானத்தில் பயணிக்கிறான் ஒரு காலத்தில் தெய்வங்களாக பார்த்து வணங்கிய சூரிய சந்திரனை இப்போது ஓர் ஆற்றலாக நிரூபித்தது இந்த அறிவியல் என்பது ஒரு சிறந்த எடுத்துக்காட்டு இப்போதைய அறிவியல் உலகில் காலப்பயணம் டைம் ட்ராவல் என்பது விஞ்ஞானிகளுக்கு பெரும் சவாலாக இருந்து வருகின்றது

காலத்தைக் கடக்கும் ஆற்றல் பெற்றவன் இறைவன் என்று ஒரு புராணம் கூறுகின்றது. இன்னொரு வேதம் காலத்தையே இறைவன் என்று கூறுகின்றது. ஆனாலும் அதே வகை பயணத்தை மனிதராலும் செய்ய முடியும் என்கின்றனர் விஞ்ஞானிகள். அப்படி என்றால் நீல் ஆம்ஸ்ட்ராங் சந்திக்கலாமா வள்ளுவரின் தாடி உண்மையா? பாரதியின் திமிரை நேராக பார்க்க முடியுமா? இவற்றுக்கு "முடியும் " என்கின்றனர் விஞ்ஞானிகள்

அவ்வளவு ஏன் ராஜராஜ சோழனை நேரில் சந்திக்கலாம் உங்களுக்கு வீரம் இருந்தால் அவர் போர் படையில் நீங்கள் சேர்ந்து அவரோடு யுத்த களத்திற்குச் செல்லலாம் என்று அடித்துக் கூறுகிறார்கள் .

263. அபூதர் (ரலி) அவர்கள் அறிவித்துவந்ததாக அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: " நான் மக்காவில் இருந்தபோது என் வீட்டின் கூரை பிளக்கப்பட்டது. (அதன் வழியாக வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் இறங்கி (வந்து) என்னுடைய நெஞ்சைப் பிளந்தார். பிறகு அதை "ஸம்ஸம்" நீரால் கழுவினார். பிறகு நுண்ணறிவாலும் இறைநம்பிக்கையாலும் நிரம்பிய தங்கத் தாம்பூலம் ஒன்றைக் கொண்டு வந்து என் நெஞ்சத்தினுள் அதை ஊற்றி (நிரப்பி)னார். பிறகு (பழையபடியே) நெஞ்சை மூடிவிட்டார்.

பிறகு என் கையைப் பிடித்து (என்னை அழைத்து)க் கொண்டு விண்ணில் ஏறினார். முதல் வானத்திற்கு நாங்கள் வந்தபோது முதல் வானத்தின் காவலரிடம் ஜிப்ரீல், "திறப்பீராக!" என்று கூறினார். அதற்கு அக்காவலர் "யார் அது?" எனக் கேட்டார். அவர் "ஜிப்ரீல்" என்று பதிலளித்தார். "உம்முடன் யாரேனும் வந்திருக்கிறார்களா?" என்று அக்காவலர் கேட்டார். அவர், "என்னுடன் முஹம்மத் (ஸல்) வந்திருக்கிறார்" என்று பதிலளித்தார். "(அவரை அழைத்துவரும்படி) அவரிடம் ஆளனுப்பப்பட்டிருந்ததா?" என்று அவர் கேட்க, ஜிப்ரீல் "ஆம்" என்று பதிலளித்தார். (முதல் வானத்தின் கதவை அதன்) காவலர் திறந்தார்.

நாங்கள் முதல் வானத்தில் (இன்னும்) மேலே சென்றபோது அங்கே ஒரு மனிதர் இருந்தார். (என்னைப் பார்த்து,) "நல்ல இறைத்தூதரே, வருக! நல்ல மகனே, வருக!" என்று அந்த மனிதர் கூறினார். நான் ஜிப்ரீல் (அலை) அவர்களிடம், "யார் இவர் ஜிப்ரீலே?" என்று கேட்டேன். ஜிப்ரீல் (அலை) அவர்கள், "இவர்தாம் (ஆதிமனிதர்) ஆதம் (அலை) அவர்கள்.

இவை காலப்பயணம் என்பதன் மூலம் சாத்தியமே என்பதே ஆய்வின் முடிவு. அதற்கு விஞ்ஞானிகள் கொடுக்கும் விளக்கம் சற்று குழப்பமானது சிந்தனையை சிதறவிடாமல் அந்த விளக்கத்தை படியுங்கள்

நேரத்தை (காலம் ) தொட அல்லது பார்க்க முடியாது என்றாலும் கூட அதன் விளைவே உணரமுடியும் வயது என்பதே இதற்கு சிறந்த உதாரணம்.

மனிதர்களுக்கு நரை வருகின்றது முகம் பார்க்கும் கண்ணாடி அதைக் காட்டுகின்றது .பக்கத்தில் அவர்களின் குழந்தை கால புகைப்படம் இருக்கிறது .எம் சூழலில் உள்ள மரம் ஒன்று வளர்ந்து கொண்டே செல்கிறது. இவற்றின் மூலம் காலம் எம்முடன் நகருகின்றது அல்லது காலத்தோடு நாம் நகர்கின்றோம் என்பது தெளிவாகின்றது.

இப்போதுகூட படிப்படியாக இதனை நீங்கள் படித்துக் கொண்டு வரும்போது காலத்தோடு பயணித்துக் கொண்டுதான் வருகின்றீர்கள் ஆனாலும் காலத்தை நிறுத்தி விட முடியாது நொடிக்கு நொடி இறந்த காலத்திற்கு பயணம் செய்து கொண்டு இருக்கின்றோம் .

முப்பரிமாணத்தில் வாழ்ந்து வருகின்றோம் உயரம் + நீளம் + அகலம் என்பதே அது . நான்காவது பரிமாணம் உண்டு . அதுவே காலம். இதனோடு நாம் பயணிக்கின்றோம் .

இங்கு கண்ணுக்கு தெரியாத மிக மிக குறுகிய அளவு நேரம் இவற்றையும் தாண்டி பல பரிமாணங்கள் உலகில் உண்டு .

அதாவது இரு நேரங்களுக்கு இடையில் உள்ள இடைவெளியை தொடர்பு படுத்துகின்றதே நேரம் அல்லது காலம் இவ்வாறான இடைவெளியை கண்டுபிடித்து அதன் ஊடாக அதாவது காலத்தின் ஊடாக பயணம் செய்யும் இயந்திரம் அதிக சக்தியை உறிஞ்சும் இயந்திரமாக காணப்படும்

இவ்வாறான பயணம் சாத்தியம் என்று ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் என்னும் விஞ்ஞானியின் ரிலேட்டிவிட்டி தியரி வலுப்படுத்துகின்றது

E=mc2 என்பதே அவர் கூறிய தியரி . அதாவது ஒளியின் வேகத்தில் பயணம் செய்தால் நாம் இறந்த காலத்திற்கும் , எதிர் காலத்திற்கும் கூட செல்லலாம் என்று நிரூபித்துள்ளார் .

இயற்கை எனப்படும் எதிர்காலத்துக்கும் இறந்த காலத்துக்கும் அவற்றைத் தாண்டி மனிதன் செயற்கையாக பயணம் செய்ய முடியுமா எனும் போது கருந்துளை (Warm Hole ) - இது காலத்தின் குறுக்குவழி என்பதையும் பௌதிக ஆய்வாளர்கள் கருத்தில் எடுக்க வேண்டும் என்று கூறுகின்றனர்

ஜடப் பொருள்கள் அனைத்தும் அணுக் கோர்வைகளால் ஆனது அதுபோல நேரத்திற்கும் இவ்வாறான அணுத்துகள்கள் மூன்று பரிமாணங்களுக்கு உட்பட்ட அனைத்திலும் இருக்கின்றது.

இவை நான்காவது பரிமாணம் என ஏற்றுக்கொள்ளப்பட்ட நேரத்திலும் காணப்படுகின்றது அணுவை விட மிகமிகச் சிறிய இடைவெளிகள் நேரத்திலும் காணப்படுகிறது என்பதுதான் விஞ்ஞானிகளின் வியக்கத்தக்க கருத்து

மிகமிகச் சிறிய இடைவெளிகள் ஆனவை இரு வேறு நேரத்தையும் இடத்தையும் அந்த இடைவெளிகளே இணைக்கின்றன .இந்த இடைவெளி மில்லியன் ட்ரில்லியன் சென்டிமீட்டர் ஒரு சதுர குறுக்குவெட்டு பரப்பளவு இருக்கலாம் இதனால் மனிதன் நுழைவது சாத்தியமில்லை இங்குதான் கால எந்திரத்தின் உதவி தேவை இவ்வாறான மிகச்சிறிய இடைவெளிகளை பெரிதாக வேண்டியது அந்த இயந்திரத்தின் பணி.

விஞ்ஞானிகள் இவ்வாறான இடைவெளி துகள்களில் ஒன்றே பெரிதாக்கினால் அதனுள் மனிதனால் சென்றுவிட முடியும் எனவும் நம்புவதோடு அதற்கான ஆய்வுகளிலும் ஈடுபட்டுக் கொண்டுதான் இருக்கின்றார்கள்

ஈர்ப்பு விசையுடன் இவை சாத்திய தன்மை குறைவு என்பதற்காக விண்வெளியில் இதற்கான ஆய்வுகள் நடைபெற்று கொண்டிருக்கின்றது .விஞ்ஞானி ஸ்டீபன் ஹாக்கிங் காலப்பயணம் சாத்தியம் என்றே கூறுகின்றார் .இவை இப்போதும் நடைபெற்று வருகின்றது எனவும் எதிர்கால மனிதர்கள் இறந்த காலத்திற்கு வந்து செல்கின்றார்கள் அது போல இறந்த காலத்து மனிதர்கள் நிகழ்காலத்திலும் வந்து போகிறார்கள் என்பதற்கான ஆதாரங்கள் நிறையவே கிடைத்துள்ளன .

300 வருடத்திற்கு முன் ஜோர்டன் நாட்டு குகையில் தூங்கிய தோழர்கள் தூக்கம் விழித்து நிகழ்காலத்தில் உணவு வாங்க வந்தார்கள் என்பதாக புனித வேதம் திருக்குர்ஆன் சாட்சியம் பகருகின்றது .

وَكَذٰلِكَ بَعَثْنٰهُمْ لِيَتَسَآءَلُوْا بَيْنَهُمْ قَالَ قَآٮِٕلٌ مِّنْهُمْ كَمْ لَبِثْتُمْ قَالُوْا لَبِثْنَا يَوْمًا اَوْ بَعْضَ يَوْمٍ قَالُوْا رَبُّكُمْ اَعْلَمُ بِمَا لَبِثْتُمْ فَابْعَثُوْۤا اَحَدَكُمْ بِوَرِقِكُمْ هٰذِهٖۤ اِلَى الْمَدِيْنَةِ فَلْيَنْظُرْ اَيُّهَاۤ اَزْكٰى طَعَامًا فَلْيَاْتِكُمْ بِرِزْقٍ مِّنْهُ وَلْيَتَلَطَّفْ وَلَا يُشْعِرَنَّ بِكُمْ اَحَدًا

(குகைத் தோழர்கள்) அவர்கள் (அதில் எவ்வளவு காலம் இருந்தனர் என்பதைத்) தங்களுக்குள் கேட்டறிந்து கொள்ளும் பொருட்டு இவ்வாறு (நித்திரை செய்யும்) அவர்களை நாம் எழுப்பினோம்.

அவர்களில் ஒருவர் (மற்றவர்களை நோக்கி) "நீங்கள் எவ்வளவு நேரம் நித்திரையில் இருந்தீர்கள்?" என்று கேட்டார். அதற்கு அவர்களில் சிலர் "ஒரு நாள் அல்லது ஒரு நாளில் சிறிது பாகம் (இருந்திருப்போம்)" என்று கூறினர்.

(மற்றவர்கள்) "நீங்கள் நித்திரையிலிருந்த காலத்தை உங்கள் இறைவன்தான் நன்கறிவான்" என்று கூறி...

"உங்களில் ஒருவரிடம் இந்த (வெள்ளி) நாணயத்தைக் கொடுத்து அவரைப் பட்டினத்திற்கு அனுப்பி வையுங்கள். அவர் (அங்கு சென்று) நல்ல உணவுப் பொருள் எது (எங்கிருக்கின்றது) என்பதைத் தேடிப்பார்த்து அதில் சிறிது வாங்கி வரவும். எனினும், உங்களை(ப் பட்டினத்திலிருப்பவர்களில்) ஒருவரும் அறிந்து கொள்ளாதவாறு மிக்க எச்சரிக்கையாகவே அவர் நடந்து கொள்ளவும்.
(அல்குர்ஆன் : 18:19)

இவ்வாறாக ஆதாரங்களுக்கு மர்மம் என்ற பெயர் கொடுக்கப்பட்டு இன்றுவரை மறைக்கப்பட்டு கொண்டே வருகின்றது காரணம் மெய்ப்படும் வரை அனைத்துமே மர்மமே

நிச்சயம் ஒருநாள் காலப்பயணம் சாத்தியம் அப்படி வந்தால் இன்னொரு முறை இந்த பதிவை மறக்காமல் படித்துவிட்டு அந்த காலத்திற்குள் போய்விடுங்கள்.

ர.ரா

டைம் டிராவல் (Time Travel )15-7-2020




யாரும் அறிந்திராத டைம் டிராவல் தகவல்கள்!

டைம் டிராவல் அதாவது காலப்பயணம் இன்று வரை கனவாகவே இருக்கின்றது. உண்மையில் இது எந்தளவு சாத்தியம் அல்லது காலப்பயணம் மேற்கொள்ள முடியுமா என பல்வேறு சந்தேகங்கள் மனதில் எழுகின்றன.

ஆனால் இவை எதற்கும் இன்று வரை பதில் இல்லை. கற்பனையில் காலப்பயணம் சுவாரஸ்யமான விஷயமாக தெரிந்தாலும், இதனை வெற்றிகரமாக மேற்கொள்வது என்பது இன்றைய தொழில்நுட்ப யுகத்திலும் மிகவும் கடினமான ஒன்றாகும்.

இதோடு இதில் பல்வேறு சிக்கல்களும் இருக்கின்றது. காலப்பயணம் (Time Travel) பற்றிய கருத்து இன்று வரை பல்வேறு முரண்பட்ட கருத்துகளை கொண்டுள்ளது. காலப்பயணத்தைப் பற்றிய குறிப்புகள் பண்டைய காலத்தில் இருந்து காணப்படுகிறது.

நவீன தத்துவங்கள் 1895 ல் ஹச்.ஜி. வெல்ஸ் ( H.G.Wells ) எழுதிய
தி டைம்ஸ் மெஷின்( The Time Machine ) என்ற புத்தகத்திலிருந்தான் தோன்றியது. நாம் அறிந்து இது தான் முதல் காலப்பயணம் பற்றிய புத்தகமாகும்.

காலப்பயணம் சாத்தியமா, அல்லது சாத்தியமற்றதா என்பது மிகவும் குழப்பமான நிலையில் இருந்து வரும் சூழலில் காலப்பயணம் குறித்த தகவல்களை பற்றி பார்ப்போம்

டைம் டிராவலில் உள்ள கிராண்ட் பாதர் முரண்பாடு

நீங்கள் கடந்த காலத்திற்குச் சென்று உங்கள் தாத்தாவைக் கொன்றால் உங்கள் அப்பா பிறந்திருக்க மாட்டார் அதனால் நீங்களும் இருக்க மாட்டீர்கள். நீங்கள் பிறக்கவில்லை என்றால், உங்கள் தாத்தாவைக் கொன்றது யார் அதனால் நீங்கள் இப்படி டைம் டிராவல் செய்து கடந்த காலம் அல்லது நிகழ் காலத்திற்கு சென்றாலும் நீங்கள் எதையும் மாற்ற முடியாத ஒரு பிம்பமாகவே இருப்பீர்கள்.

கால பயணங்களை மேற்கொண்டதாகக் கூறும் நபர்களின் கூற்றுப்படி, கடந்த காலங்களில் நீங்கள் செல்லும் பொழுது அங்கு வாழும் மக்கள் மற்றும் கட்டிடங்களை நீங்கள் காணலாம். வானிலை திடீரென மாறிவிட்டது என்பதை நீங்கள் அறிந்திருக்கலாம்.
நிகழ்காலத்தில் இல்லாத பல விஷயங்களை நீங்கள் காணலாம். ஆனால் நீங்கள் பார்க்கும் எந்தவொரு பொருளையும் நீங்கள் தொடவோ எடுக்கவோ முடியாது. கடந்த காலத்தில் நீங்கள் பார்க்கும் நபர்கள் உங்களைப் பேசவோ பார்க்கவோ மாட்டார்கள். நீங்கள் உங்களுடையவர்களாக இருக்கிறீர்கள், இருவரும் ஒருபோதும் தொடர்பு கொள்ள முடியாது.

டைம் டிராவல் பற்றிய திரைப்படங்கள் சீனாவில் தடை செய்யப்பட்டுள்ளன. இது “வரலாற்றை அவமதிப்பதாக” இருப்பதால் அவர்கள் அதைத் தடைசெய்ததாக கூறுகிறார்கள்.
விண்வெளியில் நாம் எவ்வளவு வேகமாகப் பயணிக்கிறோமோ அவ்வளவு மெதுவாக நாம் கால பயணத்தில் பயணிக்கிறோம். காலம் நான்காவது பரிமாணம். எனவே நீங்கள் டைம் டிராவலில் பயணிக்கும்போது, நான்காவது பரிமாணத்தில் பயணிக்கிறீர்கள். டைம் டிராவல் அப்படி ஒரு குழப்பமான பயணம்.

டைம் டிராவலின் மூலம் வரலாற்றை அவமதிப்பதாக இருப்பதால் சீனா தடைசெய்தது .ஆனால் இஸ்லாத்தில் கடந்த காலத்தில் வாழ்ந்தவர்களை நபி (ஸல்) அவர்கள் சந்தித்தது குறித்து அதை கண்ணியமான வரலாறாக புதுபிக்கப்படுகிறது .

முஸ்லிம் 259: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(விண்ணுலகப் பயணத்தின்போது) என்னிடம் கோவேறு கழுதையைவிடச் சிறியதும், கழுதையைவிடப் பெரியதுமான வெள்ளை நிறத்திலமைந்த நீளமான புராக் எனும் (மின்னல் வேக) வாகனம் ஒன்று கொண்டுவரப்பட்டது.

அது பார்வை எட்டுகிற தூரத்திற்குத் தனது கால் குளம்பை எடுத்து (எட்டு) வைக்கும். அதிலேறி நான் பைத்துல் மக்திஸ் (ஜெரூசலேம்) இறை ஆலயம் வரை சென்றேன். பிறகு இறைத்தூதர்கள் தமது வாகனத்தைக் கட்டி வைக்கும் வளையத்தில் எனது வாகனத்தைக் கட்டிவைத்துவிட்டு அந்த இறையாலயத்திற்குள் நுழைந்து இரண்டு ரக்அத்கள் தொழுதேன்.

பிறகு நான் அங்கிருந்து புறப்பட்ட போது (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் (என்னிடம்) ஒரு பாத்திரத்தில் மதுவும் மற்றொரு பாத்திரத்தில் பாலும் கொண்டுவந்தார். (அதில் விரும்பியதைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளுமாறு கூறினார்.) நான் பால் பாத்திரத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன். அப்போது ஜிப்ரீல், "இயற்கையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டீர்" என்று கூறினார்.

பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக்கொண்டு முதல் வானத்திற்கு உயர்ந்தார். (அதன் கதவைத்) திறக்கும்படி கூறினார். அப்போது "நீங்கள் யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், "ஜிப்ரீல்" என்று பதிலளித்தார். "உங்களுடன் (வந்திருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், "முஹம்மத்" என்று பதிலளித்தார். "(அவரை அழைத்து வரச்சொல்லி) அவரிடம் ஆள் அனுப்பப்பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(அவரை அழைத்து வரச்சொல்லி என்னை) அவரிடம் அனுப்பி வைக்கப்பட்டிருந்தது" என்றார். அப்போது எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. நான் அங்கு (ஆதி மனிதர்) ஆதம் (அலை) அவர்களைக் கண்டேன். அவர்கள் என்னை வாழ்த்தி வரவேற்று, எனது நன்மைக்காகப் பிரார்த்தித்தார்கள்.

பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக் கொண்டு இரண்டாம் வானத்திற்கு உயர்ந்தார். (அதன் கதவைத்) திறக்கும்படி சொன்னார். அப்போது "நீங்கள் யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், "ஜிப்ரீல்" என்று பதிலளித்தார். "உங்களுடன் (இருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், "முஹம்மத்" என்று பதிலளித்தார். "(அவரை அழைத்துவரும்படி) அவரிடம் ஆளனுப்பப் பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(ஆம், அவரை அழைத்து வரும்படி என்னை) அவரிடம் அனுப்பிவைக்கப் பட்டிருந்தது" என்று பதிலளித்தார். அப்போது எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. அங்கு சகோதரிகளின் புதல்வர்களான ஈசா பின் மர்யம் (அலை), யஹ்யா பின் ஸகரிய்யா (அலை) ஆகியோரை நான் கண்டேன்.அவர்கள் இருவரும் என்னை வரவேற்று, எனது நன்மைக்காகப் பிரார்த்தித்தனர்.

பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக்கொண்டு மூன்றாம் வானத்திற்கு உயர்ந்தார். (அதன் கதவைத்) திறக்கும்படி கூறினார். அப்போது "நீங்கள் யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், "ஜிப்ரீல்" என்று பதிலளித்தார். "உம்முடன் (இருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அவர், "முஹம்மத்" என்று பதிலளித்தார். "(அவரை அழைத்துவரும்படி) அவரிடம் ஆளனுப்பப்பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(ஆம், அவரை அழைத்துவரும்படி என்னை) அவரிடம் அனுப்பிவைக்கப்பட்டிருந்தது" என்று பதிலளித்தார். உடனே எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. அங்கு நான் யூசுஃப் (அலை) அவர்களைக் கண்டேன். (மொத்த) அழகில் பாதி அவர்களுக்கு வழங்கப்பெற்றிருந்தது. அன்னாரும் என்னை வரவேற்று எனது நன்மைக்காகப் பிரார்த்தித்தார்கள்.

பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக்கொண்டு நான்காம் வானத்திற்கு உயர்ந்தார். (அந்த வானத்தின் கதவைத்) திறக்கும்படி கூறினார். அப்போது "யார் அது?" என்று கேட்கப்பட்டது. அவர், "ஜிப்ரீல்" என்று பதிலளித்தார். "உம்முடன் (இருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அவர் "முஹம்மத்" என்று பதிலளித்தார். "(அவரை அழைத்துவரும்படி) அவரிடம் ஆளனுப்பப்பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(ஆம் அவரை அழைத்துவரும்படி என்னை) அவரிடம் அனுப்பிவைக்கப்பட்டிருந்தது" என்று பதிலளித்தார். அப்போது எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. அங்கு நான் இத்ரீஸ் (அலை) அவர்களைக் கண்டேன். அவர்கள் (என்னை) வரவேற்று எனது நன்மைக்காகப் பிரார்த்தித்தார்கள். (இத்ரீஸ் (அலை) அவர்கள் தொடர்பாக) அல்லாஹ், "மேலும், நாம் அவரை ஓர் உயரிய இடத்தில் உயர்த்தினோம்" (19:57) என்று கூறுகின்றான்.-

பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக்கொண்டு ஐந்தாம் வானத்தில் ஏறினார். (அந்த வானத்தின் கதவைத்) திறக்கும்படி கூறினார். அப்போது, "யார் அது?" என்று கேட்கப்பட்டது. அவர், "ஜிப்ரீல்" என்று பதிலளித்தார். "உம்முடன் (இருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அவர், "முஹம்மத்" என்று பதிலளித்தார். "(அவரை அழைத்துவருமாறு) ஆளனுப்பப்பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(ஆம், அவரை அழைத்துவருமாறு என்னை) அவரிடம் அனுப்பி வைக்கப்பட்டிருந்தது" என்று பதிலளித்தார். அப்போது எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. அங்கு நான் ஹாரூன் (அலை) அவர்களைக் கண்டேன். அவர்கள் (என்னை) வரவேற்று எனது நன்மைக்காகப் பிரார்த்தித்தார்கள்.

பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக்கொண்டு ஆறாம் வானத்தில் ஏறினார். (அந்த வானத்தின் கதவைத்) திறக்கும்படி கூறினார். "யார் அது?" என்று கேட்கப்பட்டது. அவர், "ஜிப்ரீல்" என்று பதிலளித்தார். "உம்முடன் (இருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அவர் "முஹம்மத்" என்று பதிலளித்தார் "(அவரை அழைத்து வரும்படி) அவரிடம் ஆளனுப்பப்பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(ஆம், அவரை அழைத்துவரும்படி என்னை) அவரிடம் அனுப்பிவைக்கப்பட்டிருந்தது" என்று பதிலளித்தார். அப்போது எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. அங்கு நான் மூசா (அலை) அவர்களைக் கண்டேன். அவர்கள் (என்னை) வரவேற்று, எனது நன்மைக்காகப் பிரார்த்தித்தார்கள்.

பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக்கொண்டு ஏழாவது வானத்தில் ஏறினார். (அந்த வானத்தின் கதவைத்) திறக்கும்படி கூறினார். "யார் அது?" என்று கேட்கப்பட்டது. அவர், "ஜிப்ரீல்" என்று பதிலளித்தார். "உம்முடன் (இருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அவர், "முஹம்மத்" என்று பதிலளித்தார். "(அவரை அழைத்து வரும்படி) அவரிடம் ஆளனுப்பப்பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(ஆம், அவரை அழைத்துவரும்படி என்னை) அவரிடம் அனுப்பிவைக்கப்பட்டிருந்தது" என்று பதிலளித்தார். அப்போது எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. அங்கு நான் இப்ராஹீம் (அலை) அவர்களைக் கண்டேன். அவர்கள் அல்பைத்துல் மஅமூர் (எனும் வானவர்கள் அதிகம் சஞ்சரிக்கும்) இறையில்லத்தில் தமது முதுகைச் சாய்த்து அமர்ந்துகொண்டிருந்தார்கள். அ(ந்த இறையில்லத்)தில் ஒவ்வொரு நாளும் எழுபதாயிரம் வானவர்கள் (இறைவனை வணங்கச்) செல்வார்கள். அவர்கள் மறுபடியும் அங்கு நுழைவதில்லை. (புதியவர்களே அடுத்து நுழைவார்கள்.)

இஸ்லாம் டைம் டிராவல் குறித்து இவ்வளவு விவரமாக துல்லியமாக பதிவு செய்கிறது என்பது விண்ணை முட்டும் வியப்பான விஷயம் .

ர.ரா

டைம் டிராவல் (Time Travel ) 3

16/07/2020




கடந்த காலத்தைப் பற்றிய அறிவு "ரெட்ரோகாக்னிஷன் " என்று அழைக்கப்படுகிறது, அதாவது கடந்த கால பயணம். டைம்ஸ் டிராவல் செய்ய ஒளியை விட வேகமாக பயணிக்க வேண்டும். ஒளியின் வேகத்தில் 99.5% சதவிகித வேகத்தில் நீங்கள் பயணிக்க முடிந்தால் உங்களுக்கு 4 நண்பர்கள் உள்ளனர் என வைத்து கொள்ளுங்கள்.
அனைவருக்கும் ஒரே வயது அதாவது 15 வயதாக இருந்தால் 5 வருடமாக நீங்கள் டைம் டிராவலில் இருந்தால் உங்கள் வயது 20 ஆனால் உங்கள் நண்பர்கள் வயது 65 ஆக இருக்கும். நீங்கள் 15 வயதில் 5 ஆண்டுகள் தொடர்ந்து பயணம் செய்திருந்தால் உங்களுக்கு 20 வயதாகும் போது, உங்கள் நண்பர்கள் அனைவரும் 65 வயதை எட்டியிருப்பார்கள்.

ஒளியின் வேகத்தில் நீங்கள் பயணிக்கும் போது உங்கள் ஆறடி உயரம் மூன்றடியாக சுருங்கிவிடும் உங்கள் எடைநூறு கிலோ இரு நூறு கிலோவாகிவிடும் இரண்டு வருஷம் ஒரு வருஷமாகிவிடும் இதுதான் ஆல்பர்ட் ஐன்ஸ்டைனின் சிறப்பு சார்பியல் தத்துவம்

இதை அணுவினுள்ள பைமெஸான் என்கிற துகளை ஒளியின் வேகத்திற்கு உள்ளாக்கி பரிசோதித்த போது ஐனஸ்டைன் சொன்னதுபோல் அதன் எடை இரு மடங்கானது அதன் வாழ்நாள் அதிகமானது அதன் அளவு பாதியாக குறைந்தது விஞ்ஞான உலகம் ஸ்தம்பித்தது நோபிள் பரிசு வீட்டிற்கு வந்தது

. . இந்த விஞ்ஞான சங்கதியொல்லாம் நபிஸல் அவர்களின் மிஹ்ராஜ் என்கிற விண்வெளி பயணத்தின் போது நடந்தததா ?இல்லை. இல்லவே இல்லை . நபி (ஸல் ) அவர்களின் இரவு படுக்கையின் சூடு ஆறுவதற்குள் நடைபெற்று முடிந்தது. அதனால்தான் இங்குள்ள நபித்தோழர்களுக்கு வயது யாருக்கும் அதிகமாகவில்லை.

இன்றைய காலப்பயணம் பற்றி நம் புரிதலுக்கு மிக முக்கியமானவர்ககளில் ஒருவர் ஸ்டீபன் ஹாக்கிங் இவர் தனது புத்தகங்களில் அதிகம் காலப்பயணம் பற்றி கூறியுள்ளார். இவர் காலப்பயணம் பற்றி கூறியுள்ள ஆரம்ப கருத்தில், காலப்பயணம் சாத்தியமா என்றால் அதை உறுதியாக கூற முடியாது.
ஆனால் இது வரை கண்டறியப்படவில்லை. ஆனால் அவர் பிற்காலத்தில் காலப்பயணத்திற்கு ஆதரவாய் பல கருத்துக்களை கூறியுள்ளார். டைம் டிராவல் குறித்த பல்வேறு கோட்பாடுகளில் "டைம் டிராவல் மூலம் ஏற்படும் பிரச்சனைகளில் இருந்து இந்த பிரபஞ்சம் தன்னை தானே காத்து கொள்ளும் " என்பதை தெரிவிக்கின்றன.

ஆனால் இயற்பியில் மூலம் காலப்பயணம் இயந்திரங்கள் தயாரிப்பது சாத்தியமற்றது என்பதை உணர்ந்தார். டைம் டிராவல் செய்யும் போது எந்த இடத்திற்கு டைம் டிராவல் செய்கிறமோ அவ்விடத்தின் உபகரணங்களோ , உயிரினங்களோ பயன்படுத்தப்பட்டால் ஒரு சமயம் டைம் டிராவல் சாத்தியப்படலாம்

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(விண்ணுலகப் பயணத்தின்போது) என்னிடம் கோவேறு கழுதையைவிடச் சிறியதும், கழுதையைவிடப் பெரியதுமான வெள்ளை நிறத்திலமைந்த நீளமான புராக் எனும் (மின்னல் வேக) வாகனம் ஒன்று கொண்டுவரப்பட்டது.

அது பார்வை எட்டுகிற தூரத்திற்குத் தனது கால் குளம்பை எடுத்து (எட்டு) வைக்கும். (அதாவது மின்னல் வேகத்தில் ) அதிலேறி நான் பைத்துல் மக்திஸ் (ஜெரூசலேம்) இறை ஆலயம் வரை சென்றேன். பிறகு இறைத்தூதர்கள் தமது வாகனத்தைக் கட்டி வைக்கும் வளையத்தில் எனது வாகனத்தைக் கட்டிவைத்துவிட்டு அந்த இறையாலயத்திற்குள் நுழைந்து இரண்டு ரக்அத்கள் தொழுதேன்.
பிறகு நான் அங்கிருந்து புறப்பட்ட போது (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்களுடன் புறப்பட்டேன். (முஸ்லிம் 259)

ஸ்டீபன் வில்லியம் ஹாக்கிங் டைம் டிராவல் குறித்த ஆய்வுகளுக்கு தடை செய்ய சட்டம் இயற்ற வேண்டும் என்பதை வலியுறுத்தினார்.
டைம் டிராவல் வழிமுறைக்கு தடை கோரும் வகையில் ‘க்ரோனோலாஜி ப்ரோடெக்ஷன் கான்ஜெச்சர்’ என்ற

பெயரில் சட்டம் இயற்ற வேண்டும் என கூறி வந்த ஸ்டீபன் ஹாக்கிங் கோரிக்கை விடுத்த போதும் இன்று வரை இச்சட்டம் இயற்றப்படவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

சட்டம் இயற்றப்படாததை தொடர்ந்து ஹாக்கிங் காலப்பயணம் மேற்கொள்வது சாத்தியமாகலாம், ஆனால் இது நடைமுறை இல்லை என தெரிவித்தார். காலப்பயணம் மேற்கொள்ளும் போது பிரபஞ்சம் மாறாது, இதனால் காலப்பயணத்தினை உண்மையில் உணரவோ முடியாது. காரணம் நாம் ஏற்கனவே காலப்பயணி ஒருவரால் பார்க்கப்பட்டுள்ளோம். 2000 மாவது ஆண்டில் அறிவியல் சார்ந்த இணைய விவாதங்களில் தான் ஒரு காலப்பயணி என கூறிக்கொண்டு தான் 2036 ஆம் ஆண்டில் இருந்து வருவதாக கூறினார்.

2036 ஆம் ஆண்டில் இருந்து வருவதாக கூறிய ஜான் டைட்டர் தான் ஒரு மிலிட்டரி டைம் டிராவலர் என தெரிவித்ததோடு, தடையமே இல்லாமல் அடிக்கடி மறைந்து விட்டதோடு சில கணிப்புகளை தெரிவித்து இணைய வாசிகளை மகிழ்வித்து வந்ததாக கூறப்படுகின்றது. பல்வேறு பிரபஞ்சங்கள் இருப்பது உண்மை என்றும் தான் கடந்து வந்த காலத்தின் டைம்லைன் முற்றிலும் வித்தியாசமானது என்றும் அவர் தெரிவித்திருந்தார்.

உண்மையில் காலப்பயணம் மேற்கொள்ள முடியுமா என்ற கேள்வி மட்டும் நிலையாய் இருக்க டைம் டிராவல் குறித்த ஆராய்ச்சிகளும் அவ்வப்போது கோட்பாடுகளும் வெளியாகி கொண்டே தான் இருக்கும்.

ர.ரா

டைம் டிராவல்4 16/07/2020

'புராக்' வாகனப்பயணமும் அறிவியல் நிரூபணமும்.- (ரஹ்மத் ராஜகுமாரன் )

( An Excellent Article. Don't miss it )

www.nidur.info




பகுத்தறிவாதம் பேசும் சில நண்பர்கள் மூடநம்பிக்கையை வேரறுப்பதாக எண்ணி தங்களுடைய சிந்தனையை முடமாக்கிக் கொண்டுள்ளார்கள். அவர்கள் எடுத்து வைக்கும் வாதங்களின் சாரம்சங்கள்...

1. புராக் விமானத்தில் முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பயணம் செய்த நிகழ்ச்சிக்கு அறிவியல் ரீதியான நிரூபணங்கள் உண்டு என்பதற்கு என்ன ஆதாரம்?

2. எரிபொருள், விமானம் இவை கண்டு பிடிக்கப்படாத காலத்தில் மேற்கூறிய புராக் விமானம் எந்த ஆற்றலின் உதவியால் விண்ணில் செலுத்தப்பட்டது?

எனவே இறை ஆற்றலினால்தான் இச்சம்பவம் நடந்ததாகக் கதை அளக்க முடியுமே தவிர அதில் அறிவியல் உண்மை இருப்பதாக ஒரு போதும் இவர்களால் நிரூபித்துக் காட்ட முடியாது என்பது அவர்களின் வாதம்.

ஒரு சின்ன பிளாஷ்பேக்: இவர்களை 1905 ஆம் ஆண்டிற்கு கூட்டிச் செல்வோம். அப்போது ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் என்கிற 25 வயது விஞ்ஞானி ஒரு பிரம்மாண்டமான சிந்தனையை தத்துவமாக நுழைத்து மொத்த விஞ்ஞானிகளையும் கலக்கி விட்டார். அவர் ஆய்வு செய்தது ஒளியைப்பற்றி மேற்சொல்லப்பட்ட அத்தனை விஷயங்களுக்கும் ஒளியைப்பற்றிய விபரம் தெரிந்தால் பகுத்தரிவாதிகள் என்று தங்களை சொல்லிக்கொள்ளும் இவர்கள் மட்டுமல்ல இனி எவரும் இது மாதிரி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பற்றி பேச மாட்டார்கள்.

பஸ் நிலையத்தில் நிற்கும் போது வழக்கம் போல உங்களை பஸ் கடந்து போகிறது. பஸ்ஸுக்குள் ஒரு சிறுவன் பந்தை எறிந்து விளையாடிக் கொண்டிருக்கிறான். பஸ் போகும் திசையில் 10 அடி தூரத்திற்கு பந்தை எறிகிறான். அந்த ஒரு செகண்டில் பஸ் 20 அடி நகர்கிறது. பந்தின் வேகம் என்ன? பையனுக்கு செகண்டுக்குப் பத்து அடி வேகம். ஆனால் வெளியிலிருந்து பார்க்கும் உங்களுக்கு முப்பது அடி (10 + 20 = 30 அடி) எது நிஜம்? இரண்டுமே நிஜம் தான். வேகம் என்பது பார்ப்பவர்களைப் பொறுத்திருக்கிறது. புரிகிறது அல்லவா?

கொஞ்சம் கவனமாக கவனியுங்கள். அடுத்து நம் பூமியும் ஒருவகையில் பஸ்தான். சூரியனைச் சுற்றிவரும் பஸ். என்ன வேகம்? ஒரு செகண்டுக்கு சுமார் 18 மைல். சரி சந்தோஷம். ஒளியின் வேகம் என்ன தெரியுமா? ரொம்பவும் ஜாஸ்தி. ஒரு செகண்டுக்கு 1,86,282 மைல் (கி.மீ அல்ல) அல்லது 3 லட்சம் கி.மீ

பஸ்ஸில் எறிந்த பந்துக்கு நேர்வது போல் பூமி பஸ்ஸில் எறியப்பட்ட ஒளிக்கதிருக்கு நேருமா? அதாவது பூமி சுற்றிக் கொண்டு போகும் திசையிலும், அதன் எதிர்திசையிலும் ஒளியின் வேகம் மாறவேண்டாமா? அதாவது பூமி சுற்றிக்கொண்டு போகும் திசையில் (186282+18)ம் எதிர்திசையில் (186282+18)ம் இருக்க வேண்டுமே! அப்படித்தான் தோன்றுகிறது பார்ப்போம்.

'மைக்கல்சன்' என்கிற விஞ்ஞானி 1887-ல் ஒளியின் வேகத்தை நுட்பமாகக் கணக்கிட்டுப் பரிசோதனை செய்தார். பூமி சுற்றும் திசை, எதிர்திசை, ஏன் எல்லாத் திசைகளிலும் ஒளியின் வேகத்தை அளந்து பார்த்தார். ஊஹூம்! எந்த திசையிலும் ஒளியின் வேகம் மாறவில்லை! அதே 186282 மைல்-ஒரு நொடிக்குப் பயணமாகிறது.

விஞ்ஞானி ஐன்ஸ்டைனும் தன் ஆய்வின் முடிவில் ஒளியின் வேகம் மாறாமல் இருப்பது பரிசோதிக்கப்பட்ட நிஜம். அதற்கு சரியான ஒளியின் வேகம் எதிர்பாராத விநோதமான சித்தாந்தங்களை ஒப்புக் கொள்ள வேண்டும் என்றார். நிஜமாகவே விநோதம் தான் என்ன? மறுபடியும் பஸ்.

அடுத்த பஸ் கிடைத்து நீங்கள் சென்று கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் நகர்வதால் உங்களில் சிறுமாறுதல்கள் நிகழ்ந்தாக வேண்டும் என்றார் ஐன்ஸ்டைன் என்ன மாறுதல்கள்?

ரொம்ப சிம்பிள். பஸ் போகும் திசையில் நீங்கள் செல்லும் போது கொஞ்சம் சுருங்குகிறீர்கள். அதே சமயம் உங்கள் எடை கொஞ்சம் கூடுதலாகிறது! உங்கள் வாட்ச் கொஞ்சம் ஸ்லோவாக ஓடுகிறது என்றார். அப்போது தான் ஒளியின் வேகம் மாறாமல் இருப்பதை விளக்க முடியும்?

ஒரே ஒரு விஷயம்-பூமியில் கிடைக்கக் கூடிய நேரங்களில் இந்த எடை கூடுவது, மூஞ்சி சப்பட்டையாவது, கடிகாரம் மெள்ள ஓடுவது எல்லாம் மிகக் மிகக் குறைவாக அளவிடக் கூட முடியாத படி அவ்வளவு நுட்பமாக இருக்கும். எப்போது அளவிட முடியும்? கொஞ்சம் அதிவேகத்தில் பஸ் போனால்! உதாரணத்துக்கு ஒரு செகண்டுக்கு 2,60,000 கி.மீ வேகத்தில் போனால் அப்போது என்ன ஆகும்? ஆறடி மனிதன் மூன்றடியாக சுருங்கிவிடுவான். அவன் நூறு கிலோ எடை இருநூறு கிலோவாகி விடும். இரண்டு வருஷம் ஒரு வருஷமாகி விடும். இதுதான் ஐன்ஸ்டைனின் சிறப்பு சார்பியல் தத்துவம்.

வேகத்தால் ஏற்படும் இந்தச் சுருக்கங்களை லோரன்ஸியன் கண்டராக்ஷன் என்பார்கள் நம்புவதற்கு கஷ்டமாக இருக்கிறதல்லவா? ஏன்? இதெல்லாம் நம் அன்றாட அனுபவங்களும், பகுத்தறிவுக்குப் புறம்பாக இருக்கிறது என்று பகுத்தறிவாளர்கள் நினைக்கலாம். ஆனால் ஐன்ஸ்டைன் சொன்னது ஏதோ ஒரு குருட்டாம் போக்குச் சித்தாந்தமல்ல. பரிசோதனைகளின் மூலம் நிரூபிக்கப்பட்டது. இது தான் அவருடைய மகா மேதைமைக்கு சாட்சி.

விஞ்ஞானி ஐன்ஸ்டைன் சொல்லும் மாறுதல்களை உணர மிகமிக வேகம் தேவைப்படும் ஒளியின் வேகத்துக்கு மிக அருகில் சென்றால் தான் இதெல்லாம் அளவிட முடியும். அன்றாட வேகங்களில் நல்ல வேளை இந்த விளைவுகளை உணரவே முடியாது.

ஒளியின் வேகத்தின் அருகில் செல்லக் கூடியவை அணுக்கருக்கள் இருக்கும் துகள்கள் (ப்ரோட்டின், நியூட்ரான், எலக்ட்ரான் என்று கேள்விப்பட்டிருப்பீர்களே) இந்த வகைத்துகள்களில் ஒன்றான 'பைமெஸான்' என்ற ஒரு துகளை அதிக வேகத்திற்கு உள்ளாக்கிய பரிசோதனை செய்தபோது ஐன்ஸ்டைன் சொன்னது போல் அதன் எடை கூடியது! அதன் வாழ்நாள் அதிகமானது! விஞ்ஞான உலகம் ஸ்தம்பித்தது! நோபல் பரிசு ஐன்ஸ்டைனைத் தேடி வந்து சேர்ந்து கொண்டது.

மேற்கண்ட ஆய்வை ஒளியின் வேகத்தில் பயணிக்க செய்பவருக்கு என்ன நேர்கிறது? என்பதைப் பார்ப்போம். ஒளி வேகத்தில் இயங்கக்கூடிய வாகனத்தில் பயணம் செய்பவர்களுக்கு 'காலம்' என்பது இயங்குவதில்லை. இது தான் அறிவியல் உண்மை. ஆனால் ஒளிவேக வாகனத்தில் பயணம் செய்யக் கூடிய வரை வழியனுப்ப வந்தவர்களுக்கு அனந்த கோடி வருஷங்கள் ஆகி இருக்கும்!

அதாவது சென்னையிலிருந்து ஒளி வேக ஊர்தியில் ஒரு நாள் பயணம் (ஒரே ஒரு நாள்) பயணம் புறப்படுகிற நண்பர்; (வயது 45) அவரை வழியனுப்ப வந்த அவரது மனைவி; (வயது 40) மகன் (வயது 6) மகள் (வயது 8) இவர்கள் வழியனுப்ப இவர்; விண்வெளி பயணம் மேற்கொள்கிறார். இவர் பயணிப்பது ஒளி வேக ஊர்தி நொடிக்கு 1,86,282 மைல் வேகம் ஒரே ஒரு நாள் பயணத்தை முடித்துவிட்டு அதே சென்னைக்கு திரும்புகிறார். இப்போதும் அதே அவர் குடும்பத்தார் வரவேற்க வந்துள்ளனர். திருவாளர் நண்பர் வரவேற்கப்படுகிறார். மீடியாக்கள் பேட்டி கேட்கிறார்கள். மிஸ்டர் நண்பர்; நீங்கள் எத்தனை வருடம் விண்வெளியில் ஒளிவேக வாகனத்தில் பயணித்தீர்கள்?

'எத்தனை வருடங்களா...?
ஒரே ஒரு நாள்...!'

'உங்க வயது என்ன நண்பரே!'

45 வயசும் ஒரு நாள் மட்டுமே! என்று சொல்லிக்கொண்டு இருக்கும் போதே அவர் கேட்கிறார்... 'யார் அந்த பாட்டியம்மா..?' எங்கோ பார்த்த மாதிரி இருக்கே?

'அடபோங்க சார்! அவங்க உங்க மனைவி தான்!!!'

இது காலத்தின் விபரீத விளையாட்டு இது விஞ்ஞானத்தால் நிரூபிக்கப்பட்ட உண்மை. பொய் அல்ல. பித்தலாட்டம் அல்ல மோடி மஸ்தான் வேலை அல்ல! உண்மை! அதுவும் தெளிவான உண்மை!! ஒளியின் வேகத்தில் பயணிக்கும் போது காலம் என்பது இயங்குவது இல்லை என்பது நிரூபணமாகிறது.

சரி விஷயத்திற்கு வருவோம். இறைவன் ஒவ்வொரு படைப்பையும் ஒவ்வொரு பொருளைக் கொண்டு படைத்திருக்கிறான். மனிதனை படைக்க மண்ணைப் பயன்படுத்தியுள்ளான். ஜின்களைப் படைக்க நெருப்பை பயன்படுத்தியுள்ளான். வானவர்களை ஒளியால் படைக்க இறைவன் அவர்கள் பயன்படுத்தும் வாகனங்களையும் ஒளியால் படைத்துள்ளான். 'புராக் என்ற வாகனம் தன் பார்வை எட்டிய தூரத்தில் அது தன் குளம்பை எடுத்து வைக்கின்றது.' (நூல் முஸ்லிம் 234) எவ்வளவு பெரிய உண்மை.

ஒளியினால் அந்த புராக் வாகனம் படைக்கப்பட்டுள்ளது என்பதற்கு இதைவிட என்ன ஆதாரம் தேவை? புராக் என்கிற வாகனத்தை ஓட்டி வந்தவர் ஜிப்ரயீல் (அலைஹிஸ்ஸலாம்) என்கிற வானவர். அவர் முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை அழைக்க வந்துள்ளார். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ்வுடைய நூரிலிருந்து (ஒளியிலிருந்து) வெளியானவர்கள் ஒரு சமயம் ஆயிஷா (ரளியல்லாஹு அன்ஹா) அவர்கள் தன் ஊசியில் கோர்ப்பதற்கு சிரமப்பட்டுக் கொண்டிருந்த போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தன் பக்கம் வர அவர்களின் வெளிச்சத்தில் நூலை கோர்த்ததாக ஹத்தீஸ் காணக் கிடைக்கிறது.

மேலும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் நிழல் பூமியில் விழாது காரணம் ஒளிக்கு ஏது நிழல் இதுவும் ஹதீஸ்களில் உள்ளது.மேலும் விண்ணுலகில் பயணிக்கும் போது ஆறடி மனிதன் மூன்றடியாக குறைவதாக கண்டோம். அந்த வேகத்தில் பயணிக்கும் போது பயணிப்பவரின் இதயம் ஒரு நிமிடத்திற்கு 72 தடவை துடிப்பது சாத்தியமாகாது என்பதை பார்க்கும் போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு விண்வெளியில் பயணிப்பதற்கு சாதகமாக இருப்பதற்கு வேண்டி வானவர் ஜிப்ரயீல் (அலைஹிஸ்ஸலாம்) அவர்களால் இதயத்தில் தக்க மாற்றம் செய்யப்பட்டதையும் ஹதீஸ்களில் காணமுடிகிறது.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் விண்வெளி பயணம் இரவு இஷா தொழுகைக்குப்பிறகு இரவில் படுத்திருக்கும்போது அவர்கள் அழைத்துச் செல்லவப்பட்டார்கள். இந்த விண்வெளிப் பணயத்தைப்பற்றி நபி صلى الله عليه وسلم அவர்கள் சொல்லும் போது 'எனது பயணம் இரவுப்படுக்கையின் சூடு ஆறுவதற்குள் நடந்து முடிந்தது' என்கிறார்கள். ஒரு நாள் பயணமாக இருந்திருந்தால் பூமியில் அனந்த கோடி வருஷங்கள் ஆகியிருக்கும். எனவே அவர்களின் விண்வெளிப்பயணம் ஒரு சில நிமிடப்பொழுதில் நடந்து முடிந்திருக்கிறது. பகுத்தறிவாத நண்பர், விண்வெளி பயணம் முடித்துவிட்டு மீடியாக்களிடம் பேட்டி கொடுக்கும்போது என் விண்வெளிப்பயணம் ஒரே ஒரு நாள் மட்டும்தான் என்கிறார். ஆனால் பூமியில் பலவருடங்கள் உருண்டோடியுள்ளது.

இதே நிலை நாளை மறுமையில் விசாரணைக்காலம் நடைபெறும் நாளில், குற்றவாளிகள் தாங்கள் இப்பூவுலகில் ஒரு நாழிகையைத் தவிர அதிக நாட்கள் தங்கி இருக்கவில்லை என்று சத்தியம் செய்வார்கள். இவ்வாறே இவ்வுலகத்திலும் அவர்கள் பொய்யையே பிதற்றிக் கொண்டிருந்ததாக குர்ஆனில் அல்லாஹ் (30.55) (76.46) கூறுகிறான். காரணம், இந்த மனிதர்கள் இறந்து தற்போது விசாரிக்கப்படும் இடத்தில் ஒரு நாள் என்பது மிலியின் ஆயிரம் வருடங்களுக்கு சமமாகவோ (குர்ஆன் 22:47) அல்லது பூமியின் 50 ஆயிரம் வருடங்களுக்கு சமமாகவோ (70.4-7) கூட இருக்கலாம். இதுதான் அந்த மனிதர்களின் குழப்பத்திற்கு காரணம்.

இந்த விஞ்ஞான உண்மையை குர்ஆன் மிகத் தெளிவாகக் கூறுகிறது. எனவே முஸ்லிம்கள் குறிப்பிடும் இறைவனும் திருகுர்ஆனும் கற்பனையோ கட்டுக்கதையோ அல்ல. இறைத்தூதர் முஹம்மது நபி صلى الله عليه وسلم அவர்களின் விண்வெளிப் பயணம் தான் இன்றைய விண்வெளிப் பயணங்களின் முன்மாதிரிப் பயணமாக இருந்தது என்பது உறுதி.

பகுத்தறிவாத(!) நண்பர்களே! நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மிஹ்ராஜ் எனும் விண்ணுலகப் பயணத்திற்கு இந்த அறிவியல் நிரூபணம் போதும் என நினைக்கிறேன்.

www.nidur.info

டைம் டிராவல் (Time Travel ) 5

காலத்தில் பின்னோக்கி பயணிக்க முடியுமா? 16-07-2020



ரோன் மாலெட் ஒரு இயற்பியல் பேராசிரியர். அவருக்கு ஒரு கனவு இருந்தது. காலத்தில் பயணிக்க வேண்டும் என்பதே அது. தமிழ் சினிமா பாணியில் சொல்ல வேண்டுமென்றால், இன்றிலிருந்து நேற்றும், நேற்றிலிருந்து நாளையும் பயணிக்க வேண்டும் என்பதுதான் அது.

ஆனால் அது எல்லாம் சாத்தியமா. இப்படியாக யோசிப்பது ஒரு நல்ல அறிவியல் புனைவிலக்கியத்திற்கு வேண்டுமானால் பயன்படலாம் என்றார்கள். ஆனால், இது வெறும் புனைவல்ல.

ரோன் மாலெட் தனது வாழ்நாளின் பெரும்பகுதியை அதற்காகவே செலவிட்டு இருக்கிறார்.

காலத்தை கடக்க நினைப்பது ஏன்?

ரோனின் தந்தை தனது 33 ஆம் வயதில் மரணித்தார். அப்போது ரோனுக்கு வெறும் 10 வயதுதான். இந்த இழப்பினால் நிலைகுலைந்து போனார் ரோன். இந்த இழப்பிலிருந்து மீள புத்தகங்களில் தன்னைத்தானே புதைத்துக் கொண்டார். அப்போது அவர் கடந்துவந்த ஒரு புத்தகம்தான் அவருக்கு கால இயந்திரம் குறித்து ஆர்வம் ஏற்பட காரணம்.

"என் பதினோரு வயதில் நான் படித்த ஒரு புத்தகம் என் வாழ்க்கையையே திருப்பி போட்டது. அந்த புத்தகம் எச்ஜி.வெல்ஸின் "தி டைம் மிஷின்." என்கிறார் கனெக்டிகட் பல்கலைக்கழகத்தின் பேராசிரியர் ரோன்.

அந்த புத்தகம் எப்படி தன்னை ஈர்த்தது என்பது குறித்து விளக்கும் ரோன், "முதலில் என்னை புத்தகத்தின் அட்டை வடிவம்தான் ஈர்த்தது. மெல்ல அந்த புத்தகத்தை புரட்டியபோது, அதில் உள்ள ஒரு வரி எனக்குள் அழுத்தமான ஒரு தாக்கத்தை ஏற்படுத்தியது. அந்த வரி இதுதான், "'அறிவியலாளர்களுக்கு நன்கு தெரியும். காலமும் வெளியை (Space) போன்றதுதான். வெளியில் எப்படி நாம் முன்னும் பின்னும் நகர முடியுமோ? அதுபோல நாம் காலத்திலும் முன்னும் பின்னும் நகர முடியும்'" என்று இருந்தது. இது என்னை ஆச்சர்யத்தில் ஆழ்த்தியது." என்கிறார்.

"நம்மால் ஒரு கால இயந்திரத்தை உருவாக்க முடியுமானால், அதில் பயணித்து என் தந்தையை சந்திக்க முடியும் தானே, அவரது உயிரைக் காக்க முடியும் தானே, எல்லாவற்றையும் மாற்ற முடியும்தானே? என்று அந்த கணத்தில் யோசித்தேன்." என்கிறார் பேராசியர் ரோன்.

இதெல்லாம் எங்கே நடக்கப் போகிறது என்று கால இயந்திரம் குறித்த கனவை ஆயாசமாக கடந்து சென்றாலும், இயற்கையின் புதிர்கள் குறித்த பல முடிச்சுகளை வெற்றிகரமாக அவிழ்த்த அறிவியலாளர்கள் நிச்சயம் ஒரு நாள் இதனை உருவாக்குவார்கள். ரோனின் கனவு நிச்சயம் ஒரு நாள் நிஜமாகும்.

இந்த வெளியின் மூன்று பரிமாணங்களும் நான்காவது பரிமாணமான காலத்துடன் தொடர்புடையது என்று ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் நம்பினார்.

வெளிக்கும் காலத்திற்கும் ஒரு பாலத்தை ஏற்படுத்துவதன் மூலம், காலப் பயணத்தை சாத்தியப்படுத்தலாம் என்று அவர்நம்பினார் . இது வார்ம்ஹோல் (**wormhole)** ஆகும். அதாவது தமிழில் பரவெளி.

எளிமையாக புரிந்துக் கொள்ளும்படி சொல்ல வேண்டுமென்றால், ஒரு சுரங்கப் பாதையை கற்பனை செய்துக் கொள்ளுங்கள் அதன் ஒரு முனை வெளியின் ஒரு காலத்திலும், இன்னொரு முனை மற்றொரு காலத்திலும் இருக்கிறது.

பரவெளி இயற்கையாகவே இந்த பிரபஞ்சத்தில் இருக்கலாம். ரஷ்ய விஞ்ஞானிகள் ரேடியோ டெலஸ்கோப்பை பயன்படுத்தி இதனை உறுதிப்படுத்தும் முயற்சியில் இருக்கிறார்கள். ஆனால், பரவெளியை பயன்படுத்தி காலத்தில் பயணிப்பது சரியான ஒன்றாக இருக்காது.

ஏனெனில், பரவெளியில் நாம் பயணித்தாலும், அதன் மற்றொரு முனை பிரபஞ்சத்தின் எந்தப் புள்ளியில் இருக்கும் என்று நம்மால் கணிக்க முடியாது.

பரவெளியில் இன்னொரு பிரச்சனையும் இருக்கிறது என்கிறார்கள் அறிவியலாளர்கள். பரவெளி தன்னுள் இருக்கும் அனைத்தையும் நெரித்து, அழுத்திவிடும் அபாயம் இருக்கிறது.

ஆனால், பரவெளியை கட்டுப்படுத்தும் பட்சத்தில் எதிர்காலத்தில் நாம் அதில் பயணிக்கலாம், காலத்தின் ஏதோ ஒரு பகுதியில் இறங்கலாம். இதற்கு காலப் பயணம் செய்பவர்களின் உடலில் மாற்றம் செய்யப்பட வேண்டும் .

263. அபூதர் (ரலி) அவர்கள் அறிவித்துவந்ததாக அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் மக்காவில் இருந்தபோது என் வீட்டின் கூரை பிளக்கப்பட்டது. (அதன் வழியாக வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் இறங்கி (வந்து) என்னுடைய நெஞ்சைப் பிளந்தார். பிறகு அதை "ஸம்ஸம்" நீரால் கழுவினார். பிறகு நுண்ணறிவாலும் இறைநம்பிக்கையாலும் நிரம்பிய தங்கத் தாம்பூலம் ஒன்றைக் கொண்டு வந்து என் நெஞ்சத்தினுள் அதை ஊற்றி (நிரப்பி)னார். பிறகு (பழையபடியே) நெஞ்சை மூடிவிட்டார்.பிறகு என் கையைப் பிடித்து (என்னை அழைத்து)க் கொண்டு விண்ணில் ஏறினார்.

ஆஸ்திரேலியா குயின்ஸ்லாந்த் பல்கலைக்கழகத்தின் பிரபஞ்சவியலாளர்கள் டமாரா டேவிஸ், "நம்மால் பரவெளியை உருவாக்க முடியுமா, நம் ஆற்றலுக்குள் அது அடங்குமா நம் உடலில் ஏதேனும் மாற்றம் செய்ய வேண்டுமா என்று தெரியவில்லை. ஆனால், யார் கண்டது எதிர்காலத்தில் எதுவுமே சாத்தியமாகலாம்" என்கிறார்.

ஆனால், ரோனுக்கு கால இயந்திரத்தை நிச்சயம் உருவாக்க முடியும் என்ற நம்பிக்கை இருக்கிறது. ஆல்பர்ட் ஐன்ஸ்டீனின் சமன்பாடு குறித்து அவர் 12 வயதில் படித்த புத்தகம்தான் அவருக்கு இந்த நம்பிக்கையை தருகிறது என்கிறார் அவர். அதற்கான முயற்சியிலும் இருக்கிறார்.

கடந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம்

காலப் பயணம் சாத்தியமே இல்லை என்கிறார் கனடா பெரிமீட்டர் கல்வி நிலையத்தின் பேராசிரியர் லீ ஸ்மோலின். அவர் சொல்கிறார், " நிகழ்காலம் இருக்கிறது. கடந்த காலம் நம் நினைவில் மட்டுமே இருக்கிறது.

எதிர்காலம் இருக்கப்போகிற ஒன்று. அதனால், நினைவில் மட்டுமே உள்ள ஒரு விஷயத்திற்கும், இப்போது இல்லாத ஒரு வெளிக்கும் நாம் எப்படிப் பயணம் செய்ய முடியும்?

குவாண்டம் அறிவியலின் வளர்ச்சி இந்த கேள்விகளுக்கு பதில் தரலாம் என்கிறார் பெரிமீட்டர் கல்வி நிலையத்தின் இயக்குநர் பேராசிரியர் நீல் டுரோக்.

அவர், "இங்கே, முடியாது என்று எப்போதுமே கூறக் கூடாது. ஏனெனில் இப்போது நம்மால் முடியாத ஒரு விஷயத்தை எதிர்காலத்தில் யாரேனும் ஒரு புத்திசாலி இளைஞர் வந்து நிகழ்த்தி காட்டுவார்" என்கிறார் பேராசிரியர் நீல் டுரோக்.

இன்னொரு ஒரு விஞ்ஞானி காலப் பயணத்தை ஒரு உதாரணம் மூலம் விளக்க விரும்புகிறேன் என்கிறார் .

ஒளியின் வேகம் ஒரு வினாடிக்கு ஒரு மீட்டர்தான் என்று வைத்துக் கொள்வோம்.நீங்கள் ஒரு வினாடிக்கு 5 மீட்டர் ஓடக் கூடியவர் என்று வைத்துக் கொள்வோம்.

இப்போது நீங்கள் உங்கள் வீட்டு திண்ணையில் அமைதியாக ஒரு 10 வினாடிகள் உட்கார்ந்து இருந்து விட்டு, திடீரென எழுந்து ஓடுங்கள். ஒரு வினாடிக்குள் 5 மீட்டர் ஓடிவிட்டு திடீரென நின்று திரும்பிப் பாருங்கள்.இப்போது நீங்கள் உங்களையே அந்த திண்ணையில் அமர்ந்து கொண்டு இருப்பதைப் பார்க்க முடியும்.
எப்படி என்றால், ஒளியின் வேகம் ஒரு வினாடிக்கு ஒரு மீட்டர்தான் என்பதால், 5 வினாடிகளுக்கு முன்பு நீங்கள் திண்ணையில் அமர்ந்து கொண்டு இருந்த அந்த காட்சிதான் இப்போது உங்கள் கண்களை வந்து அடைந்திருக்கும். இன்னும் 4 வினாடிகள் கழித்துதான் நீங்கள் திடீரென எழுந்து ஓட ஆரம்பித்தது உங்கள் கண்ணுக்கு தெரியும்.
காலப்பயணம் என்பது கிட்டத்தட்ட இதுபோல்தான். இதையே உங்கள் அதிவேகத்தை பொறுத்து பல ஆண்டுகள் பின்னால் நடந்த நிகழ்வுகளை காண முடியும்.

ஆனால், ஒளியின் வேகத்தை (வினாடிக்கு தோராயமாக 3 லட்சம் கிலோ மீட்டர்கள்) தாண்டி இயங்கும் ஒரு வாகனம்/இயந்திரம் இங்கு சாத்தியம் இல்லை.அதற்கு காலம் வரும் வரை காலப் பயணம் என்பதும் சாத்தியம் இல்லை.

மேலும், மேற்கண்ட உதாரணத்தில், நீங்கள் ஓடத்தொடங்கும் முன்னால், நீங்கள் 1 வினாடிக்கு அப்புறம் 5 மீட்டர் தொலைவில் நிற்பதை, உங்களால் பார்த்திருக்க முடியாது (உதாரணத்தில் ஒளியின் வேகம் வினாடிக்கு ஒரு மீட்டர்தான் என்பதால்). அதனால் எதிர் காலத்து மனிதர்கள் கால இயந்திரம் மூலம் இப்போது வந்ததை நான் பார்த்தேன் என்று யாராவது சொன்னால் அது முழுமையான கட்டுக்கதை என்கிறார் .

....ஆனால் நபி(ஸல்) அவர்கள் மிஹ்ராஜ் பயணம் இன்றிலிருந்து நேற்று அதாவது பின்னோக்கும் பயணமாக இருந்தது .

259. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(விண்ணுலகப் பயணத்தின்போது) என்னிடம் கோவேறு கழுதையைவிடச் சிறியதும், கழுதையைவிடப் பெரியதுமான வெள்ளை நிறத்திலமைந்த நீளமான புராக் எனும் (மின்னல் வேக) வாகனம் ஒன்று கொண்டுவரப்பட்டது. அது பார்வை எட்டுகிற தூரத்திற்குத் தனது கால் குளம்பை எடுத்து (எட்டு) வைக்கும். அதிலேறி நான் பைத்துல் மக்திஸ் (ஜெரூசலேம்) இறை ஆலயம் வரை சென்றேன். பிறகு இறைத்தூதர்கள் தமது வாகனத்தைக் கட்டி வைக்கும் வளையத்தில் எனது வாகனத்தைக் கட்டிவைத்துவிட்டு அந்த இறையாலயத்திற்குள் நுழைந்து இரண்டு ரக்அத்கள் தொழுதேன். பிறகு நான் அங்கிருந்து புறப்பட்ட போது (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் (என்னிடம்) ஒரு பாத்திரத்தில் மதுவும் மற்றொரு பாத்திரத்தில் பாலும் கொண்டுவந்தார். (அதில் விரும்பியதைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளுமாறு கூறினார்.) நான் பால் பாத்திரத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன். அப்போது ஜிப்ரீல், "இயற்கையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டீர்" என்று கூறினார்.

267. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் (விண்ணுலகப் பயணத்திற்காக) அழைத்துச்செல்லப்பட்ட இரவில் இம்ரானின் புதல்வர் மூசா (அலை) அவர்களைக் கடந்துசென்றேன். மூசா (அலை) அவர்கள் (யமனியர்களான) "ஷனூஆ" குலத்தைச் சேர்ந்த மனிதரைப் போன்று மாநிறமுடையவர்கள்; உயரமானவர்கள்; சுருள்முடியுடையவர்கள். (அப்பயணத்தில்) மர்யமின் மைந்தர் ஈசா (அலை) அவர்களையும் கண்டேன். அவர்கள் நடுத்தர உயரமும் சிவப்பும் வெண்மையும் கலந்த, மிதமான சரும அமைப்புக் கொண்டவர்களாகவும் படிந்த, தொங்கலான தலைமுடி உடையவர்களாகவும் இருந்தார்கள். மேலும், நரகத்தின் காவலரான (வானவர்) மாலிக்கும், (இறுதிக் காலத்தில் வரவிருக்கும் மகா பொய்யனான) தஜ்ஜாலும் எனக்குக் காட்டப்பட்டனர். இவையெல்லாம் அல்லாஹ் எனக்குக் காண்பித்த அவனுடைய சான்றுகளில் உள்ளவை. "நீங்கள் அவரைச் சந்தித்ததில் சந்தேகம் ஏதும் கொள்ள வேண்டாம்". (32:23)
இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
மேற்கண்ட (32:23ஆவது) வசனத்திற்கு விளக்கமளிக்கையில் கத்தாதா (ரஹ்) அவர்கள், "நபி (ஸல்) அவர்கள் மூசா (அலை) அவர்களைச் சந்தித்தது பற்றி நீங்கள் சந்தேகம் ஏதும் கொள்ள வேண்டாம்" என்று கூறினார்கள்.
ஸஹீஹ் முஸ்லிம் அத்தியாயம் : 1. இறைநம்பிக்கை

268. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(ஒரு பயணத்தில்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அல்அஸ்ரக்" பள்ளத்தாக்கைக் கடந்து சென்றார்கள்.அப்போது, "இது எந்தப் பள்ளத்தாக்கு?" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், "அல்அஸ்ரக் பள்ளத்தாக்கு" என்று பதிலளித்தார்கள். "மூசா (அலை) அவர்கள் உரத்த குரலில் "தல்பியா"

சொல்லிக்கொண்டு இந்த மலைக் குன்றிலிருந்து இறங்கிவந்து கொண்டிருப்பதை (இப்போதும்) நான் காண்பதைப் போன்று உள்ளது" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். பிறகு ஹர்ஷா மலைக் குன்றுக்குச் சென்றார்கள். "இது எந்த மலைக் குன்று?" என்று கேட்டார்கள். மக்கள், "(இது) ஹர்ஷா மலைக் குன்று" என்று பதிலளித்தனர். அதற்கு "யூனுஸ் பின் மத்தா (அலை) அவர்கள் கம்பளி நீளங்கி அணிந்தவர்களாகக் கட்டுடல் கொண்ட சிவப்பு ஒட்டகமொன்றின் மீது "தல்பியா" சொல்லிக் கொண்டிருப்பதை நான் (இப்போதும்) காண்பதைப் போன்று உள்ளது. அவர்களது ஒட்டகத்தின் கடிவாளம் ஈச்ச நாரினாலானது" என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இரு அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளது.
ஸஹீஹ் முஸ்லிம் அத்தியாயம் : 1. இறைநம்பிக்கை

டைம் டிராவல் (Time Travel ) 6 16/06/2020

காலப்பயணம்: புனைவா? மறைக்கப்பட்ட உண்மையா?



அறிவியல் உலகில் பல்லாண்டு காலமாக நீங்காத மர்மங்களில் Time Travel எனப்படும் காலப்பயணமும் முக்கியமான இடத்தினை பிடிக்கிறது.

காலப்பயணம் (Time Travel) என்றால் என்ன?

தற்போது இருக்கும் காலத்தில் இருந்து இறந்த காலத்திற்கோ அல்லது எதிர்காலத்திற்கோ பொருள்களை அனுப்புவதோ, தகவல்கள்/சமிக்ஞைகளை அனுப்புவதோ, அல்லது மனிதர்கள் பயணம் செய்வதையோ காலப்பயணம் என குறிப்பிடுகின்றனர்.
ஐன்ஸ்டீனால் உருவாக்கப்பட்ட சிறப்பு சார்பியல் மற்றும் பொது சார்பியல் கொள்கைகளே காலப்பயணம் என்ற கருத்தை முதலில் முன்வைத்தது.மேலும், இவ்வாறான காலப்பயணத்தை அடைய பயன்படும் தொழிநுட்ப சாதனத்தினை கால இயந்திரம் என்று குறிப்பிடுகின்றனர்.

கடந்த 19ம் நூற்றாண்டில் இருந்து காலப் பயணம் மற்றும் கால இயந்திரம் பற்றி எண்ணற்ற புனைவு கதைகள் வரத் தொடங்கியது.
1895ம் ஆண்டு H. G. Wells என்ற பிரபல ஆங்கில எழுத்தாளர் எழுதிய கால இயந்திரம் (The Time Machine) என்ற அறிவியல் புனைவு நாவல் மூலம், கால இயந்திரம் என்ற வார்த்தையும், காலப் பயணமும் உலகம் முழுவதும் பிரபலம் அடைய தொடங்கியது.

இந்திய புராணமான மகாபாரதத்தில் கூறப்படும் கதையை வைத்து காலப்பயணத்தை இன்னும் எளிதாக விளக்கலாம். ரைவதா (Raivata Kakudmi) அரசன் கதையில் அவர் படைப்புக்கடவுளான பிரம்மாவைக் காண்பதற்கு உலகைவிட்டு சொர்க்கத்திற்கு பயணிக்கிறார்.
பின்னர் பூமிக்கு திரும்ப வந்தவுடன் பல யுகங்கள் கடந்துவிட்டதைக் கண்டு அவர் கடும் அதிர்ச்சியுறுவதாக கூறப்பட்டுள்ளது.

எவ்வாறு காலப்பயணம் செய்யலாம்?

இயற்பியல் கோட்பாடுகள் மூலம் காலப்பயணம் சாத்தியம் என ஐன்ஸ்டீன் முதல் ஸ்டீபன் ஹாக்கிங் வரை பல அறிவியல் அறிஞர்களால் கூறப்பட்டிருந்தாலும், செயல்முறையில் இதனை இன்னும் சாத்தியப்படுத்தியதாக எந்த பதிவும் இல்லை.
கால வெளியில் பிராயணம் செய்ய வேண்டுமென்றால்:
ஒளி வேகத்துக்கு இணையான வேகத்தில் பிராயணிக்க வேண்டும். அப்படி பிராயணம் செய்ய பயன்படும் அந்த பாதைகளை Worm Holes என விஞ்ஞானிகள் அழைக்கின்றனர். மனிதனால் போக முடியாதா அளவில் காணப்படும் அந்த #துளைகள், இந்த பேரண்டத்தில் பல கோடிக் கணக்கிலிருக்கின்றன.

விஞ்ஞானிகள் அந்த துளைகளில் ஒன்றை பெரிதாக்கி அதனுள் மனிதனை ஒளி வேகத்துக்கு இணையான வேகத்தில் செலுத்தலாம் என்று முயற்சிக்கின்றனர்.

ஐன்ஸ்டீனின் சார்பியல் தத்துவத்தில் கூறப்பட்டுள்ளதை போல, ஒளியின் வேகத்தில் பயணித்தால் காலப்பயணம் சாத்தியம் என்றும், அவ்வாறு பயணம் செய்தால், பயணிப்பவர்களுக்கு வயது மிக மிக மெதுவாகவே மாற்றமடையும் என்றும் கூறுகின்றனர்.
வேகம் ஒளியின் வேகத்தை அடைந்தால் நேரம் நீளும், இதனால் தான் விண்வெளி செல்லும் நபர்களுக்கு வயதாகுவது இல்லை என்று கூறப்படுகிறது. ஏனெனில் விண்வெளியில் காலம் கிடையாது.

இவ்வாறு பல ஆச்சர்யங்களையும் ,மர்மங்களையும் கொண்டு சுவாரஸ்யமாக விளங்கும் இந்த காலப்பயணம் சாத்தியமா அல்லது சாத்தியம் இல்லையா என்று திட்டவட்டமாக அறுதியிட்டு கூற அறிவியலாளர்களாலேயே இன்னும் முடியவில்லை.

காலப் பயணம் பற்றிய செய்திகள்:
ஆனாலும், பல்லாண்டுகளுக்கு முன்பிருந்து காலப்பயணம் பற்றி எண்ணற்ற செய்திகளும் புகைப்படங்களும் வெளிவந்துள்ளன.

ஏற்கனவே எண்ணற்றோர் காலப்பயணம் செய்து இறந்த காலத்திற்கும், எதிர்காலத்திற்கும் பயணித்திருப்பார்களோ என்ற சந்தேகத்தினை வலுப்படுத்துகிறது.
பல்லாண்டுகளாக கோட்பாடுகளில் மட்டுமே சாத்தியமாகியுள்ள காலப்பயணம், எதிர்காலத்தில் நிஜத்திலும் சாத்தியம் அடைவதற்கான வாய்ப்புகள் இருக்கலாம். அவ்வாறு சாத்தியமாகி மனிதர்கள் தங்கள் கடந்த காலத்திற்கும், எதிர்காலத்திற்கும் பயணித்தால் என்ன நடக்கும் என்பதை கற்பனையில் கூட விவரிக்க முடியாது!

சூஃபியிஸத்தின் தலைவர் ஹளரத் ஜுனைதுல் பாக்தாதி ரஹ் அவர்களின் சீடர் ஒருவர் குளிப்பதற்காக தஜ்லா நதிக்கு வருகிறார்
அந் நேரம் சுபுஹ் தொழுகைக்கு சற்று முந்தைய நேரம்
ஆடைகளை களைந்து ஆற்றின் ஓரத்தில் வைத்து விட்டு நதியில் இறங்கி ஒரே ஒரு முங்குதான் போட்டார் . . . . . . அவ்வளவுதான் அவர் கண்டம் விட்டு கண்டமோ அல்லது இந்த பிரபஞ்சத்தின் வேறு ஏதோ ஒரு கிரகத்தின் நதியிலோ குளித்தவாறு வெளியே வருகிறார் அங்கு ரொம்ப காலம் அங்குள்ள மக்களோடு மக்களாக வாழ்ந்து வருகிறார்

. . . . . . ஒரு நாள் அங்குள்ள நதியில் யதார்த்தமாக குளிக்கிறார் அந்த நதியில் ஒரே ஒரு முங்கு போட்டார் . . . . . . அவ்வளவுதான் மீண்டும் தஜ்லா நதியில் ஆற்றில் நின்று கொண்டு இருக்கிறார் . . . ஆச்சரியம் அதே சுபுஹ் நேரம் இன்னும் சுபுஹ் தொழுகை நடைபெறவில்லை களைந்து வைத்த துணி கூட அங்கு அதே இடத்தில் அப்படியே இருக்கிறது . . . . துணி உடுத்துக் கொண்டு சுபுஹ் தொழுகையில் கலந்து கொள்கிறார்

இதைப்பற்றி தனது ஷைகான ஜுனைதுல் பக்தாதி ரஹ் அவர்களிடம் கூறிய போது சில சமயம் ரொம்ப அதிகமாக வணக்க வழிபாடுகளில் ஈடுபட நினைக்கும் சாதாரண சாதகருக்கு பல காலம் வணங்கும் பாக்கியத்தை இப்படியும் இறைவன் வழங்குகின்றான்

இது சாத்தியமா ? என்றால் விஞ்ஞானத்தின் பதில் . .. .சாத்தியமே

டைம் டிராவல் (Time Travel ) 7

சித்தர்களின் டைம் டிராவல் 19-07-2020



விண்வெளிப் பயணம் போன்று காலப் பயணம் என்ற ஒன்றையும் கூறுகின்றார்கள். காலப்பயணம் என்பது கொள்கை வடிவில் உள்ளது. இது சாத்தியந்தான் என்று ஸ்டீபன் ஹாகின்ஸ் (**Stephen Hopkins)** கூறுகின்றார்.

காலப்பயணம் செய்ய அண்டவெளி புழுத்துளை (**Worm hole)** தேவைப்படுகின்றது. இத்துளை நம்மை சுற்றியே உள்ளதாகவும் ஸ்டீபன் கூறுகின்றார். இதனுள் செல்ல அணு வடிவம் எடுத்து மிகுந்த வேகத்தில் செல்ல வேண்டுமாம். பணயம் முடிந்தவுடன் மீண்டும் சுய உருவம் பெற வேண்டுமாம்.

கோள்களின் நகர்வை வைத்து காலம் கணக்கிடப்படுகின்றது. பொருள்களின் மாற்றங்களை காலத்தின் நீளம் கொண்டு கணக்கிடுகின்றோம். பொருள்களில் மாற்றம் செய்யாமல் காலத்தை மட்டும் முன் நோக்கி அல்லது பின்னோக்கி நகர்த்தி பார்ப்பது காலப் பயணமாகும்.

உதாரணமாக 2500-ஆம் ஆண்டு இவ்வுலகம் எப்படி இருக்கும் என்பதனை நமது உடலில் மாற்றம் இல்லாமல் 2500-ஆம் ஆண்டிற்கு சென்று பார்ப்பது. அல்லது கிருஸ்த்து பிறப்பிற்கு முன்னுள்ள காலத்திற்கு சென்று பார்ப்பது.

நமது தமிழ்ச் சித்தர்கள் இப்படிப்பட்ட காலப் பயணத்தை மேற்கொண்டுள்ளனர். கோரக்க சித்தர் தாம் செய்த காலப்பயணத்தின் அனுபவங்களை பாடல்களாக சந்திர ரேகை என்கின்ற நூலில் பாடல் 194 முதல் 199 வரை பதிவு செய்துள்ளார். கலியுகத்தின் பிறப்பு முதல் முடிவு வரை நடக்கும் நிகழ்ச்சிகளை இப்பாடல்களில் உரைத்துள்ளார்.

தமது காலப் பயணத்தை கோரக்கர் பதிவு செய்தது போல் விண்வெளிப் பயணத்தை திருமூலர் பதிவு செய்திருக்கின்றார். இதற்கு “கெவுணம் பாய்தல்” என்ற சித்தர் மொழி பயன்படுத்தப்பட்டுள்ளது. வேற்று கிரக

வாசிகள் இருக்கின்றார்களா? இல்லையா? என்று நாம் இன்று விவாதித்துக் கொண்டிருக்கின்றோம். ஆனால் திருமூலர் விண்வெளியில் உள்ள மனிதர்களிடம் பேசியுள்ளார். அவரது பயண விவரங்களை தமது பாடல்களிலும் பதிவு செய்துள்ளார். மேலும் இப்பிரபஞ்சம் 1008 அண்டங்களை உடையது என்ற தகவலையும் கூறுகின்றார்.

விண்வெளி பயணத்திற்கு சிவயோகம் செய்து காய சித்தி அடைந்து உடலை ஒளி உடலாக மாற்ற வேண்டும். இதனால் கணக்கில்லாத வேகத்தில் செல்ல முடியும். மேலும் குளிகை ஒன்றையும் தயார் செய்தார். திரவ பாதரசத்தை அணு மாற்றம் செய்து திடப்பொருளாக மாற்ற வேண்டும். அதன்பின் உலோகங்கள் ரத்தினங்கள் (உப ரசங்கள் 120) பாசானங்கள் ஆகியவற்றின் அணுக்களை திடரூப பாதரசத்துக்குக் கொடுத்து (சாரணை) பாதரசத்தின் நிறையை தங்கத்தின் நிறைக்குச் சமமாக கொண்டு வரவேண்டும். இவ்விதம் ஒரு முறை சாரணை செய்தால் அந்த குளிகைக்குச் ‘சகம்’ என்று பெயர். 14 முறை சாரணை செய்தால் ‘கமலினி’ என்று பெயர். 17 முறை சாரணை செய்தால் ‘சொரூபம்’ என்று பெயர். இந்த கமலின் மற்று சொரூப குளிகையினை விண்வெளி பயணத்திற்கு பயன்படுத்தினார்கள்.

(வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் (என்னிடம்) ஒரு பாத்திரத்தில் மதுவும் மற்றொரு பாத்திரத்தில் பாலும் கொண்டுவந்தார். (அதில் விரும்பியதைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளுமாறு கூறினார்.) நான் பால் பாத்திரத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன். அப்போது ஜிப்ரீல், "இயற்கையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டீர்" என்று கூறினார்.

அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது சிறு வயதில்) சிறுவர்களுடன் விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

அப்போது (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்து நபியவர்களைப் பிடித்துப் படுக்கவைத்து,அவர்களின் நெஞ்சைத் திறந்து இருதயத்தை வெளியிலெடுத்தார்கள். ஓர் (சதைத்) துண்டை வெளியில் எடுத்து, "இதுதான் உம்மிடமிருந்த ஷைத்தானுக்குரிய பங்கு" என்று ஜிப்ரீல் கூறினார்.

பிறகு ஒரு தங்கத் தாம்பூலத்தில் இதயத்தை வைத்து ஸம்ஸம் நீரால் அதைக் கழுவினார். பின்னர் முன்பு இருந்த இடத்தில் இதயத்தைப் பொருத்தினார்.

(நபியவர்களுடன் விளையாடிக்கொண்டிருந்த) அந்தச் சிறுவர்கள் நபியவர்களின் செவிலித் தாயிடம் ஓடிச் சென்று "முஹம்மத் கொல்லப்பட்டுவிட்டார்" என்று கூறினர்.

குடும்பத்தார் நபியவர்களை நோக்கி வந்தபோது (அச்சத்தால்) நபியவர்கள் நிறம் மாறிக் காணப்பட்டார்கள். அறிவிப்பாளர் அனஸ் (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்:

நபி (ஸல்) அவர்களின் நெஞ்சில் ஊசியால் தைத்த அந்த அடையாளத்தை நான் பார்த்திருக்கிறேன். ஸஹீஹ் முஸ்லிம் : 261.

நபிஸல் அவர்களுக்கு மெத்தம் நான்கு முறை நெஞ்சு இருதய அறுவை சிகிச்சை செய்து திரும்பவும் மூடப்பட்டுள்ளது

1 அவர்கள் 3 அல்லது 4 வயதில் ஹலீமா ரலி அவர்களிடம் வளர்ந்து வந்த போது

2 பத்தாவது வயதில் ஒரு முறை நடந்ததாக . . முஸ்னத்

3 நபித்துவம் வழங்கப்பட்ட போது ஹிரா குகையில் வைத்து நடந்தது

4 மிஹ்ராஜ் விண்வெளி பயணத்தின் போது நடந்தது முஸ்லிம் 260 பக்கம் 198 அடிக்குறிப்புகள்

இன்றைக்கு சூரிய மண்டலத்தையும் தாண்டி பயோனியர் 10 என்ற விண்கலம் ஆள் இல்லாமல் விண்வெளிக்கு அனுப்பட்டு சிக்னல் மூலம் செய்திகள் வந்த வண்ணம் உள்ளது

மனிதர்களை அனுப்புவதற்கு ஒரு நிமிடத்திற்கு 72 தடவை துடிக்கும் இதயத்தை மாற்றியமைக்க வேண்டும் எனபதாக விஞ்ஞானம் கண்டுள்ளது

. . . ஒரு நிமிடம் என்பது 365 நாட்களில் சூரியனை சுற்றி வரும் நம் பூமியிக்கு மட்டுமே செல்லுபடியாகும் . பூமியை தாண்டிய விண்வெளியில் ஒரு நிமிடம் என்பது அர்த்தமற்றதாகிவிடும்.

ர.ரா

## டைம் டிராவல் (Time Travel ) 9

## காலப் பயணம் சாத்தியம்தான் 20-07-2020



காலம் ஒரு அம்பு போல முன்னே பாய்ந்து செல்கிறது என்றும், பூமி, செவ்வாய், சூரியன் என்று பிரபஞ்சத்தில் எங்கும் காலம் ஒரே மாதிரி பயணித்துக்கொண்டிருக்கிறது என்றும் நியூட்டன் சொல்கிறார்.

நியூட்டன் காலத்துக்குப் பிறகு, 18-ம் நூற்றாண்டில் இத்தாலிய அறிவியலாளர் லக்ராஞ், இயக்கவியலைப் பற்றிச் சொல்லும்போது “இயக்கம் என்பது நான்கு பரிமாணங்களில் நடைபெறுகிறது. மூன்று பரிமாணங்கள் இடத்தைச் சார்ந்தவை, ஒரு பரிமாணம் காலம்” என்று காலத்தை நான்காவது பரிமாணமாக முன்வைக்கிறார். அதற்குப் பிறகு ‘நான்காவது பரிமாணமாகக் காலம்’ என்ற கோட்பாடு சூடுபிடிக்கிறது.

நதி போல பாயும் காலம்

காலத்தைப் பற்றிய கோட்பாடுகள் எல்லாவற்றையும் அடித்து நொறுக்கிப் போடுகிறார் ஐன்ஸ்டைன். அண்டவெளி, காலம் இரண்டும் ஒன்றுக்கொன்று பின்னிப் பிணைந்த ‘கால-வெளி’என்ற கோட்பாட்டை முன்வைக்கிறார்.

காலத்தை ஐன்ஸ்டைன் ஒரு நதி போல உருவகிக்கிறார். நதி எப்படி ஒரு இடத்தில் வேகமாகவும் வேறொரு இடத்தில் மெதுவாகவும் போகிறதோ அதுபோலத்தான் காலமும். செவ்வாய் கிரகத்தின் ஒரு நொடியும் பூமியின் ஒரு நொடியும் ஒன்று கிடையாது. அதேபோல் பிரபஞ்சத்தின் ஏதோ ஒரு இடத்தில் இருக்கும் விண்மீனின் ஒரு மணி நேரமும் பூமியின் ஒரு மணி நேரமும் ஒன்று இல்லை என்பதை 1915-ல் வெளியான ஐன்ஸ்டைனின் பொதுச் சார்பியல் கோட்பாடு சொல்கிறது.

இதில்தான் காலப் பயணத்துக்கான சாத்தியத்தை ஐன்ஸ்டைன் தன்னையே அறியாமல் ஒளித்துவைத்திருக்கிறார். இத்தனைக்கும் காலப் பயணம் சாத்தியமில்லை என்றே நம்பியவர் ஐன்ஸ்டைன்!

கருந்துளையைச் சுற்றி...

பொதுச் சார்பியல் கோட்பாட்டின் படி பெரும் நிறையானது காலத்தையும் அண்டவெளியையும் வளைக்கிறது. சூரியன் போன்ற பெரும் நிறைகொண்ட விண்பொருள் தன்னைச் சூழந்திருக்கும் கால-வெளியை வளைக்கிறது என்பது நிரூபிக்கப்பட்டிருக்கிறது. எந்த அளவுக்கு ஒரு விண்பொருள் அதிக நிறை கொண்டிருக்குமோ அந்த அளவுக்கு அது கால-வெளியை வளைக்கும். அந்த விண்பொருளுக்கு அருகில் காலம் மெதுவாகிறது. இதுவும் ஒரு வகையில் காலப் பயணம்தான்.

காலத்தை மிகவும் மெதுவாக ஆக்குவதற்கு சூரியனை விட ஆயிரக்கணக்கான மடங்கு நிறை தேவைப்படுகிறது. அப்படிப்பட்ட நிறை கொண்ட பொருள் ஒன்று நமது விண்மீன் மண்டலமான பால்வீதியிலேயே இருக்கிறது. ஆம், பால்வீதியின் மையத்தில் சூரியனை விட 40 லட்சம் மடங்கு நிறை கொண்ட கருந்துளை ஒன்று இருப்பதாகக் கருதப்படுகிறது.

பால்வீதியின் மையத்திலுள்ள கருந்துளையை ஒரு விண்கலத்தைச் சுற்றிவரச் செய்ய வேண்டும். பூமியில் 16 நிமிடங்கள் கழிந்திருந்தால் அந்த விண்கலத்தில் உள்ள கடிகாரத்தில் 8 நிமிடம் கழிந்திருக்கும். அந்த விண்கலத்தில் உங்களின் இரட்டைச் சகோதரர் இருக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். விண்கலத்தில் அவர் புறப்பட்டபோது உங்கள் இருவருக்கும் 25 வயது என்றால் பூமியில் 10 ஆண்டுகள் கழிந்த பிறகு உங்களுக்கு 35 வயது ஆகியிருக்கும். உங்கள் சகோதரருக்கோ 30 வயதுதான் ஆகியிருக்கும். தனது 30-வயதில் 35 வயதுக்காரரான உங்களை அவர் சந்தித்ததால் உங்கள் சகோதரர் மேற்கொண்டது காலப் பயணமே.

ஆனால், இந்த கருந்துளையை அடைவதில் இரண்டு சிக்கல்கள் உள்ளன. ஒன்று, அந்தக் கருந்துளை இருப்பது பூமியிலிருந்து 26,000 ஒளியாண்டுகள் தொலைவில், அதாவது 260,00,00,000,00,00,000 கிலோ மீட்டர் தொலைவில். ஒளியின் வேகத்தில் பயணம் செய்வது சாத்தியமில்லை என்றாலும் அப்படிப் பயணம் செய்வதாக வைத்துக்கொண்டாலும் அந்தக் கருந்துளைக்கு அருகே செல்வதற்கு 26 ஆயிரம் ஆண்டுகள் ஆகும்.

ஆனால், மனிதர்கள் செல்லும் விண்கலத்திலேயே அதிக வேகம் கொண்ட அப்போலோ-10 கலமே கிட்டத்தட்ட மணிக்கு 40 ஆயிரம் கிலோ மீட்டர்தான் செல்லும். இன்னொரு சிக்கல், கருந்துளைக்கு அருகில் சென்றால் அது ஒளியைக்கூடத் தப்ப விடாது. ஆக, காலப் பயணம் மேற்கொள்வதற்காகக் கருந்துளையைச் சுற்றிவருவதென்பது கோட்பாட்டளவில் சாத்தியமே ஒழிய நடைமுறையில் சாத்தியம் இல்லை.

நபி (ஸல்) அவர்களின் மிஹ்ராஜ் என்னும் விண்வெளிப் பயணம் கருந்துளை வழியாக நடந்திருக்கக் கூடும் என்பதாக ஹதீஸ் முஸ்லிமில் கருந்துளையை சித்ரத்துல் முன்தஹா என்று குறிப்பிடலாம் .

பிரிந்த உயிர் செல்லும் பாதை
அநேகமாக கருந்துளை வழியாக செல்வதாக கீழ்க்கண்ட கருத்துக்கள் அமைகிறது

சித்ரத்துல் முன்தஹா என்பது வான் எல்லையில் உள்ள ஓர் இடத்தின் பெயர் ஆகும் சித்திரத் என்பது இலந்தை மரம் முன்தஹா என்றால் இறுதியானது என்று பொருள் இறுதி எல்லையில் உள்ள இலந்தை மரம் என்று பொருள் விரியும்

வான் எல்லையில் உள்ள பிரம்மாண்டமான இந்த மரத்தின் இலைகள் ஒவ்வொன்றும் யானையின் காதுகளைப் போன்றும் பழங்கள் ஒவ்வொன்றும் பெரிய பூஜாவை போன்றும் இருக்கும். ஆறாவது வானத்தின் இதன் வேர்கள் உள்ளது ஏழாவது வானத்திற்கு மேல் வரை இம்மரம் நெடிது உயர்ந்து உள்ளது

பொன்வண்டுகள் இந்த மரத்தை மொய்த்துக் கொண்டிருக்கும் .அந்த மரம் பல வண்ணங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளது .அதன் அழகை வர்ணிக்க வார்த்தைகள் இல்லை

பூமியில் உள்ளோர் புரியும் செயல்கள் பற்றி குறிப்பு இங்கு தான் செல்கிறது பூமியில் கைப்பற்றப்படும் உயிர்களும் இங்கேதான் வந்து சேர்கின்றன.

இதற்கு மேல் இருந்து வரும் வேளை இறைகட்டளைகள் இங்கு தான் முதலில் இறங்குகின்றன வானவர்களின் அறிவு இந்த இடத்தோடு முற்றுப்பெறுவதாலே இதற்கு ' முன்தஹா ' என்று பெயர் வந்தது என்பர் .

அதிலிருந்து நான்கு ஆறுகள் ஓடுகின்றன இரண்டு உள்நோக்கி பாயும் சல்சபீல் மற்றும் அல் கவ்ஸர் ஆகிய சொர்க்கத்தின் ஆறுகளாகும். மற்ற இரண்டும் வெளியே பாயும் நைல் மற்றும் யூப்ரடீஸ் நதிளாகும். அல்லாஹ்வே மிக அறிந்தவன்

ஞான ஜோதி சம்மங்கி எழுதிய . " "மரணம் ,மறுமை , முக்தி "எனும் ஆய்வு நூலில் ,பிரபஞ்சத்திலுள்ள கருந்துளைச் சுற்றி நான்கு வளையங்கள் உள்ளன
ஊர்வன பறப்பன இவற்றோடு தீய எண்ணங்களால் தீய காரியங்களையே செய்த மனித ஆத்மாக்கள் யாவும் முதல் வளையத்தை அடைகிறது

நல்லதும் கெட்டதும் கலந்து ஓரளவு மனிதத் தன்மையோடு வாழ்ந்த ஆன்மாக்கள் இரண்டாவது வளையத்தையும் அடைகிறது

நல்ல எண்ணங்களுக்கு மட்டுமே இடம் கொடுத்து நல்ல செயல்களால் மட்டுமே வாழ்ந்தார்களின் ஆன்மாக்கள் மரணத்திற்குப் பிறகு மூன்றாவது வளையத்தை அடைகிறது

வணக்க வழிபாடு தியானம் பிறருக்காகவே வாழ்ந்த புனித ஆன்மாக்கள் மரணத்திற்குப் பிறகு நான்காவது வளையத்தை அடைகிறது

யோக நெறிகளான தியானத்தில் முதிர்ந்து முக்தி அடைந்து சமாதி நிலையை அடைந்த பூரண யோகியரின் ஆன்மாக்கள் உடலை நீர்த்ததும் நேராக இந்த கருந்துளைக்குள்ளே நுழைந்து அதில் சங்கமாகி விடுகின்றன என்பதாக கருந்துளையின் அமைப்பையும் அதன் பயன்பாட்டையும் குறிப்பிட்டுள்ளார் .

பேரனைவிட இளைய தாத்தா

அடுத்த சாத்தியமும் ஐன்ஸ்டைனின் சிறப்புச் சார்பியல் கோட்பாட்டில்தான் இருக்கிறது. ‘ஒளியை விட வேகமாகப் பயணித்தால் கடந்த காலத்துக்கு நாம் தந்தி அனுப்ப முடியும்’ என்று ஐன்ஸ்டைன் நகைச்சுவையாக ஒருமுறை குறிப்பிட்டார். என்றாலும், பிரபஞ்சத்தின் உச்சபட்ச வேகம் ஒளியினுடையதே; அந்த வேகத்தை எதுவும் தாண்ட முடியாது என்பது அவருடைய கோட்பாடு.

ஒளியின் வேகத்துக்குச் சற்று அருகே ஒரு விண்வெளி வீரர் விண்கலத்தில் பயணித்துவிட்டுச் சில வருடங்கள் கழித்து பூமிக்கு வருவாரென்றால் பூமியில் இருக்கும் அவரது பேரனைவிட இளமையாக இருப்பார்.

ஒளியின் வேகத்துக்கு அருகே பயணிக்கும் எதுவும் மிக மெதுவாகவே மூப்படையும் என்பது சுவிட்சர்லாந்தில் உள்ள செர்ன் (CERN) ஆய்வுக் கூடத்தில், பை-மேசான்கள் என்ற அணுத்துகள்களைக் கொண்டு நிரூபிக்கப் பட்டிருக்கிறது. ஒரு நொடியை 2,500 கோடி மடங்காகப் பகுத்தால் எவ்வளவு நேரம் கிடைக்குமோ அவ்வளவு நேரம்தான் ஆயுள் அந்தத் துகள்களுக்கு. செர்னில் தரைக்கு அடியில் 16 மைல் தொலைவுகொண்டதாய் அமைக்கப்பட்டிருக்கும் சுற்றுப்பாதையில் அந்தத் துகள்களை ஒளியின் வேகத்தில் 99.99% வேகத்தில் அனுப்பிப் பார்த்தபோது அந்தத் துகள்கள் தங்கள் வழக்கமான ஆயுளைவிட 30 மடங்கு அதிக நேரம் வாழ்வது கண்டுபிடிக்கப்பட்டது.

ஆகவேதான் ஒளியின் வேகத்துக்கு அருகில் பயணிப்பதும்கூட காலப் பயணமாகக் கருதப்படுகிறது. இதுபோன்ற நிரூபணங்களால்தான் காலப் பயணம் சாத்தியம் என்ற மனமாற்றத்துக்கு அறிவியலாளர்கள் வந்திருக்கிறார்கள்.

காலப் பயணம் மேற்கொள்வதற்கு மேலும் பல வழிமுறைகள் முன்வைக்கப்படுகின்றன. அவற்றில் ஒன்றுதான் ‘கால-வெளித்துளை’ (wormhole). பெயருக்கேற்ப காலத்திலும் வெளியிலும் இருப்பதாக நம்பப்படும் துளை இது. பிரபஞ்சம் முழுவதும் இந்தத் துளைகள் இருப்பதாகவும், இவை மிகவும் நுண்ணியவை என்றும் கருதப்படுகிறது. இந்தத் துளையைப் பெரிதாக்கி, அதன் ஒரு முனையில் நுழைய முடிந்தால் பிரபஞ்சத்தில் நாம் சாதாரணமாக எட்ட முடியாத இன்னொரு மூலைக்கு மட்டுமல்ல, காலத்திலும் வேறொரு புள்ளிக்கு இந்தத் துளை நம்மைக் கொண்டுபோய் விடும் என்று நம்பப்படுகிறது.

கடந்த காலத்துக்குப் போக முடியாது

‘இண்டெர்ஸ்டெல்லார்’ படம் நினைவிருக்கிறதா? ‘கால-வெளித் துளை’ வழியே பயணிக்கும் கதாநாயகன் தன் மகளைச் சந்திக்கத் திரும்பி வருகிறார். கதாநாயகன் இளைஞராகவும் அவருடைய மகள் தொண்டு கிழவியாகவும் இருக்கிறார். காலப் பயணம் மேற்கொண்டதன் விளைவுதான் இது.

எதிர்காலத்தை நோக்கிய காலப் பயணம்தான் சாத்தியம்; கடந்த காலத்தை நோக்கிய காலப் பயணம் சாத்தியமே இல்லை என்கிறார் ஸ்டீவன் ஹாக்கிங். ஒரு வகையில் காலப் பயணத்துக்கான கனவுகள் காலத்தை மட்டுமல்ல, காலத்தோடு பின்னிப் பிணைந்துள்ள மரணத்தையும் வெல்வதற்கான கனவுகளே. கூடவே, தூரத்தை வெற்றிக்கொள்வதற்குமானது காலப் பயணம் என்ற கனவு.

இதைப் பற்றி ஸ்டீவன் ஹாக்கிங் இப்படிச் சொல்கிறார்: ‘காலம் மெதுவாவதால் இன்னுமொரு பலன் உண்டு. கோட்பாட்டளவில் ஒருவர் தனது ஆயுட்காலத்துக்குள் மிக மிக நீண்ட தொலைவை எட்ட முடியும் என்பதுதான் இதன் அர்த்தம். நமது பால்வீதியின் விளிம்பை 80 ஆண்டுகளுக்குள் நாம் எட்டிப் பிடிக்கலாம். இந்தப் பிரபஞ்சம் எவ்வளவு விசித்திரமானது என்பதை அது உணர்த்தக்கூடும் என்பதுதான் எல்லாவற்றையும் விட மிகவும் பரவசமூட்டக் கூடியது.’

நன்றி: ஸ்டீவன் ஹாக்கிங்,
மிஷியோ காக்கு

ர.ரா

டைம் டிராவல் (Time Travel ) 10

டைம் டிராவல் செய்ய ரெடியா? எகிப்தில் ஸ்டார்கேட் கண்டிபிடிப்பு! 22-07-2020





எகிப்து நாட்டின் அபேடாஸ் எனும் இடத்தில் உள்ள சேட்டி 1 கோவில் எப்போது மர்மங்களுக்கு பெயர் பெற்றது. இங்கு பழங்கால ஸ்டார்கேட் இருப்பதாகவும், அதன் மூலம் வேறு உலகத்திற்கான நுழைவுவாயில் இருப்பதாகவும் வதந்தி நிலவுகிறது. இந்த மர்மங்களுக்கு வலுசேர்க்கும் விதமாக, இக்கோவிலில் உள்ள பல சுவர்களில் விசித்திரமான சிற்பங்கள் உள்ளன. ஆனால் அவற்றை எகிப்துநாட்டு ஆய்வாளர்களால் விளக்க இயலவில்லை.

இது போன்ற சிற்பங்கள் வேறெந்த கோவில்களிலும் காணக்கிடைப்பதில்லை. இக்கோவிலில் பல நூற்றாண்டுகளாக ஸ்டார்கேட் எனும் டைம்டிராவல் செய்வதற்கான நுழைவுவாயில் மறைந்துள்ளது என்ற தகவலை இந்த புதிய ஆதாரங்களை நிரூபிப்பதால், அவற்றை ஆராய்ந்து உண்மையான அர்த்தங்களை கண்டறிய வேண்டும்.

அபேடாஸ் கோவில்

அபேடாஸ் கோவில் பழமையான நிலத்தில் உள்ள இடுகாடு எனவும், இது எகிப்தின் மையப்பகுதியில் இருப்பதாகவும் நம்பப்படுகிறது. இன்றைக்கு காணப்படும் அந்த கோவிலானது, மிகவும் பழமையான புனித கோவில் மீது சேட்டி1 ஆல் கட்டப்பட்டது. இதில் பல்வேறு ஆழமான இரகசியங்கள் ஒளிந்துள்ளன. பழங்கால நம்பிக்கையின் படி இந்த அபேடாஸ் கோவில் அடுத்த உலகிற்கு மிகவும் நெருக்கமான புள்ளியாக இருப்பதாக நம்பப்படுகிறது.

மெல்கிசெதேக்

இந்த கோவில் மெல்கிசெதேக் மதகுருக்களின் இல்லமாக திகழ்கிறது. இவர்கள் உண்மையான தொலைநோக்கு பார்வை கொண்டவர்கள் மற்றும் மற்றவர்களுக்கு சேவைபுரிய அர்பணிக்கப்பட்டவர்கள். இவர்கள் தான் அபேடாஸ் கோவிலில் உள்ள ஸ்டார்கேட்டின் பாதுகாவலர்களாக திகழ்கின்றனர்.

ஸ்டார்கேட்டை திறந்ததாக தகவல்கள் தெரிவிக்கின்றன

சில ஆண்டுகளுக்கு முன்பு நடைபெற்ற இரகசிய விண்வெளி திட்டத்தில், அபேடாஸ் கோவிலில் உள்ள இயற்கையான ஸ்டார்கேட் இராணுவ ஆய்வுகளுக்கு பயன்படுத்தப்பட்டது. அவர்கள் மேம்படுத்தப்பட்ட தொழில்நுட்பங்களை பயன்படுத்தி கட்டாயமாக ஸ்டார்கேட்டை திறந்ததாக தகவல்கள் தெரிவிக்கின்றன.

கண்டைன்மென்ட் ரிங் அந்த இராணுவ ஆய்வில் அந்த கேட்டிற்கு அருகில் 4 பீல்ட் போஸ்ட்களும், ப்ரேஜெக்சன் கருவியும், ஒரு பேரலும், சில கண்டைன்மென்ட் ரிங்-களும் பயன்படுத்தப்பட்டதாகவும், எலெக்ட்ரோமேக்னெடிக் ஆற்றலை பயன்படுத்தி, இயற்கையான ஸ்டார்கேட்டை திறந்து பயன்படுத்தியாகவும் தகவல்கள் தெரிவிக்கின்றன.

டைம்மிஷன்

அந்த டைம்மிஷன் இயந்திரத்தை அப்படியே பிரதிபலிப்பது போல, கோவில் சுவர்கள் முழுவதும் சிற்பங்கள் செதுக்கப்பட்டிருந்தது. அதில் இருந்த இறக்கைகளுடன் கூடிய ஒரு வாகனம், 'தி டைம் மிஷன்' படத்தில் வரும் டைம் டிராவல் வாகனத்தை நினைவுபடுத்துகிறது.

சொர்கத்திற்கான வழி

இந்த சுவர் சிற்பங்களை படம்படித்து ,எகிப்திய ஆய்வாளர்களிடம் காட்டிய போது, இது 'இரண்டாம் உலகிற்கான நுழைவுவாயில்' என பதிலளித்தனர். ஆனால் இந்த சுவரில் ஒரு பகுதி மட்டும் முழுவதும் பெயர்த்து எடுக்கப்பட்டது. இதை பார்க்கும் போது, யாரும் இந்த இரகசயத்தை முழுமையாக அறிய கூடாது என்ற நோக்கத்துடன் செய்ததாகவே தோன்றுகிறது. இந்த சுவர் சிற்பங்கள் பற்றிய தகவல்களை உண்மையென்று நிரூபிக்க எந்த வழியும் இல்லாத நிலையில், பல்வேறு அதிக மேம்படுத்தப்பட்ட உள்ளுணர்வாளர்களிடம் இந்த அபேடாஸ் சிற்பங்கள் பற்றி கேட்கப்பட்டது. அவர்களின் கருத்து 'சொர்கத்திற்கான வழி', 'கற்பனைக்கு அப்பாற்பட்டது' என பலதரப்பட்ட நேர்மறை மற்றும் எதிர்மறையாக இருந்தது.

ஆனால் நபி (ஸல்) விண்வெளிப் பயணத்தின் ஸ்டார் கேட் ஜெருஸ்லேமில் உள்ள மஸ்ஜித்துல் அக்ஸா வழியாக நடைபெற்றதாக குர்ஆன் குறிப்பிடுகிறது .

"அல்லாஹ் மிகப் பரிசுத்தமானவன். அவன் (முஹம்மது நபி (ஸல்) என்னும்) தன் அடியாரை(க் கஅபா கிய ) சிறப்புற்ற பள்ளியிலிருந்து (வெகு தூரத்தில் இருக்கும் பைத்துல் முகத்தஸிலுள்ள) மஸ்ஜிதுல் அக்ஸாவிற்கு ஒரே இரவில் அழைத்துச் சென்றான் (அவ்வாறு அழைத்துச் சென்ற) நாம் அவரை அதனைச் சூழவுள்ளவை சிறப்புற்று ஓங்க அபிவிருத்தி அடைய செய்திருக்கிறோம் . நம்முடைய அத்தாட்சிகளை அவருக்குக் காண்பிப்பதற்காகவே (அங்கு அழைத்துச் சென்றோம் ) நிச்சயமாக உங்களது இறைவன்

செவியுறுபவனாகவும், உற்று நோக்கியவனாகவும் இருக்கின்றான்"
குர்ஆன் ( 17 : 01)

நபி (ஸல்) அவர்களை மக்கா ஹரம் சரீபிலிருந்து மஸ்ஜிதுல் அக்ஸாவிற்கு அழைத்துச் சென்றான் .இந்த பயணத்தை " அல் இஸ்ரா" என்றும் அக்ஸாவிலிருந்து விண்வெளிக்கு சென்றதை "மிஹ்ராஜ் " என்றும் குறிப்பிடப்படுகிறது.

ஒரு சமயம் விண்வெளிக்கு செல்லும் பாதை மஸ்ஜிதுல் அக்ஸாவிலிருந்து கூட இருக்கலாம் .

அல் இஸ்ரா என்கிற இப் பயணம் பூமியிலிருந்து செங்குத்தாக வானவெளிக்குப் பயணம் செய்வது அல்ல , தரைக்கு இணையாக கிடைமட்டப் பயணம் .பூமியிலிருந்து சுமார் 10 அல்லது 12 அடி உயரத்தில் பூமியின் தரையைப் பார்த்தவாறே ஒரு பயணம் .
இந்த அல்- இஸ்ரா பயணம் முன்னோக்கிய பயணம் அல்ல., பின்னோக்கிய பயணம் .அதாவது இன்று புறப்பட்டு நேற்று சேர்கின்ற பயணம் . கடந்தகாலத்திற்குள் பிரவேசிக்கும் பயணம் .

அதனால்தான் நபி(ஸல்) அவர்கள் "அல் அஸ்ரக் பள்ளத்தாக்கை கடந்து சென்ற போது, நபி மூஸா (அலை) அவர்கள், உரத்த குரலில் ' தல்பியா' சொல்லிக் கொண்டு இந்த மலைக் குன்றிலிருந்து இறங்கி வந்து கொண்டிருப்பதை "இப்போதும் " நான் காண்பதைப் போன்று உள்ளது . ( சுமார் 1000 வருடத்திற்கு முன்னுள்ள கடந்தகாலத்தை இப்போதுள்ள நிகழ்காலத்தின் நிகழ்ச்சியாக நபிகளார் கண்டார்கள் )

நபி மூஸா (அலை) அவர்கள் யமனியர்களான "ஷனூஆ" குலத்தைச் சேர்ந்த மனிதரைப் போன்று மாநிறமுடையவர்கள். உயரமானவர்கள் . சுருள் முடியுடையவர்கள்.

பிறகு ஹர்ஷா மலைக்குன்றின் அருகே நபியூனுஸ் (அலை) அவர்களைக் கண்டேன் .அவர்கள், கம்பளி நீளங்கி அணிந்தவர்களாகக் கட்டுடல் கொண்ட சிவப்பு ஒட்டகம் ஒன்றின் மீது ' தல்பியா' சொல்லிக் கொண்டிருப்பதை நான் இப்போதும் காண்பதைப் போன்று உள்ளது . அவர்களது ஒட்டகத்தின் கடிவாளம், ஈச்ச மர நாரிளானது " என்று கூறினார்கள்

இப்பயணத்தில் மர்யமின் மைந்தர் நபி ஈஸா (அலை) அவர்களையும் கண்டேன் அவர்கள் நடுத்தர உயரமும், சிவப்பும் வெண்மையும் கலந்த மிதமான சரும அமைப்புக் கொண்டவர்களாகவும், படிந்த தொங்கலான தலைமுடி உடையவர்களாகவும் இருந்தார்கள்

இவையெல்லாம் அல்லாஹ் எனக்குக் காண்பித்த அவனுடைய சான்றுகளில் உள்ளவை .

" நீங்கள் அவரைச் சந்தித்ததில் சந்தேகம் ஏதும் கொள்ள வேண்டாம் "
குர்ஆன் (32 : 23)

ஆதாரம் : முஸ்லீம் தமிழ் பதிப்பு 267, 268 பக்கம் 205

டைம் டிராவல் (Time Travel ) 11 24/07/2020



``இவையெல்லாம் நடந்தால் டைம் டிராவல் பண்ணலாம்!" - அறிவியல் சொல்லும் வழி முறைகள்

டைம் டிராவல் என்ற விஷயத்தை தற்போதுவரை யாரும் நிரூபித்துக் காட்டவில்லை. ஆனால், என்றைக்காவது, யாரோ ஒருவர் இதைச் சாத்தியப்படுத்தலாம் என்ற நம்பிக்கை அறிவியலாளர்களுக்கு இருக்கிறது. அப்படி டைம் டிராவல் செய்வதற்கு அறிவியல் சொல்லும் வழிமுறைகளில் பிரபலமானவற்றில் சில இவை.

வார்ம்ஹோல்ஸ் (புழுத் துளை )

டைம் டிராவல் என்று வந்துவிட்டால் அங்கே முதலிடத்தில் இருப்பது இந்த வார்ம்ஹோல்ஸ் (புழுத் துளை ) என்ற விஷயம்தான். விண்வெளியின் இரு வெவ்வேறு பகுதிகளை இணைக்கும் ஒரு குறுக்குவழியாக இது கருதப்படுகிறது. இதனால் காலப் பயணம் சாத்தியமாகும். அது மட்டுமன்றி இதன் வாயிலாக நமது பிரபஞ்சத்திலிருந்து மற்றொரு பிரபஞ்சத்துக்குக்கூடச் சென்று வரலாம் என்ற ஒரு கருத்தும் கூறப்பட்டு வருகிறது. ஆனால், இதுவரை வார்ம்ஹோல்ஸ் என்ற ஒன்று யாராலும் கண்டறியப்படவில்லை. மேலும் இதன் அளவும் சிறியதாக இருக்கக் கூடும் என்பதால் இதைக் கண்டுபிடிப்பது அவ்வளவு எளிதான விஷயமில்லை. வார்ம்ஹோல்கள் பிரபஞ்சத்தில் நிறைந்து காணப்படுகின்றன. ஆனால், அவற்றின் அளவு அணுவைவிட சிறியது. ஒரு வேளை அவற்றை நம்மால் கண்டறிய முடிந்தால் அதை மனிதர்கள் பயணம் செய்யும் அளவுக்குப் பெரிதாக மாற்றம் செய்ய வேண்டும். அதுவும் அவ்வளவு எளிதான காரியமாக இருக்காது.

அதைச் செய்வதற்கு நமக்கு மிகப்பெரிய அளவு ஆற்றல் தேவைப்படலாம். எவ்வளவு தேவைப்படும் என்று கேட்டால், நமது சூரியனிலிருந்து வெளிப்படும் அளவு என்று வைத்துக்கொள்ளுங்களேன் என்கிறார்கள் விஞ்ஞானிகள்.

பிளாக் ஹோல்

விண்வெளியில் பல இடங்களில் இருக்கும் பிளாக் ஹோல் மூலமாக டைம் டிராவல் செய்ய முடியும் என்ற கருத்தும் முன்வைக்கப்படுகிறது. இந்தக் கருத்தைத் தெரிவித்தவர்களில் மறைந்த இயற்பியலாளர் ஸ்டீபன் ஹாக்கிங் முக்கியமானவர். பிளாக் ஹோல் மூலமாக டைம் டிராவல் சாத்தியம் என்பதை அவர் பல இடங்களில் பதிவு செய்திருக்கிறார். இதற்கு இயற்கையான டைம் டிராவல் மெஷின் என்று பெயரிட்டிருக்கிறார் அவர். அதிக அளவு நிறை கொண்ட நட்சத்திரம் ஒன்று வாய்ப்பிருந்தால் அதன் இறுதிக் காலத்துக்குப் பின்னர் கருந்துளையாக உருமாறும். கற்பனைகூட செய்ய முடியாத அளவுக்கு அதன் ஈர்ப்பு விசை இருக்கும். அதனுள்ளே இருந்து ஒளிக்கூட தப்பிக்க முடியாது. எனவே, இதன் அருகே காலம்கூடக் கட்டுப்பட்டுத்தான் ஆக வேண்டும். "விண்கலம் மூலமாக ஒரு பிளாக் ஹோலின் சுற்றுப்பாதையில் ஒரு முறை முழுமையாகச் சுற்றி வந்தால் அது பூமியில் இருக்கும் நேரத்தைவிட குறைவாகதான் அங்கே ஆகியிருக்கும். உதாரணத்திற்கு, விண்கலம் அப்படியே ஐந்து வருடங்கள் சுற்றி வந்துவிட்டு பூமிக்குத் திரும்பும்போது, இங்கே இருப்பவர்களின் வயது பிளாக் ஹோலைச் சுற்றி வந்தவர்களைவிட ஐந்து வயது அதிகமாகவே இருக்கும்" என்கிறார் ஸ்டீபன் ஹாக்கிங். பிளாக் ஹோலுக்குப் பக்கத்தில் செல்லும் எதுவுமே தப்பிக்காது எனும்போது விண்கலம் மட்டும் எப்படித் தப்பிக்கும் என்ற சந்தேகம் சிலருக்கு இருக்கலாம்.

அதற்கும் விஞ்ஞானிகளிடம் பதில் இருக்கிறது. மெழுகுவத்தி எரியும்போது அதன் சுடரின் வெப்பநிலை 1,400 °C என்ற அளவில் இருக்கும். அதில் நடுவே விரலை வேகமாகச் சென்று அதே வேகத்தில் பின்னால் இழுத்துவிட்டால் எந்தப் பாதிப்பும் ஏற்படுவதில்லை. அதே போலத்தான் குறிப்பிட்ட வேகத்தில் இயங்கினால் பிளாக் ஹோலின் ஈரப்பு விசையிலிருந்து தப்பித்துவிடலாம் என்கிறார்கள். இங்கே வேகம்தான் முக்கியம் அதை அடையும் திறனை நாம் பெற்றுவிட்டால் நமக்கு டைம் டிராவலும் சாத்தியமாகலாம். வார்ம் ஹோல்போல இல்லாமல் பிளாக் ஹோலைப் பொறுத்தவரையில் அது இருப்பது பல வருடங்களுக்கு முன்னரே உறுதி செய்யப்பட்டுவிட்டது. ஆனால் அதன் தெளிவில்லாத புகைப்படமே இப்போதுதான் நமக்குக் கிடைத்திருக்கிறது. டைம் டிராவல் செய்ய ஆசைப்பட்டால் ஒரு பிளாக் ஹோலை அருகே செல்லவே நமக்குப் பல மில்லியன் வருடங்கள் தேவைப்படும்.

ஒளியின் வேகத்தில் பயணம்

இந்தப் பிரபஞ்சத்தில் நமக்குத் தெரிந்தவரையில் அதி வேகமாகப் பயணம் செய்வது ஒளிதான். நொடிக்கு 186,000 மைல்கள் அல்லது 3 லட்சம் கி.மீ பயணம் செய்யும் ஒளியை முந்துவது எளிதான காரியமில்லை. ஒரு வேளை அது நடந்தால் டைம் டிராவலும் சாத்தியமாகலாம். பிரபஞ்சத்தின் அனைத்து இடங்களிலும் நேரம் ஒரேபோல இருப்பதில்லை. அது ஒவ்வோர் இடத்திலும் இருக்கும் காரணிகளைப் பொறுத்து வேறுபடுகிறது. அதேபோல ஒளியின் வேகத்தை விஞ்சி பயணிக்கும்போது காலம் மெதுவாக நகர்கிறது. இதுவும் ஓரளவுக்கு ஏற்றுக்கொள்ளப்பட்ட கருத்தாகவே இருக்கிறது. இதை ஒரு பரிசோதனையின் மூலமாகவும் நிரூபித்திருக்கிறார்கள். இந்த ஆய்வில் துல்லியத்துக்குப் பெயர் பெற்ற அணுக் கடிகாரங்கள் இரண்டை ஆய்வாளர்கள் எடுத்துக்கொண்டார்கள். அதில் ஒன்று ஜெட் விமானத்திலும் மற்றொன்று தரைப்பகுதியிலும் இருந்தது. விமானம் பறக்கும் வேகத்தின் காரணமாக விமானத்தில் இருந்த கடிகாரத்தின் நேரம் சற்றுக் குறைவாகவே இருந்தது. இதேபோல் மனிதனும் ஒளியின் வேகத்தில் பயணிக்கும்போது காலம் குறைவாகவே நகரும். ஆனால், அவ்வளவு வேகத்தில் பயணிக்கும் திறன் இப்போது நம்மிடம் இல்லை.

டைம் டிராவல் செய்வதற்காகக் கூறப்பட்டுள்ள வழிமுறைகளைப் பரிசோதித்துப் பார்ப்பதற்கான ஆற்றல் இப்போது நம்மிடம் இல்லை. ஒரு வேளை மேம்பட்ட தொழில்நுட்பத்தால் பல யுகங்கள் கழித்து காலப் பயணம் சாத்தியமாகலாம். இல்லை நடக்காமல்கூட போகலாம். அறிவியல் புனைக்கதைகளில் சொல்வது போல போல ஒரு வேற்று கிரகவாசி அவரிடமிருக்கும் மேம்பட்ட தொழில்நுட்பத்தால் பிரபஞ்சத்தின் பாதியைக்கூட அழிக்கக் கூடும், அப்போது அதைச் சமாளிக்க மனிதர்கள் தயாராகவும் இருக்கலாம், அறிவியலில் எதுவும் சாத்தியம்தான்.

ஒளியின் வேகத்தில் டைம் டிராவல் செய்து பிளாக் ஹோல் வழியாக நம் ஆகாயகங்கை பால் வீதியை தாண்டி அடுத்த பால் வீதியை அடைவதற்குள் நமக்கு வயசாகி விட்டால் என்ன செய்வது ?

அதற்கும் விஞ்ஞானிகள் ஒரு கருத்தை சொல்கிறார்கள் . மரணித்து பின் உயிர்த்தெழுந்தால் சாத்தியம் என்கிறார்கள் . அதாவது செத்து செத்து விளையாடி பின் உயிர்த்தெழுதலின் நுட்பம் தெரிந்தால் எல்லாமே சாத்தியமாகி விடும். இது பற்றிக் கூட குர்ஆன் கூறுகிறது .

சரி, முதலில் இறந்தவர்களை எப்படி உயிர்பிப்பது ? இது பற்றியும் குர்ஆன் குறிப்பிடுகிறது .

திருக்குர்ஆனின் 2-வது அத்தியாயம் அல்பகரா . கொலையாளியைக் கண்டு பிடிப்பதற்காக ஒரு பசு மாட்டை அறுத்து அதன் உறுப்பான நாக்கைக் கொண்டு கொலை செய்யப்பட்ட சடலத்தின் மீது அடிக்க சடலம் மீண்டும் உயிர்த்தெழுந்து தன்னை கொலை செய்தவனை காட்டிக் கொடுப்பதாக இறைவன் கூறும் இவ் வரலாற்றில் பயன்படுத்தும் அந்த மாட்டை இவ்வத்தியாயத்தின் தலைப்பாக "அல்பகரா " என்றழைக்கப்படுகிறது.

....ஆகவே, அவர்களை நோக்கி (நீங்கள் அதனை அறுத்து) "அதில் ஒரு பாகத்தைக்கொண்டு (கொலையுண்ட) அவனை அடியுங்கள்" என நாம் கூறினோம். (அவ்வாறு அடித்தவுடன் இறந்தவன் உயிர்பெற்றெழுந்து கொலையாளியை அறிவித்தான். அவன் உயிர்பெற்ற) இவ்வாறே இறந்தவர்களை அல்லாஹ் உயிர்ப்பிப்பான்.

மேலும், நீங்கள் அறிந்துகொள்வதற்காக அவன் தன்னுடைய (ஆற்றலை அறிவிக்கக்கூடிய) அத்தாட்சிகளை உங்களுக்குக் காட்டுகின்றான். (அல்குர்ஆன் : 2:73)

இறந்து போய் சடலமான காலத்தில் எந்த சம்பவமும் சடலத்திற்கு இல்லை எனவே " சம்பவமே இல்லை என்றால் காலம் இல்லை" . மரணித்த மனிதனுக்கு வயது ஒரு நாள் கூட அதிகமாகுவதில்லை. இது ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் எனகிற விஞ்ஞானியின் தத்துவம் .

உதாரணத்திற்கு ஒரே சூலில் இரட்டை ஆண் குழந்தைகள் இருவரும் வாழ்ந்து மரணிக்கும் போது ஒருவருக்கு 50 வயது மற்றவருக்கு 150 வயது இது எவ்வாறு சாத்தியம் ? விஞ்ஞானம் இதை சாத்தியம் என்கிறது .

புஷ்து நஸ்ர் என்ற கொடுங்கோல் மன்னன் தவ்ராத் வேதம் கற்றவரைக் கண்டாலே கொன்று விடுவான்

பைத்துல் முகத்தஸ் செல்லும் வழியில் ஒரு நகரம் அங்குள்ளவர்கள் தவ்ராத் கற்றவர்கள் எனவே அவர்களை கொன்று அவர்கள் ஊரை சின்னாபின்னமாக்கினான். குர்ஆன் 2 : 259

அவ்வழியே உஜைர் நபி அலை செல்லும் போது ( வயது 30 )
இந்த நகரை எப்படி இறைவன் மீண்டும் உருவாக்குவான் ? என்று சிந்தித்துக் கொண்டே தான் கொண்டு வந்த பானத்தைக் குடித்து மீதியை மரத்தடியில் தொஙக விட்டதும் அவரை 100 வருடங்கள் மரணிக்கச் செய்தான் பின் அவரை உயிர்ப்பித்து தன் அருகில் அவருடைய உணவும் பானமும் அதுவரை கெட்டுப் போகவில்லை ஆனால் கழுதை இறந்து எலும்புகள் மட்டும் கிடக்கக் கண்டார் இறந்த உயிர்களை தன்னால் மீண்டும் உயிர்ப்பிக்க இயலும் என்பதை அவர்க்கு உணர்த்த எண்ணி அல்லாஹ் கழுதையை உயிர் பெற்று எழச் செய்தான் இப்போதும் உஜைர் நபிக்கு வயது அதே 30 வயதுதான் ! மரணித்த காலமான 100 வருடங்கள் என்ன ஆனது ?

ஆனால் அவருடன் பிறந்த சகோதரருக்கு வயது 130 பின் இருவரும் 20 வருடங்கள் வாழ்ந்து ஒரே நாளில் மரணிக்கின்றனர்
உஜைர் நபிக்கு 50 அவருடைய சகோதரருக்க வயது 150

விஞ்ஞானக் காரணம் சம்பவமே இல்லை என்றால் அவருக்கு காலமே இல்லை .

(நபியே!) அல்லது ஒரு கிராமத்தின் மீது சென்றவரைப் போல் (நீங்கள் பார்த்திருக்கின்றீரா? அவர்) அ(க்கிராமத்)திலுள்ள (வீடுகளின்) முகடுகளெல்லாம் இடிந்து (பாழாய்க்) கிடக்க(க் கண்டு) "இவ்வூர் (மக்கள் இவ்வாறு அழிந்து) இறந்தபின் அல்லாஹ் இதனை எவ்வாறு உயிர்ப்பிப்பான்?" என்று கூறினார். ஆகவே, (அவருடைய சந்தேகத்தை நிவர்த்தி செய்வதற்காக) அல்லாஹ் அவரை நூறு ஆண்டுகள் வரையில் மரணித்திருக்கச் செய்து பின்னர் அவரை உயிர்ப்பித்து (அவரை நோக்கி "இந்நிலையில்) நீங்கள் எவ்வளவு காலம் இருந்தீர்கள்" எனக் கேட்க "ஒருநாள் அல்லது ஒரு நாளின் சிறிது பாகம் இருந்தேன்" எனக் கூறினார். (அதற்கு அவன்) "அல்ல! நீங்கள் நூறு ஆண்டுகள் (இந்நிலையில்) இருந்தீர்கள். (இதோ!) உங்களுடைய உணவையும், உங்களுடைய பானத்தையும் பாருங்கள். (அவை இதுவரை) கெட்டுப்போகவில்லை. (ஆனால்) உங்களுடைய கழுதையைப் பாருங்கள். (அது செத்து மக்கி எலும்பாகக் கிடக்கின்றது.) இன்னும் உங்களை(ப் போல் சந்தேகிக்கும்) மனிதர் களுக்கு ஓர் அத்தாட்சியாக ஆக்குவதற்காக (கழுதையின்) எலும்பு களையும் நீங்கள் பாருங்கள். எவ்வாறு அவைகளைக் கூடாகச் சேர்த்து அதன் மீது மாமிசத்தை அமைக்கின்றோம் என்று கூறி (அவ்வாறே உயிர்ப்பித்துக் காட்டி)னான். (இவை அனைத்தும்) அவர் முன் தெளிவாக நடைபெற்றபோது (அவர்) "நிச்சயமாக அல்லாஹ் அனைத்தின் மீதும் மிக பேராற்றலுடையவன் என்பதை நான் உறுதியாக அறிந்துகொண்டேன்" என்று கூறினார்.
(அல்குர்ஆன் : 2:259)

டைம் டிராவல் (Time Travel ) 12 25-07-2020





Time travel எனப்படும் காலப்பயணம் சாத்தியமா? முழுமையான அலசல் டைம் டிராவல்களை நிரூபிக்கும் வரலாற்று ஆவணங்களோடு ஆதாரங்கள்.

இது ஹார்ட்வெட் பல்கலை கழகத்தில் தாவரவியல் ஆய்வாளர்கள் சக்திவாய்ந்த புகை பட கருவியை கொண்டு ஒரு செடியில் மொட்டை படம் எடுத்த போது நடந்தது…அந்த புகை படத்தில் மொட்டுக்கு பதில் ஒரு மலரின் புகை படம் கிடைத்தது… சரி ஏதோ டபுள் எக்ஸ்போசன் போல சமாச்சாரம் என்று விட்டு விட்டார்கள் .அதன் பின் அந்த மொட்டு மலர்ந்த போது காத்திருந்தது ஆச்சர்யம்.

அது அந்த புகை படத்திற்கு 100 சதம் ஒத்திருந்தது.
இது எப்படி நிகழ்ந்தது என விளக்கம் கேட்டதற்கு பல குழப்பத்திற்கு பின்..அவர்கள் கொடுத்த விளக்கம் ..

' எதிர்காலம் என்பது இப்போதே இங்கயே வேறு ஒரு லேயரில்... நம்மால் உணர முடியாத பரிமாணத்தில் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கிறது ..இந்த கருவி அதை புகை படம் பிடித்து இருக்கிறது..'

இரண்டாவதாக...
இன்றைய அதிநவீன அக சிவப்பு கேமராவை கொண்டு ஒருவர் நீண்ட நேரம் அமர்ந்து ...எழுந்து சென்ற ஒரு காலி நாற்காலியை படம் பிடித்தால் ஒரு நிழல் உருவமாக அந்த நபர் யார் என்பதை கண்டு கொள்ள முடியும் (அவரது உடல் வெப்பம் கொஞ்ச நேரம் நாற்காலியில் தங்கி இருப்பது தான் காரணம்) எனில் என்ன பொருள்.. அந்த கருவி அந்த நாற்காலியின் கடந்த காலத்தை புகை படம் எடுத்துள்ளது என்று சொல்லலாமா?

இன்றைய தொழில்நுட்பத்திற்கு 5 அல்லது 10 நிமிட காலத்தை பிடிப்பது சாத்தியமாக இருக்கலாம் எதிர்காலத்தில் அது நீட்டிக்கபடலாம்..கூடவே அதில் பயண படவும்..
இந்த time dilation என்கிற கால வேறுபாடு என்பதன் நீட்சிதான் time travel ஆக முடிகிறது.

time dilation இல் உங்களுக்கு சந்தேகமே வேண்டாம்.. நமது ஈர்ப்புவிசை எல்லையை தாண்டி இருக்கும் செயற்கை கோள்களில் இந்த கால மாறுபட்டால் அதில் அமைக்கப்பட்டுள்ள அதி நுட்பமான கடிகாரங்கள் எப்போதுமே பூமியில் உள்ள கடிகாரங்களுக்கு பொருந்தாத தவறான நேரத்தையே எப்போதும் காட்டுகின்றன என்பது உங்களுக்கு தெரியுமா? அது மேட்ச் ஆவதற்கு தன்னை தானே திருத்தி கொள்ளும்படி அவைகள் வடிவமைக்கப்பட்டிருக்கின்றன.

இந்த **time dilation ..time travel** இதெல்லாம் எப்போ எப்படி எந்த சித்தாந்த அடிப்படையில் நடைமுறை சாத்தியம் ?
இப்போது நவீன விஞ்ஞானம் time travel ஐ relativity theory ஐ வைத்து விளக்கி கொண்டிருப்பதை கொஞ்சம் பின்னால் வைத்து விட்டு quantum mechanism கொண்டு அதிகம் விளக்கு கிறது....
Time travel என்று வரும் போது உண்மையாகவே யாராவது time travel பண்ணி இருக்கிறார்களா ?
அப்படி யாரையாவது நாம் சந்தித்து இருக்கிறோமா இல்லையா என்ற கேள்வி எல்லோருக்கும் வருவது இயல்புதான்.

அவ்வபோது உலகத்தில் திடீரென்று ஆங்காங்கே பல பேர் தான் கால பயணம் செய்ததாக.... அங்கே எதிர் அல்லது கடந்த காலத்தில் தன்னையே பார்த்ததாக அல்லது எதிர்கால நிகழ்வுகள் பார்த்ததாக எல்லாம் சொல்லுவார்கள்... அடித்து சத்தியம் கூட செய்வார்கள்...
அவர்களில் பெரும்பாலானவர்கள் time travel குறித்து நமக்குள்ள curiosity ஐ ஊறுகாய் ஆக்கி புகழ் தேடுபவர்கள்.. ஏற்று கொள்ளப் பட்ட டைம் டிராவல் என நாம் யாரை சொல்லலாம் என்றால்...அது Sergei Vasilyevich Avdeyev போன்றவர்களை தான்..

யார் இந்த S V A என்றால் இவர் 1989 வாக்கில் இருந்த ஒரு ரஸ்ய விண்வெளி வீரர். இவர் விண்வெளியில் மொத்தம் 747.59 நாட்கள் தங்கி இருந்தவர் மேலும் 11968 முறை பூமியை அதன் சுற்றுவட்ட பாதையில் சுற்றியவர்...515,000,000 கிமி யை கடந்தவர்...
எனவே சிறப்பு சார்பியல் கோட்பாடு படி அவர் டைம் டைலேஷனை சந்தித்தவர்... இவர் கிட்ட தட்ட 750 நாள் விண்வெளியில் சுற்றி இவர் பயணம் செய்த கால பயணம் எவ்வளவு தெரியுமா.. 0.02 வினாடி .
அதாவது 20 மில்லி வினாடி...

அதாவது பூமியில் உள்ளவரை ஒப்பிடும் போது இவர் 0.02 வினாடி இளமையாகி இருப்பார்...இதை செய்த ஒரே மனிதர் இவர் அல்ல.. இன்னும் பல பேர் இவரின் சாதனையை முறியடித்தாலும் அவர்கள் வெளியில் தங்கி இருந்தது சில நாட்களுக்கு மட்டும் தான்...
அடுத்ததாக சில ஆய்வாளர்கள் பிரமிட்களின் அருகில் time dilation ஏற்படுவதாக சொல்கிறார்கள் அங்கே அருகில் போய் மிக நுட்பமாக படம் பிடிக்கும் கமெரா கொண்டு வீடியோ எடுத்து பார்த்தால் தூரத்தில் இருப்பபவை எல்லாம் கொஞ்சம் பார்ஸ்ட் பார்வட் இல் நிகழ்வதை போல வேகம் கூடி இருப்பதை போல தெரிவது தெரிகிறதாம்.

யூனுஸ் (அலை) பழைய ஏற்பாட்டில் "யோனா " (Jonah ) (கி.மு 800 முதல் கி.மு 784 ) இராக்கில் நீனவா எனும் பகுதிக்கு நபியாக அனுப்பப்பட்டார்கள் . மேலும் யூனுஸ் (அலை) அவர்கள் கம்பளி உடையுடன் சென்னிற ஒட்டகையில் ஷாஷாலுப்த் என்னுமிடத்தில் ஓடையைக் கடந்து கொண்டிருப்பதையும் ஒட்டகையின் மூக்கணாங்கயிறு பேரீத்த மரத்தின் நாரினால் செய்யப்பட்டிருந்தது என்றும் நபி (ஸல்) அவர்கள் தங்களுடைய மிஹ்ராஜ் என்னும் விண்வெளி பயணம் பற்றி கூறும் போது இது பற்றி கூறுகிறார்கள் .

மூஸா (அலை) (கி.மு 1526 - கி.மு 1406 ) அவர்கள் செம்மை நிறமான மேட்டின் மீதுள்ள மண்ணறையில் நின்று தொழுது கொண்டிருந்ததை மிஃராஜ் உடைய இரவில் நபி (ஸல்) அவர்கள் கண்டார்கள்
(முஸ்லிம்)

மக்கா, மதீனாவுக்கிடையே நபி (ஸல்) அவர்கள் மிஃராஜ் செல்லும் போது நபி மூஸா (அலை) அவர்கள் காதில் கையை வைத்து தப்பியாச் சொல்லிக் கொண்டு அர்ஜுக் ஓடையை கடந்து கொண்டிருந்தை தான் பார்த்ததாக கூறுகிறார்கள்.

அப்பயணத்தில்) மர்யமின் மைந்தர் ஈசா (அலை) (கி.மு - கி.பி 33) அவர்களையும் கண்டேன். அவர்கள் நடுத்தர உயரமும் சிவப்பும் வெண்மையும் கலந்த, மிதமான சரும அமைப்புக் கொண்டவர்களாகவும் படிந்த, தொங்கலான தலைமுடி உடையவர்களாகவும் இருந்தார்கள்.

ர.ரா

மறை வழங்கும் மாமருந்து 11

(ஆய்த்துல் குர்ஸி)14-07-2020

இப்னு கஅபின் வீட்டில் தானியக் குதிர் ஒன்று இருந்தது அதே தினந்தோறும் கண்காணித்து வருவது அவரது வழக்கம் .

ஒருநாள் தானியம் சிறிது குறைந்து இருந்தது . இரவு நேரத்தில் அதனை காவல் காத்துக் கொண்டிருக்கும் போது இளைஞனைப் போன்ற ஒரு மிருகம் அதாவது அது பாதி மனிதனாகவும் பாதி மிருகமாகவும் அவருக்கு தெரிந்தது . அதற்கு அவர் சலாம் சொன்ன போது அது அவருக்கு பதில் சொன்னது .

" நீ மனிதனா ? என்று கேட்டார்

"ஜின் " என்றது அது அதன் கையை காட்டுமாறு அவர் கேட்டுக் கொண்டபோது அது கையை விரித்து காட்டியதில் நாயின் முன்னங்காலை போன்று ரோமம் அடர்த்தியாக இருந்தது

"ஜின் அமைப்பு இதுதானா ? " என்று கேட்டார்.

"அவர்களில் மிகவும் சக்தி படைத்தவன் நான் " _என்று பதில் வந்தது .

"நீ ஏன் இந்த காரியத்தை செய்கிறாய் ?" என்று இப்னு கஅப் இப்னு கேட்டார்

"கஃப் தர்மம் எண்ணம் படைத்தவர் என்று நான் அறிந்து இருந்ததால் அவரிடம் இருந்தே தனக்கு தேவையானதை எடுத்துக்கொள்ள நினைத்ததாக அது சொன்னது

" உங்களிடம் இருந்து எங்களை பாதுகாக்கக் கூடியது எது ? " என்று கேட்டார்

அது கூறிற்று "அது ஆயத்துல் குர்ஸி - ஒருவன் அதை காலையில் ஒதினால் மாலை வரை பாதுகாக்கப்படுவான் "
என்றது

இந்த விவரத்தை பெருமானார் (ஸல்) அவர்களிடம் கூறியபோது ,

"அது உண்மையே உமக்கு தெரிவித்திருக்கிறது " என்றார்கள் .

பாதி மனிதன், பாதி நாய் கொண்ட கொடூர மிருகம்: வேற்றுகிரகவாசியா இணையத்தில் வைரல்

அமெரிக்காவில் நாய் ஒன்றை சுமார் 7 அடி நீளம் கொண்ட கொடூர மிருகம் விரட்டியது தொடர்பான வீடியோ இணையத்தில் வெளியாகியுள்ளது.

அமெரிக்காவில் உள்ள காடு ஒன்றில், மரத்தின் ஓரத்தில் வித்தியாசமான மிருகம் ஒன்று நின்றுள்ளது.

இதைக் கண்ட நாய் ஒன்று, அதை பார்த்து கத்தியுள்ளது. தொடர்ந்து நாய் கத்தியதால் அந்த மிருகம் திடீரென்று அசுர வேகத்தில் நாயை தாக்க வந்தது.

அப்போது நாயின் உரிமையாளர் சத்தம் போட்டு மிரட்டியதால், அது மீண்டும் ஓடியுள்ளது.

இது தொடர்பான காட்சியை அந்த நபர் வீடியோவாக எடுத்து சமூகவலைத்தளங்களில் பதிவேற்றம் செய்துள்ளார்.

தற்போது அந்த வீடியோ வைரலாகி வருகிறது. இது கடந்த 2015-ஆம் ஆண்டு எடுக்கப்பட்ட வீடியோ எனவும் ஆனால் சமீபத்தில் தான் அந்த நபர் யூ டியூப்பில் பதிவேற்றம் செய்துள்ளதாக கூறப்படுகிறது

மேலும் பார்ப்பதற்கு அந்த மிருகம் பாதி மனிதன், பாதி நாய் உருவம் கொண்டு இருப்பதாக இணையவாசிகள் கூறியுள்ளனர்.

ர.ரா

மறை வழங்கும் மாமருந்து 9

13-07-2020

அல்பகராவில் ஆயத்துல் குர்ஸி

اللهُ لَآ اِلٰهَ اِلَّا هُوَ الْحَـىُّ الْقَيُّوْمُ لَا تَاْخُذُهٗ سِنَةٌ وَّلَا نَوْمٌ لَهٗ مَا فِى السَّمٰوٰتِ وَمَا فِى الْاَرْضِ مَنْ ذَا الَّذِىْ يَشْفَعُ عِنْدَهٗٓ اِلَّا بِاِذْنِهٖ يَعْلَمُ مَا بَيْنَ اَيْدِيْهِمْ وَمَا خَلْفَهُمْ وَلَا يُحِيْطُوْنَ بِشَىْءٍ مِّنْ عِلْمِهٖٓ اِلَّا بِمَا شَآءَ وَسِعَ كُرْسِيُّهُ السَّمٰوٰتِ وَالْاَرْضَ وَلَا يَـــُٔوْدُهٗ حِفْظُهُمَا وَ هُوَ الْعَلِىُّ الْعَظِيْمُ

அல்லாஹ் (எவ்வித மகத்துவமுடையவனென்றால்) அவனைத் தவிர வணக்கத்திற்குத் தகுதியான இறைவன் வேறு யாரும் (இல்லவே) இல்லை.

அவன் (மரணமில்லா) உயிருள்ளவன்; என்றும் நிலையானவன்; அவனை சிறு உறக்கமும் பீடிக்காது; பெரும் நித்திரையும் பீடிக்காது.

வானங்கள், பூமியில் உள்ளவை அனைத்தும் அவனுடையதே. அவனுடைய அனுமதியின்றி அவனிடத்தில் (எவருக்காகிலும்) யார்தான் பரிந்து பேசக்கூடும்?

அவர்களுக்கு முன் இருப்பவற்றையும் அவர்களுக்குப் பின் இருப்பவற்றையும் அவன் நன்கறிவான். அவனுடைய விருப்பமின்றி அவனுக்குத் தெரிந்த வற்றிலிருந்து யாதொன்றையும் (மற்றெவரும் தங்கள் அறிவால்) அறிந்துகொள்ள முடியாது.

அவனுடைய "குர்ஸி" வானங்கள், பூமியை விட விசாலமாய் இருக்கின்றது. அவ்விரண்டையும் பாதுகாப்பது அவனுக்குச் சிரமமன்று. மேலும், அவன்தான் மிக உயர்ந்தவன்; மிக மகத்தானவன். (குர்ஆன் : 2:255)

பெருமானார் (ஸல் ) மக்காவை விட்டு மதீனாவிற்கு ஹிஜ்ரத் சென்ற பிறகு ஆயத்துல் குர்ஸி அருளப்பட்டது இதனை கண்ணியப்படுத்துவதற்கென்று இதனுடன் 4000 வானவர்கள் இறங்கினார்கள் . ஸைது பின் தாபித்தை அழைத்து இந்த வசனத்தை எழுதிக் கொள்ளுமாறு பணித்தார்கள் .

உண்மையை சொன்ன ஷைத்தான்!

ஸூரத்துல் பகராவின் 255 வது வசனம் ஆயத்துல் குர்ஷி (அரசாட்சி வசனம்) எனப்படும் இதன் மகத்துவம் பெரியது. 'இறை வேதத்திலேயே இது ஒரு சிறப்பான வசனம்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக ஆதாரப்பூர்வமான அறிவிப்புகளும் வந்துள்ளது. இத்தகைய ஆயத்துல் குர்சியின் சிறப்பு குறித்து இமாம் புகாரி (ரஹ்) அவர்கள் பின்வரும் ஹதீஸை அறிவித்துள்ளார்கள்.

அபூஹுரைரா(ரலி) அறிவிக்கின்றார்கள். நபி(ஸல்) அவர்கள் ரமளானுடைய (ஃபித்ரா) ஜகாத்தைப் பாதுகாக்கும் பொறுப்பை என்னிடம் கொடுத்தார்கள். அப்போது ஒருவர் வந்து உணவுப் பொருட்களை அள்ளலானார். அவரை நான் பிடித்து, உன்னை நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு செல்லப் போகிறேன்! என்று கூறினேன். அதற்கவர், நான் ஓர் ஏழை!. எனக்குக் குடும்பம் இருக்கிறது. கடும் தேவையும் இருக்கிறது! என்று கூறினார். அவரை நான்விட்டு விட்டேன்.

விடிந்ததும் நபி(ஸல்) அவர்கள், அபூஹுரைராவே! நேற்றிரவு உம்மால் பிடிக்கப்பட்டவன் என்ன செய்தான் என்று கேட்டார்கள் நான், இறைத்தூதர் அவர்களே! தாம் கடுமையான வறுமையில் இருப்பதாகவும் தமக்குக் குடும்பம் இருப்பதாகவும் அவர் முறையிட்டார். எனவே, இரக்கப்பட்டு அவரைவிட்டு விட்டேன்! என்றேன்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள், நிச்சயமாக அவன் பொய் சொல்லியிருக்கிறான்! மீண்டும் அவன் வருவான் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அவன் மீண்டும் வருவான் என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதால் அவன் மீண்டும் வருவான் என்று நம்பி அவனுக்காக(அவனைப்பிடிப்பதற்காக) காத்திருந்தேன்.

அவன் வந்து உணவுப் பொருட்களை அள்ளத் தொடங்கியபோது அவனைப் பிடித்தேன். உன்னை நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு செல்லப் போகிறேன்! என்று கூறினேன். அதற்கவன், என்னைவிட்டுவிடு! நான் ஓர் ஏழை! எனக்குக் குடும்பமிருக்கிறது! இனி நான் வரமாட்டேன்! என்றான். அவன் மேல் இரக்கப்பட்டு அவனைவிட்டு விட்டேன்.

விடிந்ததும் நபி(ஸல்) அவர்கள் அபூஹுரைராவே! உம்மால் பிடிக்கப்பட்டவன் என்ன செய்தான்! என்று கேட்டார்கள். நான் இறைத்தூதர் அவர்களே! அவன் (தனக்குக்) கடும் தேவையும் குடும்பமும் இருப்பதாக முறையிட்டான் எனவே, அவன் மேல் இரக்கப்பட்டு அவனைவிட்டுவிட்டேன்! என்றேன்.

நிச்சயமாக அவன் உம்மிடம் பொய் சொல்லியிருக்கிறான். திரும்பவும் உம்மிடம் வருவான்! என்றார்கள். மூன்றாம் முறை அவனுக்காகக் காத்திருந்தபோது, அவன் வந்து உணவு பொருட்களை அள்ளத் தொடங்கினான். அவனைப் பிடித்து, உன்னை நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு செல்லப்போகிறேன்! (ஒவ்வொரு முறையும்) இனிமேல் வரமாட்டேன்! என்று செல்லிவிட்டு, மூன்றாம் முறையாக நீ மீண்டும் வந்திருக்கிறாய்! என்று கூறினேன்.

அதற்கவன் என்னைவிட்டுவிடும்! அல்லாஹ் உமக்குப் பயனளிக்கக் கூடிய சில வார்த்தைகளைக் கற்றுத் தருகிறேன்! என்றான்.

அதற்கு நான் அந்த வார்த்தைகள் என்ன? என்று கேட்டேன். நீர் படுக்கைக்குச் செல்லும்போது ஆயத்துல் குர்ஸியை ஆரம்பத்திலிருந்து கடைசிவரை ஓதும்! அவ்வாறு செய்தால், விடியும் வரை அல்லாஹ்வின் தரப்பிலிருந்து உம்மைப் பாதுகாக்கிற (வானவர்) ஒருவர் இருந்து கொண்டேயிருப்பார். ஷைத்தானும் உம்மை நெருங்கமாட்டான்! என்றான்.

விடிந்ததும் நபி(ஸல்) அவர்கள் நேற்றிரவு உம்மால் பிடிக்கப்பட்டவன் என்ன செய்தான்? என்று கேட்டார்கள். இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் எனக்குப் பயனளிக்கக் கூடிய சில வார்த்தைகளைக் கற்றுத் தருவதாக அவன் கூறினான் அதனால் அவனைவிட்டு விட்டேன்! என்றேன்.

அந்த வார்த்தைகள் என்ன? என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். நீர் படுக்கைக்குச் செல்லும்போது ஆயத்துல் குர்சியை ஆரம்பம் முதல் கடைசிவரை ஓதும்! அவ்வாறு ஓதினால், விடியும் வரை அல்லாஹ்வின் தரப்பிலிருந்து உம்மைப் பாதுகாக்கிற (வானவர்) ஒருவர் இருந்துகொண்டேயிருப்பார். ஷைத்தானும் உம்மை நெருங்கமாட்டான்! என்று என்னிடம் அவன் கூறினான் எனத் தெரிவித்தேன்.

- நபித்தோழர்கள் நன்மையான(தைக் கற்றுக் கொண்டு செயல் படுத்துவ)தில் அதிக ஆர்வமுடையவர்களாக இருந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் அவன் பெரும் பொய்யனாக இருந்தாலும் அவன் உம்மிடம் உண்மையைத்தான் சொல்லியிருக்கிறான்! மூன்று இரவுகளாக நீர் யாரிடம் பேசி வருகிறீர் என்று உமக்குத் தெரியுமா? என்று கேட்டனர். தெரியாது? என்றேன். அவன்தான் ஷைத்தான்! என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி: 2311, 3275, 5010)

ர.ரா

மறை வழங்கும் மாமருந்து 8

உசைத் பின் ஹுளைர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் ஓர் இரவில் எனது பேரீச்சங்(கனிகளை உலரவைக்கும்) களத்தில் குர்ஆன் (அல்-பகரா ) ஓதிக் கொண்டிருந்தேன்.

அப்போது எனது குதிரை கடுமையாக மிரண்டது. நான் தொடர்ந்து ஓதிக்கொண்டே இருந்தேன். மீண்டும் குதிரை மிரண்டது. தொடர்ந்து நான் ஓதிக் கொண்டேயிருந்தேன். மீண்டும் அது மிரண்டது. (அங்கு படுத்திருந்த என் மகன்) யஹ்யாவை அந்தக் குதிரை மிதித்துவிடுமோ என்று நான் அஞ்சிய போது அதை நோக்கி எழுந்து சென்றேன்.

அங்கு மேகம் போன்றதொரு பொருளை என் தலைக்கு மேலே கண்டேன். அதில் விளக்குகள் போன்ற (பிரகாசிக்கும்) பொருள்கள் இருந்தன. நான் பார்த்தவுடன் அது வானில் உயர்ந்து (என் கண்ணைவிட்டு மறைந்து)விட்டது; பிறகு நான் அதைக் காணமுடியவில்லை.

காலையில் நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று "அல்லாஹ்வின் தூதரே! நான் நேற்றிரவு பாதி இரவில் எனது பேரீச்சங்களத்தில் குர்ஆன் ஓதிக்கொண்டி ருக்கையில் என் குதிரை கடுமையாக மிரண்டது" என்று (நடந்ததைச்) சொன்னேன்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இப்னு ஹுளைரே, தொடர்ந்து ஓதியிருக்கலாமே?" என்று கேட்டார்கள்.

"நான் தொடர்ந்து ஓதினேன். மீண்டும் எனது குதிரை மிரண்டது" என்று நான் சொன்னேன்.அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இப்னு ஹுளைரே, தொடர்ந்து ஓதியிருக்கலாமே?" என்று கேட்டார்கள். "நான் தொடர்ந்து ஓதினேன். மீண்டும் எனது குதிரை மிரண்டது" என்று சொன்னேன்."இப்னு ஹுளைரே, தொடர்ந்து ஓதியிருக்கலாமே!" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மீண்டும்) கூறியபோது, "(என் மகன்) யஹ்யாவைக் குதிரை மிதித்துவிடுமோ என்று அஞ்சினேன். அவன் அதன் அருகில் இருந்தான். எனவே, நான் திரும்பிச் சென்றேன். நான் (எனது தலையைஉயர்த்தி வானைப் பார்த்தபோது) அங்கு மேகம் போன்றதொரு பொருளைக் கண்டேன். அதில் விளக்குகள் போன்ற (பிரகாசிக்கும்) பொருள்கள் இருந்தன. நான் பார்த்தவுடன் அது வானில் உயர்ந்து (என் கண்ணைவிட்டு மறைந்து)விட்டது; பிறகு நான் அதைக் காணவில்லை" என்று கூறினேன்.அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "உன் குரலைக் கேட்டு நெருங்கி வந்த வானவர்கள்தாம் அவர்கள். நீர் தொடர்ந்து ஓதியிருந்தால் காலையில் மக்களும் அதைப் பார்த்திருப்பார்கள். மக்களைவிட்டும் அது மறைந்திருக்காது" என்று கூறினார்கள்.
ஸஹீஹ் முஸ்லிம் 1460.

ர.ரா

மறை வழங்கும் மாமருந்து 7

சூரா அல்பகரா

அனஸ்(ரலி) அறிவித்தார்.

"ஒருவர் கிறிஸ்தவராக இருந்தார். பிறகு, அவர் இஸ்லாத்தைத் தழுவினார். 'அல்பகரா' மற்றும் 'ஆலு இம்ரான்' அத்தியாயங்களை ஓதினார். அவர் நபி(ஸல்) அவர்களுக்காக (வேத வெளிப்பாட்டை) எழுதி வந்தார். அவர் (மீண்டும்) கிறிஸ்தவராகவே மாறிவிட்டார்.

அவர் (மக்களிடம்) 'முஹம்மதுக்கு, நான் அவருக்கு எழுதித்தந்ததைத் தவிர வேறெதுவும் தெரியாது' என்று சொல்லிவந்தார்.

பிறகு அல்லாஹ் அவருக்கு மரணத்தையளித்தான். அவரை மக்கள் புதைத்துவிட்டனர். ஆனால் (மறு நாள்) அவரை பூமி துப்பிவிட்டிருந்தது.

உடனே, (கிறிஸ்தவர்கள்), 'இது முஹம்மது மற்றும் அவரின் தோழர்களின் வேலை. எங்கள் தோழர் அவர்களைவிட்டு ஓடி வந்துவிட்டதால் அவரின் மண்ணறையைத் தோண்டி எடுத்து அவரை வெளியே போட்டுவிட்டார்கள்' என்று கூறினார்.

எனவே, அவருக்காக இன்னும் அழகாக ஒரு புதை குழியைத் தோண்டினர். (அதில் புதைத்த பின்பு) மீண்டும் பூமி அவரை (வெளியே) துப்பி விட்டிருந்தது. அப்போதும், 'இது முஹம்மது மற்றும் அவரின் தோழர்களுடைய வேலைதான். நம் தோழர் அவர்களைவிட்டு வந்துவிட்ட காரணத்தால் அவரைத் தோண்டி எடுத்து மண்ணறைக்கு வெளியே போட்டுவிட்டனர்' என்று கூறினர்.

மீண்டும் அவர்களால் குழியை அவருக்காகத் தோண்டி அதில் அவரைப் பூமி அவரை முடிந்த அளவிற்கு மிக அழமான குழியை அவருக்காகத் தோண்டி அதில் அவரைப் புதைத்தனர். ஆனால், அவரை பூமி மீண்டும் துப்பி விட்டிருந்தது.

அப்போதுதான் அது மனிதர்களின் வேலையல்ல. (இறைவனின் தண்டனை தான்) என்று புரிந்து கொண்டனர். அவரை அப்படியே (வெளியிலேயே) போட்டுவிட்டனர். ஸஹீஹ் புகாரி : 3617.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: குர்ஆனை ஓதி வாருங்கள். ஏனெனில், குர்ஆன் ஓதி வருபவர்களுக்கு அது மறுமையில் வந்து (இறைவனிடம்) பரிந்துரை செய்யும்.

இரு ஒளிச்சுடர்களான “அல்பகரா’ மற்றும் “ஆலு இம்ரான்’ ஆகிய இரு அத்தியாயங்களையும் ஓதி வாருங்கள். ஏனெனில், அவை மறுமை நாளில் நிழல் தரும் மேகங்களைப் போன்றோ அல்லது அணி அணியாகப் பறக்கும் பறவைக் கூட்டங்களைப் போன்றோ வந்து தம்மோடு தொடர்புள்ளவர்களுக்காக (இறைவனிடம்) வாதாடும்.

“அல்பகரா’ அத்தியாயத்தை ஓதி வாருங்கள். அதைக் கையாள்வது வளம் சேர்க்கும். அதைக் கை விடுவது இழப்பைத் தரும். இவ்வத்தியாயத்திற்கு முன் வீணர்கள் செயலிழந்து போவார்கள்.

1. அறி : அபூஉமாமா அல்பாஹிலீ (ரலி),
   நூல் : முஸ்லிம் (1470)

ர.ரா

மறை வழங்கும் மாமருந்து 6
13-07-2020

சூரா அல்பகரா .

(ஷைத்தான் கேட்டு அலரும் சூரா)

பெருமானார் (ஸல் ) கூறினார்கள் : " "வீடுகளை புதைகுழி ஆக்காதீர்கள் சூரா பகரா ஓதப்படுகின்ற வீட்டில் ஷைத்தான் பிரவேசிக்க மாட்டான் ! "

இப்னு மஸ்வூத் ரலி அவர்கள் சொல்கிறார்கள் : "நபித்தோழர்களில் ஒருவர் ஷைத்தானைச் சந்தித்தார் அவனுடன் யுத்தம் செய்து அவனை கீழே தள்ளிவிட்டார் தன்னை விட்டுவிடுமாறு வேண்டிக்கொண்ட ஷைத்தான் அப்படியே விட்டு விட்டால் தன்னை வீட்டுக்குள் பிரவேசிக்க முடியாமல் தடுக்கிற மந்திரத்தை கற்றுக் கொடுப்பதாக கூறினான் .

அந்த நபித்தோழர் அவனை விட்டு விட்டார் ஆனால் ஷைத்தான் அந்த மந்திரத்தைக் கற்று தர மறுத்து விட்டான். நபித்தோழர் அவனை மீண்டும் கீழே தள்ளினார் . அவன் வாக்கு கொடுத்தான் எழுந்து நின்றதும் கற்றுத் தர மறுத்தான் .

எனவே மூன்றாம் தடவையாக அவனை பிடித்து கீழே தள்ளிய நபித்தோழர் அவனுடைய விரலை கடித்துக்கொண்டு தமக்கு அந்த மந்திரத்தைக் கற்றுக் கொடுக்கும் வரை அவனை விடப் போவதில்லை என்று கூறினார் .

"சூரா பகரா தான் அந்த மந்திரம் ! " என்று ஷைத்தான் சொன்னான் .
அவன் மீண்டும் கூறினான் இந்த சூராவில் இருந்து ஒரு வசனம் ஒரு வீட்டில் ஓதப்பட்டால் , எப்படிப்பட்ட ஷைத்தானாலும் கழுதையை போல் அலறியபடி அந்த வீட்டை விட்டு வெளியேறி விடுவான் அந்த வீட்டுக்குள் செய்த நுழையமுடியாது "

இந்தச் செய்திகளையெல்லாம் விளங்கிய இப்னு மஸ்வூத் ரலி அவர்களிடம் அந்த நபித்தோழர் யார் ? என்று கேட்டபோது கிடைத்த விடை இதுதான் : உமர் பின் கத்தாப் ரலி

சூரா பகராவை ஓதுங்கள் அதை ஓதி வருவது மிகப் புனிதமான ஒன்று. அதை விடுவது பெருத்த இழப்பாகும் அது ஓதுவதற்கு தேவையான சக்தியை வீணர்களால் அடையமுடியாது ! "என்று பெருமானார் (ஸல் ) கூறினார்கள் .

(மௌலவி முஹம்மது கௌது பாக்கவி அவர்களால் தொகுக்கப்பட்ட "மறை வழங்கும் மாமருந்து " புத்தகத்தில் இருந்து…)

ர.ரா

மறை வழங்கும் மாமருந்து 5

(சூரா பாத்திஹா )

பாம்பு தேள் முதலியவற்றில் ஏதேனும் கடித்து விட்டால் சூரா பாத்திஹாவை ஓதிக் கொண்டிருக்க வேண்டும் ஏறிய விஷத்தை இறைவன் இறக்கி விடுவான்

தேள் கடித்தால், உப்பு கரைத்த தண்ணீரில் சூரா பாத்திஹாவை ஏழு முறை ஓதி ஊதி அதனை குடித்தால் குணமாகிவிடும் .

அபீ ஷஹீத் சொல்கிறார்கள் :

நபித்தோழர்களில் சிலர் ஒரு சமயம் பயணம் புறப்பட்டார்கள். அவர்கள் அரேபிய பயணக் குழு ஒன்று சேர்ந்து தங்கிக் கொண்டார்கள். அவர்கள் விருந்து கொடுக்க மறுத்துவிட்டார்கள்

அவர்களின் தலைவனே விஷ ஜந்து ஒன்று தீண்டிவிட்டது விஷம் இறக்கும் முயற்சி பயனற்றுப் போனது கூட்டத்தில் ஒருவன் ஒரு கூட்டத்தார் நம்மிடம் வந்து இருக்கிறார்களே அவர்களுக்கு ஏதேனும் பரிகாரம் தெரிந்திருக்கக் கூடும் என்று சொன்னான் தலைவன் அனுமதி கொடுத்ததும் தோழர்களிடம் வந்தார்கள்

"எங்கள் தலைவரை விஷ ஜந்து கடித்துவிட்டது விஷம் இறக்கும் பரிகாரம் உங்களிடம் இருக்கிறதா? என்று வினவினார்கள்

நபி தோழர்களில் ஒருவர் சொன்னார் : "ஆம் எங்களிடம் பரிகாரம் உண்டு ஓதி பார்ப்பதன் மூலம் எங்களால் குணப்படுத்த முடியும் என்றாலும் உங்களிடமிருந்து நாங்கள் விருந்து பெற விரும்பினோம் . நீங்கள் மறுத்து விட்டீர்கள் எனவே நாங்கள் செய்யும் பரிகாரத்திற்கு நீங்கள் ஏதேனும் ஊதியம் தர வேண்டும் "

விஷம் இறங்கியதும் ஆடு ஒன்று கொடுத்து விடுவதாக ஏற்றுக்கொண்டார்கள்

மேற்குறிப்பிட்ட நபித்தோழர் , அவர் குழுவை தலைவனை அணுகி கடிப்பட்ட இடத்தில் துப்பி சூரா ஃபாத்திஹாவை ஓதி ஊதினார். கட்டுண்டவன் போல் படுத்துக் கிடந்த தலைவன் அவிழ்த்துவிட்டவன் போல் குணம் பெற்று எழுந்தான்

பிரச்சனை பெருமானார் (ஸல்) அவர்களிடம் கொண்டுவரப்பட்டது பெருமானாரின் தீர்ப்புப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது இதர நபித்தோழர்களின் கருத்து . அவர்கள் கூறிய விவரங்களை கேட்ட பெருமானார் (ஸல்) அவர்கள் : " சூரா ஃபாத்திஹாவை ஓதினால் விஷம் இறங்கும் என்று உங்களுக்கு எப்படி தெரியும் ? நீங்கள் செய்தது சரி . ஆர்டினை அறுத்து பங்கிட்டு எனக்கும் ஒரு பங்கு கொடுங்கள் " என்று கூறினார்கள்.

(மௌலவி முஹம்மது கௌது பாக்கவி அவர்களால் தொகுக்கப்பட்ட "மறை வழங்கும் மாமருந்து " புத்தகத்தில் இருந்து...)

ர.ரா

மறை வழங்கும் மாமருந்து 4

"பிஸ்மில்லாஹ் ஹிர்ரஹ்மானிர் ரஹீம் "

" ஓதுவீராக ! "உம்மைப் படைத்த உமதிறைவனின் திருப்பெயரால் " என்னும் தொடருடன் தொடங்கும் சூரா அலக் 96வது அத்தியாயம்தான் முதலில் இறங்கிற்று. இறைவன் முதன்முதலில் இப்படித்தான் பிஸ்மியை அறிமுகப்படுத்தினான் .

" இதைச் செலுத்தவும் , இதை நிறுத்தவும் ஆற்றலுடையோனாகிய அல்லாஹ்வின் திருப்பெயரைக் கூறி இதில் நீங்கள் ஏறிக் கொள்ளுங்கள்.
குர்ஆன் (11: 41) எனக் கூறி நபி நூஹ் (அலை) அவர்களுடன் மரக்கலமேறியவர் பெருவெள்ளத்தில் இருந்து காப்பாற்றப்பட்டனர் .

ரோமாபுரியின் மன்னர் சீஸர் தமக்கு நீங்காத தலைவலி ஏற்பட்டிருப்பது குறித்து உமர்(ரலி) அவர்களிடம் கூற , அவர்கள் தொப்பி ஒன்றை தயாரித்து அவருக்கு அனுப்பினார்கள் அதனை அவர் தம் தலையில் அணியும் பொழுதெல்லாம் தலைவலி நீங்கி விடும் இது குறித்து அவருக்கு ஆச்சர்யம் ஏற்பட்டது அந்தப் தொப்பியைப் பிரித்துப் பார்த்ததில் "பிஸ்மில்லாஹ் ஹிர்ரஹ்மானிர் ரஹீம் " என்று எழுதப்பட்டிருந்தது.

" அல்லாஹ்வின் வாள் " என்று அழைக்கப்பட்ட தளபதி அவர்கள் , "இறைவனால் விதிக்கப்பட்ட தவணை வருமுன் எவரும் இறப்பதில்லை ; இறை ஆணையின்றி எப்பொருளும் குணமளிப்பதில்லை " என்னும் உறுதியுடன் பிஸ்மியை சொல்லி, பகைவரால் கொடுக்கப்பட்ட நஞ்சினை குடித்து எந்த தீங்குமின்றி திகழ்ந்தார்கள்

(மௌலவி முஹம்மது கௌது பாக்கவி அவர்களால் தொகுக்கப்பட்ட "மறை வழங்கும் மாமருந்து " புத்தகத்தில் இருந்து...)

ர.ரா

மறை வழங்கும் மாமருந்து 3

15

( எந்தத் தீங்கும் ஏற்படாது )

ஹஜ்ஜாஜ் இப்னு யூசுப் , அனஸ் (ரலி) அவர்களின் கழுத்தில் கயிற்றை கட்டி "நான் உன்னை கொல்ல போகிறேன்" என்று கூறியபோது ,

" நான் இதனை முன்பே அறிந்து இருப்பின் அல்லாஹ்வையன்றி உன்னை அல்லவா வணங்கி இருப்பேன்" என்றார் அனஸ் (ரலி)

"ஏன் ? " - ஹஜ்ஜாஜ் கேட்டான்

" எனக்கு அண்ணல் நபி ஸல் அவர்கள் ஒரு துவாவை கற்றுத் தந்து அதை தினமும் காலையில் ஓதுபவருக்கு எவராலும் எத்தீங்கும் ஏற்படாது "என்று கூறியுள்ளனர் அதனை நான் வழக்கமாக ஓடி வருகிறேன் அதனை இன்று காலையிலும் ஓதினேன் என்றார் அனஸ் (ரலி)

ஹஜ்ஜாஜ் அனஸ் (ரலி) அவர்களை விட்டுவிட்டார் .பின்னர் காரணம் வினவப்பட்டபோது , அவர்களின் தோளில் இரண்டு புலிகள் வாயை திறந்த வண்ணம் நின்று கொண்டிருப்பதை தாம் கண்டு பயந்து விட்டதாக கூறினார் .

ஹஜ்ஜாஜ் தமக்கு அதனை கற்றுத் தருமாறு வேண்டியும் கற்றுக்கொடுக்காத அனஸ் (ரலி) பின்னர்தான் இறப்பு படுக்கையில் அதனைத் தம் ஊழியருக்கு கற்றுக் கொடுத்தார்கள் .

"பிஸ்மில்லாஹி கைரில் அஸ்மாயி பிஸ்மில்லாஹில்லதீ லாயளுர்ரு மஅஸ்மிஹி ஷைஉன் ஃபில் அர்லி வலாஃபிஸ்ஸமாயி வஹுவஸ் ஸமீஉல் அலீம் "

(மௌலவி முஹம்மது கௌது பாக்கவி அவர்களால் தொகுக்கப்பட்ட "மறை வழங்கும் மாமருந்து " புத்தகத்தில் இருந்து...)

ர.ரா

மறை வழங்கும் மாமருந்து 2

( பேய் பிசாசுகளிடமிருந்து பாதுகாக்க )

ஒருவர் பேய் பிடித்தவர்களுக்கு ஓதிப் பார்க்குமுன் முதலில் தம் உடலை அது தாக்கி விடா வண்ணம் தற்காத்துக்கொள்ள வேண்டும் இதற்கு "உடலை கட்டுதல் "என்று பெயர்

" ஹதம்து பில்லாஹி அலிய்யில் அளீம் வபிஹக்கி ஹாத்திமி சுலைமான் இப்னு தாவூத் அலைஹிஸ்ஸலாம் " என்ற இஸ்மை மூன்று தடவை ஓதி ஒருவர் தம் நெஞ்சில் ஊதி கொள்வதுடன், இதனை ஓதி ஊதி ஒருவர் தன் உடலை முதலில் கட்டி கொள்ளாமல் பேய் பிசாசு பிடித்தவர்களுக்கு ஒருபோதும் ஓதிப் பார்க்கக்கூடாது .

இதனை ஓதி ஊதிக்கொள்ளும் ஒருவருக்கு எந்த ஷைத்தானாலும் யாதொரு தீங்கும் செய்துவிட இயலாது இந்த இஸ்மு பாதுகாக்கும்.

ஒருவர் தனியே இரவிலோ இருட்டிலோ செல்லும் போது இதனை ஓதி நெஞ்சில் ஊதிக்கொண்டு சென்றால் வழியில் ஏதேனும் கண்டு திடுக்குற்று விட்ட போதிலும் அவருக்கு அதனால் யாதொரு தீங்கும் ஏற்படாது .இது அனுபவ உண்மையாகும்.

(மௌலவி முஹம்மது கௌது பாக்கவி அவர்களால் தொகுக்கப்பட்ட மறை வழங்கும் மாமருந்து புத்தகத்தில் இருந்து...)

ர.ரா மறை வழங்கும் மாமருந்து 1

மௌலவி முஹம்மது கௌது பாக்கவி அவர்களால் தொகுக்கப்பட்ட இப்புத்தகத்தில் இருந்து சில பதிவுகள்.

(திருக்குர்ஆன் வசனங்களுக்கு மாற்றியமைக்கும் சக்தி உள்ளதா ?)

நம்மில் கூட சிலர் குர்ஆனிலிருந்து இவ்வாறெல்லாம் ஓதினால் இதுவெல்லாம் நடந்துவிடுமா ?... என்று பகுத்தறிவு வாதம் பேசலாம் இவ்வாறு பேசுபவர்கள் இன்று மட்டுமல்ல உலகம் தோன்றிய காலத்திலிருந்தே இம்மண்ணின் மீது இருந்துதான் வந்துள்ளார்கள்

ஷெய்க் ஸஅதி ரஹ்மத்துல்லாஹி அவர்களின் காலத்தில் இவ்வாறு பேசித் திரிந்த ஒருவனைப் பற்றி அவர்கள் கேள்வியுற்று அவனை தம்மிடம் அழைத்து வருமாறு செய்து அவனை கடுமையாக ஏசினார்கள் .

அவ்வளவுதான் அவன் முகம் சிவந்து ரத்த நாளங்கள் புடைத்தன மீசை படபடத்தது சினம் தலைக்கேறி பேய் பிடித்தவன் போன்று வெறிகொண்டு ஆடினான் அதுகண்ட ஷெய்க் ஸஅதி (ரஹ்)அவர்கள் அவனை அமைதிப்படுத்தி,

"நண்பரே பார்த்தீரா நான் இறைவனின் படைப்புகளில்
அற்பமானவர்களில் அற்பமானவன் .என்னுடைய சில சொற்கள் உம்மை எவ்வளவு மாற்றி அமைத்து விட்டன அமைதியாக வந்த உம்மை ஒருகணத்தில் அலங்கோல நிலையிலாக்கி விட்டன என்னுடைய சொற்களுக்கே இத்தனை ஆற்றல் இருக்குமாயின் இறைவனின் திரு வசனங்களுக்கு ஆற்றல் இருக்காதா ? நீர் அவ்வாறா கூறுகிறீர் " என்று வினவினார்கள் .அவன் மாறு வார்த்தை கூற இயலாது வெட்கித் தலைகுனிந்தான்.

காஜா முஈனுத்தீன் சிஷ்தி (ரஹ்) அவர்களின் வரலாற்றைப் படிக்க நேர்ந்த காலை "சூரத்துல் பாத்திஹா " எல்லா நோய்களுக்கும் அருமருந்து ஆகும் தீராப்பிணியாயிருப்பின் வைகறை தொழுகையின் போதோ தொழுகையின் சுன்னத்து ஃபர்ளுத் தொழுகைக்களுக்கு இடையில் பிஸ்மில்லாஹ்வின் மீமை அல்ஹம்தின்லாமோடு சேர்த்து (ரஹீமில் ஹம்து) என்று சூரா பாத்திஹாவை 41 தடவை ஓதி நோயாளியின் மீது ஊதி விட்டால் அந்நோய் இறை அருளால் நீங்கும் என்றும் , துன்பம் ஏற்பட்ட காலை அவ்வாறே ஓதி ஆமீனை மெதுவாக ஓதின் துன்பம் நீங்கும் என்றும் அம்மேதகை கூறிய அரிய அருள் மொழியை படிக்க நேர்ந்தது . இதுவும் இறையருள் என்று எண்ணி அதனை இந்நூலில் பொறித்துள்ளேன். இந்நூலின் பதிப்பாளர் அப்துற்_றஹீம்

மறை வழங்கும் மாமருந்து 1 11-07-2020

மௌலவி முஹம்மது கௌது பாக்கவி அவர்களால் தொகுக்கப்பட்ட இப்புத்தகத்தில் இருந்து சில பதிவுகள்.

(திருக்குர்ஆன் வசனங்களுக்கு மாற்றியமைக்கும் சக்தி உள்ளதா ?)

நம்மில் கூட சிலர் குர்ஆனிலிருந்து இவ்வாறெல்லாம் ஓதினால் இதுவெல்லாம் நடந்துவிடுமா ?... என்று பகுத்தறிவு வாதம் பேசலாம் இவ்வாறு பேசுபவர்கள் இன்று மட்டுமல்ல உலகம் தோன்றிய காலத்திலிருந்தே இம்மண்ணின் மீது இருந்துதான் வந்துள்ளார்கள்

ஷெய்க் ஸஅதி ரஹ்மத்துல்லாஹி அவர்களின் காலத்தில் இவ்வாறு பேசித் திரிந்த ஒருவனைப் பற்றி அவர்கள் கேள்வியுற்று அவனை தம்மிடம் அழைத்து வருமாறு செய்து அவனை கடுமையாக ஏசினார்கள் .

அவ்வளவுதான் அவன் முகம் சிவந்து ரத்த நாளங்கள் புடைத்தன மீசை படபடத்தது சினம் தலைக்கேறி பேய் பிடித்தவன் போன்று வெறிகொண்டு ஆடினான் அதுகண்ட ஷெய்க் ஸஅதி (ரஹ்)அவர்கள் அவனை அமைதிப்படுத்தி,

"நண்பரே பார்த்தீரா நான் இறைவனின் படைப்புகளில்
அற்பமானவர்களில் அற்பமானவன் .என்னுடைய சில சொற்கள் உம்மை எவ்வளவு மாற்றி அமைத்து விட்டன அமைதியாக வந்த உம்மை ஒருகணத்தில் அலங்கோல நிலையிலாக்கி விட்டன என்னுடைய சொற்களுக்கே இத்தனை ஆற்றல் இருக்குமாயின் இறைவனின் திரு வசனங்களுக்கு ஆற்றல் இருக்காதா ? நீர் அவ்வாறா கூறுகிறீர் " என்று வினவினார்கள் .அவன் மாறு வார்த்தை கூற இயலாது வெட்கித் தலைகுனிந்தான்.

காஜா முஈனுத்தீன் சிஷ்தி (ரஹ்) அவர்களின் வரலாற்றைப் படிக்க நேர்ந்த காலை "சூரத்துல் பாத்திஹா " எல்லா நோய்களுக்கும் அருமருந்து ஆகும் தீராப்பிணியாயிருப்பின் வைகறை தொழுகையின் போதோ தொழுகையின் சுன்னத்து ஃபர்ளுத் தொழுகைக்களுக்கு இடையில் பிஸ்மில்லாஹ்வின் மீமை அல்ஹம்தின்லாமோடு சேர்த்து (ரஹீமில் ஹம்து) என்று சூரா பாத்திஹாவை 41 தடவை ஓதி நோயாளியின் மீது ஊதி விட்டால் அந்நோய் இறை அருளால் நீங்கும் என்றும் , துன்பம் ஏற்பட்ட காலை அவ்வாறே ஓதி ஆமீனை மெதுவாக ஓதின் துன்பம் நீங்கும் என்றும் அம்மேதகை கூறிய அரிய அருள் மொழியை படிக்க நேர்ந்தது . இதுவும் இறையருள் என்று எண்ணி அதனை இந்நூலில் பொறித்துள்ளேன். இந்நூலின் பதிப்பாளர் அப்துற்_றஹீம்

## மறை கூறும் இறை தண்டனைகள்
## (சொற்பொழிவின் சாரம்சம்) 10/07/2020

https://m.facebook.com/story.php?story_fbid=2653077124951626&id=100007480923921

يٰۤاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْۤا اِنَّ كَثِيْرًا مِّنَ الْاَحْبَارِ وَالرُّهْبَانِ لَيَاْكُلُوْنَ اَمْوَالَ النَّاسِ بِالْبَاطِلِ وَيَصُدُّوْنَ عَنْ سَبِيْلِ اللّٰهِ‌ وَالَّذِيْنَ يَكْنِزُوْنَ الذَّهَبَ وَالْفِضَّةَ وَلَا يُنْفِقُوْنَهَا فِىْ سَبِيْلِ اللّٰهِ ۙ فَبَشِّرْهُمْ بِعَذَابٍ اَلِيْمٍۙ

ஈமான் கொண்டவர்களே! நிச்சயமாக (அவர்களுடைய) பாதிரிகளிலும்,சந்நியாசிகளிலும் அநேகர் மக்களின் சொத்துக்களைத் தவறான முறையில் சாப்பிடுகிறார்கள்; மேலும் அல்லாஹ்வின் பாதையை விட்டும் (மக்களைத்) தடுக்கிறார்கள்; இன்னும் எவர்கள் பொன்னையும், வெள்ளியையும் சேமித்து வைத்துக் கொண்டு அவற்றை அல்லாஹ்வின் பாதையில் செலவிடாதிருக்கின்றார்களோ; (நபியே!) அவர்களுக்கு நோவினை செய்யும் வேதனை உண்டு என்று நன்மாராயம் கூறுவீராக!.
(அல்குர்ஆன் : 9:34)

يَّوۡمَ يُحۡمٰى عَلَيۡهَا فِىۡ نَارِ جَهَـنَّمَ فَتُكۡوٰى بِهَا جِبَاهُهُمۡ وَجُنُوۡبُهُمۡ وَظُهُوۡرُهُمۡ‌ؕ هٰذَا مَا كَنَزۡتُمۡ لِاَنۡفُسِكُمۡ فَذُوۡقُوۡا مَا كُنۡتُمۡ تَكۡنِزُوۡنَ

(நபியே! அவர்களுக்கு நீர் அந்த நாளை நினைவூட்டுவீராக!) அந்த நாளில் (அவர்கள் சேமித்து வைத்த செல்வத்தை) நரக நெருப்பிலிட்டுக் காய்ச்சி, அதைக் கொண்டு அவர்களுடைய நெற்றிகளிலும் விலாப்புறங்களிலும், முதுகுகளிலும் சூடு போடப்படும் - (இன்னும்) “இது தான் நீங்கள் உங்களுக்காகச் சேமித்து வைத்தது - ஆகவே நீங்கள் சேமித்து வைத்ததைச் சுவைத்துப் பாருங்கள்” (என்று கூறப்படும்).
(அல்குர்ஆன் : 9:35)

اِذْ يُوْحِىْ رَبُّكَ اِلَى الْمَلٰٓـئِكَةِ اَنِّىْ مَعَكُمْ فَثَبِّتُوا الَّذِيْنَ اٰمَنُوْا‌ ؕ سَاُلْقِىْ فِىْ قُلُوْبِ الَّذِيْنَ كَفَرُوا الرُّعْبَ فَاضْرِبُوْا فَوْقَ الْاَعْنَاقِ وَاضْرِبُوْا مِنْهُمْ كُلَّ بَنَانٍ

(நபியே!) உம் இறைவன் மலக்குகளை நோக்கி: “நிச்சயமாக நான் உங்களுடன் இருக்கிறேன்; ஆகவே, நீங்கள் முஃமின்களை உறுதிப்படுத்துங்கள்; நிராகரிப்போரின் இருதயங்களில் நான் திகிலை உண்டாக்கி விடுவேன்; நீங்கள் அவர்கள் பிடரிகளின் மீது வெட்டுங்கள்; அவர்களுடைய விரல் நுனிகளையும் வெட்டி விடுங்கள்” என்று (வஹீ மூலம்) அறிவித்ததை நினைவு கூறும்.
(அல்குர்ஆன் : 8:12)

மேற்கண்ட வசனங்களை படிக்கும்போது ஒவ்வொருவருக்கும்
உள்ளச்சத்தால், அவரவருக்கும் பயம் ஏற்படுகிறது இறைவன் நெற்றிகளையும் விலாப்புறங்களையும் முதுகுகளையும் பிடரிகளையும் ஏன் குறிப்பிட வேண்டும் ? மற்ற உறுப்புகளான கைகள் கால்கள் குறித்து ஏன் சொல்லவில்லை...என்று சிந்திக்கும் போதுதான் அறிவியல் வந்து நுழைந்துவிடுகிறது எனவே மேற்கண்ட வசனங்களுக்கு அறிவியல் ரீதியாக ஒரு ஆய்வு

உலகிலேயே மிக மிக ஆச்சரியம் மனித மூளை . அதனுள் பல்லாயிரம் கோடி நுட்பமான உயிரணுக்கள் செல்கள் உள்ளன ஒவ்வொரு செல்லையும் ஒரு மண்துகள் அளவுக்குப் பெரிசு பண்ணினால் ஒரு லாரி நிரம்பும்.இந்த செல்களின் எண்ணிக்கை 20 டிரில்லியன் அதாவது 2000 கோடி கோடி .மூளையில் இருக்கும் நரம்பு செல்கள் ஒன்றன்பின் ஒன்றாகச் சேர்த்து வைத்தால் அந்த நீளத்திற்கு பூமியிலிருந்து சந்திர மண்டலம் வரை போய் விட்டு திரும்பலாம்.

நரம்பு செல்கள் இவற்றுக்கிடையே ஓய்வில்லாத மின்சார நடனம்தான் நம் சிந்தனை ! இந்த மூளையைக் கொண்டு விவசாயம் கண்டுபிடித்தோம் முதல் சக்கரங்கள் செய்தோம் மாட்டை பழக்கினோம், குதிரையில் ஏறினோம் காட்டை வெட்டினோம் கழனியை நிறைத்தோம், வியாதிகளை வென்றோம்,சந்திரனுக்குச் சென்றோம்.

இன்னும் மூளையைப் பற்றி முழு ஞானம் நமக்கு இல்லை ஆனால் நவீன மருத்துவம் கம்ப்யூட்டர் கருவிகள் உதவியுடன் நிறைய தெரிந்து இருக்கிறோம் அண்மையில் பாசிட்ரான் எமிஷன் டோமொகிராஃபி (PET) என்கிற கருவியைப் பயன்படுத்தி நாம் பேசும்போது பார்க்கும் போது படிக்கும் போதும் நினைக்கும் போதும் மூளையில் எந்தெந்த இடங்களில் நடவடிக்கை ஜாஸ்தி ஆகிறது என்று கலர் கலராக காட்டி இருக்கிறார்கள்.

மூளை ஸ்பைனல் கார்டு என்னும் முதுகுத் தண்டில் இருந்து முளைக்கிறது ஒருவாறு முட்டைகோஸ் தண்டிலிருந்து மடிப்பு மடிப்பாக இலைகள் வளர்வது போல் அமைந்துள்ளது இந்த மூளையை மூன்று பாகங்களாக பிரிக்கிறார்கள் முன் மூளை நடுமூளை பின்மூளை.

மனிதனின் சிந்திக்கும் திறன் ஆனால் அவனின் குணத்தையே மாற்று விடுகிற சமாச்சாரம் மூளையின் முன் பகுதியில் தான் இருக்கிறது அதாவது மனிதனின் நெற்றிப் பகுதியில் அமைந்திருக்கிறது மக்களின் பொருள்களை தப்பான முறையில் விழுங்குவதற்கு செய்யப்பட்ட சிந்தனை அந்த சிந்தனையால் பெறப்பட்ட தங்கத்தையும் வெள்ளியையும் நரக நெருப்பில் பழுக்கக் காய்ச்சி அவனுடைய நெற்றியில் சூடு போடும் இறைவசனம் இப்போது புரிகிறதா?

இப்போது மூளையோடு அதன் நரம்புகளையும் தெரிந்துகொள்ளவேண்டும் முதுகுத்தண்டில் ஓடும் ஸ்பைனல் கார்டு அதாவது பின்பக்கம் உள்ள நரம்பு மூளைக்கு செய்தி போக்குவரத்துக்கான ஜீவநதி ஒன்றரை அடி அல்லது 46 CM நீளமுள்ள இந்த நரம்புக் கயிறு மூளையின் அடிப்பாகத்தில் இருந்து கீழே இறங்குகிறது அது முதுகு எலும்புகள் பத்திரமாக வைக்கப்பட்டிருக்கிறது இதிலிருந்து ஆங்காங்கே கிளைகளை போல நரம்புகள் பிரிந்து உடம்பின் சகல பாகங்களுக்கும் கனெக்சன் போகிறது ஆனால் ஸ்பைனல்கார்டு என்பது முதுகெலும்பின் முழுநீளமும் இருப்பது இல்லை அதனால் இதிலிருந்து வெளிப்படும் 31 ஜோடி நரம்புகள் முதலில் ஆங்காங்கே பிரிந்து கடைசியில் குதிரைவால் மாறி வெளியே வரும்.

இந்த 31 ல் எட்டு ஜோடி தொண்டை மார்பு கைகளை கவனித்துக் கொள்கிறது இந்த எட்டு ஜோடி நரம்பில் அடிபட்டால் மேற்சொன்ன உறுப்புகள் இயங்காது அடுத்து 12 ஜோடி உடலின் மையப்பகுதி ஐந்து ஜோடி கால்கள் மற்றோர் 5 ஜோடி பாதங்களுக்கும் என்று வேலை பிரித்துக் கொடுக்கப்படுகிறது இதைத்தவிர மூளையிலிருந்து நரம்புகள் நேரடியாக கனெக்சன் ஒன்று அவற்றை கரேனியல் நரம்புகள் என்பர் இந்த நரம்பு ஜோடிகள் மொத்த உடலின் அவங்களுக்கும் இணைப்பு தந்துவிடுகிறது

ஏதாவது காயங்களால் முதுகு எலும்பு பாதிக்கப்படும் போது கால்கள் இரண்டும் செயலிழந்துவிடும் முதுகெலும்பின் உச்சியில் கழுத்து எலும்பு அடிபட்டால் கை கால் எல்லாம் உதவாமல் போகும் சிறுநீர் மோஷன் போன்றவற்றின் கட்டுப்பாடும் போய்விடும் இதெல்லாம் அந்த உறுப்பில் இணைக்கப்பட்டுள்ளது

இளம்பிள்ளை வாதம் வைரஸ் எனும் நோய்க் கிருமியின் தாக்கத்தால் வருவது இந்த வைரஸ்கள் மூலையின் அடிப் பாகத்தை தாக்குவதால் கால்களை கட்டுப்படுத்தும் நரம்புகளும் தசைகளும் பாதிக்கப்பட்டு அவை சுவாதீனம் இழந்து இளம்பிள்ளைவாதம் ஆகிறது .

மேற்கண்ட இது வசனத்தில் முதுகில் சூடு போடுவதும் அவர்களின் பிடரியை வெட்டும் போது ஏற்படும் அவல நிலையை மேற்கொண்ட ஆய்வில் அறியமுடிகிறது

அடுத்து முதுகெலும்புத் தொடரில் மேல் பகுதியான கழுத்துக்குக் கீழ் முதுகுக்கும் நடுவில் அமைந்துள்ளவை தொராஸிக் எலும்புகள் . சற்று பின்புறமாக வளைந்து இருக்கும் இந்த பகுதியில்தான் 12 எலும்புகள் ஒன்றன் பின் ஒன்றாக தேவையான கோணத்தில் அமைக்கப்பட்டுள்ளன இந்த தொராஸிக் பகுதியில் அடிபட்டால் கழுத்துக்கு கீழே உணர்ச்சி இல்லாமல் போய்விடும் வாழ்நாள் முழுவதும் மிகுந்த அவஸ்தை . இதேபோல முதுகெலும்புகள் இடம்மாறி விட்டாலோ அதற்குள் பயணம் செய்யும் தண்டுவடமும் ஏனைய நரம்புகளும் பாதிக்கப்பட்டு அடிபட்ட இடத்திற்கு கீழே உள்ள தசைகள் எல்லாம் செயலிழந்து விடும் விலா எலும்புகளும் தசைகளும் எப்போதும் இயல்பாகவே அசைய முடிவதற்கு முக்கிய காரணம் அவற்றுக்கு பின்புறம் ஒரு தூணாக நின்று ஆதரவளிக்கும் மேல் முதுகு எழும்பு தொடர்தான் .

விலா எலும்புகளுடன் மூச்சு விடும் போதெல்லாம் ஒரு முக்கிய தசைச்சுவரும் மேலும் கீழுமாக அசைந்து கொண்டே இருக்கிறது மார்பு கூட்டையும் வயிற்றுப் பகுதியையும் பிரிக்கும் இந்த தசை சுவரின் பெயர் உதரவிதானம் . பாலூட்டிகளுக்கும் மட்டுமே உள்ள இந்த தசைச்சுவர் மனிதனுக்கு நன்றாக வளர்ச்சி அடைந்திருக்கிறது ஒரு ஆச்சரியமான விஷயம் இந்த தசை சுவரை அசைய வைக்கும் கட்டுபடுத்திகள் கழுத்துப் பகுதியின் பிடரியுள்ள தண்டுவடத்தின் மேல்பகுதியில் அமைந்துள்ளது .இப்போது புரிகிறதா விலாபுறங்களிலும் சூடு போடுவது ஏன் என்று.

இதுவரை உடலின் புறத்தாக்குதலை பார்த்தோம் இருதயங்களில் திகலை ஏற்படுத்துவது என்பது உடலின் அகத்தாக்குதலாகும் தனிமை மூளைக்கு எவ்வித செய்தியும் போகாத தனிமை நம் சிறைச்சாலைகளிலும் நம்மூர் சில அறைகள் இன்னும் இருக்கிறது அதுவே போதும் பயத்திற்க்கும் மனக்கலக்கத்திற்கும் ஒரு மணி நேரம் இருட்டான சத்தமே கேட்காத சிறிய அறையில் காதையும் மூடி அழைத்து விட்டால் 3 மணி நேரத்தில் சிலர் பெற்ற தாயையும் தாய்நாட்டையும் காட்டிக் கொடுப்பார்கள் என்பதாக கொரிய யுத்தத்தில் சீனர்கள் கண்டெடுத்த முறை

மிஃராஜ் பயணத்தின்போது சித்ரத்துல் முன்தஹா என்ற இடத்தில் வானவர் ஜிப்ரீல் அலை விட்டுவிட்டு யாரசூல்லாஹ் ! இனிமேல் உள்ள பயணத்தை நீங்கள் மட்டுமே தொடர்ந்து கொள்ளுங்கள் இனி மேற்கொண்டு நான் வருவதற்கு எனக்கு அனுமதி இல்லை என ஜிப்ரீல் அலை ஒதுங்கி நிற்க நபி ஸல் தொடருகிறார்கள் வெட்டவெளி வனாந்தரத்தில் யாருமற்ற நிசப்தத்தில் அப்படி ஒரு பயணம் காதில் எவ்வித சத்தமும் கேட்காத போது தன் ஹபீபான நபிஸல் அவர்களின் மனதில் பயம் வந்து விடுமோ என்று எண்ணி அல்லாஹ் நபியின் உற்ற நண்பரான அபூபக்கர் சித்தீக் ரலி அவர்களின் குரலில் ஒரு மலக்கை கொண்டு பேச வைத்தான் காதுக்கு சப்தஒலி கிடைத்ததும் அதுவும் தன் ஆத்ம நண்பரின் குரல் ஒலி கேட்டதும் நபி ஸல் தைரியப்பட்டார்கள் என்பது ஹதீஸில் காண கிடைக்கிறது

எனவே இருதயத்தில் பயத்தை ஏற்படுத்தி பின் பிடரியில் வெட்டும்போது அவர்களின் மனநிலை என் நிலைமைக்கு மாறும் என்பதை சொல்லித்தான் தெரிய வேண்டுமோ?

இதுவரை தனிப்பட்ட நபரின் குற்றத்துக்கு தக்க தண்டனையை இறைவன் வணங்குவது பற்றி பார்த்தோம் இனி ஒரு குழுவோ அல்லது ஒரு சமுதாயமோ செய்யும் குற்றத்திற்கு ஏற்ற தண்டனையை இறைவன் கொடுப்பது பற்றி பார்ப்போம்.

அபிசீனிய_சக்கரவர்த்தியின் யெமன் நாட்டு ஆளுநராக இருந்தவன் அப்ரஹா. மக்காவிலிருந்த கஃபாவை தரிசிக்க மக்கள் கூட்டம் கூட்டமாகச் சென்று வருவதை பொறுக்க முடியாத இவன் தன் தலைநகர் சன்ஆவில் காலிஸ் எனும் பிரம்மாண்ட ஆலயம் ஒன்றை கட்டி எழுப்பினான்.

கஃபாவுக்குச் செல்லும் மக்களை காலிசுக்கு திரும்ப வைப்பதே தனது லட்சியம் என்றும் அறிவித்தான்.

ஒருநாள் நுபைல் என்பவன் காலிஸ் ஆலயத்தில் ஓரிரவைத் தான் கழிக்க விரும்புவதாகக்கூறி அனுமதிபெற்று அங்கே மலஜலம் கழித்து விட்டு ஓடிவிட்டான்.

இதை கேள்விப்பட்ட அப்ரஹா கோபத்தில் கொந்தளித்தான்.
கஃபா இருக்கும் வரை தான் கட்டிய காலிஸ் ஆலயத்திற்கு மரியாதை கிடைக்க வாய்ப்பே இல்லை என்று எண்ணி மக்காவின் மீது தாக்குதல் நடத்த பெரும் யானைப் படையோடு புறப்பட்டான்.
வழியில் அவனை தடுத்து நிறுத்த நினைத்தவர்களை தீர்த்துக் கட்டினான்.

கிபி. 570 ல் அவன் மக்காவை அடைந்து அங்குள்ள கால்நடைகளைக் கொள்ளையடித்தான். அதில் அப்துல் முத்தலிபின் இருநூறு ஒட்டகங்களும் இருந்தன. தான் படையெடுத்து வந்த காரணத்தை மக்காவின் தலைவராக இருந்த அப்துல் முத்தலிபுக்கு அவன் சொல்லி அனுப்பினான். அவனைக் காண வந்த அப்துல் முத்தலிப் தனது ஒட்டகைகளை திருப்பித் தருமாறு கேட்டார்.

அப்ரஹா ஆச்சரியத்தோடு..." நான் கஃபாவை அழிக்க வந்திருக்கிறேன்.. அதைப்பற்றி ஒன்றும் சொல்லாமல் உங்கள் ஒட்டகையை மட்டும் கேட்கிறீர்களே" என்று கேட்டான்.
அப்துல் முத்தலிப் அமைதியாகச் சொன்னார்..
" ஒட்டகைகளுக்கு நான் எஜமானன். அதனால் அதைப்பற்றி பேச வந்திருக்கிறேன். கஃபாவின் எஜமானன் வேறொருவன். காபாவை அவன் பார்த்துக் கொள்வான் " என்றார்.
ஆபிரகாவுக்கு அப்போதே அபசகுனம் தட்டியது. ஆனாலும் ...
யானைப்படையை கஃபாவை நோக்கி நகர்த்தினான்.
அதில் " மஹ்மூத் " என்ற வெள்ளை யானை மட்டும் நகராமல் அங்கேயே படுத்து விட்டது. என்னதான் அதை துன்புறுத்திய போதும் அந்த வெள்ளை யானை அசையவில்லை.

அப்போது ...வானிலிருந்து ஒரு பெரும் படையைப்போல புறப்பட்டு வந்தன அபாபீல் பறவைகள். அவை தங்கள் அலகிலும் கால்களிலும் சிறு சிறு கற்களை எடுத்து வந்தன. அந்த அற்புதக் காட்சியை மக்காவின் மலைக் குன்றுகளில் இருந்து குறைஷிகள்
பார்த்து வியந்தார்கள்.

விரைந்து வந்த அபாபீல் பறவைகள் அப்ரஹாவின் யானைப்படையின் மீது தாங்கள் கொண்டு வந்த சிறு சிறு கற்களை வீசி எறிந்தன. அந்த சிறு கற்களின் தாக்குதலை தாக்குப் பிடிக்க முடியாமல் யானைகள் மிரண்டு ஓடின. அவற்றின் மிதிபட்டு வீரர்கள் மடிந்தார்கள். கல்வீச்சின் வேதனைத் தாங்காமல் ஏராளம் பேர் செத்தார்கள். அப்ரஹா தன் குதிரையில் ஏறி தப்பி ஓடினான்.
அவனை ஒரு அபாபீல் பறவை துரத்திச் சென்று தாக்கியது.
அவன் மீது ஒரு கல்லை வீசியது. அப்ரஹாவின் கை விரல்கள் அழுகி விழுந்தன. அந்தப்பறவை விடாமல் அவனை துரத்தியது. அதனிடமிருந்து தப்பி அவன் தன் தலைநகரை அடைந்த போது
அரைகுறை உயிரோடு இருந்தான். அப்போது அவனை துரத்தி வந்த
அபாபீல் பறவை அவன் தலையில் ஒரு கல்லைப்போட்டது.
அதன் வேதனை தாங்காமல் அவன் அப்போதே சுருண்டு விழுந்து செத்தான்.அவன் கஃபாவை சிதைத்து உருக்குலைக்க வந்தவன்

சுடப்பட்ட சிறு கற்களை அவர்கள் மீது அவை எறிந்தன.
அதனால், அவர்களை மென்று தின்னப்பட்ட வைக்கோலைப் போல் அவன் ஆக்கி விட்டான்.
(அல்குர்ஆன் : 105:4, 5)

(40 வருடம் சுற்றி சுற்றியே தட்டழிந்து கெட்டலைந்த பனீ இஸ்ரவேலர்கள் )

எகிப்தில் இருந்து வெளியேறி ஃ பிர்அவ்னிடமிருந்து தப்பி கடலிலிருந்து கடந்து தீஹ் என்ற பாலைப் பிரதேசத்தில் நுழைந்தார்கள் . பின் இறைவன் ஜெரு லேத்திற்குள் நுழைய அவர்களுக்கு உத்திர விட்டான். ஜெருலேத்தை கொடுங்கோல அமாலிக்கா கூட்டத்தார்கள் ஆண்டனர் . அவர்களை எதிர்த்து யுத்தம் செய்யுங்கள் நீங்கள் புறமுதுகாட்டித் திரும்பாதீர்கள் பனீ இஸ்ரவேலர்களுக்கு கட்டளை இட்டான் . குர்ஆன் ( 5 : 21)

அதற்கு பனீ இஸ்ரவேலர்கள் ."மூஸாவே நிச்சயமாக அதில் மிக பலசாலிகளான (அமாலிக்கா) கூட்டர்தார்கள் இருக்கின்றனர் .அவர்கள் அதை விட்டு வெளியேறும் வரையில் நாங்கள் அதனுள் நுழையவே மாட்டோம் ". குர்ஆன் (5 : 22 )

இவ்வாறு பயந்தவர்களில் ( ஜோஷுவ, காலெப் என்ற ) இருவர் மீது அல்லாஹ் அருள் புரிந்தான். அவர்கள் மற்றவர்களை நோக்கி நீங்கள் (அவர்கள் பலத்தைப் பற்றி பயப்பட வேண்டாம் ) அவர்களை எதிர்த்து அந்நகரத்தின் வாயில் வரையில் சென்று விடுங்கள். அதில் நீங்கள் நுழைந்த மாத்திரத்தில் நிச்சயமாக நீங்கள்தான் வெற்றி பெறுவீர்கள் .நீங்கள் உண்மை நம்பிக்கையாளராக இருந்தால் அல்லாஹ்வையே நம்புங்கள் " என்று கூறினார்கள்.குர்ஆன் ( 5 : 23 )

(இதன் பிறகும் அவர்கள் மூஸாவை நோக்கி ) "மூஸாவே .....(அமாலிக்கா) கூட்டத்தார் அங்கு இருக்கும் வரையில் நாங்கள் ஒருங்காலும் அங்கு நுழைய மாட்டோம் . நீங்களும் , உங்களுடைய இறைவனும் அங்கு

சென்று அவர்களுடன் போர் புரியுங்கள் நிச்சயமாக நாங்கள் இங்கேயே (தீஹ் பாலைவனத்திலேயே ) உட்கார்ந்து கவனித்துக் கொண்டிருப்போம்" என்று கூறினார்கள் . குர்ஆன் ( 5 : 24 )

( அதற்கு மூஸா ) "என் இறைவனே.. பாவிகளாகிய இந்த மக்களிலிருந்து நீ எங்களைப் பிரித்து விடுவாயாக! " என்று பிரார்த்தித்துக் கூறினார்.
குர்ஆன் ( 5 : 25 )

( அதற்கு இறைவன் "அவ்வாறாயின் அவர்களுக்கு வாக்களிக்கப்பட்ட ) "அந்த (தீஹ் பாலைவன) இடம் நாற்பது வருடங்கள் வரையில் அவர்களுக்கு நிச்சயமாக தடுக்கப்பட்டு விட்டது. (அதுவரையில்) அவர்கள் அந்த பூமியில் தட்டழி (ந்து கெட்டலை ) வார்கள் . இந்த பாவிகளான மக்களைப் பற்றி நீங்கள் ஒன்றும் கவலை கொள்ளாதீர்கள் " என்று (மூஸாவுக்குக் இறைவன் ) கூறினான்.

6 லட்சம் பனீ இஸ்ரவேலர்கள் ஆறு மைல் சதுரபரப்பை கடப்பதற்கு இரவில் நடப்பார்கள் . பகலில் பார்த்தால் புறப்பட்ட இடத்திலேயே இருப்பார்கள். இது எப்படி ?

தீஹ் பாலைவனம் இரவில் நீண்டு பகலில் மடங்கிக் கொள்கிறதா ? இருக்கலாம் . காரணம்

அட்லாண்டிக் கடலிலுள்ள இரண்டரை லட்சம் பரப்பளவு கொண்ட பெர்மிடா முக்கோணப் பகுதியின் வானத்தில் ஒரு தடவை விமானம் ஒன்று 9 ஆயிரம் கிமீ தூரத்தை கடப்பதற்கு எரிபொருள் நிரப்பப்பட்டு பயணித்தது .விமானம் பெர்மிடா முக்கோணப் பரப்பில் நுழைந்ததும் ஏதோ ஒரு குகைக்குள் நுழைகிற மாதிரி இருந்ததாம் .அந்த குகையை விட்டு வெளியேறியதும் விமானம் சென்றடைய வேண்டிய இடம் வந்தது . விமானம் தரை இறங்கி பார்த்த போது வெறும் 1500 கி.மீ மட்டுமே பயணம் செய்திருந்தது . இதற்குரிய எரிபொருள் மட்டுமே செலவாகி இருந்தது ஆனால் புறப்பட்ட இடத்திலிருந்து தரை இறங்கிய தூரம் 9000 கிமீ. இது எப்படி சாத்தியம் ?

விஞ்ஞானிகள், வானவெளியில் நீண்டு சுருங்கும் வெட்ட வெளி இருக்கிறது .உதாரணமாக ஒரு பேப்பரின் இரு முனைகளை ஒன்று சேர மடித்தால் இரு எதிர் முனைகள் ஒன்றாகி இடைவெளி இல்லாமல் ஆகிவிடுகிறது . அதே மடித்தப் பேப்பரை விரித்தால் பேப்பரின் இரு முனைகளுக்கிடையே இடைவெளி மீண்டும் ஏற்படுகிறது .... இது மாதிரி தீஹ் பாலைவனம் நீண்டு சுருங்குகிறதா ? தெரியவில்லை.

பனீ இஸ்ரவேலர்கள் வெறும் ஆறு மைல் சதுர பரப்பளவை 40 வருடங்களாக நடந்து நடந்து மீண்டும் புறப்பட்ட இடத்திற்கே திரும்பி இருக்கிறீர்கள் என்றால் , இறை சாபத்தின் உச்சத்தைக் கவனித்தீர்களா ?

அவர்கள் தானே சொன்னார்கள் "மூஸாவே நீங்கள் உங்கள் இறைவனும் அவர்களுடன் யுத்தம் செய்யுங்கள் நாங்கள் இங்கேயே உட்கார்ந்து கவனித்துக் கொண்டிருப்போம் " உட்கார்ந்தார்கள் அப்படியே 40 வருட காலம் உட்கார்ந்தார்கள் .

இந்த 40 வருட காலத்தில் பலர் இறந்தாலும் , இறந்த தொகையினருக்குச் சரியாக அதே எண்ணிக்கையில் குழந்தை பிறந்து அதே ஆறு லட்சம் சமமாகிவிடும்,
சுமார் கி.மு 2061 முதல் கி.மு 1919 முஹர்ரம் பிறை 10 வெள்ளிக்கிழமை வரையுள்ள ஜோர்டான் நாட்டின் வரலாற்றை திருப்பிப் பார்ப்போம்.

"முதஃபகாத் " என்பது ஜோர்டான் நதி தீரத்திலுள்ள ஸதூம் . ஆமோரா , ஆதாம் , ஸ்போயின் , ஸுனுக்கு என்னும் 5 நகரங்களைக் கொண்ட ஒரு நாடு . முதஃபகாத் தலைநகர் ஸ்தூம் , நபி லூத் (அலை) அவர்கள் நபியாக அனுப்பப்பட்டார்கள் . 37 வருட காலமாக ஏகத்துவத்தையும் , சுய ஒழுக்கத்தையும் போதித்தார்கள் இவர்கள் நபி இப்ராஹிம் (அலை) அவர்களின் தம்பி .

முதஃபகாத் செழிப்பான பூமி எனவே வறுமையுள்ள பக்கத்து நாட்டு மக்கள் தர்மம் கேட்டு வந்தனர். முதஃபாகத் மக்களும் வாரி வாரி வழங்கினர்.

நாளடைவில் இரவு பகல் பராது தர்மம் கேட்க , இது பெரும் தொல்லையாக விட்டது. இப்லீஸ் வயோதிக கோலத்தில் வந்து , "பிச்சை கேட்கும் ஆடவர்களைப் பிடித்து புணர்ந்தால் .இத்தொல்லை தீரும் என கூற முதலில் மறுத்த முத ஃபகாத் மக்கள் பிறகு , " செய்தால் என்ன ?"

செய்தார்கள் . பிடித்து பிடித்துப் புணர்ந்தார்கள் .புணர்ததற்கு பிறகு 3 திர்ஹம் அன்பளிப்பும் செய்தார்கள் . இதுவே பெரும் போட்டியாகி விட்டது .

இதை சமரசமாக தீர்த்துக் கொள்ள முதஃபகாத் பணக்காரர்கள் பாத்திரத்தில் சிறு கற்களை போட்டு (கவனிக்க கற்கள் ) ஊருக்கு வரும் பிச்சைக்காரர்கள் மீது வீசி எறிவர் யாருடைய கல் எவர் மீது படுகிறதோ அந்த பிச்சைக்காரர் இவருடைய உடமை என்று பெயர் வைத்துப் பிரித்தார்கள் (கவனிக்க பெயர் ) பிச்சைக் காரர்களை கட்டாயப்படுத்தி புணர்ந்தார்கள் .ஒளி மறைவு இல்லாமல் வெட்ட வெளியில் கூச்சமே இல்லாமல் இராப்பகலாக புணர்ந்தார்கள்.

நாளடைவில் பிச்சைக்காரர்கள் வரத்து நின்று போனது .தம் நகர ஆண்களையே விலை பேசி புணர ஆரம்பித்தனர் . ஓரினப் புணர்ச்சியில் திளைத்த இம் மக்களால் பெண்கள் மீதான பாலுணர்வு இல்லாமல் போனது .பெண்கள் பெண்களையே புணர்ந்து கொள்ள காமப் பிரச்சனை மரபுவழி மாறி போனது .

எனவே இப் பதிவிலுள்ள முதல் பாரா வில் சொல்லப்பட்டது போல் இதற்கென்று சட்டம் ஏற்றி சடங்கு சம்பிரதாயம் பார்த்து சங்கு ஊதினார்கள் .

இந்த ஒ.பு மக்களின் கொடுமைகளை அதிகரிக்கவே இறைவன் ஜிப்ரயீல் (அலை) .மீக்காயீல் (அலை), இஸ்ராஃபீல் (அலை) ஆகிய 3 வானவர்களை இறைவன் அழகான கவர்ச்சிகரமான முகம் கொண்ட

இளைஞர்கள் உருவில் (சில வரலாற்று ஆசிரியர்கள் திரு நங்கை கோலமாக இருக்கலாம் என்கிறார்கள் அல்லாஹ்தான் அறிவான் ) முதஃபகாத்தின் தலைநகர் ஸதூமிற்கு அனுப்பி வைத்தான்.

நபி லூத் (அலை) அவர்கள் அழகிய கோலமுடைய தன் விருந்தினர்களைக் கண்டு பதறினார்கள். அதே சமயம் அவர்களின் மனைவி (பெயர் : ஹல்ஸகா என்றும், வைலா என்றும் .ஹாயிலா என்றும் , வாலிஹா என்றும் ஹிபலா என்றும் பலவிதமாக கூறப்படுகிறது சரி , ஏதோ ஒரு " லா" ) க்கு கொண்டாட்டம் .

விருந்தினர்களுக்கு உணவு சமைக்க உப்பு வாங்கி வருவதாக (கவனிக்க உப்பு) வீட்டின் பின்புறமாக போய் தன் கூட்டத்தினருக்கு சேதி சொல்ல , உடனே ஒ.பு மக்கள் நபியின் வீட்டை அடைந்தேறினார்கள் .

நபியவர்கள் " விருந்தாளிகள் முன் என்னை கேவப்படுத்தி விடாதீர்கள் .என் பெண் மக்களை நீங்கள் திருமணம் செய்து கொள்ளுங்கள் என்று கூற "உங்களுடைய பெண் மக்களிடம் எங்களுக்கு யாதொரு தேவையும் இல்லை .நாங்கள் விரும்புவது என்ன என்பதை நிச்சயமாக நீங்கள் அறிவீர்கள்" என்று அவர்கள் கூற " உங்களை தடுததுவிடக் கூடிய பலமான ஆதரவை நான் அடைய வேண்டாமா ? உடனே விருந்தாளிகள் நபியை நோக்கி , "லூத்தே நாங்கள் இறைவனால் அனுப்பப்பட்ட தூதர்களாகிய வானவர்கள் . இவர்கள் நிச்சயமாக உங்களை வந்தடைய முடியாது என்று கூறினர் .. நம்முடைய கட்டளையின் நேரம் வந்ததும் அவர்களுடைய ஊரை மேல் கீழாக கவிழ்த்து விட்டோம் அன்றி அதற்கு முன்னர் அவர்கள் மீது சுடப்பட்ட செங்கற்கள் மழையைப் போல் பொழியச் செய்தோம். எறியப்பட்ட செங்கல் ஒவ்வொன்றிலும் உங்கள் இறைவனால் அடையாளம் (பெயர்) இடப்பட்டிருந்தது புரட்டப்பட்ட அவ்வூர் வெகு தூரமுமல்ல . விரும்பினால் அதனை நேரில் சென்று பார்க்கலாம் .
குர்ஆன் (11: 78 - 83)

அன்று ஒ.பு மக்கள் பொடி கற்களை எறிந்து அக்கல் பட்டவருக்கு தன் பெயரை சூட்டி புணர்ந்தார்கள் அதனால் தானோ பெயர் அடையாளமிட்ட கற்களைக் கொண்டு அந்தந்த ஒ.பு காரர்களை கொன்றொழித்தானோ ?

சரி "அவங்க ஊரை மேல் கீழாக கவிழ்த்திப் புரட்டிப் போட்டது

அந்த செழிப்பான 5 நகரங்களைக் கொண்ட முதஃபகாத் இன்று சாக்கடலாக மற்ற கடலின் உப்பை விட அதிகமாக
34 . 2 சதவீதம் உள்ளது

ஏன் இத்தனை உப்பு ?

அன்றைக்கு நபி லூத்தின் மனைவி உப்பு வாங்கி வருவதாக பொய் சொல்லியதால் 5 நகரங்களும் உப்பால் சூழப்பட்ட செத்தக் கடலாக மாறியது .

கிழக்கு ஜோர்டானுக்கும் , பாலஸ்தீனத்துக்கும் இடையில் வடக்கிலிருந்து தெற்கு வரை 67 கி.மீ நீளத்திலும் 18 கி.மீ அகலத்திலும் , கடல் மட்டத்திலிருந்து 1400 அடி தாழ்வாக உள்ளது . சாக்கடலின் ஆழம் 1000 அடியிலிருந்து 2400 அடி வரை உள்ளது .இந்த 2400 அடி ஆழம் உள்ள சாக்கடலின் தெற்கு பகுதியில்தான் ஸதூம் தலைநகர் புதைந்து உள்ளது .

இச் சாக்கடலின் அடி ஆழத்தில் கண்டெடுக்கப்பட்ட பொருட்கள் எல்லாமே தலைகீழாக உள்ளது .

இக் கடலில் பொட்டாஷ் என்ற சாம்பல் உப்பு அதிகமாக எடுக்கப்பட்டு , ... உரம் தயாரிக்கும் ஆலைகள் அதிகம் உள்ளது .

உரம் தயாரிக்க யூரியா அவசியம் ஒ.பு புணர்ந்து வெளிப்படுத்தும் விந்தில் (சிறுநீரிலுள்ள ) யூரியா அதிகமாக இருக்கிறது.

நபி (ஸல்) அவர்கள் மிஹ்ராஜ் என்கிற விண்வெளி பயணத்தின்போது வானவெளியில் குடம் அளவிற்கு கற்கள் குவிக்கப்பட்டிருப்பதைக் கண்டு , வானவர் ஜிப்ரயீல் (அலை) அவர்களிடம் விபரம் கேட்டார்கள் . "அதைப் பற்றி இப்போது வினவ வேண்டாம் " என்றார் ஜிப்ரயீல் (அலை) அவர்கள்

பின்னர் மிஹ்ராஜ் முடித்து வரும் போது அவ்விடம் வந்த போது நபியவர்கள் வினவ, "இவை லூத்துடைய கூட்டத்தினர் மீது எறியப்பட்டது போக எஞ்சி இருப்பவை.தங்களின் சமூகத்திலுள்ள கூட்டத்தினரான அநியாயக்காரர்கள் இந்த தவற்றை செய்யும்போது இந்தக் குடக் கற்கள் மழையாய் பொழியும் " என்றார்கள்

.

மறை கூறும் மனித தண்டனைகள்
(சொற்பொழிவின் சாரம்சம்) 02/07/2020

https://m.facebook.com/story.php?story_fbid=2651382371787768&id=100007480923921



சரித்திரத்தில் பழய ஏடுகளைப் புரட்டினால் குற்றவாளிகளுக்கு விசித்திரமான அதுவும் கொடூரமான தண்டனைகள் வழங்கப்பட்டு உள்ளது பார்க்கலாம்

மரண தண்டனை என்றால் பொதுவாக சவுக்கடி சூடு போடுதல் உறுப்பை வெட்டி எடுத்தல் விதை நீக்கவும் கூண்டில் அடைத்தல் என்று பல்வேறு விதமாக இருந்தன

தூக்கிலிடுதல் தீயில் எரித்தல் தண்ணீர் /எண்ணெயில் கொதிக்க வைத்தல் கொடிய மிருகங்களுக்கு இடையிடையே வீசுதல் தோலுரித்தல் தண்ணீரில் அமிழ்த்தி விடுதல் சிலுவையில் அறைதல் கல்லால் அடித்தல் தலையை வெட்டி எடுத்தல் உடலை இரண்டு துண்டாக வெட்டுதல் கழுமரம் ஏற்றி கொல்லுதல் கில்லட் மிஷினால் தலையை துண்டித்தல் என்று மரண தண்டனையும் பலவகையில் நிறைவேற்றப்பட்டுள்ளது

தூக்கிலிடுவது தலையை வெட்டுவது இன்றளவும் பல நாடுகளில் நடைமுறையில் இருக்கின்றன துப்பாக்கியால் சுடுதல் விஷ ஊசி போடுதல் மின்சார நாற்காலியில் அமர வைத்து சிப்ஸ் போடுவது பேச வாய்ப்பு அறையில் அழைப்பது ஆகியவை நவீன முறைகள்

நாகரீக தொன்மை வாய்ந்த எகிப்து பாபிலோனியா அசீரியா இஸ்ரேல் பாரசீகம் கிரீஸ் ரோம் ஆகிய நாடுகளில் அந்தக்காலத்திலேயே மரணதண்டனை இருந்தது இன்று மிகச் சாதாரணம் என்று கருதப்படும் குற்றத்திற்கு கூட அன்று மரண தண்டனை விதிக்கப்பட்டது

பாரசீகத்தில் தெரியாத்தனமாக அரச சிம்மாசனத்தில் உட்கார்ந்துவிட்டால், கிரேக்கத்தில் சட்டத்தை இழிவு படுத்தினால் ரோமில் கணவனது மதுவறைசாவியை மனைவியை திருடினால் மரண தண்டனை விதிக்கப்பட்டது அதுவும் பொது இடங்களில் எண்ணெயில் போட்டு கொதிக்க வைப்பதினாலும் சரி கழுமரம் ஏற்றுவதாலும் சரி கல்லால் அடிப்பதனாலும் சரி எல்லாம் பொதுமக்கள் பார்ப்பதற்கு வசதியாக பொது இடங்களில் நிகழ்ந்தன

பாரசீகத்தில் ஆதிகாலத்தில் விதிக்கப்பட்ட மரண தண்டனை மிகவும் பயங்கரமானது இதற்கு படகு தண்டனை என்று பெயர் குற்றவாளி ஒரு படகில் கடத்துவார்கள் இன்னொரு படகு மேலே வைப்பார்கள் தலை கை கால் மட்டும் வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் குற்றவாளிக்கு கட்டாயமாக பாலும் தேனும் தருவார்கள் முகத்தில் தேனி பூசிவிடுவார்கள் பூச்சிகள் முகத்தை அழித்துவிடும் பறவைகள் தலையையும் கைகளையும் கொத்தி தின்றுவிடும் இந்த சித்திரவதைகள் குற்றவாளி அனுமானமாக சாவான்

அக்கால மக்கள் வகுத்துக்கொண்ட தண்டனை பற்றி குர்ஆனில் நபி யூசுப் அலை அவர்களுடன் சிறைச்சாலையில் இருந்த இவர்கள் தாங்கள் கண்ட கனவை நபி யூசுப் அலை அவர்களிடம் சொல்லி விளக்கம் கேட்டனர் நபிகள் சொன்ன கனவின் பலன் அப்படியே பலித்தது

"சிறைச்சாலையில் இருக்கும் என் இரு தோழர்களே உங்கள் கனவுகளின் பலன்களாவன உங்களில் ஒருவன் விடுதலை அடைந்து அவன் முன் செய்துகொண்டிருந்த வேலையையும் ஒப்புக்கொண்டு முன்போலவே தன் எஜமானனுக்கு திராட்சரசம் புகட்டிக் கொண்டிருப்பான் மற்றொருவனோ சிலுவையில் அறையப்பட்டு அவன் தலை காகம் கழுகு போன்ற பட்சிகள் கொத்திக் கொத்தி தின்னும் நீங்கள் விளக்கம் கோரிய கனவுகளின் பலன் விதிக்கப்பட்டுவிட்டது அவ்வாறு நடந்தே தீரும் என்று கூறினார் 12:41

இதுபோன்று சிலுவையில் அறையப்பட்டதாக ஈஸா நபியின் வரலாறு ரொம்ப பரவலாகப் பேசப்படும் ஆனால் குர்ஆனோ சிலுவையில் அறையப்பட்டது ஈஸா அலை அல்ல என்றும் அவருக்கு பதிலாக வேறொருவர் (அவரது 13-வது சீடன் ஜுடாஸ் என்ற யஹூதா 30 பொற்காசுகளைப் பெற்று நபியவர்களைக் காட்டிக் கொடுத்தான் என்றும்) அவனைத்தான் சிலுவையில் அறையப்பட்டது என்றும் குறிப்பிடப்படுகிறது .

இன்னும், “நிச்சயமாக நாங்கள் அல்லாஹ்வின் தூதராகிய - மர்யமின் குமாரராகிய-ஈஸா மஸீஹை கொன்றுவிட்டோம்” என்று அவர்கள் கூறுவதாலும் (அவர்கள் சபிக்கப்பட்டனர்); அவர்கள் அவரைக் கொல்லவுமில்லை, அவரை அவர்கள் சிலுவையில் அறையவுமில்லை. ஆனால் அவர்களுக்கு (அவரைப் போன்ற) ஒருவன் ஒப்பாக்கப்பட்டான்; மேலும் இ(வ் விஷயத்)தில் அபிப்பிராய பேதம் கொண்டவர்கள், அதில் சந்தேகத்திலேயே இருக்கின்றார்கள் - வெறும் யூகத்தைப் பின்பற்றுவதேயன்றி அவர்களுக்கு இதில் எத்தகைய அறிவும் கிடையாது; நிச்சயமாக அவர்கள், அவரைக் கொல்லவே இல்லை. (குர்ஆன் : 4:157)

இந்த இறைவசனத்தின் மூலமாக அக்கால மக்கள் மரண தண்டனையாக சிலுவையில் அறையப்படும் போன்ற கொடூரமான தண்டனைகள் உண்டு என்பதை அறிய முடிகிறது

ரோம் சாம்ராஜ்யத்தில் மரணதண்டனை பல்வேறு விதங்களில் நிறைவேற்றப்பட்டது ஒரு கோணிப்பையில் குற்றவாளியையும் நாயையும் சேர்த்து கட்டி ஆற்றில் வீசி விடுவார்கள் சில சமயங்களில் நாய்க்கு பதிலாகக் குரங்கு அல்லது பாம்பு வைக்கப்படுவது உண்டு

நபி மூஸா அலை எதிரியான ஃபிர்அவ்ன் எகிப்து நாட்டை ஆண்டு கொண்டிருக்கும் போது நபி மூஸா அலை அவர்கள் சூனியம் செய்து மக்களை தன்பக்கம் வசப்படுத்தி உள்ளார் என்று நம்பினார் எனவே மிகப்பெரிய சூனியக்காரர்களைக் கொண்டு நபி அவர்களிடம் சூனியப் போட்டி வைக்க இறுதியில் சூனியக்காரர்கள் தங்கள் தோல்வியை ஒப்புக்கொண்டனர் உடனே ஈமான் கொண்டு நபி மூஸா அலை அவர்களிடம் தங்கள் நபியாக ஏற்றுக் கொள்கின்றனர்

“நான் உங்களை அனுமதிக்கும் முன்னரே நீங்கள் அவர் மேல் ஈமான் கொண்டு விட்டீர்களா? நிச்சயமாக அவர் உங்களுக்குச் சூனியத்தைக் கற்றுக் கொடுத்த தலைவர் (போல் தோன்றுகிறது); எனவே, நான் உங்களை மாறு கை, மாறு கால் வாங்கி, பேரீத்த மரக்கட்டைகளில் உங்களைக் கழுவேற்றுவேன்; மேலும் வேதனை கொடுப்பதில் நம்மில் கடுமையானவர் யார், அதில் நிலையாக இருப்பவரும் யார் என்பதை நிச்சயமாக நீங்கள் அறிந்து கொள்வீர்கள்” என்று (ஃபிர்அவ்ன்) கூறினான். (குர்ஆன் : 20:71)

இதே ஃபிர்அவ்ன் தன் மனைவி ஆசியால் நபி மூஸா அலை அவர்களின் இறைவனுக்கு ஈமான் கொண்ட ஒரே காரணத்திற்காக தன் மனைவியோடு பாறாங்கல்லையும் சேர்த்துக் கட்டி மலையிலிருந்து உருட்டி விட்டு அவர்களைக் கொன்றுவிடுகிறான்

பழந்தமிழ் நாட்டில் கூட சிலப்பதிகாரத்தில் திருடினால் மரண தண்டனை விதிக்கப்பட்டது .இந்த குற்றம் இழைத்ததாக கோவலன் கருதப்பட்டான் வாளால் அவனை வெட்டிக் கொன்றார்கள்.

ஸ்காட்லாந்தில் (916_956) ஆட்சி செய்த ஹைவில் டா (**Hywel Dda)** என்பவனின் சட்டங்கள் விசித்திரமானவை ஒரு குறிப்பிட்ட மதிப்புக்கு மேற்பட்ட பொருளைத் திருடினால் மரண தண்டனை விதிக்கப்பட்டது அந்த மதிப்புக்கு குறைவான பொருளை திருடினால் 7 பவுண்டுக்கு அவனை விற்று விடுவார்கள் அல்லது அவர் சார்பில் அந்தத் தொகையையும் யாரும் செலுத்த முன்வந்தால் திருடன் விடுதலை செய்வார்கள்.

இங்கிலாந்தில் 1570 சட்டங்கள் தீவிரமாக இருந்தது கணவனுக்கு விஷம் கொடுத்த மனைவி உயிருடன் எரிக்கப்படுவாள் வேலைக்காரன் தன் எஜமானுக்கு வசம் கொடுத்தால் அவனை தண்ணீர் பாத்திரத்தில் தண்ணீரை கொதிக்க வைத்து கொள்வார்கள் ஓயாமல் திரும்பிக் கொண்டிருக்கும் பெண்ணை நாற்காலியில் கட்டி ஆற்றிலோ குளத்திலோ வீசி விடுவார்கள் சூனியக்காரர்கள் உயிருடன் எரிப்பது வழக்கம் அவர்களை எதிர்ப்பதற்கு என்று தனியாக ஒரு இடத்தில் பெரிய அளவில் மரங்களை அடுக்கி நெருப்பு உண்டாக்கி தள்ளிவிடுவார்கள் .

இதே மாதிரி சம்பவம் நபி இப்ராஹீம் அலை அவர்களின் வாழ்க்கையிலும் நடந்தது இப்ராஹீம் நபி அவர்கள் சிலை வணக்கத்தை தடுத்தபோதுஅவர்கள்

"ஏதேனும் நீங்கள் செய்கிறவர்களாக இருந்தால் இவரே நெருப்பில் இட்டுக் கரித்துவிடுங்கள் அவ்வாறு அவர்கள் அவரை பெரும் நெருப்பு குண்டத்தில் எரித்த பொழுது "நெருப்பே !இப்ராஹீமின் மீது குளிர்ச்சியாகவும் , சுகமளிக்கிறதாகவும் ஆகிவிடும் " என்று நாம் கூறினோம் 21: 68 69

ஜகரிய்யா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அடிக்கடி ஹழ்ரத் மர்யம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் வீட்டிற்கு சென்று வந்துக் கொண்டிருந்தார்கள். இவற்றைக் கண்ணாணித்துக் கொண்டிருந்த பனீ இஸ்ரவேலர்கள் இந்த சந்தர்ப்பத்தை பயன்படுத்திக் கொண்டு ஜகரிய்யா நபிக்கு எதிராக ஆபாசமான குற்றச்சாட்டுக்களை சுமத்தி மக்களை அவர்களுக்கெதிராக கிளர்ந்து எழச் செய்தார்கள். அவர்களுக்கு விரோதமாகப் பல கற்பனைக் கதைகளை கட்டவிழ்த்து விட்டார்கள். ஊர் மக்கள் எல்லாம் அவர்களை ஒழித்துக் கட்ட முடிவு செய்தார்கள்.
ஜகரிய்யா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் நகரின் ஒதுக்குப்புறமாக சென்று கொண்டிருந்தார்கள். இதுதான் சந்தர்ப்பம் என்று எண்ணிய அவர்களது எதிரிகள் அவர்களை பயங்கர ஆயுதம் கொண்டு துரத்த ஆரம்பித்தனர். அந்நிலையில் புகலிடத்திற்கு சரியான இடம் கிடைக்காமல் அங்கு நின்று கொண்டிருந்த ஒரு மரத்தினருகில் சென்று> ‘ஓ மரமே! நான் ஒளிந்து கொள்ள எனக்குப் பாதுகாப்பை அளிப்பாயாக!’ என்று இறைஞ்சிக் கொண்டார்கள். உடனே அந்த மரம் இருகூறாகப் பிளந்தது. உடனே அந்தப் பிளந்த மரத்திற்குள் ஜகரிய்யா நபி அவர்கள் நுழைந்து கொண்டார்கள். உடனே அந்த மரம் ஒன்றாக இணைந்து விட்டது.
இதில் ஷைத்தான் ஒரு வேலையை கச்சிதமாக செய்தான். ஜகரிய்யா நபி அவர்கள் மரத்தில் உள்ளே நுழைந்தபோது அவர்களின் ஆடையின் ஒரு பகுதியை பிடித்து இழுத்துக் கொண்டான். மரம் மூடினாலும் அந்த ஆடை வெளியே தெரிந்து கொண்டிருந்தது.
அவர்களை விரட்டி வந்தவர்கள் அவர்களை காணாது திகைத்து அங்குமிங்கும் நோட்டமிட்டபோது> அவர்களில் ஒருவனின் பார்வைக்கு மரத்தின் வெளியே தெரிந்து கொண்டிருந்த ஆடையின் பகுதி தென்பட்டது. அனைவருக்கும் அதனை அடையாளம் காட்டினான் அவன். அனைவரும் ஆலோசனை செய்து அந்த மரத்தை எரித்து விட முடிவு செய்தனர். ஆனால் ஷெய்த்தான் மனித உருவில் வந்து> மரத்தை எரிப்பதை விட ரம்பத்தால் இருகூறாக அறுத்து விடுங்கள். அதற்குள் அவர் ஒளிந்திருந்தால் அவரும் மரத்தோடு இருகூறாகப் பிளந்து போவார் என்று யோசனை கூறினான்.
அவன் சொன்னபடியே அந்த மரத்தை இருகூறாக அறுக்க ஆரம்பித்தார்கள். அந்த ரம்பம் அவர்களின் தலையை உரச ஆரம்பித்ததும் அவர்கள் முனகினார்கள். உடனே அல்லாஹ் வஹீ அறிவித்தான். ‘ஓ ஜகரிய்யாவே! என்னிடம் பாதுகாப்பு கேட்காது இந்த மரத்;திடம் பாதுகாப்பு கேட்டீரல்லவா? இப்பொழுது

அதன் பலனையும் அனுபவியும். இனியொரு தடவை உங்களிடமிருந்து சிறு சப்தம் வந்தாலும் உமது பொய் நபிமார்களின் பட்டியலிலிருந்து நீக்கப்பெறும் என்று.
இதே நிலையில் ஜகரிய்யா நபி அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஷஹீதாகி விட்டார்கள். அப்பொழுது அவர்களது வயது 300. அன்னாரது பொன்னுடல் பைத்துல் முகத்தஸில் அடக்கம் செய்யப்பட்டது.

அக்காலத்தில் ஹைறுதூஸ் என்ற பெயருடன் ஒரு அரசன் இருந்து வந்தான். அவனது மனைவியின் பெயர் மலிகா. ஹப்ரிதூ என்றும் ஒரு குறிப்பில் உள்ளது. அவள் முதுமையடைந்திருந்தாலும் பனீ இஸ்ரவேலர்கள் அவளை மிகவும் கொண்டாடி வந்தனர். தனக்கு வயதாகி விட்டதால்> தன்னை தனது புருஷன் ஒருவேளை புறக்கணித்து விட்டால் என்ற செய்வது என்று பயந்து> அவளது மூத்த கணவனுக்குப் பிறந்த அழகான மகளை தம் புருஷனுக்கு திருமணம் செய்து கொடுத்துவிட்டால் தனது புருஷனோடு தானும் கடைசி வரை வாழ்ந்து வரலாம் என்று மனத்தில் எண்ணிக் கொண்டு> மெதுவாக தனது புருஷனுடன் ஆலோசனை செய்ததில் அவனும் சம்மதித்துவிட்டான். என்றாலும் மார்க்கத்தீர்ப்பு இந்த உறவு முறைக்கு சாதகமாக இருக்கிறதா? என்று கண்டறிய விரும்பினாள்.
மார்க்கத்தீர்ப்பை யாரிடம் கேட்பது என்று ஆலோசனை கேட்டதில் அனைவரும் ஹழ்ரத் யஹ்யா அலைஹிஸ்ஸலாம் அவர்களைச் சொன்னார்கள். அவர்களை வரவழைத்து> இதுபற்றி கேட்டான். அதற்கு அவர்கள் 'இந்த உறவுமுறை அறவே கூடாத ஒன்று. இயற்கைக்கு முரணானது. இறை ஆணைக்கு மாறானது. வேறுபெண்ணை மணமுடித்துக் கொள்ளவும்' என்று கூறினார்கள்.
இந்தச் செய்தி அரசனின் மனைவிக்க எட்டியது. அவளது ஆத்திரத்திற்கு எல்லையில்லாமல் போய்விட்டது. தனது திட்டத்திற்கு முட்டுக்கட்டையாக இருக்கும் யஹ்யா அலைஹிஸ்ஸலாம் அவர்களை எப்படியும் ஒழித்துக் கட்டுவது என்று முடிவு செய்து திட்டமிட்டாள்.
அந்தத் திட்டப்படி ஒருநாள் தனது புருஷனோடு சரசசல்லாபஞ்செய்து அவன் சந்தோஷமாக இருந்த நேரம் பார்த்து அரசனுக்கு மதுவை அளவுக்கதிகமாக கொடுத்தாள். அவன் நிலைதடுமாற ஆரம்பித்தான்.
திட்டமிட்டபடி அவள் மனைவி தனது மூத்ததாரத்து மகளை நன்றாக அலங்கரித்து முழு போதையிலிருந்த தனது கணவன் முன்னால் அவளை வரச் செய்தாள். அவளது பேரழகைக் கண்டதும் அரசனது மதி மயங்க ஆரம்பித்தது. மகளை அணைத்துக் கொள்ள அவள் அருகே நெருங்க ஆரம்பித்தான்.
ஏற்கனவே தாய்சொல்லி தந்தபடி அவள் அதற்கு நிபந்தனை போட்டாள். என்னை நெருங்க வேண்டுமென்றால் காணிக்கையாக எஹ்யா நபியின் துண்டித்த தலை என் முன்னால் கொண்டு வந்து வைக்க வேண்டும் என்றாள்.
மதுபோதையிலும்,பெண் ஆசையிலும் மயங்கிய அரசன் தனது சேவகர்களை அழைத்து யஹ்யா அலைஹிஸ்ஸலாம் அவர்களை எங்கிருந்தாலும் கண்டு அவரது தலையை துண்டித்து தன் முன்னால் கொண்டுவர ஆணையிட்டான்.
அச்சமயம் யஹ்யா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தொழுது கொண்டிருந்தார்கள். அவர்கள் முன் ஜி;ப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தோன்றி> அவர்களுக்கு நேரவிருக்கும் ஆபத்தை எடுத்துக் கூறி 'நீங்கள் விரும்பும்பட்சத்தில் இந்த நாட்டையே தலைகுப்புற புரட்டி அழித்து விடுகிறேன்' என்று கூறினார்கள்.
இந்த அரசனால் கொல்லப்பட வேண்டும் என்று எனது விதியில் எழுதப்பட்டுள்ளதா? என்றுகேட்டார்கள் யஹ்யா அலைஹிஸ்ஸலாம் அவர்கள்.
ஆம். என்றார்கள் ஹழ்ரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள்.
அப்படியாயின் நான் அதற்கு எதிர்த்து என்ன பயன்? விதிப்படியே நடக்கட்டும் என்று கூறினார்கள்.
அச்சமயத்தில் அரசனின் சேவகர்கள் வந்து யஹ்யா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் சிரசை துண்டித்து தம்மோடு எடுத்துச் சென்று விட்டார்கள்.
அரசன் முன் அந்த சிரசு வைக்கப்பட்டதும் அரசன் அதைக் கூர்ந்து நோக்கினான். அந்த துண்டிக்கப்பட்ட சிரசிலிருந்து அந்தப் பெண்ணை நீ மணப்பதோ> அவளருகில் நெருங்குவதோ கூடாது. கூடாது!! என்று முணுமுணுக்கும் சப்தம் அவவனது செவிகளில் மெதுவாக ஒலித்தது.
அந்த அரசனின் மனைவி அந்தப் பெண்ணை அந்த அரசனோடு திருமணம் செய்து வைத்து விட்டாள். உடனே எழுந்த ஒரு சூறாவளிக் காற்று அந்த அரசனை அலக்காக தூக்கி பாலைவனத்தில் வீசி எறிந்தது. அங்கு தயாராக நின்று கொண்டிருந்த ஒரு சிங்கம் அவனைக் கொன்று தின்றுவிட்டது.
யஹ்யா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு நேர்ந்த கதி மக்களுக்குத் தெரிய வந்ததும் அவர்கள் கொதித்தெழுந்தனர். இது அடுத்த நாட்டு அரசனின் காதுக்கும் எட்டியது. இதுதான் சமயம் என்று பார்த்த அவன் உடனே படையெடுத்து அரசியையும்> அவள் மகளையும் கொன்று அரசிற்கு ஆதரவாக இருந்த 70000பனீ இஸ்ரவேலர்களையும் சிரச் சேதம் செய்து விட்டான்.

நெருப்புக் குண்டத்தவர்கள்.

(இது ஒன்றும் கற்பனைக்கதை அல்ல , திருக்குர்ஆன் கூறும் உண்மைச் சம்பவம் )

திருக்குர்ஆனின் 30-வது ஜுஸ்வு
(அம்ம ஜுஸ்வு )




முற்காலத்தில் பனீ இஸ்ரவேலர்களில் ஓர் அரசன் இருந்தான். அரச சபையில் குறி சொல்லும் வயோதிகன் ஒருவனும் இருந்தான் .

ஒரு நாள் குறிகாரன் : " மன்னரே ! எனக்கு அந்திம காலம் நெருங்கி விட்டதால் , நல்ல புத்தி தீட்சண்யமுடைய ஒரு சிறுவனைக் கொடுத்தால் அவனுக்கு நான் கற்ற சூனியத் தொழிலைக் கற்றுக் கொடுக்கிறேன் "

அரசன் அப்படி ஒரு சிறுவனை தேர்ந்தெடுத்து சூனியக்காரரிடம் சூனியம் கற்க அனுப்பி வைத்தான் .

சூனியக்காரன் வீட்டிற்கு செல்லும் வழியில் ஒரு ஞானி வீடு இருந்தது. அச்சிறுவன் அந்த ஞானியின் உபதேசங்களை கேட்டு விட்டு தாமதமாகவே சூனியக்காரனிடம் செல்லலனான் . தாமதமாக வருவதை கண்டித்து அச்சிறுவனை சூனியக்காரன் அடித்து துன்புறுத்தினான்.

சூனியக்காரனின் துன்புறுத்தலை அந்த ஞானியிடம் சிறுவன் சொல்ல , ஞானி சிறுவனிடம் , "தாம் வரும் வழியில் ஒரு புலி வந்து தன்னை வழிமறித்ததால் தாமதமாகி விட்டது " என்று சூனியக்காரனிடம் சொல்லுமாறு கூறினார்.

உண்மையிலேயே புலி வழிமறித்து மனிதர்களுக்கு இடையூறு செய்து கொண்டிருக்க, இச்சிறுவன் "ஞானி சிறந்தவரா ? சூனியக்காரன் சிறந்தவனா என்பதை நான் அறியேன் "யா அல்லாஹ் ! சூனியக்காரனது காரியத்தைப் பார்க்கினும் ஞானியின் காரியம் உனக்கு அதிகப் பிரியமாக இருக்குமாயின் , மனிதர்களுக்கு தடையை ஏற்படுத்தும் இந்த புலியை கொன்று விடுவாயாக ! " என்று பிரார்த்தித்து கல்லை எறிந்தான். புலி கல்லடிப் பட்டு இறந்தது .

இந்த விஷயம் ஞானிக்கு தெரிந்தது. சிறுவனை அழைத்து , " அருமைப் புதல்வரே !... இன்று நீ என்னிலும் சிறந்தவன். நான் அறிந்த காரியம் உன்னிலிருந்து வெளியாயிற்று . இதனால் வெகு விரைவில் நீ சோதனைக்கு உள்ளாக்கப்படுவாய் அந்த சோதனையில் நீ என்னைக் காட்டிக் கொடுத்து விடாதே ! " என்று ஞானி எச்சரித்தார் .

அன்று முதல் சிறுவனிடம் பிறவிக்
குருடர், முடவர் ,வெண்குஷ்டரோகி, கருங்குஷ்டரோகி ஆகியோர்கள் வந்து சிறுவன் கூறும் அல்லாஹ்வை விசுவாசித்து குணமடைந்து சென்றனர் .

அரச சபையில் உள்ள கண் தெரியாத குருட்டு அமைச்சர் பெருஞ் செல்வத்தைப் பாத காணிக்கையாகக் கொடுத்து கண் பார்வையை மீட்டித் தர வேண்டினார் .

அதற்கு அந்த சிறுவன் " நான் எதையும் குணப்படுத்த முடியாது. குணப்படுத்துபவன் அல்லாஹ்தான் நீங்கள் அல்லாஹ்வை ஈமான் கொண்டால் நான் பிரார்த்திக்கிறேன் . அல்லாஹ் குணப்படுத்துவான் " என்று கூறினான். அதன்படி கண் பார்வையைப் பெற்றார்.

கண் பார்வை பெற்றதும் அரச சபைக்கு அமைச்சர் சென்றார். அரசன் எப்படி கண் பார்வை கிடைத்ததுப் பற்றி விசாரித்தான் .
" அல்லாஹ்தான் " என்றார்.

அதற்கு அரசன் " என்னைத் தவிர்த்து உனக்கு வேறு இறைவன் இருக்கிறானா ? "

" எனக்கும் இறைவனாக , உனக்கும் இறைவனாக உள்ள ஒரே அல்லாஹ் " என்று அமைச்சர் பதில் கூறினார். அரசன் அவரை சிறையில் அடைத்து கொடுமைப்படுத்த , அவர் சிறுவனைக் காட்டிக் கொடுத்தார் .

அச்சிறுவனை பிடித்து துன்புறுத்த, "நான் யாரையும் எப்போதுமே குணப்படுத்தியதில்லை. குணப்படுத்துவதெல்லாம் அல்லாஹ்தான் " என்றான். அரசன் சிறுவனைக் கொடுமைப்படுத்த , சிறுவன் ஞானியைக் காட்டிக் கொடுத்தான் .

உடனே ஞானியைக் கட்டி இழுத்து வந்து , மதம் மாற அரசன் வற்புறுத்தினான். அதற்கு ஞானி மறுக்கவே , உடனே ரம்பம் கொண்டு உச்சியிலிருந்து உடல் இரண்டு துண்டாகப் பிளக்கப்பட்டது.

பின்னர் அமைச்சரையும் மதம் மாற வற்புறுத்த அவரும் மறுக்கவே அவரையும் ரம்பத்தால் இரண்டாக பிளக்கப்பட்டார் .

பின்னர், அச் சிறுவனை அவனையும் மதம் மாற வற்புறுத்த , அதற்கு மறுப்புத் தெரிவிக்க , மலையில் இருந்து சிறுவனை உருட்டி விட ஆணைப் பிறப்பித்தான் .

சிறுவனை மலை உச்சியில் உருட்டி விட முயலும் போது , " யா அல்லாஹ் இவர்களது தீங்கை விட்டும் நீ விரும்பிய விதத்தில் என்னைக் காப்பாற்றுவாயாக!
என்று பிரார்த்தித்தான் . உடனே மலையில் நில நடுக்கம் ஏற்பட்டு சிறுவனைத் தவிர்த்து மற்ற பணியாளர்கள் மலையிலிருந்து உருண்டு இறந்தனர் .

சிறுவனை மீண்டும் அரசன் பிடித்து விசாரிக்க , " அல்லாஹ் அவர்களை விட்டு என்னைக் காப்பாற்றினான் " என்று கூற , சிறுவனை படகில் ஏற்றி நடுக் கடலில் கொண்டு போய் கடலில் போட முயற்சிக்கும் போது,
" யாஅல்லாஹ் இவர்களது தீங்கை விட்டும் நீ விரும்பிய விதத்தில் என்னைக் காப்பாற்றுவாயாக!
என்று பிரார்த்தித்தான்.

அப் படகு கவிழ்ந்து சிறுவனைச் தவிர்த்து அனைவரும் கடலில் மூழ்கி இறந்தனர் .

அரசன் சிறுவனைப் பிடித்து " உன்னை கொல்வதற்காக மற்றவர்கள் இறந்து போகிறார்கள். எனவே உன்னைக் கொல்வதற்கு நீயே ஓர் உபாயத்தை சொல் " என்றான்.

" நான் கூறுவதுபோல் நீ செய்யாத வரையில் என்னை நீ கொல்ல முடியாது "

அரசன் , " என்ன செய்ய வேண்டும் ?"

" மனிதர்களை யாவரையும் ஒரு இடத்தில் ஒன்று கூட்ட வேண்டும் என்னைக் கழுவிலேற்றி , எனது அம்புக் கூட்டிலிருந்து ஒரு அம்பை எடுத்து, நாணிலேற்றி , " பிஸ்மில்லாஹி ரப்பில் குலாம் " அதாவது இந்தச் சிறுவனின் ரப்பாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் எய்கின்றேன்" என்று அவ்வம்பை எய்ய வேண்டும். என் மரணத்தை என் இறைவன் தர முடியுமே தவிர , உன்னால் முடியாது " _என்று கூறினான்.

சிறுவன் கூறிய வண்ணம் திறந்த வெளியில் அவ்வூரில் உள்ளவர்கள் யாவரையும் ஒன்று கூட்டி , அவனைக் கழுவிலேற்றி, அவனது அம்பை எடுத்து , அவன் கூறியவாறே கூறி எய்தப்பட்டது .

அவ்வம்பு சிறுவனின் கண்ணுக்கும் , செவிக்கும் இடையில் உள்ள பொட்டில் தைத்தது . அவன் அந்த இடத்தில் கையை வைத்த வண்ணம் இறந்தான் .

இதனைப் பார்த்த மக்கள் யாவரும்
" இச்சிறுவனின் இறைவனை நாங்கள் விசுவாசித்தோம் . இச்சிறுவனின் இறைவனை நாங்கள் விசுவாசித்தோம் " என்று கூறினார்கள்.

உடனே , அரசன் பெரிய பெரிய பள்ளங்களில் நெருப்புக் குண்டங்களை உண்டாக்கி , மனிதர்கள் மதம் மாறவில்லை என்றால் நெருப்புக் குண்டத்தில் வீசி எறியச் சொன்னான் .

அப்படி எறிக்கப்பட்டவர்கள் 20 ஆயிரம் என்றும் 70 ஆயிரம் என்றும் காணக் கிடைக்கிறது .

அதில் ஒரு பெண் தன் கைக்குழந்தையுடனும் மற்ற இரண்டு குழந்தைகளுடனும் நெருப்பில் குதிக்க தாமதித்த போது , கைக்குழந்தை " என் தாயே ! நீங்கள் சத்தியத்தில் இருக்கின்றீர்கள் " என்றதும் , அவளது முதல் மகனை நெருப்பில் வீசப்பட்டது . அவள் ஈமானில் உறுதியாக இருந்தாள் அடுத்து இரண்டாவது மகனை நெருப்பில் வீசப்பட்டது .அப்போதும் ஈமானில் உறுதியுடன் , இறுதியாக தன் கைக் குழந்தையுடன் நெருப்பினுள் உறுதியான ஈமானுடன் வீழ்ந்தாள் .

இவ்வரலாற்றை மையப்படுத்தி திருக்குர்ஆனில் இறைவன் .....
قُتِلَ اَصْحٰبُ الْاُخْدُوْدِۙ
அகழுடையவர்கள் (பள்ளக் கிடங்குடையவர்கள் )அழிக்கப்பட்டார்கள்(அல்குர்ஆன் : 85:4)
النَّارِ ذَاتِ الْوَقُوْدِۙ
அது, விறகுகள் போட்டெரித்த நெருப்பு (அகழ் நெருப்பு )
(அல்குர்ஆன் : 85:5)
اِذْ هُمْ عَلَيْهَا قُعُوْدٌ ۙ
அதன் முன் அவர்கள் உட்கார்ந்து கொண்டிருந்த சமயத்தில்,
(அல்குர்ஆன் : 85:6)
وَّهُمْ عَلٰى مَا يَفْعَلُوْنَ بِالْمُؤْمِنِيْنَ شُهُوْدٌ
நம்பிக்கையாளர்களை (நெருப்புக் கிடங்கில் போட்டு) நோவினை செய்வதை அவர்கள் (வேடிக்கையாகப்) பார்த்துக் கொண்டுமிருந்தார்கள்.
(அல்குர்ஆன் : 85:7)

وَمَا نَقَمُوْا مِنْهُمْ اِلَّاۤ اَنْ يُّؤْمِنُوْا بِاللّٰهِ الْعَزِيْزِ الْحَمِيْدِۙ
(நம்பிக்கை கொண்ட) அவர்களில் யாதொரு குற்றத்தையும் அவர்கள் காணவில்லை. எனினும், மிக்க புகழுடையவனும், (அனைவரையும்) மிகைத்தவனுமாகிய அல்லாஹ்வை அவர்கள் நம்பிக்கை கொண்டதையே அவர்கள் குற்றமாகக் கண்டனர்.
(அல்குர்ஆன் : 85:8)
الَّذِىْ لَهٗ مُلْكُ السَّمٰوٰتِ وَالْاَرْضِ‌ وَ اللّٰهُ عَلٰى كُلِّ شَىْءٍ شَهِيْدٌ
வானங்கள், பூமியின் ஆட்சி அவனுக்குறியதே! (அவனை நம்பிக்கை கொண்டதற்காகவே அவர்களை நெருப்பில் எறிந்தனர்.) அல்லாஹ்வோ, (இவர்கள் செய்த) அனைத்தையும் அறிந்தவனாகவே இருந்தான்.
(அல்குர்ஆன் : 85:9)

இவ்வுண்மைச் சம்பவம் நபி (ஸல்) அவர்கள் பிறப்பதற்கு 90 ஆண்டுகளுக்கு முன்னர் நிகழ்ந்தது .

உமர் (ரலி) அவர்களின் ஆட்சி காலத்தில் வேறு ஒரு காரியத்திற்காக பூமியைத் தோண்டிய போது , தனது பொட்டில் அம்புக் காயமுள்ள இடத்தில் தனது விரலை வைத்த வண்ணம் அடக்கப்பட்ட ஒரு சிறுவனின் பிரேதம் தோண்டி எடுக்கப்பட்டது. கையை அவ்விடத்தை விட்டு அகற்றிய போது . காயத்திலிருந்து இரத்தம் வெளிவருவதும் ,கையை விட்டால் அது அக்காயத்தை அடைத்துக் கொள்வதுமாக இருந்தது.

இதனைப் பார்த்த நபித்தோழர்கள் கலீஃபா உமர் (ரலி) அவர்களுக்கு விஷயத்தை தெரிவித்து , மறு உத்தரவுக்கு காத்திருந்தனர் .

கலீஃபா அவர்கள் " இந்தச் சிறுவன் நெருப்பு குண்டங்களில்
சம்பந்தப்பட்டவன் .அவனை அப்படியே வைத்திருங்கள் கியாமத்து நாள் வரை இறைவன் அவனை உயிர்ப்பிக்கும் வரை அப்படியே அடக்கம் செய்யுங்கள் .

ர.ரா

08/-7/2020சொர்க்கவாசிகளான பாட்டன் ,பாட்டி, தகப்பன்,தாய் , மகன் , மகள் , பேரன் , பேத்தி இத்தனை பேர்களுக்கும் ஒரே 33 வயதா ?

மறுமையில் சொர்க்கவாசிகள் அனைவரும் முப்பத்து மூன்று
வயதுள்ளவர்களாக இருப்பார்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியதாக
திர்மிதீ, அஹ்மது, பைஹகீ, மற்றும் தப்ரானீ ஆகிய நூற்களில்
இடம்பெற்றுள்ளது.

2468 حَدَّثَنَا أَبُو هُرَيْرَةَ مُحَمَّدُ بْنُ فِرَاسٍ الْبَصْرِيُّ حَدَّثَنَا أَبُو دَاوُدَ حَدَّثَنَا عِمْرَانُ أَبُو الْعَوَّامِ عَنْ قَتَادَةَ عَنْ شَهْرِ بْنِ حَوْشَبٍ عَنْ عَبْدِ الرَّحْمَنِ بْنِ غَنْمٍ عَنْ مُعَاذِ بْنِ جَبَلٍ أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ يَدْخُلُ أَهْلُ الْجَنَّةِ الْجَنَّةَ جُرْدًا مُرْدًا مُكَحَّلِينَ أَبْنَاءَ ثَلَاثِينَ أَوْ ثَلَاثٍ وَثَلَاثِينَ سَنَةً قَالَ أَبُو عِيسَى هَذَا حَدِيثٌ حَسَنٌ غَرِيبٌ وَبَعْضُ أَصْحَابِ قَتَادَةَ رَوَوْا هَذَا عَنْ قَتَادَةَ مُرْسَلًا وَلَمْ يُسْنِدُوهُ رواه الترمذي

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

சொர்க்கவாசிகள் முப்பது வயது அல்லது முப்பத்து மூன்று வயது உள்ளவர்களாக சொர்க்கத்திற்குள் நுழைவார்கள். அவர்களின் உடலில் (தேவையற்ற) முடிகள் இல்லாமலும் (கண்களுக்கு) சுர்மா இட்டவர்களாகவும் அழகிய தோற்றத்தில் செல்வார்கள்.

அறிவிப்பவர் : முஆத் பின் ஜபல் (ரலி)

நூல் : திர்மிதி 2468

இந்த ஹதீஸைப் படித்ததும் எனக்கு கீழ்க்கண்ட ஆங்கில திரைப்படம்தான் என் நினைவிற்கு வந்தது .

https://youtu.be/zJqFCraAvo4

(you tube-ல் பார்க்கவும்)



செயற்கையாய் இன்னொரு பூமி
( சொற்பொழிவின் சாரம்சம்) 29/07/2020



https://m.facebook.com/story.php?story_fbid=2648779405381398&id=100007480923921

நீல் ஆம்ஸ்ட்ராங் சந்திர மண்டல பயணத்தின்போது பூமியை அவர் பார்த்த காட்சி பிரமிக்க வைத்தது. ஆழ் நீல நிறத்தில் கடல்களும் பழுப்பு பாலைவனங்களும் பசுமை காடுகளும் அதை ஊடுருவிப் பாய்ந்த வெள்ளி நிற அருவிகளும், ஆறுகளும் என வர்ணஜாலம் காட்டும் கண்டங்களும் வெண்ணெய் ஒட்டி வைத்தது போன்ற பனி மலைப் பிரதேசங்களும் திருஷ்டி பட்டுவிடுமோ என்று இந்த அழகையெல்லாம் திரை போட்டு மூடி வைத்து போல இருக்கும் வெண்மையான மேகக் கூட்டங்களும், அப்பப்பா ...இருண்ட வான்வெளியில் பூமி ஒரு ஜொலிக்கும் ஆபரணம் என்று பூமியின் அழகை வர்ணிக்கிறார். இறைவனும் குர்ஆனில்...

" பூமியில் உள்ளவற்றை நாம் அதற்கு அலங்காரமாகி வைத்தோம் " குர்ஆன் 18:07

இந்த காலத்தில் கடவுளின் படைப்பு தொழிலையும் பங்குபோட பார்க்கும் மனோபாவம் மனிதனுக்கு வந்திருக்கிறது. குளோனிங் முறையில் குழந்தையை உருவாக்க நினைக்கும் விஞ்ஞானிகள் பூமியை விட்டு வைப்பார்களா? இன்னொரு பூமி சாத்தியமா ? என்ற கேள்வியோடு தொடங்கப்பட்ட அந்த முயற்சிக்கு பேர் இரண்டாம் உயிரிக்கோளம் (**Biosphere 2 )** பிரபஞ்சத்தில் எத்தனையோ கோள்கள் இருக்கின்றன ஆனால் பூமியைத் தவிர வேறு எங்கும் உயிர்கள் இருப்பதாக தெரியவில்லை எல்லாவகை உயிர்களையும் ஜீவித்திருக்க வைக்கும் சூழ்நிலை பூமியில் மட்டுமே இருக்கிறது என்பது இன்றுவரை நாம் உறுதியாக நாம் ஒரு விஷயம் இதனால்தான் சூரிய குடும்பத்தில் பூமியை மட்டும் உயிரிக்கோளம் என்கிறார்கள்

மனிதர்கள் செவ்வாய் கிரகத்திலோ நிலவியிலோ போய் வசிக்கலாமே ! ஏற்கனவே மனிதன் நிலவில் இறங்கி விட்டான் செவ்வாயிலும் விண்கலம் இறக்கி ஆராய்ச்சிகள் செய்து, அங்கு தண்ணீர் இருப்பதற்கான சாத்தியக் கூறுகளை உணர்ந்து இருக்கிறான் .இந்தப் பின்னணியில் பூமியைப் போன்ற ஒரு குட்டி மாதிரியே உருவாக்கினால் அது அப்படியே விண்வெளிக்கு கொண்டு போய் வேறு கிரகத்தில் சாதாரணமாக தங்கலாம் ஏன் இப்படி பல விண்வெளி காலணிகளை உருவாக்கினால் அதையே ஒரு சுற்றுலாத்தலம் ஆக்கிவிடலாம் ஒருவேளை பூமியில் வாழ முடியாத அளவு சிக்கல் ஏதாவது ஏற்பட்டால் மனிதர்கள் வாழ முடிகிற மாற்று உலகங்களை உருவாக்கவும் இது உதவுமே என்ற விசித்திரமான சிந்தனைதான் இரண்டாவது உயிரி கோலத்தை உருவாக்க வைத்தது

அறிவியல் கற்பனை கலந்து பயமுறுத்தி நாவல்களை படைக்கும் அமெரிக்க எழுத்தாளர்கள் பலர் எண்பதுகளில் தங்களது கற்பனை குதிரையை தட்டிவிட்டு இப்படிப்பட்ட செயற்கை பூமிகளை கதைகளில் காட்டினர் அதை பார்த்து டெக்ஸாஸைச் சேர்ந்த கோடீஸ்வரரான எட்வர்டு பாஸ் என்பவர் இதை நிஜத்தில் உருவாக்க ஆசைப்பட்டார் . எண்ணெய் கிணறு அதிபரான அவர் பெட்ரோல் விற்று சம்பாதித்த பணத்தில் 900 கோடியை செயற்கை உலகம் படைக்க ஒதுக்கினார் இந்த செயற்கை உலகை வடிவமைத்து உருவாக்கியவர் ஜான் ஆலன் ஹார்வார்டைச் சேர்ந்த உலோகவியல் நிபுணர் .

லண்டனைச் சேர்ந்த சூழ்நிலை தொழில்நுட்ப நிறுவனம் இதனை வடிவமைக்கும் பொறுப்பை ஏற்றது அமெரிக்காவின் அரிசோனா மாநிலத்தில் ஆர்கில் நகரை ஒட்டிய அழகிய சாண்டா கேடலினா மலை அடிவாரத்தில் இடம் பார்த்து இந்த மாதிரி உலகத்தை உருவாக்கினார் 3.14 ஏக்கர் பரப்பில் அடித்தளம் இரும்பாலும் சுற்றுப்புறம் கனமான கண்ணாடினாலும் செய்யப்பட்ட ஒரு பெரிய கண்ணாடி குடுவையாக இந்த உலகம் உருவானது . 36 மீட்டர் உயரம் ஐந்து அடுக்குகளைக் கொண்டது இந்த குடுவையை நூறு ஆண்டுகளுக்கு தாக்குப்பிடிக்கிற அளவுக்கான கட்டுமானம் !

இந்த மினி உலகத்தில் ஒரு சிறிய கடல் 8 மீட்டர் ஆழத்திலிருந்த இதில் நிஜமான கடல் போலவே அலைகள் ஐந்து மீட்டர் உயரத்தில் மேலெழும்பி வந்து கரையை தொடும். 9 லட்சம் காளான் தண்ணீரை கொட்டி இந்த செயற்கை கடலை குடுவைக்குள் உருவாக்கியிருந்தார்கள் . கடலின் அடியில் பவளப் பாறைகளும் வளர வழிவகை செய்து இருந்தார்கள் .கடலை அடுத்து ஒரு சதுப்பு நிலப்பகுதி அதைத்தாண்டி விளைச்சல் நிலம் பக்கத்திலே சாவன்னா புல்வெளி இன்னொரு புறத்தில் சின்னதா ஒரு பாலைவனம் .அதன் பின்னே முட்புதர் காடு கடைசியாக பெரிய மரங்களும் அவற்றைச் சுற்றி வளரும் கொடிகள் புதர்கள் அடர்ந்த பசுமை காடுகளில் குளித்து மகிழ குட்டியாக ஒரு நீர்வீழ்ச்சி அதற்குள் உண்டு .

பல்வேறு துறைகளைச் சேர்ந்த சுமார் 200 நிபுணர்கள் இரவு பகலாக உழைத்து இந்த உயிரியல் கோளத்தை உருவாக்கினார்கள் இயற்கையாக பூமியில் காணப்படும் ஐந்து வகை நிலங்களும் இதிலிருந்து என மொத்தம்

300 வகை செடி கொடிகள் 1500 விலங்கினங்கள் 30 வகை பூஞ்சைகள் என ஒவ்வொன்றையும் பார்த்துப் பார்த்து உள்ளே அமைத்தார்கள் . இயற்கையான பூமியில் பாக்டீரியாக்கள் போன்ற நுண்ணுயிரிகள் கழிவுகளை சிதைக்கும் வேலையைச் செய்கின்றன .அதேபோன்ற அமைப்பு இந்த உலகத்தில் வேண்டுமே 30 ஆயிரம் டன் மண் நிரப்பி அதில் பாக்டீரியாக்கள் அதில் விடப்பட்டன

8 பேர் கொண்ட ஒரு குழு இவை வெளி உலக தொடர்பே இல்லாமல் 2 ஆண்டுகள் இந்த சின்ன உலகத்துக்குள் தங்க வைக்க வேண்டும் என்பதுதான் திட்டத்தின் ஆரம்ப இலக்கு அவர்களுக்கு தேவையான எல்லாமே உள்ளேயே கிடைக்க வேண்டும் எதற்காகவும் வெளியில் வரவுக்கூடாது !

பாலுக்கு ஆடு , முட்டை கோழி , கறிக்கு மாடு பன்றி , காய்கறி வகைகள் என்று பட்டியல் நீண்டது . உணவு தேவைக்கு அவர்கள் பயிர் செய்யவேண்டும் இயற்கை வேளாண்மைதான் உரங்கள் பூச்சி மருந்துகள் அனுமதி இல்லை ஐந்து அடுக்குகள் கொண்ட கண்ணாடிக் கூண்டில் அவர்கள் வாழ்ந்து புழங்க வேண்டும். அலுவலகப் பணிகளுக்கு கணிப்பொறி , தொலைபேசி , படிக்க ஒரு நூலகம் ஏதாவது சின்ன ரிப்பேர்கள் ஏற்பட்டால் அவற்றை சரிசெய்ய சின்னதா ஒரு பணிமனை , பரிசோதனைகள் செய்ய ஒரு ஆய்வுக்கூடம் . பொழுதுபோக்கு வசதிகள் என எல்லாவற்றையும் இந்த மினி உலகத்தில் அடைத்து வைத்திருந்தார்கள்

மாடிக்கு போனால் டெலஸ்கோப் வழியாக விண்வெளியைப் பார்த்து பொழுது போக்கலாம் காலாற ஒரு வாக்கிங் போனால் ஒரு சில நிமிடங்களிலேயே இருண்ட காட்டுக்குள் நுழைந்து சில்லிடும் அருவியில் குளித்துவிட்டு அப்படியே வெயில் சுட்டெரிக்கும் பாலைவனத்தில் நடந்து கடற்கரைக்குப் போய் காற்று வாங்கிவிட்டு திரும்பலாம். நிஜ உலகில் கூட ஒரே நாளில் இது சாத்தியமே இல்லை .

"ஒவ்வொன்றையும் எவ்வளவு கவனத்தோடு திட்டமிட்டோம் தெரியுமா ? "என்கிறார் டோனி பர்ஜெஸ் என்ற நிபுணர் பாலைவனத்திற்கு மெக்சிகோ, காட்டுக்கு அமேசான், புல்வெளிக்கு ஆப்பிரிக்கா சாவன்னா, கடலுக்குள் மேற்கிந்திய தீவுகளிலிருந்து பவளப் பாறைகள் என பார்த்து பார்த்து சேர்த்தோம்.ஒரு நாளைக்கு வண்ணத்துப்பூச்சி தேன் குடிக்க எத்தனை பூக்கள் தேவைப்படும் அது எத்தனை காலம் பூக்க வேண்டும் என்கிற அளவுக்கு நுட்பமாகத் திட்டமிட்டோம் என்கிறார் அவர்

ஆனால் இறைவன் "இந்த பூமியை இரண்டே நாட்களில் படைத்ததாக குர்ஆன் 41: 9 குறிப்பிடுகின்றான் இரண்டு நாள் என்பது ஐம்பதாயிரம் வருடங்களுக்குச் சமமானது ஒரு நாள் அதாவது ஒரு லட்சம் ஆண்டுகளில் பூமி படைக்கப்பட்டு இருக்கவேண்டும்.

1991 ஆம் ஆண்டு செப்டம்பர் 26ம் தேதி 8 பேர் கொண்ட குழு செயற்கை உலகத்திற்குள் அனுமதிக்கப்பட்டது .அவர்கள் ஏழு நாடுகளை சேர்ந்தவர்கள். மிகவும் கவனமாக தேர்வு செய்யப்பட்டு அவர்களில் நான்கு பேர் ஆண்கள் நான்கு பேர் பெண்கள் டாக்டர்கள். வேளாண் விஞ்ஞானி ஒருவர், விலங்கியல் மருத்துவர் ஒருவர், ஒரு இன்ஜினீயர் என எல்லோரும் இணைந்த கலவையாக அது!

மூன்று மாதங்களுக்கு தேவையான அளவு உணவுப் பொருட்கள் இருப்பு செய்யப்பட்டு இருந்தது .அது பெரும்பாலும் தேவைப்படாது காரணம் இந்த தேதிக்கு முன்பாகவே உள்ளே கோதுமையும் நெல்லும் பயிரிடப்பட்டு அறுவடைக்கு தயாராக இருந்தன ஆனாலும் அடுத்து ஏதாவது பயிர்கள் பொய்த்துவிட்டால் என்ன செய்வது என்று முன்னெச்சரிக்கை நடவடிக்கை

" மனிதன் தன்னுடைய ஆகாரத்தை அது எங்கிருந்து அது எவ்வாறு வருகிறது என்பதை சிறிது கவனித்து பார்க்கவும் .நிச்சயமாக நாமே ஏராளமான நீரைப் பொழியச் செய்து பின்னர் பூமியையும் பிளந்து வெடிக்கச் செய்து பின்னர் அதிலிருந்து வித்துக்களை முளைத்து வரும்படி செய்கின்றோம்" குர்ஆன் 80: 26

எதற்காகவும் அவர்கள் அவசரப்பட்டு வெளியே வந்து விடக்கூடாது ஏதாவது அவசியமாகத் தேவை என்றாலும் போனில் சொல்ல வேண்டும் என்பது அவர்களுக்கு இடப்பட்ட கட்டளை 4 மணி நேரம் பயிரிடுவது,உணவு தயாரிப்பதும் 4 மணி நேரம் ஆராய்ச்சி மற்ற நேரங்களில் ஓய்வு என்பது அவர்களுக்கு வாழ்க்கை . அவர்கள் வாழ்ந்து பயிரிட்டு உணவாக்கி உண்டு கழிவாக்கி கழுவை எருவாக்கி மீண்டும் அதே நிலத்தில் இட்டு வாழ்வில் செயல்கள் அனைத்தையும் வெளியுலகம் போலவே செய்து முடித்துவிட்டால் சோதனை வெற்றி !

உள்ளே 66 லட்சம் லிட்டர் தண்ணீர் இருந்தது அதையே திரும்ப திரும்ப சுழற்சி செய்து பயன்படுத்த வேண்டும். உள்ளே சேரும் குப்பைகளை வெளியே அனுப்ப அனுமதி இல்லை அவற்றை அங்கேயே மக்கச் செய்ய ஏற்பாடுகள் உண்டு . கழிவு நீரை சுத்திகரித்து கொடுக்கவேண்டும். மூச்சை இழுத்து விடும் அசுத்த காற்று சுத்தமான பிறகு அதையே திரும்பவும் சுவாசிக்க வேண்டும் .

உயிர் வாழ முக்கியமான தேவை சூரிய வெளிச்சம் இந்த உலகம் ஒரு கண்ணாடி கூண்டு போல இருந்ததால் அந்த கண்ணாடியை தாண்டி சூரிய வெளிச்சம் வந்தது . என்ன... நிஜ உலகத்தில் கிடைப்பதில் 80 சதவீத அளவு மட்டுமே இந்த செயற்கை உலகத்திற்கு கிடைத்தது ஆனால் அதுவே போதும் என்று நம்பினார்கள்.

எல்லாம் நல்லபடியாக நடக்கும் என்று நம்பினார்கள் இருந்தாலும் உள்ளே இருக்கும் காற்றின் தன்மை அடிக்கடி சோதிக்கப்பட்டது குறிப்பாக காற்றில் ஆக்சிஜன் மற்றும் கார்பன் டை ஆக்சைடு அளவு கண்காணிக்கப்பட்டது இதில் ஏதாவது தாறுமாறான கோளாறு ஏற்பட்டால் உள்ளே இருப்பவர்களின் உயிருக்கே ஆபத்தாகிவிடுமே ! செயற்கையாக உருவாக்கப்பட்ட இந்த சூழலில் சில பாக்டீரியாக்கள் சரியாக செயல்படாததால் ஆக்சிஜன் அளவு அடிக்கடி குறைவது தெரிந்தது உடனே வெளியில் இருந்து குழாய் வழியாக ஆக்சிஜன் செலுத்தி சரி செய்யப்பட்டது .

காற்றுகளை திருப்பித் திருப்பி விடுவதிலும் அறிவுடைய ஜனங்களுக்கு பல அத்தாட்சிகள் இருக்கின்றன

குர் ஆன் 45: 05

அந்த ஆண்டின் அக்டோபர் 11-ஆம் தேதி அவசர மணி அடித்து கதவு திறந்து ஜேன் போயிண்டர் என்ற பெண்மணி வெளியில் வந்தார் நெல் அரவை இயந்திரத்தில் தன் கையே நசிக்கிக்கொண்டார் ஆதலால் சாதாரண சிகிச்சைகள் உள்ளே கிடைக்கும் . ஆனால் அறுவை சிகிச்சைக்கான வசதிகள் உள்ளே இல்லை . 5 மணி நேரத்தில் ஆபரேஷன் முடிந்து அவர் திரும்பவும் உள்ளே போய்விட்டார் இந்த ஒரு சந்தர்ப்பத்தை தவிர எப்போதும் அந்த எட்டு பேரில் யாரும் வெளியில் வரவில்லை எல்லா சிரமங்களையும் பொறுத்துக் கொண்டு இரண்டு வருடங்கள் உள்ளே இருந்து விட்டு 1993 செப்டம்பர் 26-ஆம் தேதி அவர்கள் வெளியே வந்தனர் சோதனை வெற்றி என்று ஆரவாரமாக சொல்லப்பட்டது .

ஆனால் அரிசோனா பாலைவனத்தில் இன்னமும் இருக்கும் அந்த கண்ணாடி குடுவை உலகில் ஒரு கேலிப் பொருளாக அடையாளம் காட்டப்படுகிறது . இரண்டாவது உயிர்க்கோளம் என்ற சேர்க்கை பூமி சோதனையில் வெற்றி அடைந்ததாக சொல்லப்பட்டது . எட்டு பேர் கொண்ட முதல் குழு 2 வருடங்கள் உள்ளே வாழ்ந்து விட்டு வந்ததும் 7 மாத இடைவெளியில் அடுத்த குழு உள்ளேபோனது இந்த ஏழு பேர் குழுவில் ஐந்து ஆண்கள் இரண்டு பெண்கள் இருந்தார்கள் 1994 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் உள்ளே போன இந்த குழுவினரால் அதிக நாட்கள் தாக்குப்பிடிக்க முடியவில்லை ஆறே மாதங்களில் வெளியே வந்து விட்டார்கள் அந்த சேர்க்கை உலகத்தில் காற்றின் தன்மையை மாறிவிட்டது உயிர் வாழ தேவையான ஆக்ஸிஜன் அளவும் குறைந்துவிட்டது மூச்சுவிடவே ரொம்ப சிரமப்பட்டோம் உள்ளே இருப்பவர்களை காப்பாற்ற வேறு வழி தெரியவில்லை . அதனால் கதவை திறக்கச் சொல்லி வெளியேறி விட்டோம் என்றார் குழுவின் தலைவியான அபிகைல் .

முதல் குழுவாக இரண்டு வருடங்கள் உள்ளே இருந்தவர்களிடம் தேடி கேட்கப்பட்டது சாதாரணமாக நாம் சுவாசிக்கும் காற்றில் 21% ஆக்ஸிஜன் இருக்கிறது ஆனால் உள்ளே சமயங்களில் இது 14.5 % என்ற அளவுக்குக் குறைந்தது இதைவிடவும் குறைந்து இருந்தால் நாங்கள் செத்தே போய் இருப்போம் ஏற்புக்கு முரணான இப்படிப்பட்ட காற்றை சுவாசிப்பதால் எல்லோரும் எடை குறைந்து மெலிந்து விட்டோம் வெளித்தோற்றத்திற்கு பார்க்க ஆரோக்கியமாக தெரிந்தாலும் உடலில் கொழுப்பு சத்து ரத்த அளவு எல்லாமே குறைந்து போனது எல்லோருமே சோம்பலாக உணர்ந்தோம் தேவை இல்லாமல் ஒருவர் மீது ஒருவர் ஏறி செயல்பட்டு அடிக்கடி எங்களுக்குள் சண்டை வந்தது.

பிரச்சினை இது மட்டுமல்ல இடையில் ஒருமுறை உள்ள காற்றின் அளவு அபாயகரமானதாக ஆனபோது "'பராமரிப்பு "என்ற காரணம் சொல்லி மூடியை திறந்து வெளிக்காற்று உள்ளே அனுப்பினர். உணவுக்காக பயிரிடப்பட்ட பயிர்கள் மொய்த்தன . சரியான வெயில் இல்லாததே இதற்கு காரணம் என்று ஒரு நொண்டிச் சாக்கு சொன்னார்கள் ஆனால் தேவையில்லாத காட்டுச் செடிகள் களைகளாக வளர்ந்தன அவற்றை அப்புறப்படுத்துவது பெரிய வேலையாக ஆனது .

மகரந்தச் சேர்க்கை செய்து விதைகள் உருவாக வழி கோலும் வண்டு இனங்கள் அழிந்து போனதால் பூக்களெல்லாம் விரயம் ஆயின பூச்செடிகள் புதிதாக உருவாக வழி கெட்டுப்போனது . உள்ளே விடப்பட்ட 23 வகை சிறிய விலங்கினங்களில் 19 வகை சுத்தமாக அழிந்து போயின . கரப்பான் பூச்சிகள் ஏராளமாக பெருகின . உள்ளே விடப்பட்ட மூன்று வகை எறும்புகள் வேரோடு அழிந்து விட எப்படியோ ஊடுருவி உள்ளே வந்த ஒரு வகை காட்டு எறும்புகள் ஆயிரக்கணக்காகப் பெருகின .ஆனால் அவை கடிக்கும் திறனை மறந்து விட்டிருந்தன.

"வானங்களும் பூமியையும் படைத்து உங்களுக்கு வானத்திலிருந்து மழையை இறக்கி வைத்தவன் யார் ? பின்னர் அதைக் கொண்டு செழிப்பான தோட்டங்களை நாம் முளைக்கச் செய்கிறோம் அதன் மரங்களை முளைக்கச் செய்வது உங்களால் முடியாது . அவ்வாறு இறுக்க அல்லாஹ்வுடன் வேறு நாயன் இருக்கின்றானா ? இல்லை! ஆயினும் அவர்கள் தம் கற்பனை தெய்வங்களை அல்லாஹ்வுக்கு சமமாகும் மக்களாகவே இருக்கிறார்கள் குர்ஆன் 27: 60

ஆக "செயற்கையாக ஒரு பூமி ஒரு பணக்கார மனிதன் செய்த பெரிய விளையாட்டு பொம்மை " என கேலி செய்யப்படுகிறது . கடந்த 1996ஆம் ஆண்டு நவம்பர் மாதம் முதல் கொலம்பியா பல்கலைக்கழகம் இதை தனது ஆய்வுக்கூடமாக ஏற்றுக்கொண்டுள்ளது . "எதிர்காலத்தில் சுற்றுச்சூழல் சீர்கேடு காரணமாக பூமியின் சூழல் மாறினால் என்னவாகும் என்பது தொடர்பான ஆராய்ச்சிகள் இதற்குள் நடக்கிறது .

எது எப்படியானாலும் இயற்கையை மனிதனால் வெல்ல முடியாது என்ற உண்மையை உயிர் போல மீண்டும் நமக்கு சொல்லிக் கொடுத்திருக்கிறது நான் தோற்று விட்டோம் பூமிக்கு மாற்று எதுவுமே கிடையாது

"இவர்கள் பூமியில் ஓடித்தப்பித்து அல்லாஹ்வை தோற்கடிக்க முடியாது அல்லாஹ்வையன்றி உங்களுக்கு உதவி செய்பவரும் இல்லை " குர்ஆன் 11:20

எத்தனையோ ஆச்சரியங்களையும் ஆபத்துக்களையும் தன்னுள் புதைத்து வைத்து அடிக்கடி பயமுறுத்தினாலும் பூமி மட்டுமே உயிர்களே வாழ வைக்கிறது என்கிறார் நியுயார்க் ராக்ஃபெல்லர் பல்கலைக்கழக பேராசிரியர் ஜான் மோகன் .

ஏகே முதலீட்டு தத்துவம் என்ற கொள்கையை உருவாக்கி உலகையே ஈர்த்தவர் ராபர்ட் காஸ்டன்சா. பூமியின் மதிப்பை கணக்கிட்டு பாருங்கள் என்று சொல்லி தலைசுற்ற வைக்கிறார் .

"இந்த இரண்டாவது உயிர் கோளத்தில் எட்டு பேரை இரண்டு ஆண்டுகள் வாழ வைத்து செய்த முயற்சிக்கு ஆன செலவு 900 கோடி ரூபாய் அதுவே தோல்விதான் நாம் நிலத்தையும் பொருட்களையும் பணத்தால் தான் மதிப்பிடுகிறோம் விலைமதிப்பில்லாத பல விஷயங்களை சுலபமாக மறந்து விடுகிறோம் .ஒரு சாதாரண கணக்கு இரண்டாவது உயிர்க் கோளில் ஒருவரை இரண்டு ஆண்டுகள் வாழ வைக்க சுமார் 112 கோடி ரூபாய் செலவானது தற்போது உலகத்தின் மக்கள் தொகை சுமார் 700 கோடி இத்தனை பேரையும் ஆயுள் முழுவதும்

வாழ வைக்க எவ்வளவு செலவு பிடிக்கும் ? திடீரென ஒருநாள் இயற்கை அன்னை தோன்றி, "நான் படைத்த பூமியில் வாழ்கிறாயே அதற்கான செலவு தொகையை எனக்கு கொடு என்று கேட்டால் உலகத்தின் எல்லா நாடுகளிலும் புழக்கத்தில் இருக்கும் அவ்வளவு பணத்தையும் டாலரையும் கொட்டிக் கொடுத்தாலும் போதாது போதாது .

வெட்டி எடுக்கும் ஒரு மரம் , பிடித்து தின்னும் ஒரு மீன் என நாம் ஈடுசெய்யாத விஷயங்கள் எத்தனையோ எத்தனையோ இதைப் பற்றிய அறியாமையில்தான் தவறுகள் செய்கிறோம் என்கிறார் காஸ்டன்சா .

இறைவன் தன் வல்லமை மூலம் தான் படைத்த பூமிக்கு தான் காட்டும் கருணையைப் பற்றி ....

" நிச்சயமாக வானங்களையும், பூமியையும் (அல்லாஹ்) படைத்திருப்பதிலும்; இரவும், பகலும் மாறி, மாறி வந்து கொண்டிருப்பதிலும்; மனிதர்களுக்குப் பயன் தருவதைக் கொண்டு கடலில் செல்லும் கப்பல்களிலும்; வானத்திலிருந்து அல்லாஹ் தண்ணீரை இறக்கி அதன் மூலமாக பூமியை இறந்த பின் அதை உயிர்ப்பிப்பதிலும்; அதன் மூலம் எல்லா விதமான பிராணிகளையும் பரவ விட்டிருப்பதிலும், காற்றுகளை மாறி, மாறி வீசச் செய்வதிலும்; வானத்திற்கும், பூமிக்குமிடையே கட்டுப்பட்டிருக்கும் மேகங்களிலும் - சிந்தித்துணரும் மக்களுக்கு (அல்லாஹ்வுடைய வல்லமையையும், கருணையையும் எடுத்துக் காட்டும்) சான்றுகள் உள்ளன"
(அல்குர்ஆன் : 2:164)

வல்ல ரஹ்மானின் படைப்பிற்கு முன் மனிதனின் படைப்புகள் எல்லாமே பொய்த்து விடும் என்பதுதான் இந்த செயற்கை பூமி நமக்கு உணர்த்துகிறது .

செயற்கை பூமியின் படங்கள் பார்க்க

https://images.app.goo.gl/DCfdcta6mRWPjBQR8

தூரம் ஒரு பொருட்டே அல்ல 27/07/2020
(சொற்பொழிவின் சாரம்சம்)

https://m.facebook.com/rahmath.rajakumaran.9/videos/2647041765555162/




மனிதனுக்கு ஐம்புலன்கள் உண்டு பார்ப்பது முகர்வது தொடுவது ருசிப்பது கேட்பது என மனிதனின் உலகை உணர்வது இந்த ஐம்புலன்களினால்தான் இதையும் தாண்டிய ஆச்சரியம்தான் டெலிபதி என்கிற தொலை உணர்வு சிந்தனைப் பரிமாற்றம் இந்த சக்தி மனிதர்கள் எல்லோருக்கும் இருக்கிறது அதற்கு பல சமயங்களில் இந்த உணர்வு தெளிவாக இயங்கவும் செய்து நம்மை நாமே வியப்படையச் செய்கிறது. சிலருக்கு இந்த சக்தி அதிகமாக இருக்கிறது அவர்களை நாம் **psychic** சைக் என்று அழைக்கிறோம்

"காஜா வெளிநாட்டுக்குப் போய் ஓராண்டாகிறது ஒரு தகவலும் இல்லையே என்று நாம் ஆழ்ந்து சிந்திக்கும்போது டெலிபோன் மணி அழைக்கிறது எடுத்தால்... டேய் , நான்தான் காஜா பேசுகிறேன் என்று நண்பரின் குரல்

கோடை லீவில் பிள்ளைகளைக் கூட்டிக்கொண்டு கொடைக்கானல் போகலாமா என்று நீங்கள் நினைக்கிற அதே வினாடியில் உங்க மனைவி ஏங்க இந்த கோடையில் கொடைக்கானல் போகலாமா என்கிறார் இந்த மாதிரி டெலிபதி சமாச்சாரங்கள் நம்முடைய வாழ்க்கையில் அவ்வப்போது தலை காட்டிக் கொள்கிறது

மனித சஞ்சாரமற்ற இடத்தில் கஃபாவை கட்டி முடித்து அல்லாஹ்வுக்காக அதை அர்ப்பணிக்கிறார் நபி இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் . அல்லாஹ் கஃபாவை நோக்கி மக்கள் வருமாறு அழைக்கச் சொல்கிறான்
குர்ஆன் 22 : 27

அக்கால மன்னர்கள் இறைநேசர்களையும் யோகிகளையும் பக்கத்தில் வைத்துக்கொண்டதும் ஆஸ்தான குரு என்கிற அந்தஸ்துகளை கொடுத்தும் அவர்களின் ஞான திருஷ்டிக்காகதான் .

ஷரீஅத்தின் புலி என அழைக்கப்படும் கீழக்கரை சதக்கத்துல்லாஹ் அப்பா (ரஹ்) அவர்களிடம் தொலை உணர்வும் , முற்போக்கு சிந்தனையும் நிரம்பி இருந்ததால் முகலாய மன்னர் அவுரங்கசீப் தன் அவையில் இடம் பெறச் செய்ததுக் கூட ஷரியத்தான அரசாட்சிக்கு தக்க ஆலோசனை பெற வேண்டிதான் .

உயிரியல் தத்துவஞானி ஆல்மிரட் ரஸ்ஸல்,வாலஸ்,வில்லியம் க்ரூக்ஸ், ராலே பிரபு போன்றவர்களும் இயல்பியல் நிபுணர் ஆலிவர் லாட்ஜ் போன்ற பெரும் புள்ளியான விஞ்ஞான மேதைகள் கூட தொலை

உணர்வை நம்புகிறார்கள். அமெரிக்காவில் இதற்கென பெரிய நிறுவனங்களான அமெரிக்கன் சொசைட்டி ஃபார்ஸைக்சிக் ரிஸர்ச் , பாரா சைக்காலஜிக்கல் பவுண்டேஷன் போன்ற நிறுவனங்கள் இன்றும் சிறப்பாக தொலையுணர்வு பற்றி ஆய்வு செய்து வருகிறது

1)தொலை உணர்வு(**Telepathy** ) 2) தொலைவில் நடக்கும் நிகழ்ச்சிகளைப் பார்க்கும் திறமை( **clair-voyance ) 3)** எதிர்காலத்தில் நடக்க இருக்கும் நிகழ்ச்சிகளை முன்கூட்டியே சொல்லுதல் (precognition) 4) பொருட்களை தொடாமல் பார்வையின் சக்தியாலேயே நகர்த்துதல் (psycho Kinesis )

மேற்கண்ட நான்கு சக்திகளையும் இணைத்து psi (ஸை) பிற்பாடு இதற்கு நவீனமாக **ESP - Extra sensony** Perception என்று பெயர் நிலைத்தது , அதாவது புலன்களை தாண்டி புரிந்து கொள்ளும் சக்தி ஸ்காட்லாந்து போலீஸ்காரர்கள் கொலைகாரர்களை கண்டுபிடிக்க துப்பறியும் நிபுணர்கள் இப்படிப்பட்ட திறமை உள்ளவர்களை கூடவே அழைத்துச் செல்வதுண்டு

1) தொலை உணர்வு(**Telepathy** ) லண்டனில் வசிக்கும் மனோதத்துவ ஆராய்ச்சி நிபுணர் டாக்டர் ராபர்ட் மாரிஸ் ஆச்சரியமான சோதனை ஒன்றை நடத்திக் காட்டினார் அதுவும் எலிகளை வைத்து !

ஆழ்மனத்தின் சக்தியை துல்லியமாக எடுத்துக்காட்டிய சற்று கொடூரமான பரிசோதனைதான் இது . மாரிஸ் சோதனைச்சாலையில் கூண்டுக்குள் 19 எலிகள் விடப்பட்டன அவற்றின் முதுகில் 1,2 ,3,... 19 இன்று எங்கள் எழுதப்பட்டன பின்பு ஓரிரு நாட்கள் கழித்து 2,4, 6,8 ... எண்கள் கொண்ட எலிகளை மின்சாரம் கொடுத்து கொல்லப்பட வேண்டும் என தீர்மானித்து கொல்ல ஆரம்பிக்கிறார் ஆறாவது எலி கொல்லப்பட்ட உடன் இருந்த 8 10 12 14 16 18 ஆகிய எலிகள் அச்சத்தால் நடுங்க ஆரம்பித்தன நடக்க முடியாமல் அவை துவண்டு கூட போயின.

அதேநேரத்தில் 1, 3 , 5, 7. ...19 என்ற வரிசையில் உள்ள எலிகள் சாதாரணமாக பயமில்லாமல் வளைய வந்தன வரிசைப்படி எங்களை மாரிஸ் கொல்ல மாட்டார்கள் என்பது புரிந்தது போல ..! நாலாம் நம்பர் செத்துவிட்டது அடுத்து ஆறாம் நம்பர் ஆகிய நான் தான் என்கிற கணிதமும் லாஜிக்கும் எலிகளுக்கும் தெரிய நிச்சயமாக வாய்ப்பில்லை ! ஆனால் டாக்டர் மாரிஸ் மனதுக்குள் எடுத்திருக்கும் இந்த முடிவை சம்பந்தப்பட்ட எலிகள் ஏதோ உள்ளுணர்வில் புரிந்து கொண்டிருக்கவேண்டும் மாரிஸ் இந்த சோதனையை நடத்திக் காட்டிய உடன் மேற்பார்வையிட்ட விஞ்ஞான குழுக்கள் விளக்கம் சொல்ல முடியாமல் விழித்தார்கள் முடிந்தால் நீங்கள் கூட சோதிக்கலாம்

கடலில் மூழ்கித் தத்தளிக்கும் மனிதர்களை டால்பின்கள் தங்கள் முதுகில் சுமந்து கரை சேர்த்திருக்கின்றன. அதைவிட ஆச்சரியம் மருத்துவத்தால் குணப்படுத்தமுடியாத குறிப்பிட்ட சில நோய்களை டால்பின்கள் குணப்படுத்துவதாக டாக்டர்கள் சொல்கிறார்கள். அதுவும் டெலிபதி மூலமாக!

மேலை நாடுகளில் **Down syndrom** போன்ற மூளை பாதிப்பு நோயால் பாதிக்கப்பட்ட குழந்தைகளுடன் டால்பின்களோடு சில மணி நேரம் விளையாடினால் அந்த குழந்தைகளின் உடல்நிலை பெருமளவு முன்னேற்றம் கண்டது நாளடைவில் முழுமையாக குணமே அடைந்தார்கள் .

க்ரிகெரி எல்வீன் என்ற விஞ்ஞானி முழுமையாக பார்வை இழந்த பெண்ணை டால்பின்களோடு விளையாடச் செய்தார். விவரிக்கமுடியாத நிம்மதியும் மகிழ்ச்சியும் அந்த பெண்ணுக்கு ஏற்பட்டது சில நாட்களில் அவைகள் தண்ணீரில் அவருக்கு வழி காட்ட ஆரம்பித்தன டெலிபதி மூலமாக ! தண்ணீரில் எறியப்பட்ட பந்து எங்கே இருக்கிறது என்பதைக்கூட அந்தப் பெண்ணால் கண்டுபிடிக்க முடிந்தது நேரடியாக அந்த பந்தை நோக்கி நீந்திச் என்றால் ஒருநாள் பார்வை இழந்த அந்த பெண்ணிற்கு டால்பின்கள் வித விதமான எண்ணங்களை மாற்றி மாற்றி காட்டின அவளின் மனக்கண்முன் .

அலி ரலி அவர்கள் ஆலம் அர்வாஹ் என்ற ஆவி உலகில் இருக்கும் போது தன் பக்கத்தில் உள்ளவர்களை இப்போது பார்த்தால் கூட தன்னால் அடையாளம் காட்ட முடியும் என்பதாக கூறுகிறார்கள்

ஒரு சமயம் உமர் ரலி அவர்களின் சமூகத்திற்கு வந்திருந்த பழங்களை நபித்தோழர்களுக்கு பங்கு வைத்து கொடுக்கும்போது அலி ரலி அவர்கள் கூடுதலாக ஒரு பழம் கேட்க அதற்கு உமர் ரலி அவர்கள் "நேற்று கனவில் நபி ஸல் அவர்கள் தங்களுக்கு அதிகப்படியான பழத்தை உங்களுக்கு தந்திருந்தால் நானும் உங்களுக்கு அதிகப்படியான பழத்தை கொடுத்து இருப்பேன் என்கிறார்கள்.

ஒரே கனவை ஒரே நேரத்தில் இருவரும் அதைப் பற்றி விவாதிப்பதில் ரொம்பவும் சுவாரசியமான நிகழ்ச்சி இதே டெலிபதி என்பதா அல்லது அதற்கு மேலே இன்னொரு சக்தியா என்பது தெரியவில்லை

மனித சஞ்சாரமற்ற இடத்தில் கஃபாவை கட்டி முடித்து அல்லாஹ்வுக்காக அர்ப்பணிக்கிறார்கள் நபி இப்ராஹீம் அலை அவர்கள். அல்லாஹ்வை இந்த கஃபாவை நோக்கி மக்களை ஹஜ்க்கு வருமாறு அழைக்க சொல்கிறான் குர்ஆன் 22: 27

நபி இப்ராஹிம் அலை அவர்களும் காபாவின் மீது ஏறி நாலா திசையிலும் அழைத்தார்கள் . அல்லாஹ் நம்மை படைப்பதற்கு முன்பு ரூஹு கொண்டு ஏற்கனவே படைத்து வைத்திருந்தான் இப்ராஹிம் நபி அவர்களின் அழைப்பை அன்று கேட்டவர்கள் தான் இன்று ஹஜ்ஜுக்கு செல்ல முடிகிறது. 5000 வருடங்களுக்கு முந்தைய டெலிபதி இது

இவையெல்லாம் டெலிபதி என்கிற வட்டத்தையும் தாண்டி கிறதே இது எப்படி ? முதலில் டெலிபதி என்பது மூளைக்குள்ளேயும் ஆழ்கடலைப் போல் புரியப்படாத ஆச்சரியங்கள் ஏராளமாக இருக்கக்கூடும். டெலிபதி இயக்க செய்வது மூளைக்குள்ளே ரகசியமாக புதைந்து கிடக்கும் பினியல் சுரப்பி ஆக இருக்கலாம் என்கிறார்கள் .பினியல் சுரப்பியின் காரண காரியங்கள் இன்னும் மர்மமாகவே இருக்கிறது . நியூரோ மருத்துவ அறிஞர்கள் பீனியல் சுரப்பி செரோடேனின் என்கிற ஹார்மோனை உற்பத்தி செய்கிறது மேலும்

பினியல் சுரப்பி ஒளிகளை இனம் கண்டு மூளை அதை புரிந்துகொள்வதில் தக்க ஏற்பாடு செய்கிறது. மனிதனின் சகல பரவச உணர்வுகளுக்கு ஸெரோடேனின் காரணமாகிறது என்றும் விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளனர்.

இரு புருவங்களுக்கு நடுவே நெற்றிக்கு உள்ளே நேர்கோடாக மூளையின் நடுவில் இருக்கும் பினியல் சுரப்பியை மூன்றாவது கண் அல்லது நெற்றிக்கண் என்று சொல்கிறார்களோ என்னவோ ஆனால் ஞானிகள் தியான நிலையில் தங்கள் இரு கண்களை இரு புருவங்களுக்கும் நடுவில்தான் பார்வையை குவிக்கிறார்கள் தூர சிந்தனைக்காக !

**2)** உலகில் நடக்கும் நிகழ்ச்சியை பார்க்கும் திறமை (**Clair - voyance)**

இது பற்றி இஸ்லாமிய வரலாற்றில் குறிப்பிடத்தக்க ஓர் உதாரணம் உண்டு . வெள்ளிக்கிழமை மிம்பர் படியின் மீது ஏறி உமர் ரலி அவர்கள் குத்பா பிரசங்கம் செய்து கொண்டிருக்கும்போது திடீரென்று 400 மைல்களுக்கு அப்பால் இருக்கும் முஸ்லீம் படை தளபதி ஸாரீயா (ரலி) அவர்களை உற்சாகப்படுத்தி மலைமேல் ஏறிட கட்டளையிடுகிறார்கள். "ஸாரீயா பின் ஜபல் ...ஸாரீயா பின் ஜபல் "

ஸாரீயா (ரலி) அவர்களுக்கு இந்த எச்சரிக்கை குரல் கேட்கிறது உடனே ஸாரீயா தங்கள் படைகளை மலையை நோக்கி அழைத்துச் சென்று மலைக்குப் பின்னால் மறைந்திருந்த பகைவர்களிடமிருந்து இஸ்லாமியப் படை தப்பியதோடு பகைவர்களையும் வெல்ல முடிந்தது.

மனோதத்துவ விஞ்ஞானப்படி தொலைவில் நடக்கும் நிகழ்ச்சிகளை பார்க்கும் திறமையான இச்சக்தியைத்தான் Clair - voyance என்கிறார்கள் ஆனால் உமர் ரலி அவர்கள் தொலைவில் நடப்பதை பார்ப்பது மட்டுமல்லாமல் 400 மைல்களுக்கு அப்பால் சப்தமிட்டு கட்டளையிடுகிறார்கள் என்றால் உமர் ரலி அவர்களின் குரலொலி எந்த அலைவரிசையில் பயணிக்க முடிந்தது ? இது Clair - voyance விட ஒரு படி மேலான இது இருக்கிறது!

**3)** எதிர்காலத்தில் நடக்கவிருக்கும் நிகழ்ச்சிகளை முன்கூட்டியே சொல்லுதல் (**Precognitions ) :**

மார்கன் ராபர்ட்ஸன் என்னும் எழுத்தாளர் வியப்பான நாவல் ஒன்று எழுதினார். கற்பனையில் உதித்த கரு என்று சொல்வதைவிட உள்ளுணர்வு சொல்லிய கதை என்று நாம் அதைக் குறிப்பிடலாம்.

70,000 டன் எடையுள்ள மிகப்பெரிய கப்பல் ஒன்று அட்லாண்டிக் கடலின் வடக்கில் ஐஸ் கட்டியில் மோதுகிறது அந்த கப்பலில் முதல் பயணத்தில் இப்படி ஒரு கோர விபத்து . அந்த விபத்தில் 2500 பயணிகள் உயிர் இழக்கிறார்கள் இதை நாவலாக ராபர்ட்சன் 1898 இறுதியில் எழுதினார் .

1912 ஏப்ரல் 14ஆம் தேதி 66 ஆயிரம் டன் எடையுள்ள டைட்டானிக் என்ற கப்பல் அட்லாண்டிக் கடலில் ஐஸ்கட்டி மீது மோதி 1513 பேர் உயிரிழக்கிறார்கள். ராபர்ட்சன் நாவலின் கதையில் வரக்கூடிய கற்பனை கப்பலுக்கு வைத்த பேரும் டைட்டான் நாவலுக்கும் நிஜத்துக்கும் நூற்றுக்கணக்கான ஒற்றுமைகள் இருந்தன இது எப்படி சாத்தியமாயிற்று ? ஆதாரத்தோடு இருக்கும் இந்நிகழ்ச்சியைப் பற்றி மனோதத்துவ விஞ்ஞானிகளால் விளக்கம் அளிக்க முடியவில்லை .

ஸ்காட்லாந்து **Dundee courier** என்கிற நாளிதழில் 43 வயதான எட்வர்ட் பியர்சன் என்பவர் 1978 டிசம்பர் 4 ஆம் தேதி அன்று டிக்கெட் இல்லாமல் ரயிலில் பயணம் செய்ததற்காக அவரை போலீஸ் கைது செய்தது. டிக்கெட் வாங்க காசில்லை நான் அவசரமாக சுற்றுப்புறச்சூழல் அமைச்சரை சந்திக்க போய்க்கொண்டு இருக்கிறேன் . இன்னும் இருபது நாட்களுக்குள் கிளாஸ்கோ நகரில் பூகம்பம் தாக்கப் போகிறது அதைச் சொல்லி எச்சரிக்கைதான் கிளம்பினேன் என்கிறார் பியர்சன் பரிதாபமாக ! அதைக்கேட்டு போலீசும் வேறு அதிகாரிகளும் சிரித்தார்கள் ஏனெனில் பிரிட்டனில் பூகம்பங்கள் ஏற்படுவது மிக மிக அரிது . ஆனால் மூன்று வாரங்களுக்குப் பிறகு ஒரு செமத்தியான பூகம்பம் கிளாஸ்கோ நகரைத் தாக்கி நூற்றுக் கணக்கில் பலர் உயிரிழந்தனர் . போலீசில் எட்வர்ட் பியர்சன் கொடுத்த ஸ்டேட்மெண்ட் இன்றும் உள்ளது . இது எப்படி சாத்தியமாயிற்று ?

இதுமாதிரி நோஸ்ட்ராடாமஸ் (1503-1566) என்னும் பிரஞ்சு நாட்டுக்காரர் கடினமான சிக்கலான கவிதை வடிவில் எதிர்கால நிகழ்வுகளை பற்றி எழுதி வைத்தார் . 1666 ல் லண்டனில் நேர்ந்த பிரமாண்டமான பயங்கர தீ விபத்தை முன் கூட்டியே எழுதி வைத்தார் 300 ஆண்டுகளுக்குப் பிறகு பெரிய விபரீதம் யுத்த வடிவில் வரும் அதில் போலந்து பிரிட்டன் ஜெர்மனி நாடுகள் சம்பந்தப்படும் என்றும் எழுதி வைத்தார் .

1939 ல் போலந்து நாட்டை பெரும்படையுடன் ஜெர்மனி ஆக்கிரமிக்க பிரிட்டன் போலந்துக்கு உதவ இரண்டாம் உலகப்போர் தொடங்கியது நோஸ்ராடாமஸ் எழுதிய சிக்கலான கவிதையில் சில சமயம் மொழி பெயர்த்தவர்கள் தப்பாக புரிந்து சொன்னதுதான் உலகம் 1999ல் அழியும் என்பது .அதே உலக யுத்தம் முடியும் தருவாயில் ஜப்பானில் அணு குண்டுகள் போட்டதையும் ஈராக் - யு.எஸ் யுத்தத்தையும் நோஸ்ராடாமஸ் பிரமாதமாக குறிப்பிட்டிருக்கிறார்.

இதையெல்லாம் மனத்தத்துவ ஆராய்ச்சி அவர்களின் கையில் ஆதாரமாக சிக்கியுள்ள அசைக்கமுடியாத அத்தாட்சிகள்.

**4)** சக்தி பொருட்களை தொடாமலேயே பார்வையின் சக்தியாலேயே நகர்த்துதல் (**Psycho Kinesis )**

மேற்சொன்ன சக்திகளை விடவும் இது மிகவும் அபூர்வ சக்தியாக ஆராய்ச்சியாளர்கள் மதிப்பிடுகிறார்கள் பார்வையின் தீட்சணத்தால் அல்லது ஆழ்மன சக்தியால் பொருள்களைத் தொடாமலேயே நகர்த்தும் சக்தி. இந்த சக்தியைப் பற்றிய மனத்தத்துவ ஆராய்ச்சி யாளர்கள் 1883 இல் பிரிட்டனில் பிறந்த டகலஸ் ஹ்யூம் தன் பார்வையாலேயே மேசையை மிதக்க வைத்தவர் . 1960 ல் பிரேசில் நாட்டில் வசித்த அரீகோயும் , தற்சமயம் இஸ்ரேல் நாட்டைச் சேர்ந்த யூரி கெல்லரையும் இனம் காட்டுகிறார்கள் .

யூரி கெல்லர் ஸ்பூனை தன் பார்வையாலேயே வளைத்து காட்டினார். ஊசி கோபுரத்தின் பெரிய கடிகாரத்தை நிறுத்தி காட்டினார். இரண்டு தெர்மா மீட்டர்களில் ஒன்றை மட்டும் யூரி உற்றுப்பார்க்க அதிலிருந்த மெர்குரி மட்டும் 10 டிகிரி எகிறியது .

இவருக்கு எதிராக ஒரு கோஷ்டியே எதிர்ப் பிரச்சாரம் செய்தது அக்குழுவில் ராண்டி என்பவர் தலைமை வகித்தார் "யூரி ஒரு பிராடு" என்கிற புத்தகத்தை வெளியிட்டார் . ராண்டி சொன்னதுக்கு பதிலடியாக யூரி கெல்லர் ரோஷத்துடன் தெருவுக்குச் சென்று அங்கு இருந்த இரும்பு டிராபிக் சிக்னல் வெகு நேரம் உற்றுப் பார்த்தார் அந்த கம்பம் மெதுவாக வளைய ஆரம்பித்தது . இந்த சம்பவம் நடக்கும்போது விஞ்ஞான குழுவும் இருந்தது கண்களையும் வாயையும் திறந்தவாறு பார்த்துக் கொண்டே இருந்தது!

சாமானிய மனிதர்கள் தங்களுக்கு எந்த அபூர்வ சக்தி இருப்பதாகவும் நம்புவதில்லை பலருக்கு மூளையின் அடித்தளத்தில் அபூர்வ சக்திகள் இருக்கக்கூடும் யாருமே தங்கள் மூளையின் சக்திகளையும் தங்கள் மனத்தில் ஆற்றலையும் புரிந்து கொள்வது கூட இல்லை என்று பேட்டி ஒன்றில் வருத்தப்பட்டார் யூரி கெல்லர்.

கண்திருஷ்டி என்பது மனம் உற்றுநோக்கும் பார்வையால் கூட மற்றவர்களின் வாழ்க்கையில் சங்கடத்தை ஏற்படுத்த முடியும் என நபி ஸல் அவர்களும் கண் திருஷ்டியை பற்றி கூறியுள்ளார்கள் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது

இந்த நாலாவது சக்தியை மனிதர்களுக்கு கொடுத்திருப்பதாக குர்ஆனில் அல்லாஹ்..

".....அவளுடைய சிம்மாசனத்தை என்னிடம் கொண்டு வருபவர் உங்களில் யார் என்று கேட்டார் அதற்கு ஜின்களில் உள்ள இப்ரீத் என்னும் ஒரு வீரன் நீங்கள் உங்கள் இடத்திலிருந்து எழுந்திருப்பதற்கு முன்னதாகவே அதை நான் கொண்டு வந்து விடுவே நிச்சயமாக நான் அதற்கு சக்தி உடையவன் என்று கூறினான் . எனினும் அவர்களில் வேத ஞானம் பெற்ற ஒருவர் இருந்தார் அவர் சுலைமானை நோக்கி " நீங்கள் கண் இமைப்பதற்குள் அதனைக் கொண்டு வந்து விடுவேன் என்று கூறி அவ்வாறே கொண்டு வந்தும் வைத்தார் அது தம்முன் வைக்கப்பட்டிருப்பதை சுலைமான் கண்டார் குர்ஆன் 27 : 38 - 40

மனோதத்துவ அறிஞர்கள் உதாரணம் காட்டக் கூடியவர்களான டங்க்ளஸ் , அரீகோயும் யூரிகெல்லரும் ஒரு பொருளை கண்ணெதிரே இருக்கும் பட்சத்தில் அவற்றை வளைக்கவும் கொதிக்கவும் செய்தார்கள் அதுவும் அதிக நேரம் எடுத்துக் கொண்டு . ஆனால் குர்ஆனில் அல்லாஹ் கூறும் ஹூத் ஹூத் என்ற பறவை பார்த்ததை எத்தனையோ மைல்களுக்கு அப்பாலுள்ள சிம்மாசனத்தை கண் இமைக்கும் பொழுதில் கொண்டு வந்து வைத்தார் என்றால் இந்த அபூர்வ சக்தியை என்னவென்பது விஞ்ஞானிகள் இதுபற்றி சிந்திக்கிறார்களோ இல்லையோ நாம் கொஞ்ச நேரம் சிந்திப்போமே அப்படி அபூர்வ சக்திகள் இருந்தால் வளைக்கவோ கொதிக்கவோ செய்யாமல் நல்ல ஆக்கப்பூர்வமான பணிக்கு பயன்படுத்துவோம்

இந்த சக்திகளுக்கெல்லாம் தூரம்... ஒரு பொருட்டே அல்ல !

ர.ரா

7 , 70 , 700 , 7000 , 70,000 , 7,00,000

( சொற்பொழிவின் சாரம்சம்) 24/07/2020

https://m.facebook.com/story.php?story_fbid=2644522699140402&id=100007480923921




இப்பிரபஞ்சத்தில் உள்ள அனேக விஷயங்கள் ஏழு - யை அடிப்படையாகக் கொண்டே படைக்கப்பட்டுள்ளது என்பது தெரியவந்துள்ளது உதாரணமாக சூரிய வெள்ளொளியை முப்பட்டை கண்ணாடி பிரித்துக் காட்டும் போது அது ஏழு வர்ணங்களை தருகிறது வயலட் (V) இண்டிகோ (i) ப்ளூ (B) கிரீன் (G) எல்லோ (y) ஆரஞ்சு (0) ரெட் (R) - vibgyor

பூமி ஓடு ஏழு தட்டுகளாக பிரிந்துள்ளது 1) பசிபிக் தட்டு
2) அண்டார்டிகா தட்டு 3) வட அமெரிக்கா 4) தென் அமெரிக்கா தட்டு 5) யூரேசியன் தட்டு 6) ஆப்பிரிக்கா தட்டு
7) இண்டோ -ஆஸ்திரேலிய தட்டு

பூமி ஏழு கண்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது 1) ஆசியா
2) ஆப்பிரிக்கா 3) வட அமெரிக்க 4) தென் அமெரிக்கா 5) ஐரோப்பா 6) ஆஸ்திரேலியா 7) அண்டார்டிகா

உடலில் ஏழு சக்கரங்கள் உள்ளன 1) மூலாதாரம் 2) சுவாதிஷ்டானம் 3) மணிப்பூரகம் 4) அநாகதம் 5) விசுக்தி 6) ஆக்னை
7) சஹஸ்ரஹாரம்.

ஒழுங்குபடுத்தப்பட்ட சப்த அலைகளைக் இசை என்கிறோம் அதற்கு ஏழு சுரங்கள் இருக்கிறது ச ரி க ம ப த நி.
இன்னும் இதன் ஆய்வுகள் நிறைய.

குர்ஆனிலும் ஹதீஸிலும் எண் ஏழு - யை முற்படுத்தி சொல்லப்பட்டிருப்பது அவசியம் என்ன என்பதைப்பற்றிய ஆய்வுதான் இக் கட்டுரை . பொதுவாக 9 என்கிற எண்தான் கணிதவியலின் மிகப்பெரிய சூட்சமங்கள் கொண்டதாக எண்ணுகிறோம் ஆனால் இறைவனும் தன் திருமறையில் எண் 7-க்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து இருப்பதை அறிய முடிகிறது இது ஏன் ?

குர்ஆனில் திரும்பத் திரும்ப ஓதக்கூடிய ஏழு வசனங்களைக் கொண்ட சூரத்துல் பாத்திஹா ஒவ்வொரு தொழுகையிலும் ஒவ்வொரு ரக்அத்திலும் ஓதும்படி செய்தான் குர்ஆனிலேயே

"நிச்சயமாக நாம் உங்களுக்கு திரும்ப திரும்ப ஓதக்கூடிய ஏழு வசனங்களையும் இந்த மகத்தான குர்ஆனையும் அளித்திருக்கிறோம் குர்ஆன் 15:77

ஏழு வசனங்களைக் கொண்ட சூரத்துல் ஃபாத்திஹாவில்
அரபி நெடுங்கணக்கில் இருளெழுத்துக்கள் என்று குறிக்கப்படுகின்ற 7 எழுத்துக்கள் ஃதே .ஜீம், கே , ஸே, ஷீன், ளே , ஃபே ஆகிய எழுத்துக்கள் தவிர்க்கப்பட்டுள்ளன சற்று யோசியுங்கள்

தொழுகைக்கு அழைக்கும் பாங்குக்கு 7 சொற்றொடர்கள் . தொழுகையில் ஸஜ்தா செய்யும்போது ஏழு உறுப்புகள் (நெற்றி இரண்டு உள்ளங்கை இரண்டு கால் பெருவிரல்)
தொழுகையில் ஒவ்வொரு ரக்அத்தும் ஏழு நிலை . அதே தொழுகையில் திரும்பத்திரும்ப ஓதவேண்டிய வசனங்களும் 7

ஹஜ்ஜில் காபாவை சுற்றி ஏழு முறை தவாபு செய்யவேண்டும். தொங்கலோட்டம் என்னும் ஷஈ ஏழு தடவை ஓடவேண்டும் சைத்தானுக்கு ஏழு கற்களை கொண்டு எறியப்பட வேண்டும் .

நபி ஸல் மிஃராஜின் போது ஏழு வானங்களை கடந்து செல்கிறார்கள் அந்தந்த வானங்களில் நபிமார்களையும் சந்திக்கிறார்கள் . முதல் வானத்தில் ஆதம் அலை இரண்டாம் வானத்தில் யஹ்யா அலை , ஈஸா அலை மூன்றாம் வானத்தில் யூசுப் அலை நான்காம் வானத்தில் இத்ரீஸ் அலை ஐந்தாம் வானத்தில் ஹாரூன் அலை ஆறாம் வானத்தில் மூஸா அலை ஏழாம் வானத்தில் இப்ராஹிம் அலை .

1) வது வானம் மூமின்களது ஆன்மா தங்குமிடம் 2) வது வானம் ஆபிது என்னும் வணக்கசாலிகள் ஆன்மா தங்குமிடம் 3) வது வானம் ஜாஹிதுகள் ( துறவிகள் ) ஆன்மாக்கள் தங்குமிடம் 4) வது வானம் அஹ்லுல் மஆரிபத் என்னும் ஞானவான்களின் ஆன்மா தங்குமிடம் 5) வது வானம் நபிமார்களின் ஆன்மா தங்குமிடம் 6) வது வானம் ரசூல்மார்களின் ஆன்மா தங்குமிடம் 7) வது வானம் உலுல் அஸ்மான நபிமார்களின் ஆன்மா தங்குமிடம் (நபி ஸல் அவர்களின் ஆன்மா தங்குமிடம்)

1வது வானம் - வக்கீஃ (பச்சை மரகதம்) 2வது வானம் அர்ஃபாலூன் (வெள்ளி) 3வது வானம் ஃகைத் தூம் (சிவப்பு மாணிக்கம் ) 4வது வானம் (வெண்முத்து) 5வது வானம் . தப்ஃகாஉ ( தங்கம்) 6வது வானம் (மஞ்சள் மாணிக்கம் ) 7வது வானம் அரூபாஉ இலங்கும் ஒளி

" ஏழு வானங்களையும் அவைகளைப்போல் பூமியையும் அல்லாஹ் தான் படைத்தான் இவைகளில் தினசரி நிகழக்கூடிய எல்லா விஷயங்களைப் பற்றி கட்டளை இறங்கிக் கொண்டே இருக்கிறது நிச்சயமாக அல்லாஹ் சகலவற்றின் மீது ஆற்றலுடையவன் என்பதை நிச்சயமாக அல்லாஹ் தன் ஞானத்தால் எல்லாவற்றையும் அழகாக அறிந்துகொண்டிருக்கிறான் தான் என்பதையும் நீங்கள் திட்டமாக அறிந்து வேண்டும் என்பதற்காக இவைகளை படைத்தான் குர்ஆன் 65:12

ஏழு வகையான நப்ஸ் என்னும் மனம் 1) நப்ஸ் அம்மாரா
2) நப்ஸ் லவ்வாமா 3) நப்ஸ் முத்மயின்னா 4) நப்ஸ் முஸ்ஹிமா
5) நப்ஸ் ராலியா 6) நப்ஸ் மர்லியா 7) நப்ஸ் காமிலா

ஏழு வகையான சொர்க்கம் 1) ஜன்னத்துல் ஃ பிர்தௌஸ் 2) ஜன்னத்துல் அதன் 3) ஜன்னத்துல் நயீம் 4) தாருல் ஃ குல்து 5) ஜன்னத்துல் மர்வா 6) தாருஸ்ஸலாம் 7) ஜன்னத்துல் இல்லியீன்

ஏழு பொருட்களில் ஒளியை ஏற்படுத்துமாறு நபி (ஸல்) பிரார்த்தனை செய்தார்கள் : " என் நரம்பிலும், என் சதையிலும் , என் ரத்தத்திலும், என் ரோமத்திலும் என் மனதிலும் என் நாவிலும் என் சருமத்திலும் " புகாரி 63 16

குர்பானி ஒட்டகம் மாடு 7 பங்கு கொடுக்கலாம். ஒரு மாட்டின் விலை 7000 ஆக இருந்தால் 7 பேர் சேர்ந்து ஆளுக்கு ஆயிரம் ரூபாய் ஏழு பங்கு வைக்கலாம் ஆனால் இதே ரூ 7000 மாட்டை மூன்று பேர் பங்கு வைத்து 2333 , 2333, 2333 என்று மூன்று பேரும் 3 பங்காக பிரித்துக்கொள்ளக் கூடாது காரணம் அது ஒட்டகமாகவோ மாடாகவோ இருந்தால் ஏழு பங்குதான் வைக்கப்பட வேண்டும் . பின் எப்படி மூன்று பேர் பங்கு வைத்துக்

கொள்வது ? முதல் நபர் மூன்று பங்கையும் மற்ற இருவர் தலா இரண்டு பங்கையும் பிரித்துக்கொள்ள வேண்டும் ஆக மொத்தத்தில் 7 பங்குதான் வைக்கப்படவேண்டும் .

தினமும் 7 அஜ்வா பேரித்தம் பழம் சாப்பிடுகிறவர்களுக்கு அந்த நாள் எந்த விஷமும் இடரளிக்காது. எந்த சூனியமும் அவருக்கு இடையூறு செய்யாது புகாரி 5445

ஆது சமூகத்தாரை ஏழு இரவுகளும் எட்டு பகல்களும் காற்றை சுழற்றி சுழற்றி அடித்து அவர்களை அளித்ததாக குர்ஆன் 69: 7

நபி ஸல் தன் இறுதி ஐந்து நாட்களுக்கு முன்பாக அதாவது புதன்கிழமை உடல் நெருப்பாய் கொதித்தது உடல் வலியும் அதிகமானது அப்போது பல கிணறுகளிலிருந்து தண்ணீர் எடுத்து ஏழு துருத்திகளில் நிரப்பி என்மீது ஊற்றுங்கள் . தான் இறப்பதற்கு முன்பாக ஏழு தங்கக் காசுகளையும் தர்மம் செய்தார்கள் .

தஜ்ஜாலைப் பற்றி அச்சம் மதினாவுக்கு நுழையாது அன்றைய தினம் மதீனாவுக்கு ஏழு வாசல்கள் இருக்கும் ஒவ்வொரு வாசல்களிலும் 2 வானவர்கள் இருப்பார்கள் புகாரி 1879

பிறரின் நிலத்தில் ஒரு பகுதியை அபகரித்தவர் ஏழு நிளங்களை மறுமையில் கழுத்தில் மாலையாக கட்டி தொங்க விடப்படுவார்
புகாரி 2452

பிறரின் நிலத்தில் ஒரு பகுதியை அபகரித்தவர் ஏழு பூமிக்குக் கீழே அழுந்திப் போய்விடுவார் புகாரி 2454

நடைபாதை விஷயத்தில் மக்கள் சச்சரவு செய்தபோது ஏழு முழங்கள் நிலத்தை பொது வழியாக போக்குவரத்துக்கு விட்டுவிடவேண்டும் நபி ஸல் புகாரி 2473

ஒரேயொரு வட்டார மொழி வழக்கு படி ஜிப்ரீல் திருக்குர்ஆனை எனக்கு ஓத கற்று தந்தார் ஆனால் நான் அதை இன்னும் பல வட்டார மொழி வழக்குகளின் படி எனக்கு ஓத கற்று தருமாறு அவரிடம் கேட்டேன் அவர் எனக்கு ஏழு வட்டாரமொழி வழக்குகள் அளவிற்கு வந்து நின்றது புகாரி 3219

பூமியில் உள்ள மரங்கள் செடிகள் அனைத்தும் எழுதுகோலாகவும் கடல்நீரை மையாகவும் வைத்து அது தீர்ந்து பின்னும் #ஏழுகடல் நீரையும் மையமாக வைத்து எழுதிய போதிலும் அல்லாஹ்வுடைய வசனங்கள் எழுதி முடிவு பெறாது நிச்சயமாக அல்லாஹ் அனைத்தையும் மிகைத்தவனும் ஞானமுடையவனாகவும் இருக்கின்றான் குர்ஆன் 31:27

அடுத்து எழுபது

நரகத்துக்கு எழுபது 3000 வடங்கள் பூட்டப்பட்டிருக்கும் . மாலிக் அலை அவர்கள் நரகத்தை அல்லாஹுத்தஆலாவின் சமூகத்தில் இழுத்துக்கொண்டு போகும் படி ஜபானியர்களுக்கு உத்தரவு வழங்குவார்கள் ஜபானியர்கள் மனிதர்களிலும் ஜின்களிலும் 40,000 பங்கு அதிகமான வலிமை உள்ளவர்கள் . இவர்கள் ஒவ்வொரு அணியாக 7000 அணிகள் நின்று நரகத்தை இழுப்பார்கள் அதனை அர்ஷ்க்கு இடதுபுறம் நிறுத்துவார்கள்

"நிராகரிப்பவர்களுக்கு அந்நாளில் நரகத்தையே நாம் நிச்சயமாக அவர்கள் முன்பாக ஆக்குவோம் குர்ஆன் 18 : 100

சுவனத்து மாளிகைகள் அஸ்திவாரம் தோண்டாமல் ஆகாயத்தில் நின்று இலங்கிக் கொண்டிருக்கும் ஒரே ஒரு முத்தினால் அமைக்கப்பட்டு அதன் உள்ளே 70 மாணிக்க வீடுகள் இருக்கும் ஒவ்வொரு வீட்டிலும் 70 அறைகளில் ரத்தினங்களால் பதிக்கப்பட்டிருக்கும் ஒவ்வொரு அறையிலும் 70 சந்தன மஞ்சங்கள் போடப்பட்டிருக்கும் ஒவ்வொரு மஞ்சத்திலும் பட்டடைககளான 70 விரிப்புகள் விரிக்கப்பட்டு இருக்கும் ஒவ்வொரு விரிப்பிலும் ஒரு ரம்பையும் 70 ஆண் அடிமையும் 70 பெண் அடிமையும் சேவகம் செய்ய காத்திருப்பார்கள் 70 தாம்பாளங்களில் ஒரு தாம்பாளத்திற்கு 70 விதமான உணவுகள் ஒரே ஒரு சுவனவாசிக்கு கொடுக்கப்படும்.

அப்துல்லாஹ் இப்னு உபை முஸ்லிம் மாறி வேடம் தரித்த நயவஞ்சகன் அதாவது முனாபிக் நபி ஸல் அவர்களுக்கு பெரும் தொல்லை கொடுத்துவந்தவன் . ஆனால் அவன் இறந்ததும் அவருடைய மகன் தம் தந்தையார் ஈடேற்றமடைய நபி ஸல் அவர்களது சட்டையை கொடுத்து உதவவேண்டும் என்றும் அதைக் கொண்டு தம் தந்தையின் பிரேதத்தை சுற்றும் கபன் துணியாக அணிவிக்கப் போவதாகவும் அத்துடன் தன் தந்தையின் பிரேத அடக்கத்தை உடனிருந்து நடத்தித் தர வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார் நபி ஸல் தன் சட்டையை கொடுத்ததோடு அல்லாது பிரேத அடக்கத்தின் போது அப்துல்லாஹ் இப்னு உபை காக பிரார்த்தனை செய்வதற்கு உடன்பட்டு எழுந்தார்கள் அப்போது உமர் ரலி அவர்கள் நபி ஸல் அவர்களின் மேலான மேலாடையை பிடித்துக்கொண்டு யாரசூல்லாஹ் ! இறைவன் தன் வேதத்தில்

"நபியே நீங்கள் அவர்களுக்காகப் பாவ மன்னிப்பு கோரினாலும் அல்லது நீங்கள் அவர்களுக்கு பாவமன்னிப்பை கோராவிட்டாலும் இரண்டும் சமம்தான் ஏனென்றால் அவர்கள் மன்னிக்கும்படி நீர் எழுபது தடவை மன்னிப்பு கோரினாலும் நிச்சயமாக அல்லாஹ் அவர்களை மன்னிக்க மாட்டான் குர்ஆன் 9:80

என்ற குர்ஆன் வசனத்தை உமர் ரலி ஓதிக் காட்டினார்கள் அப்போது நபி ஸல் இறைவன் எழுபது தடவை மன்னிப்பு கேட்டாலும் கூட மன்னிக்க மாட்டேன் என்று சொல்கிறான் அல்லவா நான் 70 தடவைக்கும் அதிகமாக அவன் சார்பில் நான் மன்னிப்பு கேட்கிறேன் என்று பதில் சொன்னார்கள்.

பனீ இஸ்ரவேலர்கள் நபி மூஸா அலை அவர்களிடம் இறைவன் உங்களிடம் பேசுவதே நாங்களும் செவியேற்க வேண்டும் என்று அடம் பிடித்தனர் நபி மூஸா அலை அவர்கள் பனீ இஸ்ரவேலர்களில் 70 பேர்களை தேர்ந்தெடுத்து தூர் ஸீனா மலைக்கு கூட்டி சென்றார்கள். நபியவர்கள் மலையை நெருங்கியதும் வேகத்தில் தூண்கள் போன்று வெண்மேகம் அவர்கள்மீது சூழ்ந்தது மொத்த மலையையும் அது மூடிக்கொண்டது

தன்னுடன் வந்த 70 பேர்களையும் பலரும் மேகத்திற்குள் புகுந்துகொள்ள அழைத்தார்கள் அவர்களும் பயந்த வண்ணம் நபியின் அருகிலேயே மேகத்துக்குள் நின்றனர் பிறகு மூஸா அலை அவர்கள் இறைவனிடம் பேசினார்கள்

நபியவர்களிடம் இறைவன் பேசும்போதெல்லாம் நபியின் முகத்தில் இலங்கும் படியான பிரகாசத்தை 70 பேர்களால் ஏறிட்டு பார்க்க முடியவில்லை அத்தனை பிரகாசம் அத்தனை பிரகாசம் இறைவன் நபியவர்களும் பேசிய பேச்சு 70 பேர்களும் செவிஏற்றனர் உடனே பனீஇஸ்ரவேலர்கள் இறைவனின் பேச்சைத்தான் கேட்குமே தவிர இறைவனை நாங்கள் பார்க்காமல் உம்மை விசுவாசிக்க மாட்டோம் என்றனர்

அன்றி நீங்கள் மூஸாவை நோக்கி "நாங்கள் அல்லாஹ்வை கண்கூடாக காணும் வரையில் உங்களை நம்ப மாட்டோம் " என்று கூறிய போது நீங்கள் பார்த்துக்கொண்டிருக்கும்போதே அவர்களே பெரும் சப்தம் பீடித்துக்கொண்டது குர்ஆன் ( 2:55)

அப்போது இறைவன் அஸ்ஸா இகத் என்ற கரிக்கக் கூடிய ஒருவகை நெருப்பு அதில் சத்தமும் இருக்கும் வானத்தில் இருந்து கீழே இறக்கி புத்தியையும் அறிவையும் போக்கி மரணத்தை உண்டாக்கக்கூடிய பயங்கரமான நெருப்பை அவர்கள்மீது ஏவினான் 70 பேர்களும் பிணமாக கிடந்தனர் இதனை பார்த்து மூஸா அலை பதறியடித்து அழுதார்கள் அவர்களை மீண்டும் உயிர் பெற்று தருமாறு இறைவனிடம் மன்றாடினார்கள் அந்த எழுபது பேர்களையும் அல்லாஹ் மறுபடியும் உயிர்ப்பித்து கொடுத்தான் .

அடுத்து 700

( நபியே!) அல்லாஹ்வுடைய பாதையில் தங்களுடைய பொருளைச் செலவு செய்பவர்களுடைய பொருளின் உதாரணம் ஒரு வித்தின் உதாரணத்தை ஒத்திருக்கிறது அந்த வித்து ஏழு கதிர்களை தந்தது ஒவ்வொரு கதிரிலும் நூறு வித்துக்கள் (அதாவது 700 வித்துக்கள் ஒரு வித்திலிருந்து உற்பத்தியாயின ) அல்லாஹ் தான் விரும்பியவர்களுக்கு இதே பின்னும் இரட்டிப்பாக்குகிறான். ஏனெனில் அல்லாஹ் கொடையில் மிக்க விசாலமானவனும் அறிபவனாக இருக்கிறான் குர்ஆன் 2:261

அடுத்து 7000

நரகவாசிகளை வதைப்பதற்காக ஜபானியர்களில் அத்யா பீல் என்ற மலக்கு ஒருவர் உண்டு .அவர் 500 வருட பிரயாண தூரம் உயரம் உள்ளவர் அவருக்கு 7 ஆயிரம் தலைகள் இருக்கும் தலை ஒன்றுக்கு 7000 முகம் இருக்கும் முகம் ஒன்றுக்கு 7000 வாய்களும் வாய் ஒன்றுக்கு பற்களும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பெரிய மலைகள் போல் இருக்கும் இன்னும் அவருக்கு 7 ஆயிரம் கைகள் இருக்கும் கை ஒன்றுக்கு 7 ஆயிரம் விரல்கள் இருக்கும் விரல் ஒன்றுக்கு 80 வருட பயண தூரம் நீளம் உள்ள 7 ஆயிரம் விஷப்பாம்புகள் இருக்கும் அவரது வலது கையில் அக்னி தடி ஒன்று பிடித்திருப்பார் அதன் தலையிலும் 7000 பாம்புகள் இருக்கும். ஏழு வானத்தில் உள்ளவர்களும் 7 பூமியில் உள்ளவர்களும் ஒன்றுகூடி நகர்த்தினாலும் அந்த இரும்பு தடிய அசைக்கவே முடியாது இது பற்றி குர்ஆனில்

அவர்களுக்காக இரும்புச் சம்மட்டிகளும் உண்டு அதனைக் கொண்டு அவர்களை அடிக்கப்படும் குர்ஆன் 22: 21

அடுத்து 70000

அந்த நரகத்திற்கு ஏழு வாசல்கள் இருக்கின்றன ஒவ்வொரு வாசலிலும் செல்லக்கூடிய வகையில் அவர்கள் பல பிரிவுகளாக பிரிக்கப்பட்டு விடுவார்கள் குர்ஆன் 15 : 44

நரகத்திற்கும் ஏழு வாசல்கள் இருக்கும் ஒரு வாசலில் இருந்து மற்றொரு வாசலுக்கு போகும் தூரம் 500 வருட பிராயண தூரம் உள்ளது
முதல் தட்டு நரகத்திலிருந்து ஒவ்வொரு தட்டு நரகத்திலும் 70 பங்கு வேதனை அதிகமாகிக் கொண்டே இருக்கும் ஒவ்வொரு நரகத்திலும் 70,000 அக்னி மலைகள் உண்டு. ஒவ்வொரு மழையிலும் 70 அக்னிப் பிழம்புகள் இருக்கும் ஒவ்வொரு பிழம்பிலும் 70,000 அக்னி கால்வாய்கள் இருக்கும் ஒவ்வொரு கால்வாய்களும் 70,000 ஓடைகள் பிரிந்து ஓடும் ஒவ்வொரு ஓடைக்கரையில் 70,000 அக்கினி மாளிகைகள் இருக்கும் ஒவ்வொரு மாளிகையிலும் 70 ஆயிரம் அறைகள் இருக்கும் ஒவ்வொரு அறையிலும் 70 ஆயிரம் பாம்புகள் ஒட்டகம் மாதிரி இருக்கும் 70 ஆயிரம் தேள்களும் கோவேறு கழுதை மாதிரி இருக்கும் அந்த தேள்கள் ஒவ்வொன்றிலும் 70,000 கொடுக்குகள் இருக்கும் ஒவ்வொரு கொடுக்கிலும் 70 ஆயிரம் கரணைகள் இருக்கும் ஒவ்வொரு கருணையிலும் 70 ஆயிரம் முட்கள் இருக்கும் ஒரு முள் பட்டால் 70 ஆயிரம் விதமான வேதனைகள் உண்டு .

நிச்சயமாக நம்மிடத்தில் அவர்களுக்கு விலங்குகளும் இருக்கின்றன நரகமும் இருக்கின்றது குர்ஆன் 73 : 12

மஹ்ஷர் மைதானத்தில் அல்லாஹ் கூறுவான் என்னுடைய ஹபீபு முஹம்மதுக்காக ஒரு மேடை போடுங்கள் என அல்லாஹுதஆலா மலக்குமார்களுக்கு கட்டளையிடுவான் உடனே அர்ஷ் பக்கத்தில் ஒளியினால் ஒரு மேடை போடப்படும் அதனருகில் லிவாவுல்ஹம்து என்னும் கொடி நாட்டப்படும் அந்தக் கொடிக்கு பின்னே 70,000 கொடிகளும் 70 ஆயிரம் மலக்குகளும் அணிவகுத்து நிற்பார்கள் ஒவ்வொரு அணியிலும் ஏழு லட்சம் மலக்குகள் இருப்பார்கள் .

அன்னை பாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் எழுபதினாயிரம் ஹூருல் ஈன்கள் சுற்றி சூழ முதல் கட்டமாய் மின்னல் வேகத்தில் சிராத்துல் முஸ்தகீம் பாலத்தை கடந்து விடுவார்கள் அந்த முதல் கூட்டத்தில் சாலிஹான பெண்களும் இருப்பார்கள் . உடனே இறைவன் அன்னை பாத்திமா ரலி அவர்கள் சுவர்க்கத்தில் நுழைய போகிறார்கள் எல்லோரும் தலையை கவிழ்த்து விடுங்கள் என்று கட்டளையிடுவான் .

கௌதர் நதி இதன் ஆழம் 70,000 காத அளவு உள்ளது இதன் இரு மருங்கிலும் முத்தினாலும் மரகதத்தினாலும் மாணிக்கத்தினாலும் ஆனது இதன் இருமருங்கிலும் முத்துக் கூடாரகள் போடப்பட்டிருக்கும் அடுத்து ஏழு

லட்சம்நபி ஸல் கூறினார்கள் நிச்சயமாக என் சமுதாயத்தாரில் எழுபதாயிரம் பேர் அல்லது 7 லட்சம் பேர் ஒருவரை ஒருவர் பற்றிக்கொண்டு ஒரே சீராக விசாரணை எதுவுமின்றி சொர்க்கத்தில் நுழைவார்கள் அவர்களின் முகங்கள் பவுர்ணமி இரவில் முழு நிலவபிரகாசிப்பது போன்று பிரகாசிக்கும்
புகாரி 6543

விஞ்ஞானத்திற்கு தெரியாத குர்ஆனின் விஞ்ஞானங்கள்
(சொற்பொழியின் சாரம்சம்) 22/07/2020



https://m.facebook.com/story.php?story_fbid=2642848449307827&id=100007480923921

இயற்கையில் உள்ள மர்மங்களை கண்டுபிடிப்பதே விஞ்ஞானத்தின் நோக்கம். இதற்கு விஞ்ஞானத்திற்கு தேவை கற்பனை கலந்த கேள்விகளே. இருந்த இடத்திலேயே எல்லாம் தேவைப்பட்ட எல்லாம் கிடைக்கவேண்டுமென்றால் என்ன செய்ய வேண்டும் என்பதை கேள்வி கேட்டு அதற்குரிய பதிலை கண்டு பதிலுக்கு ஏற்ற விஞ்ஞான தத்துவ விதிகளை அமைத்து அதை செயல்படுத்துவதுதான் விஞ்ஞானம் .

தூரத்திலுள்ள பொருட்களை தெள்ளத்தெளிவாக அருகில் பார்ப்பது என்பது கழுகியின் இயல்பு இதைத்தான் கழுகு பார்வை என்கிறார்கள் . இதை டெலஸ்கோப் வழியாக விஞ்ஞானம்
சாதித்துள்ளது.

வவ்வாலுக்கு கண் உண்டு ஆனால் பார்வை இல்லை அது தான் எழுப்பும் க்ரீச் என்ற சப்த ஒலி ஒன்றரை லட்சம் ஹெர்ட்ஸ் சப்த அலையை ஏற்படுத்தி சுவர் போன்ற தடுக்கும் பொருளின் மீது செலுத்தி அது திரும்ப வரும் நேரத்தை அதற்குள் கணக்கிட்டு வெளவால் சுவற்றில் மோதாமல் பறக்க முடிகிறது. இந்த தத்துவத்தை விஞ்ஞானம் பயன்படுத்தி கடலின் ஆழத்தை அல்ட்ரோ சோனிக் ஒலி அலையை கடலினுள்களை செலுத்தி கடலில் அடித்தளத்தைத் தொட்டு திரும்ப வரும் நேரத்தை கணக்கிட்டு கடலின் ஆழத்தை விஞ்ஞானம் அறிந்து கொள்கிறது. இது மட்டும் அல்ல, வவ்வால் பற்றி குர்ஆனில் நபி ஈஸா (அலை) அவர்கள் சொல்வது போல்

"நான் உங்கள் இறைவனிடமிருந்து ஓர் அத்தாட்சி உடன் நிச்சயமாக வந்துள்ளேன் நான் உங்களுக்காக களிமண்ணால் ஒரு பறவையின் உருவத்தை (வெளவால்) உண்டாக்கி நான் அதில் ஊதுவேன் அல்லாஹ்வின் அனுமதியைக் கொண்டு உயிர் உடைய பறவை ஆகிவிடும். பிறவிக் குருடர்களையும் வெண் குஷ்டரோகிகளையும் குணப்படுத்துவேன் .அல்லாஹ்வின் அனுமதியைக் கொண்டு இறந்தவரையும் உயிர்ப்பிப்பேன் " - குர்ஆன் (3:49)

வெளவாவில் 2000 வகைகள் உள்ளன. பறப்பதால் பறவை அல்ல. அது ராத்திரியில் மிருகம். இரவில்தான் அதற்குரிய உணவான பூச்சிகள் கொசுக்கள் நிறைய கிடைக்கின்றன . பகல் நேரத்தில் தலைகீழாக தொங்கிக் கொண்டு தூங்கும் . குட்டி போட்டு பால் கொடுக்கும். பறப்பதால் பறவைகள் முட்டையிட்டு குஞ்சு பொரிக்காது.

வவ்வாலுக்கு நோய் எதிர்ப்பு சக்தி அதீதமாக பெற்றுள்ளது என்பதாக நவீன விஞ்ஞானம் கண்டுள்ளது. வவ்வால்கள் சுமார் 65 மில்லியன் ஆண்டுகளாக இந்த உலகில் வாழ்ந்து வருகின்றன. ஆரம்ப காலத்தில் இந்த வவ்வாலுக்கு பறக்கும் திறன் கொண்டதாக இல்லை அதன் பிறகு ஏற்பட்ட பரிணாம வளர்ச்சியில் தான் வவ்வால்கள் பறக்க ஆரம்பித்தன.

இவை பறக்க ஆரம்பித்ததும் நோயெதிர்ப்பு சூப்பர் சக்தி இதற்கு கிடைத்துள்ளதாக ஆஸ்திரேலியா ஆய்வாளரான விஞ்ஞானி கிறிஸ்டோபர் கால்வெட்டு தெரிவித்துள்ளார் சார்ஸ் மற்றும் எபோலா உள்ளிட்ட பல கொடிய நோய்களை தாங்கிச் செல்லக்கூடிய வவ்வால்களை மிகச் சில நோய்கள் மட்டுமே பாதிக்கின்றன . சிறிய அளவுடைய வவ்வால்கள் நோய்வாய்பட்டு இறப்பது என்பது அபூர்வமாக இருக்கிறது. வயதாகி இறப்பதும் அல்லது வேறு காரணங்களால் பெரும்பாலும் இவை கொல்லப்பட்டு இறக்கின்றன. இதற்கு காரணம் அதன் உடலில் உள்ள நோய் எதிர்ப்பு சக்தி.

சுவராசியமாக வவ்வால்களின் நோய் எதிர்ப்பு சக்தியானது அவற்றை தொற்று நோய்களிலிருந்து காப்பாற்றுவதாக மட்டுமல்லாமல் பறப்பதனால் உண்டாகும் இதர உளைச்சல் களிலிருந்து பாதுகாக்கவே பரிணாமத்தில் மாற்றம் அடைந்திருக்கக்கூடும் என்கிறார் ஆய்வாளர் கல்வெட்டு .

மிக நீண்ட தூரம் பறக்க கூடிய ஒரு பாலூட்டி வவ்வால்கள் சராசரியாக ஒரு நாளைக்கு தன் அளவு உள்ள பிற பால் ஊட்டிகளை விட சுமார் இருபது மடங்கு அதிகமான சக்தியை அதிகமாக செலவு செய்கின்றனவாம் . மிக அதிகமான சக்தியை உற்பத்தி செய்வதால் அவ்வாறு உடலில் " ரியாக்டீவ் ஆக்ஸிஜன் ஸ்பீஷீஸ் " என்னும் நச்சுப் பொருட்களும் மிக அதிகமான அளவில் உண்டாகின்றன இந்த நச்சுப் பொருட்கள் உடலில் உள்ள டிஎன்ஏவை சேதப்படுத்துகின்றன . இவ்வாறு சேதப்படுத்தியதால் ஏற்படும் பாதிப்புகளான புற்றுநோய் மற்றும் முன் முதிர்வு அடைதல் போன்ற பிரச்சினைகள் கண்டிப்பாக வவ்வாலை தாக்க வேண்டும் ஆனால்

இந்த நோய்கள் எதுவும் வவ்வாலை தாக்கவில்லை இதற்கு வவ்வாலின் உடலில் மாதிரியான வழி முறையைப் பயன்படுத்துகின்றன என்பதை கண்டறியும் நோக்கத்துடன் மிகப்பெரிய ஆய்வுகள் நடைபெறுகிறது .

வௌவால்களில் மீதான இந்த ஆய்வில் கிடைத்திருக்கும் நோய் எதிர்ப்பு சக்தி தொடர்பான விஞ்ஞான உண்மைகளைக் கொண்டு மனித நோய் எதிர்ப்பு சக்தியை வவ்வால்களின் நோய் எதிர்ப்பு சக்தியை போல மாற்ற முடியுமா என்று முயற்சி செய்து பார்த்து இருக்கிறார்கள் இதன்மூலம் மனிதர்களுக்கும் பல கொடிய நோய்களை எதிர்க்கக்கூடிய சூப்பர் நோய் எதிர்ப்பு சக்தியை உருவாக்கும் வாய்ப்பு கிடைக்கலாம் என்று நம்புகிறார் விஞ்ஞானிகள்

நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் குணப்படுத்தவே முடியாத பிறவிக் குருடர்கள் நடக்கவே முடியாத பிறவி முடவர்கள் குணப்படுத்தவே முடியாத வெண்குஷ்டரோகம் இவற்றையெல்லாம் குணப்படுத்தி காட்டினார்கள் இதற்கெல்லாம் மேலாக மரணித்தவர்களை கூட மீண்டும் உயிர்ப்பித்து காட்டினார்கள் இதனால்தான் ஈஸா அலை அவர்கள் நோயே வராத நோய் எதிர்ப்பு சக்தியை உள்ளடக்கிய ஜீவனான வவ்வாலை களிமண்ணால் செய்து பறக்கவிட்டு காண்பித்து இதில் இருக்கிறது சூட்சமம் என்று மருத்துவ உலகத்திற்கு அடையாளம் காண்பித்தார்களா என்னவோ ? குர்ஆன் வசனமும் 3:49 இதுபற்றி கூறியுள்ளது.

அடுத்து ஸ்காட்லாந்தை சேர்ந்த எடின்பர்க் பல்கலைக்கழகத்தின் விலங்கு ஆய்வாளர் வில்மட் மற்றும் கேம்பல் போன்றவர்கள் ஆண் வர்க்கமே இல்லாத சாண்டிலியன் தாவரம் மற்றும் மீன்களில் அமேசான் மாலி மற்றும் சாலமண்டர் மீன், அமெரிக்க பாலைவனத்தில் சில பல்லி இனங்கள் முதலியவை ஆண்வர்க்கம் இல்லாமல் இனப்பெருக்கம் செய்கின்றன என்பதை ஆய்வு செய்து, 1996 ஜூலை மாதம் 5-ஆம் தேதி டோலி என்கிற ஆட்டுக்குட்டியை ஆண் துணை இல்லாமல் உருவாக்கினார்கள் .இந்த ஆட்டுக்குட்டியானது பெண் செம்மறி ஆட்டின் பால் சுரப்பியில் இருந்து மரபணுவை எடுத்து இன்னொரு கருப்புநிற செம்மறியாட்டின் பால் சுரப்பியில் உள்ள மரபாணுடன் சேர்த்து மூன்றாவது பெண் ஆட்டின் கர்ப்பப் பையில் வைத்து கரு வளரச் செய்து அந்த மூன்றாவது ஆடு அதுவும் ஒரு பெண் குட்டியை ஈன்றது இதுதான் "டோலி " என்கிற பெண்ஆட்டுக்குட்டி இந்த முறைக்கு குளோனிங் என்று பெயர்

ஆனால் இறைவன் "மரியம் அலை எனக்கு எவ்வாறு சந்ததி உண்டாகும் எம் மனிதனும் என்னை தீண்டியது இல்லையே, நான் கெட்ட நடத்தை உள்ளவளும் அல்லவே என்று கூறினார்
(அல்குர்ஆன் 19:20)
قَالَ كَذٰلِكِ قَالَ رَبُّكِ هُوَ عَلَىَّ هَيِّنٌ وَلِنَجْعَلَهٗۤ اٰيَةً لِّلنَّاسِ وَرَحْمَةً مِّنَّا وَكَانَ اَمْرًا مَّقْضِيًّا
“அவ்வாறேயாகும்; “இது எனக்கு மிகவும் சுலபமானதே; மனிதர்களுக்கு ஓர் அத்தாட்சியாகவும், நம்மிடமிருந்து ஒரு ரஹ்மத்தாகவும் நாம் அவரை ஆக்குவோம்; இது விதிக்கப்பட்ட விஷயமாகும்” என்று உம் இறைவன் கூறுகிறான்” எனக் கூறினார்.
(அல்குர்ஆன் : 19:21)

இதன்மூலம் ஈஸா அலை அவர்களின் பிறப்பு குளோனிங் முறையில் அல்ல என்பதை விளங்கிக் கொள்ள வேண்டும் குளோனிங் முறையில் பெண் ஆடு மூன்றும் பயன்படுத்தப்பட்டுள்ளது அவைகளின் மூலம் பெறப்பட்ட ஆடும் பெண் இனத்தையே சேர்ந்ததாகும் .மேலும் ஈஸா அலை அவர்களின் பிறப்பு இறை வல்லமையை காட்டுவதற்காக இறைவன் செய்த அத்தாட்சியாகும்.

அடுத்து செயற்கை சுவாசம்
1921 ஃபார்ரெஸ்ட் பேர்ட் என்பவர் முதல் உலக யுத்தத்தில் விமானப்படையில் விமானியாக பணிபுரிந்தார் பல்லாயிரக்கணக்கான அடிகள் உயரத்தில் மூச்சுத்திணறலை சமாளித்துக்கொண்டு ஆகாய விமானத்தில் பறக்கும் அனுபவம் பேர்டின் கற்பனை வானின் உயர எல்லையில் காற்றின் அழுத்தம் மிக மிக குறைவு மூச்சு முட்டலோடு விமானத்தை ஓட்டும் போது கவனம் சிதறி விபத்து ஏற்பட்டு விடும்.

வானத்தின் மிக உயரத்தில் காற்றின் அழுத்தம் குறைவு என்பதை குர்ஆனில் அல்லாஹ் " எவரை அவருடைய வழிகேட்டிலேயே விட்டு விட விரும்புகிறானோ அவருடைய இருதயத்தை வானத்தில் ஏறுபவனின் இருதயத்தை போல கஷ்டப்பட்டு சுருங்கும்படி ஆக்கி விடுகிறான்" . குர்ஆன் 6 : 12

மூச்சு திணறலுக்காக விமானியாக இருந்த பேர்ட் அதனை இராஜினா செய்து விட்டு மருத்துவத்தில் சேர்ந்து படித்து சுவாசித்தல் பற்றி தெரிந்து கொண்டார். 1954-55 பேர்ட் கார்பொரேஷன் என்னும் நிறுவனத்தை நிறுவி அதன் செயற்கை சுவாச உபகரணத்தை தயாரிக்க ஆரம்பித்தார் . செயற்கை சுவாச கருவி தயாரிக்க ஆரம்பித்தது என்னவோ போர் விமானம் உயரத்தில் பறக்கும் போது அதனை ஓட்டும் பைலட்டுகளுக்கு ஏற்படும் மூச்சுதிணறல் எதிர்கொள்ளத்தான் .ஆனால் கடும் மூச்சுத் திணறலால் போராடும் நோயாளிகளுக்கு உதவ இது வழிவகுக்கும் என்பது இறைவனுடைய நாட்டம். ஆகவேதான் வானத்தின் மிக உயரத்தில் காற்றின் அழுத்தம் மிகக்குறைவாக இருப்பது கூட செயற்கை சுவாசத்தை மனிதன் கண்டு பிடிப்பதற்காக தான் இறைவன் வைத்தானோ என்று எண்ணத் தோன்றுகிறது .

அடுத்து இரு கடல்கள் l6 நூற்றாண்டின் ஆரம்பத்தில் கடல் ஆராய்ச்சியாளர் பிரெஞ்சு நாட்டு கடல் அறிஞர் ஜாக்கோஸ் தன் கடல் பயணத்தில் முகமூடி விலக கடல்நீர் தன் வாயில் நுழைய கண்டுபிடிக்கப்பட்டதுதான் கடல் ஆறு.

நிலத்தின் இரு கரைகளை கொண்டு ஓடும் நிலஆறுகள் .ஆனால் கடல் ஆறுகள் கடல் நீரையே கரைகளாக கொண்டு ஓடும் விசித்திரமான ஆறுகள் . இதனை நீரோட்டங்கள் என்று விஞ்ஞானம் கூறினாலும் இதை கடல் ஆறு என்றே குறிப்பிடுகிறார்கள் .

சில ஆறுகள் வருடம் முழுவதும் வற்றாமல் ஜீவ நதியே போல் ஓடிக் கொண்டிருப்பவை இன்னும் சில கடல் ஆறுகள் கடலின் ஆழத்தில் அசந்து ஆடிக்கொண்டு ஓடுபவை இன்னும் சில ஆறுகள் காட்டாற்று வெள்ளம் போல் ஓடி மறைபவை.

கன்னியாகுமரி மாவட்டம் பெரிய காடு இது நாகர்கோவிலில் இருந்து 12 கிலோமீட்டர் தூரத்தில் உள்ள கடற்கரை கிராமம். இங்கு 2009 ஜனவரி 25 ல் கடல் நீர் உப்புத் தன்மை இல்லாமல் இனிப்பாக இருந்தது . காரணம் கடல் ஆறுகளில் ஒன்று இக்கிராமத்தின் கடற்கரை பக்கம் வந்திருக்கக்கூடும் என்பதாக பின்னர் அறியப்பட்டது இது பற்றி குர்ஆனில் அல்லாஹ்

"அவன்தான் இரு கடல்களையும் ஒன்று சேர்த்திருக்கின்றான் . ஒன்று மிக்க சுவையும் மதுரமான தண்ணீர் மற்றொன்று உப்பு கசப்பான தண்ணீர் இவை ஒன்றோடொன்று கலந்து விடாதிருக்கும் பொருட்டு இவை இரண்டுக்கும் இடையில் திரையையும் மீற முடியாத ஒரு தடையையும் ஏற்படுத்தியிருக்கிறான் குர்ஆன் 25 : 53

விஞ்ஞானம் இந்த இரு கடல்களும் சேராதிருக்கும் பொருட்டு ஒரு தடையையும் திரையையும் பற்றி இன்னும் சிந்தித்துக் கொண்டே இருக்கிறது காரணம் இவைபோன்ற தடையும் திரையும் விஞ்ஞானத்துக்கு கிடைத்தால் நீரியல் விஞ்ஞானத்துறை இன்னும் பல மாற்றங்கள் அடையக்கூடும் என்பதாக நம்புகிறார்கள் .

அடுத்து நபி மூஸா அலை அவர்கள் காலத்தில் பணக்கார வயோதிகர் ஒருவர் கொலை செய்யப்பட்டு பக்கத்து கிராமத்தில் வீசப்படுகிறார். அவருடைய தம்பி மக்கள் தன் பெரியப்பாவை கொன்றவர்களை கண்டுபிடித்து தருமாறு மூஸா அலை அவர்களிடம் முறையிடுகிறார்கள் மூஸா அலை இது விஷயமாக அல்லாஹ்விடம் கொலை குற்றவாளியை கண்டுபிடித்து தரும்படி இறைவனிடம் மன்றாடுகிறார்கள் இறைவன் ...

" மூஸா சமூகத்தாரிடம் நீங்கள் ஒரு பசுமாட்டை அறுக்க வேண்டும் என்று நிச்சயமாக அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிடுகின்றான் என்று சொன்னபோது அவர்கள் மூஸாவை எங்களை பரிகாசத்திற்கு ஆளாகின்றீரா ? என்று கூறினர் .

அப்பொழுது அவர் "அப்படிப் பரிகாசிக்கும் அறிவீனர்களில் ஒருவனாக நான் ஆகிவிடாமல் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகிறேன் குர்ஆன் 2:67

இம்மக்கள் மூஸாவிடம் மாட்டின் அடையாளங்கள் பற்றி அதிக விவரம் கேட்கிறார்கள் .அந்த விபரப்படி மாடு கிடைக்காவிட்டால் மாட்டை அறுக்காமல் இருப்பதற்காக அப்படிப்பட்ட மாடு எங்களுக்கு கிடைக்கவில்லை என்பதாக தெரிவிக்க நிறைய நிறைய கேள்வியை கேட்டார்கள் . இறுதியில் அத்தனை விபரங்களுடன் ஒரு அனாதை சிறுவனின் மாடு கிடைத்தது . அதை அதிக விலை கொடுத்து வாங்கி அம்மாட்டை அறுத்து அதன் ஒரு பாகமான நாக்கை கொண்டு கொலை செய்யப்பட்டவரின் மீது அடிக்க கொலைசெய்யப்பட்டவன் மீண்டும் உயிர்த்தெழுந்து தன்னை கொலை செய்தவர்கள் என்னுடைய தம்பி உடைய மக்கள் ஆவார்கள் இவர்கள்தான் என் சொத்துக்குஆசைப்பட்டு என்னை கொன்று விட்டார்கள் என்பதாக கூறி மீண்டும் அவர் மரணித்து விட்டார்

விஞ்ஞானத்திற்கு மாட்டின் ஒரு சதைத்துண்டு கொண்டு கொலை செய்யப்பட்டவர்கள் மீது அடித்தால் அவர் உயிர்த்தெழுவார் என்பது பற்றி தெரியாது இது விஞ்ஞானத்திற்கு அவசியப்பட்டாலும் இந்த யுக்தி இன்னும் கண்டுபிடிக்கப்படவே இல்லை.

## தோல் : சதையின் போர்வை

(சொற்பொழிவின் சாரம்சம்)22/07/2020




தோல் சதை பிண்டத்தின் போர்வை தோல். மனித உடலில் பெரிய உறுப்பு தோல்தான் . சராசரி மனிதனின் தோல் எடை சுமார் 27 கிலோ. தோலின் பரப்பளவு சுமார் 20 சதுரஅடிகள். தோலின் தடிப்பு சராசரி இரண்டு மில்லிமீட்டர். உள்ளங்கை பாதம் பிட்டம் போன்ற இடங்களில் இது இன்னும் கொஞ்சம் அதிகமாக இருக்கும். இந்த தடிப்பிற்குள் ஐந்து அடுக்குகள் தோலுக்கு உண்டு. உடைகளில் உள்ளாடை மேலாடை இருப்பது போல்

நமது தோளிலும் புறத்தோல் அகத்தோல் என்று இருக்கிறது. அகத் தோலுக்கு கீழே வேர்வை சுரப்பி, எண்ணெய் சுரப்பி, வாசனை சுரப்பி ,மற்றும் மிக முக்கியமான வலிஉள்வாங்கிகள் மற்றும் நிறைய தோல் சார்பு உறுப்புகள் உள்ளன . இந்த தோல் சார்பு உறுப்புகள் நமக்குச் செய்யும் பணிவிடை கொஞ்சம் நஞ்சமல்ல ; அல்லாஹ் நமது உடலை எப்படியெல்லாம் பாதுகாக்கிறான் என்பதற்கு மிகச் சிறந்த ஓர் அத்தாட்சி ஆகும் . தோல் நமது சதையின் போர்வை மட்டுமல்ல நமது வடிவத்திற்கும் பளபளப்பை கூட்டி அழகு ஊட்டுவதும் இந்த தோல்தான்.

"திட்டமாக நாம் மனிதனை மிக அழகான வடிவத்தில் படைத்தோம் "
குர்ஆன் (95 : 04 ) என்று கூறுவது கூட தோலால் அழகுப்படுத்தியது பற்றிதானோ ?

வேர்வை சுரப்பிகள் மிகவும் இன்ட்ரஸ்டிங்கானது . இதுதான் நம் உடம்புக்குள்ளேயே இருக்கும் ஏர்கூலர் . வெயில் சூடாகும் போதெல்லாம் இந்தச் சுரப்பிதான் வேர்வையை உடம்புக்கு வெளியே அனுப்புகிறது .உஷ்ணத்தால் வேர்வை நீர் ஆவியாகும் போது நமது உடம்பு குளிர்ச்சியடைந்து சமநிலை அடைகிறது இதனால் நம் உடம்பில் இருக்கும் தேவையில்லாத நீரை வெளியேற்றி சிறுநீரகத்திற்கும் இது நிறைய உதவி செய்கிறது
ஆனால் மழை காலத்தில் வியர்வை சுரப்பிகள் சிறுநீரகத்திற்கு உதவி செய்ய முடிவதில்லை இதனால் சிறுநீரகம் ஓவர்டைம் கொடுக்கிறது மழை காலங்களில் நாம் அடிக்கடி சிறுநீர் கழிப்பது இதனால்தான்

எண்ணெய் சுரப்பிகள் இந்த சுரப்பிகள் மட்டும் இல்லாவிட்டால் உடம்பில் எண்ணெய் பசையை இருக்காது உடம்பு முழுவதும் பாளம் பாளமாக வெடித்து விடும் அல்லாஹ்வுடைய பாதுகாப்பு ஏற்பாட்டை இதில் கவனிக்க முடிகிறது . ஆணும் பெண்ணும் பருவ வயதை கடக்கும்போது முகப்பரு வருவதற்கும் இந்த சுரப்பிதான் காரணம் பருவ வயதில்தான் இது அதிகமாக சுரக்கும் .'சுரக்கும் ' என்று சொல்வது கூட ஒரு வகையில் தவறு .காரணம் வேர்வை மாதிரி இந்த எண்ணெய் சுரப்பிகள் எந்த திரவத்தையும் சுரப்பதில்லை மாறாக இந்த எண்ணெய் சுரப்பிகளின் நுண்ணிய அறைகளை செல் உடைத்து கொழுப்பு மாதிரி மேல் தோலுக்கு வெளியே வரும்.

வாசனை சுரப்பி இது மிகவும் வசீகரமானது மனித இனம் அழியாமல் இருப்பதற்கு இந்த வாசனை சுரப்பி பெரும் சேவை செய்கிறது அதாவது மனிதனுக்கு இன உணர்ச்சியை உண்டாக்க இந்த வாசனை சுரப்பி ஒரு முக்கிய காரணம். இது இருப்பது கக்கம் இனவிருத்தி உறுப்பு என்று இரண்டு இடங்களில் மட்டும்தான் உள்ளது. பாலூட்டி இனத்தைச் சேர்ந்த எல்லா மிருகங்களுக்கும் இந்த வாசனைக்கு உண்டு என்றாலும் கஸ்தூரி மான்கள்தான் இந்த வாசனை சுரப்பிற்கு சிறப்பு மிக்க ஓர் இலக்கிய அந்தஸ்து கிடைத்துள்ளது . பல சமயங்களில் பெண் மான்களுக்கு இன உணர்ச்சி அதிகரிக்கும் போது பெண் மானின் உடம்பில் இருக்கும் வாசனை சுரப்பி சுரந்து 2 அல்லது 3 கிமீ சுற்றளவில் காட்டையே கமகமக்க வைத்து விடும் அதோடு ஆண்மான் எங்கு இருந்தாலும் இந்த வாசனை பட்டதும் உடனே வந்துவிடும்.

இது மாதிரியே மனிதர்களிடமும் வாசனை சுரப்பிகள் சுரந்து ஒவ்வொரு மனிதர்களிடமும் மணம் வீசும் அந்த மணத்தை அவர்களிடம் நெருங்கிப் பழகி கொள்பவர்கள் எளிதில் இனம் கண்டு கொள்வார்கள். அவர்களிடம் எந்நேரமும் கஸ்தூரி வாசனை கமழ்ந்து கொண்டே இருக்கும். நபி ஸல் அவர்கள் இருந்த இடத்தில் வேறு யாரேனும் வந்தால் வந்தவர்கள் அந்த இடத்தின் வாசனையை நுகர்ந்து கொண்டு நபி அவர்கள் இங்கு வந்தார்களா என்று கேட்டு விடுவார்கள் அந்த அளவிற்கு அவர்களின் வாசனை வெளிப்பட்டது

குர்ஆனில் நபிமார்களின் வாசனை பற்றி அல்லாஹ் குறிப்பிடுகிறான் நபி யூசுப் அலை அவர்களின் வாடையை அவர்களின் தந்தை நபி யாகூப் அலை அவர்களுக்கு ரொம்பவும் பரிச்சயம் அதாவது சிறு வயதில் யூசுப் அலை அவர்கள் காணாமல் போனபோது நுகர்ந்த நறுமணம் அவர்களிடம் என்றென்றும் ஞாபகத்தில் இருக்க நபி யூசுப் அலை அவர்கள் வாலிபப் பருவத்தில் எகிப்திலிருந்து தன் சட்டையை தன் தந்தையாருக்கு அனுப்பி வைத்தபோது நபி யாகூப் அலை கண் தெரியாமல் இருந்தார்கள். அந்த சட்டை தூரத்தில் கொண்டு வரும்போது தன் மகனின் வாசனையை தன்பக்கம் வருகிறது என்பதை உணர்ந்து கொண்டார்கள். என்பதாக குர்ஆனில் அல்லாஹ்...

"அவர்களின் தந்தை இதோ யூசுபுடைய வாடையை நிச்சயமாக நான் நுகர்கிறேன் . இதனால் நீங்கள் என்னை பைத்தியக்காரென்று எண்ணாமல் இருக்க வேண்டுமே என்றார்" குர்ஆன் (12: 94)

தோலில் வழி உள்வாங்கி அமைந்திருப்பதை தற்காலத்தில்தான் கண்டுபிடிக்கப்பட்டது உடலில் ஏற்படும் வலியை உணரும் தன்மை மனித மூளையில்தான் உள்ளது என்று ஆரம்பத்தில் எண்ணினார்கள் .ஆனால் அண்மைக்கால கண்டுபிடிப்புகள் வலி உள்வாங்கிகள் தோலிலேயே அமைந்திருப்பதால்தான் ஒரு மனிதன் வலியை உணர்கிறேன் என்று நிரூபிக்கப்பட்டுள்ளது .இந்த வலிஉள்வாங்கிகள் இல்லையெனில் உடலில் ஏற்படும் வலியை உணர இயலாது அதுமட்டுமல்லாமல் தோலின் மீது ஏற்படும் காயங்களால் வலிகள் உணராமலேயே அந்த உறுப்புகள் சேதப்படும்

திருக்குர்ஆனில் மனித உடலில் தோலில் வழி உள்வாங்கி கள் அமைக்கப்பட்டிருப்பதை சுட்டிக்காட்டும் வசனம்

" எவர் நம்முடைய வேத வசனங்களை நிராகரிக்கின்றார்களோ அவர்களை நிச்சயமாக நாம் மறுமையில் நரகத்தில் சேர்த்துவிடும் அவர்கள் வேதனையை சதா அனுபவிப்பதற்காக அவர்களுடைய தோல் கருகிவிடும் போதெல்லாம் மற்றொரு புதிய தோலை மாற்றிக் கொண்டே இருப்போம். நிச்சயமாக அல்லாஹ் மிகைத்தோனும் ஞானமுடையோனுமாக இருக்கின்றான் குர்ஆன் (4 : 56)

தாய்லாந்தில் உள்ள சியாங்மாய் பல்கலைக்கழகத்தில் உடற்கூறு துறையின் தலைவராக இருப்பவர் பேராசிரியர் டாக்டர் தகாட்ட தெஜாஸன் என்பவர் இவர் தோலில் உள்ள வலி உள்வாங்கிகள் குறித்து நீண்ட நெடுங்காலமாக ஆய்வு மேற்கொண்டவர் .

1400 ஆண்டுகளுக்கு முன் இந்த அறிவியல் உண்மை திருக்குர்ஆனில் இடம்பெற்றுள்ளதை அவரால் ஆரம்பத்திலேயே நம்ப முடியாமல் இருந்தது இந்த திருக்குர்ஆன் வசனத்தின் மொழிபெயர்ப்பை உண்மையை கண்டறியும் நோக்கோடு இவர் ஆராய்ந்தார். மிக மிகத் துல்லியமான அறிவியல் பேருண்மையை திருக்குர்ஆன் என்னும் கருத்து பெட்டகத்தில் உட்பொதிந்த கிடப்பதை கண்ட பேராசிரியர் ஆச்சரியப்பட்டார் இந்த இறைவசனம் அவருடைய உள்ளத்தில் கண் தாக்கத்தை பதிவு செய்தது .

சவுதியின் தலைநகர் விழாவில் திரு குர்ஆன் மற்றும் சுன்னாவின் அறிவியல் அத்தாட்சிகள் என்னும் தலைப்பில் நடைபெற்ற எட்டாவது சவூதி மருத்துவ மாநாட்டில் கலந்து கொண்ட பேராசிரியர் தெஜாஸன் இஸ்லாத்தை ஏற்றார்.

நம்முடைய தோலில் தடிப்பு 2 மில்லி மீட்டர் இதில் எபிடெர்மிஸ் டெர்மிஸ் ஹைப்போ டெர்மிஸ் என மூன்று பகுதிகள் உண்டு இங்கேதான் நம் தோழி நேரத்தின் சூட்சுமம் புதைந்திருக்கிறது

மருத்துவ ரீதியாக வெள்ளைத்தோல் சிறந்ததா கருப்பு தோல் சிறந்ததா என்று கேட்டால் கருப்பு தோல் தான் அதிகமா அதற்கு அடுத்தபடியான மாற்றம் ஒன்றுதான் கருப்பு மற்றும் பிரவுன் தோல் உள்ளவர்களுக்கு பெரும்பாலும் ஸ்கின் கேன்சர் நோய் வருவதில்லை வெள்ளைக்காரர்களுக்கு வரும் தோல் வியாதிகள் பலவற்றின் பெயர்கள் கூட நாம் பக்கம் தலைவைத்துப் படுப்பதில்லை காரணம் நம் தோலின் வண்ண சிற்றறைகளில் தோளில் மேல் பகுதி மற்றும் கண்ணாடி பகுதி ஆகியவை தோல்நோய்கள் பல நம்மை நெருங்க விடாமல் தடுத்து விடுகின்றன

உங்களுடைய மொழிகளும் நிறங்களும் வேறுபட்டு இருப்பது அவனுடைய அத்தாட்சிகளில் உள்ளதாகும் குர்ஆன் 30 : 22

பூகோளப்படி மனித நிறங்கள் பூமத்திய ரேகை உள்ள ஆப்பிரிக்க நாட்டில் சூரியன் செங்குத்தாக கதிர்கள் விழுவதால் அங்குள்ள மக்கள் கறுப்பர்களாகவும் , சூரிய கதிர்கள் தொடர்ந்து சாய்வாக விழும் நாட்டின் மக்கள் கோதுமை நிறம் ,மஞ்சள் நிறம் , வெள்ளை நிறங்களை கொண்டுள்ளனர்.

தோலில் சாலை விபத்து தீ விபத்து பிறவியிலேயே உதடு கிழித்துக்கொண்டு தொங்கிக்கொண்டு காது மடித்துக்கொண்டு பிறந்தவர்களுக்காக பிளாஸ்டிக் சர்ஜரி செய்யப்படுகிறது முகத்தின் அழகை கூட தோலை மாற்றம் செய்வதன் மூலம் அழகு படுத்தப்படுகிறது .

மூக்கு இல்லை என்று நடிகை ஸ்ரீதேவி தோலில் செய்தது காஸ்மெடிக் சர்ஜரி மறைவான உறுப்புகள் மற்றும் மார்புகள் உப்பலாக இருக்கவேண்டும் என்று விரும்புபவர்கள் இந்த காஸ்மெட்டிக் சர்ஜரி செய்கிறார்கள் .

நீக்ரோ இனத்தைச் சேர்ந்த மைக்கேல் ஜாக்சன் வெள்ளைக்காரன் போல ஆசைப்பட்டு தன் தோலை வெளுக்க செய்ததும் காஸ்மெடிக் சர்ஜரி நெற்றியை மேடாக்க நடு மண்டையில் இருந்து தோலைப் கிழித்துக் கொண்டு நெற்றி வரை வந்து பின் ஜெல்லியை அடைத்து உப்பலாக ஆக்கி சரி செய்யப்படுகிறது . மூக்கை சரிசெய்ய மூக்குத் துவாரத்தின் வழியாக வேலை செய்கிறார்கள் .

உலகில் முகத்தை மாற்றி அமைத்தவர்கள் 29 பேர் என்றும் 27 பேர் என்றும் நாஃபிவுள் முஸ்லிமீன் என்ற ஹதீஸ் கிரந்தம் சொல்கிறது அலி (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் : "இறைவன் எத்தனை பேரின் முகங்களை மாற்றி அமைத்தான் ?

13 பேர்கள் . அவர்களில் ஜுஹ்ரா ஒருத்தி என்றும் அவள் ஓர் அரச திருமகள் என்றும், ஹாரூத் மாரூத் முகம் மாற்றம் செய்யப்பட்டு மனிதர்களாக பூமிக்கு வந்தனர் என்றும் குர்ஆன் 2: 102
இவர்கள் இருவரையும் ஜுஹ்ரா தன் வசப்படுத்தினாள் என்றும் கூறப்படுகிறது.

அல்லாஹ் மறுமை நாளின் போது ஒவ்வொரு மனிதனின் அங்கங்கள் பேசும் என்பதாக குர்ஆனில் குறிப்பிடுகின்றான்.

"பாவம் செய்த அவர்களுக்கு விரோதமாக அவர்களுடைய செவிகளும் அவளுடைய கண்களும் அவர்களுடைய மாமிச தொலிகளும் (தோல்களும் ) அவர்கள் செய்து அவர்களைப் பற்றி சாட்சி கூறும் குர்ஆன் 41:20

மறுமை நாளில் தீர்ப்பின்போது அங்கங்கள் கண்டிப்பாக பேசும் என்பதற்கு ஆதாரமாக இம்மையிலேயே இந்த உலகத்திலேயே மனிதர்களின் தோல்கள் பேசுகின்றன உடம்பின் தற்போதைய நிலை,முன்னாலிருந்த நிலை , இந்த வியாதிக்கு உரிய காரணங்கள் என்ன என்றெல்லாம் விலாவாரியாக மருத்துவரிடம் தோள்கள் பேசுகின்றன எந்தெந்த வியாதிக்கு தோல் எப்படி எல்லாம் பேசும் என்பதை ஒரு சில வியாதிகள் மற்றும் விசாரணை செய்வோம்.

நான்கு நாட்களாக உள்ளங்கை அரிப்பு எடுக்கிற சாதாரணமானவர்கள் பணம் வரும் என்று தானே எதிர்பார்த்து சந்தோஷமாக இருப்பார்கள். அது தான் இல்லை இந்த அரிப்பு இரண்டு உள்ளங்கைகளும் லேசான தடுப்பை ஏற்படுத்தி இருந்தால் அந்நபரின் பெருங்குடலில் கேன்சர் நோயின் ஆரம்பநிலை என்று தோல் பேசுகிறது

அடுத்து சிலர் அருகில் வந்தாலே மூக்கை இரண்டு கைகளாலும் பொத்திக் கொள்ளும் அளவிற்கு கெட்ட நாற்றம் அவரிடமிருந்து அடிக்கும் இவர் குளித்து எத்தனை நாளோ என்று கூட நினைக்கத் தோன்றும் ஆனால் அந்த நபரை விசாரித்தால் தினம் இரண்டு முறை குளிப்பதாக சொல்வார் அப்படி என்றால் இந்த கெட்ட

வாடைக்கு என்ன காரணம் அந்த நபரின் கிட்னி பழுதுபட்டு யூரியா இரத்தத்தோடு கலந்து உடம்பு முழுவதும் துர்நாற்றம் வீசும் தோல் அவருக்கு பாதிக்கப்பட்டிருக்கிறது என்று சொல்கிறது

மெழுகால் செய்த சிற்பம் மாதிரி அந்தப் பெண் இருக்கிறார் என்று சொல்கிறோம் மருத்துவரீதியாக அந்த உதாரணம் ரொம்ப தவறானது .ஒருவருக்கு தோல் மெழுகு போல் இருந்தால் அது இதய நோய்க்கான அறிகுறி என்று தோல் பேசும்.

ஒருவருடைய மாரடைப்பு வருவதற்கு சில நிமிடங்களுக்கு முன்னால் உஷார் ஜாக்கிரதை ஆம்புலன்சுக்கு போன் செய் என்று அபாய குரல் கொடுப்பது கூட தோள்கள்தான் காரணம் மாரடைப்பு வரும்போது அந்த நபர் போட்டிருக்கும் சட்டையே நனையும் அளவுக்கு குப்பென்று வியர்த்து விடுகிறது. தோல் தான் அந்த நபருக்கு மாரடைப்பு வருகிறது என்று அபாயம் தெரிவிக்கிறது.

கல்லீரலில் பித்த பை ஒன்று இருக்கிறது கல்லீரல் கெடும் போது இந்த பித்தப் பையில் இருக்கும் பித்த நீர் ரத்தக்குழாய்களோடு கலந்து விடும் இரத்தத்தில் பித்த நீர் கலக்கும் போது தோல் மஞ்சள் நிறத்திற்கு மாறி விடுகிறது இதுதான் மஞ்சள் காமாலை என்று தோல் பேசும் .

சிலருக்கு ரத்தத்தில் இரும்பு சத்து குறைந்து போகும் இதைக் கண்டுபிடிக்காமல் விட்டுவிட்டால் இதயம் மூளை பேச்சு என்று எல்லாமே பாதித்துவிடும் உடம்பில் ரத்த சோகை இருக்கிறது உடனே கவனி என்று உடம்பு தோலின் வழியாகதான் முதலில் எச்சரிக்கை கொடுக்கும் அந்த எச்சரிக்கை தான் தோல் பளபளப்பு இழந்து வெளுத்துப் போவது தெரிகிறது இப்படி எல்லாம் பேசும்

தோல் மற்றொரு பரிபாஷையில் பேசும் அதுதான் மச்சங்கள் மருக்கள்.

மச்சம் உண்டாவதற்கு சுரப்பிகள் கூட சில சமயம் காரணமாக இருக்கும் இந்த வகை மரங்கள் மஞ்சள் அல்லது பிரவுன் நிறத்தில் இருக்கும் உள்ளங்கை அகலத்துக்கு கூட மச்சம் வரலாம் அதற்கு மேலும் வரலாம் **Swiming Trunk** என்று ஒரு மச்சம் வகை உண்டு இதன் பெயரைப் போலவே நீச்சலுடை போட்டதுபோல் இடுப்பைச் சுற்றி அது இருக்கும்.

**Malignant Melenoma** என்ற ஒரு வகை மற்றும் முன்பு வெளி நாடுகளில் இந்த வகை மச்சத்தின் பெயரை சொன்னாலே அலறுவார்கள் காரணம் கேன்சரின் ஊற்றுக்கண் இந்த மச்சம்தான்.

Vercucour Nevi என்று ஒரு மச்சம் முன்பு இந்த மச்சம் உடம்பில் சம பரப்பில் இல்லாமல் 'மரு ' மாதிரி தோலிலிருந்து கொஞ்சம் உப்பிக்கொண்டு வெளியே நிற்கும் .

சில மச்சங்கள் வயதான காலத்தில் உடம்பில் வர ஆரம்பிக்கும் இதற்கு Seborrheic keratoses என்று பெயர் சுருக்கமாக Warts என்று அழைப்பர் . தொட்டால் பஞ்சு மாதிரி மிருதுவாக இருக்கும் இதுவும் பிரவுன் நிறத்தில் தோலின் மேற்பரப்பில் கொஞ்சம் உப்பிக்கொண்டு வெளியே நிற்கும் . இது முகத்திலும் முதுகிலும் தான் அதிகமாக வரும் இந்த மச்சத்தின் பேச்சு "உடம்பு ரொம்ப வயதாகிக் கொண்டிருக்கிறது " என்று சொல்கிறது.

இதுவரை பார்த்த மச்சங்கள் மருக்கள் எல்லாம் அச்சங்களை கொடுக்கலாம் நோய்களை பறைசாட்டலாம் நபிஸல் அவர்களின் முதுகில் வலது புறத்தில் நபித்துவத்தின் முத்திரையாக , நுபுவத்தின் அடையாளமாக மச்சம் மாதிரியே முத்திரையைப் பதித்தான் அல்லாஹ். அந்த புனித முத்திரையும் பேசியது: "வந்திருக்கும் இவர்கள்தான் இறுதித்தூதர்" என்று.

பூமிக்கு உயிர் இருக்கிறதா ?

கீழ்கண்ட குர்ஆன் வசனங்கள் பூமிக்கு உயிர் இருப்பதாக சொல்லப்படுகிறது .18/07/2020



"பின்னர், வானத்தைப் படைக்கக் கருதினான். அது ஒருவகை புகைதான். அதனையும் பூமியையும் அவன் நோக்கி "நீங்கள் விரும்பினாலும் சரி, விரும்பாவிட்டாலும் சரி (வழிபட்டு) என்னிடம் வாருங்கள்" என்று கூறினான். அதற்கு அவைகள், "இதோ நாங்கள் விருப்பத்துடனேயே வந்தோம்" என்று கூறின. (குர்ஆன் : 41:11)

وَاللّٰهُ اَنْزَلَ مِنَ السَّمَآءِ مَآءً فَاَحْيَا بِهِ الْاَرْضَ بَعْدَ مَوْتِهَا اِنَّ فِىْ ذٰ لِكَ لَاٰيَةً لِّقَوْمٍ يَّسْمَعُوْنَ

இன்னும், அல்லாஹ் வானத்திலிருந்து மழையை பொழிய வைத்து, அதைக் கொண்டு உயிரிழந்த பூமியை உயிர் பெறச் செய்கிறான் - நிச்சயமாக செவியேற்கும் மக்களுக்கு இதில் (தக்க) அத்தாட்சி இருக்கிறது.
(அல்குர்ஆன் : 16:65)

اِذَا زُلْزِلَتِ الْاَرْضُ زِلْزَالَهَا ۙ

பூமி பெரும் அதிர்ச்சியாக - அதிர்ச்சி அடையும் போது-
(அல்குர்ஆன் : 99:1)

وَاَخْرَجَتِ الْاَرْضُ اَثْقَالَهَا ۙ

இன்னும், பூமி தன் சுமைகளை வெளிப்படுத்தும் போது-
(அல்குர்ஆன் : 99:2)
وَقَالَ الْاِنْسَانُ مَا لَهَا
“அதற்கு என்ன நேர்ந்தது?” என்று மனிதன் கேட்கும் போது-
(அல்குர்ஆன் : 99:3)
يَوْمَٮِٕذٍ تُحَدِّثُ اَخْبَارَهَا ۙ
அந்நாளில், அது தன் செய்திகளை அறிவிக்கும்.
(அல்குர்ஆன் : 99:4)
بِاَنَّ رَبَّكَ اَوْحٰى لَهَا
(அவ்வாறு அறிவிக்குமாறு) உம்முடைய இறைவன் அதற்கு வஹீ மூலம் அறிவித்ததனால்.
(அல்குர்ஆன் : 99:5)

தேசத்தை தாய் என்போம், மொழியை, நிலத்தைத் தாய் என்போம். திருவள்ளுவரே 'நிலமென்னும் நல்லாள்' என்கிறார்.

இப்போது பூமியைத் தாயாகக் கருதுவதில் அறிவியல் ஆதாரம் இருக்கிறது. கெய்யா (Gaia) என்ற சித்தாந்தத்தின் படி நம் பூமியே ஒரு உயிருள்ள 'செல்' (cell) என்கிறார்கள்.

பியர் ஷார்ட்டின் (**Pierre Chardin**) என்ற கத்தோலிக்க பிரெஞ்சு தத்துவ அறிஞர் 'The Phenomenon of Man' என்கிற நூலில் பூமிக்கு ஒரு மனம் இருக்கிறது என்கிற கருத்தைச் சொன்னார். அவருடைய சகாக்களுக்கு ஷார்டினின் கருத்துக்கள் ஒத்துவரவில்லை. அவர் புத்தகங்கள் எதையும் அவர் வாழ்நாளில் பதிப்பிக்கவில்லை.

இப்போது அவர் சொன்னதற்கு மதிப்பு வந்துள்ளது.கெய்யா தத்துவம் ஜேம்ஸ் லவ்லாக் (James Lovelock) எனும் பிரிட்டிஷ் உயிரியல் விஞ்ஞானியால் கொண்டுவரப்பட்டது. 'கெய்யா' பூமி தேவதைக்கு உண்டான கிரேக்க வார்த்தை. பூமி என்பது அதன் உயிரினங்களால் உயிர் வாழும் - அவைகளை வாழவைக்கும் ஒரு உயிர் என்பதே இதன் சாரம்.

கோடி வருஷங்களாக பூமியின் அமைப்பில் அதிக மாறுதல்கள் இல்லை. அதன் சூழலில், காற்றில் உள்ள சங்கதிகளின் விகிதாசாரம் அப்படியே இருக்கிறது. கடல் உப்பின் சதவிகிதம் நிலைத்து இருக்கிறது. திடீர் என நைட்ரஜன் அதிகமாவதில்லை. கடல்நீர் குடிநீராவதில்லை. உஷ்ண நிலையும் ஓரளவுக்குக் கட்டுப்பாட்டில் உள்ளது.

லவ்லாக் இது தற்செயலானது அல்ல, பூமி உயிரினங்களைத் தாங்குவதற்கென ஏற்பட்ட ஒரு மகா உயிர்; தன் சுற்றுச் சூழலைப் பல லட்சக்கணக்கான வருஷங்களாகக் கட்டுப்படுத்தி, நாம் வாழ்வதற்கேற்ப திருத்திக் கொண்டே இருக்கும் உயிர் என்கிறார்.

லவ்லாக்கின் சித்தாந்தத்தை மறுப்பவர்கள் இருக்கிறார்கள். ஆனால், ஆதரவாளர்கள் அதிகமாகிக் கொண்டிருக்கிறார்கள்.

அமெரிக்க அறிஞர் லூயிஸ் தாமஸ், பூமியே ஒரு செல் உயிராக இருக்கலாம் என்கிறார். இன்று இன்டர்நெட் மூலம் கணிப்பொறிகள் அனைத்தும் இணைத்துக் கொள்வது, மூளையில் நியூரான்களின் அறிவு பெருகப் பெருக இணைப்புகள் அதிகரிப்பது போல என்கிறார்.

பூமியில் உள்ள அத்தனை உயிரினங்களின் மொத்த எடையை 'பயோமாஸ்' (Bio mass) என்கிறார்கள். அது இப்போது ஏழாயிரத்து ஐநூறு கோடி டன் என்று கணக்கு செய்து சொல்கிறார்கள்.

அதில் இருபத்தைந்து கோடி டன் மனித இனம், நூற்று எண்பது கோடி டன் மிருகங்கள் (அதாவது மற்ற உயிரினங்கள்). அதில் பாதிக்கு மேல் மீன் இனங்கள்; ஆயிரம் கோடி டன் செடிகொடிகள்;மரங்கள் மூவாயிரத்து தொள்ளாயிரம் கோடி; கடல் பாசியே இரண்டாயிரத்து நானூறு கோடி !
இதெல்லாம் குத்துமதிப்பாக எண்ணிக்கைதான்;

நம் உலக மக்கட்தொகை எண்ணூறு கோடி பேர்; இன்றைய வேகத்தில் குப்பை கொட்டி, மரம் வெட்டிக்கொண்டிருப்பதால் இன்னும் நூறு வருஷம்தான் தங்குவோம் என்கிறார்கள்.

அதுவரை -
பூமித்தாய் காப்பாற்றுவாள் என்று நம்பலாம். இந்த 'காப்பாற்றல்' நம் மனமாற்றத்தின் மூலமாகவும் பூமியை விட்டு வெளியே சென்று புதிய காலனி அமைப்பதின் மூலம்தான் ஏற்படும் என்கிறார்கள்.

அணுஆயுதப் போரிலிருந்து ஒருவாறு தப்பித்துவிட்டோம் என்று சொல்லலாம். கிபி 2100 வரை கவலை இல்லை. அதாவது, இதைப் படிக்கும் எனக்கும், உங்களுக்கும் கவலை இல்லை.
நம் பேரப்பிள்ளைகளுக்கு -
நம்முடைய முட்டாள்தனத்தையும், பேராசையையும் 'நிலமென்னும் நல்லாளை' நாம் பாளம் பாளமாகச் சேதமாகியதின் அறிவீனத்தையும் ஒட்டுமொத்தமாக ஒரு 'உலக மனம்' ஒப்புக்கொண்டால்தான் விமோசனம்.
(சுஜாதா)

ர.ரா

வேற்று கிரகம்

(சொற்பொழிவின் சாரம்சம்)15/07/2020



நீங்களும் நானும் இப்போதும் பயணம் செய்து கொண்டேயிருக்கிறோம் என்று நான் சொன்னால் நீங்கள் நம்புவீர்களா ?

....இல்லை உங்கள் கட்டுரையைதான் படித்துக் கொண்டு இருக்கிறேன். எப்படி நான் பயணிக்க முடியும் என்று நீங்கள் சொன்னாலும் நிச்சயமாக நீங்களும் நானும் இந்த ஆகாய வெட்ட வெளியில் பயணித்துக் கொண்டு இருக்கிறோம்.

நீங்களும் நானும் நம் பூமியோடு பயணிக்கிறோம் நம் பூமி நொடிக்கு (ஒரு சொடக்கு) 29 புள்ளி 8 கிமீ வேகத்தில் நம் சூரியனை சுற்றி பயணிக்கிறோம்

நம் சூரியன் நொடிக்கு 20 கிமீ வேகத்தில் தன் குடும்பமான 9 கோள்களையும் அவைகளின் துணை கோள்களையும் கூட்டிக் கொண்டு "ஹெர்குலிஸ் " என்னும் நட்சத்திர கூட்டத்தை நோக்கி பயணிக்கிறது .

நமது சூரிய குடும்பம் ஆகாய கங்கை என்னும் " மெட்டா கேலக்ஸி " யில் "பெர்சியஸ் ஓரியன் " என்கிற நட்சத்திர கூட்டத்தின் வளைவில் அமைந்து கொண்டு பயணிக்கிறது .

நமது சூரிய குடும்பமும் அதைச் சார்ந்த மற்ற நட்சத்திரக் கூட்டங்களும் சேர்ந்து நொடிக்கு 220 கிமீ வேகத்தில் "கைனக்ஸ் "என்கிற நட்சத்திர கூட்டத்தை நோக்கி பயணிக்கிறது .

நாமும் நம் சூரியனும் நமது நட்சத்திர கூட்டங்களும் சேர்ந்து நமது கேலக்ஸியில் நொடிக்கு 230 கிமீ வேகத்தில் வலம் சுற்றி பயணிக்கிறோம்.

நமது ஆகாய கங்கை என்கிற மெட்டா கேலக்ஸியில் நம் பூமி ஒரே ஒரு தடவை வலம் சுற்றி முடிக்க 240 மில்லியன் வருடங்கள் ஆகும் .

சரி ....பூமியின் எல்லையைக் கடந்து நம்மால் பயணிக்க முடியாமா ? என்ற ஏக்கம் விஞ்ஞானத்திற்கு உண்டு காரணம் இந்த பூமியாளர்கள் அணுவைத் துளைத்து அறிவை செலுத்தி ஆக்க பூர்வமான காரியத்தைக் காட்டிலும் அழிவு பூர்வமான காரியத்திற்கு முக்கியத்துவம் கொடுக்க ஆரம்பித்து விட்டார்கள் எனவே மனித குல வாழ்வு அணுக் குண்டின் மீது இருந்து கொண்டு விதியை எதிர் நோக்க வேண்டிய சூழல் எனவே மனிதன் வாழுக் கூடிய வேற்று கிரகத்தை தேடியலைய வேண்டிய கட்டாயம்
சரி அதற்கு பூமியின் எல்லையை கடந்து போக முடியாமா ? முடியும் என்றுதான் குர்ஆன் கூறுகிறது

" மனு ஜின் கூட்டத்தார்களே . . நீங்கள் வானங்கள் பூமியின் எல்லையைக் கடந்து சென்று விட உங்களால் கூடுமாயின் அவ்வாறே செல்லுங்கள் ஆனால் ஆற்றல் இல்லாமல் நீங்கள் செல்ல முடியாது குர்ஆன் (55: 33)

இது போன்ற வசனம் வேறு எந்த வேத்திலும் சொல்லப்படவில்லை
இறைவனே வேற்று கிரகத்தை தேட சொல்கிறான் என்று தானே விளக்கம் .

மேற்கண்ட வசனத்தில் இரண்டை குறிப்பிடுகிறான் 1 ஜின் 2 ஆற்றல்
ஜின்னைப் பற்றி விஞ்ஞானம் அறியாது அமானுஷ்ய சக்தி என்று குறிப்பிடும். அவ்வளவுதான் . ஆனால் இஸ்லாம் அவங்களை ஒரு இனமாக பாவிக்கிறது.
ஜின்களாடு மனிதர்கள் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டால் வானம் நமக்கு வசப்படலாம் காரணம் ஜின்களுக்கு வானம் நம்ம NH ரோடு மாதிரி .

"நிச்சயமாக ஜின்களாகிய நாங்கள் வானத்தைத் தடவிப் பார்த்தோம் .அது பலமான பாதுகாவலர்களாலும் , எரி நட்சத்திரங்களாலும்
நிரப்பப்பட்டிருக்கிறது என்பதை
நாங்கள் கண்டோம் " குர்ஆன் (72 : 08 )

ஜின்களாடு தொடர்பு கொள்ள நீங்கள் தயாரா ?

விண்வெளியில் பயணிப்பதற்கு இறைவன் கூறிப்பிடும் "ஆற்றல் " மிக முக்கியம் விண்வெளி பயணம் சந்திரன் வழியே தொடர்ந்தால் மிக குறைவான ஆற்றல் போதுமானது காரணம் சந்திரனின் புவி ஈர்ப்பாற்றல் நம் பூமியை விட 6 மடங்கு குறைவு
இதனால் ஒரு விண்கலத்தை பூமியிலிருந்து அனுப்புவதை விட சந்திரனிலிருந்து அனுப்பினால் 3 சதவிகிதம்தான் எரிபொருள் தேவை

விண்கலத்தின் வேகம் பூமியை விட சந்திரனில் இருந்து அனுப்பினால் 5ல் ஒரு பங்கு போதுமானது

விண்கலங்களை பூமியில் இருந்து அனுப்புவதற்கு ஏவுகணை தேவை சந்திரனில் இருந்து அனுப்ப இது தேவையில்லை காரணம் ஈர்ப்பாற்றல் குறைவு மேலும் காற்று மண்டலம் சந்திரனில் இல்லை இதனால் எரி பொருள் மிக குறைவு

இந்த எரிபொருள் சந்திரனில் நிறையவே கிடைக்கிறது .
ஆகையால் பூமியின் வாசிகளான நமக்கு சந்திரன் வழியாகதான் வேற்று கிரகம் போக முடியும் .

"சூரியனையும் சந்திரனையும் உங்களுக்கு பயனளிக்கும் விதத்தில் அமைத்தான் " . . குர்ஆன் 14:33

சந்திரனிலிருந்து விண்வெளி போகும் வரைதான் எரிபொருள் தேவை விண்வெளியில் பயணிக்க சூரிய சக்தி போதுமானது.

நபி (ஸல்) அவர்கள் ஏழு வானம் தாண்டி "'சித்ரத்துல் முன்தஹா " என்ற வான எல்லையை அடைகிறார்கள். ஜிப்ரயீல் (அலை) மற்றும் வானவர்கள் இருக்கும் தளம் . சொல்லப்போனால் இது ஒரு வேற்று கிரகம் மாதிரி.

"என்னிடம் இரண்டு பாத்திரங்கள் கொண்டு வரப்பட்டன .ஒன்றில் மதுவும், மற்றொன்றில் பாலும் இருந்தது. நான் பாலைத் தேர்ந்தெடுத்தேன். அப்போது "இயற்கை நெறியையே நீங்கள் பெற்றுள்ளீர்கள். இறைவன் உங்கள் மூலம் இயற்கை நலனையே நாடியுள்ளான். உங்கள் சமுதாயத்தாரும் அந்த இயற்கை நெறிலேயே உள்ளனர்" என்று கூறப்பட்டது.

விஞ்ஞான ஆய்வின்படி மனிதன் வானவெளியிலுள்ள மற்ற கிரகங்களில் வாழ்வதற்கு இரண்டு வழிமுறைகள் உண்டு .

1) அந்தக் கிரகங்களில் வாழ்வதற்கு நம்மைப் பழக்கிக் கொள்ள வேண்டும் . இந்த முறையை "பான்ட்ரோபி' (Pantropy)
என்கின்றார்கள்

2) டெர்ரா ஃபார்மிங் (**Terra Forming**) அந்த வானவெளி இடத்தில் மனிதன் பறக்கவோ . நீரில் முழ்கி வாழவோ, சுவாசிக்க ஆக்ஸிஜனுக்குப் பதில் நைட்ரஜனையோ, சுவாசிக்கப் பழகுதல் .
இதற்கு ரொம்ப சிம்பிள் அந்த கிரகத்தில் கிடைக்கக்கூடிய உணவை உட்கொண்டதும் . உடம்பு அந்த இடத்திற்கு தக்கவாறு மாறிக் கொள்ளும்

எனவே நபி (ஸல்) அவர்கள் வான எல்லையான சித்ரத்துல் முன்தஹாவை அடைந்ததும் அவர்களுக்கு பாலும் மதுவும் கொடுக்கப்பட்டததில் அவர்கள் பாலைத் தேர்வு செய்து குடித்தார்கள் இப்போது அவர்களின் உடம்பு அந்த சிரத்துல் முன்தஹா என்ற கிரகத்தின் சூழ் நிலைக்கு தக்கவாறு தகவமைத்துக் கொண்டது.

இதே மாதிரி வானவர்கள் பூமிக்கு வந்தால் இங்குள்ள உணவுகளை அவர்கள் உண்பதில்லை.

ஒரு சமயம் வானவர்கள் பூமிக்கு மனித உருவில் வந்து நபி இப்ராஹீம் (அலை) சந்தித்த போது விருந்தாளிகளுக்காக இளங் கன்றை பொறித்து உணவு பரிமாறப்பட்ட போது அவர்கள் அந்த உணவை உண்ணவில்லை என்பதாக
குர்ஆன் (51 : 27) மூலம் விளங்க முடிகிறது .

விண்வெளியில் பயணிப்பதற்கு இறைவன் கூறிப்பிடும் ஆற்றல் மிக முக்கியம் .

விண்வெளி பயணம் சந்திரன் வழியே தொடர்ந்தால் மிக குறைவான ஆற்றல் போதுமானது காரணம் சந்திரனின் புவி ஈர்ப்பாற்றல் நம் பூமியை விட 6 மடங்கு குறைவு. இதனால் ஒரு விண்கலத்தை பூமியிலிருந்து அனுப்புவதை விட சந்திரனிலிருந்து அனுப்பினால் 3 சதவிகிதம்தான் எரிபொருள் தேவை

விண்கலத்தின் வேகம் பூமியை விட சந்திரனில் இருந்து அனுப்பினால் 5ல் ஒரு பங்கு போதுமானது

விண்கலங்களை பூமியில் இருந்து அனுப்புவதற்கு ஏவுகணை தேவை சந்திரனில் இருந்து அனுப்ப இது தேவையில்லை காரணம் ஈர்ப்பாற்றல் குறைவு மேலும் காற்று மண்டலம் சந்திரனில் இல்லை இதனால் எரி பொருள் மிக குறைவு

இந்த எரிபொருள் சந்திரனில் நிறையவே கிடைக்கிறது
ஆகையால் பூமியின் வாசிகளான நமக்கு சந்திரன் வழியாகதான் வேற்று கிரகம் போக முடியும்

சூரியனையும் சந்திரனையும் உங்களுக்கு பயனளிக்கும் விதத்தில் அமைத்தான் . . குர்ஆன் 14:33

சந்திரனிலிருந்து விண்வெளி போகும் வரைதான் எரிபொருள் தேவை விண்வெளியில் பயணிக்க சூரிய சக்தி போதுமானது

கார்ள் சேகன் (**Carl Sagan)** போன்றவர்கள் 1977-ல் வாயேஜர் 1, 2 போன்ற விண்கங்களை விண்வெளியில் நெடுந்தூரம் செல்ல அனுப்பும் போது வேற்று கிரகவாசிகள் பிரபஞ்சத்தில் இருந்தால், அவர்களுக்கு எப்படி நம்மைப் பற்றி செய்தி தருவது என்று யோசித்தார்கள்.

ஒரு 100 கோடி வருடம் தாங்கக் கூடிய தங்க முலாம் தகட்டில் , குறியீடாக பிரபஞ்சத்தில் பூமியின் இடம் இதிலிருந்து கிளம்பும் விண்கலம் மற்றும் உலகத்தின் அத்தனை வித சங்கீதங்களுக்கும் ஒரு சாம்பிள் .இதில் இந்திய ராகம் ஒன்று உள்ளது .

இந்த வாயேஜர் 1, 2 சூரிய மண்டலத்தை தாண்டி 1800 கோடி கி.மீக்கும் மேலாக இன்னும் பயணிக்கிறது . பயணிக்கட்டும். அதற்குள் நாம் 1400 வருடங்களுக்கு முன் போய் விட்டு வருவோம் .

மிஹ்ராஜ் விண்ணேற்றத்தின் போது, ஓரிடத்தில் ஒட்டகங்கள் சாரி சாரியாகச் செல்லவும் ,ஒட்டகங்கள் ஒவ்வொன்றின் மீதும் அதை ஒட்டுபவர் அமர்ந்திருக்கவும் அதன் இரு பக்கங்களிலும் தொ ங்கிக்

கொண்டிருந்த இரு பொதிகளையும் பற்றி நபி (ஸல்) அவர்கள், வானவர் ஜிப்ரயீல் (அலை) அவர்களிடம் கேட்க,

"எனக்கு இது பற்றி யாதொன்றும் தெரியாது .நான் இங்கு வந்த காலத்திலிருந்து இவ்வாறுதான் சென்று கொண்டுள்ளது. தாங்கள் விரும்பின் இது பற்றி இறைவனிடமே கேளுங்கள்" என்று பதிலுரைத்தார்கள் .

அவ்வாறே நபி (ஸல்) அவர்கள் இறைவனிடம் அது பற்றி வினவ, இறை ஆணைப்படி அவ் ஒட்டகம் ஒட்டி தம் ஒட்டகத்தை நபி(ஸல்) அவர்களின் அருகே ஓட்டிச் சென்று அதன் இரு பக்கங்களில் தொங்கிக் கொண்டிருந்த பொதியில் ஒன்றை திறக்க அதில் ஒரு கோள வடிவ கிரகம் தென்பட்டது .

அக்கோளத்தை நபி (ஸல்) அவர்கள் முன் வைக்கப்பட்டு அதன் திறவுகோலையும் அவர்களின் கையில் கொடுக்க, நபி (ஸல்) அவர்கள் அதனைத் திறந்து கொண்டு உள்ளே சென்றனர்.

அங்கு குதிரையுடன் நின்று கொண்டிருந்த வீரர் ஒருவர் நபி(ஸல்) அவர்களுக்கு ஸலாம் உரைத்து, அக் குதிரையையும் அவர்களிடம் ஒப்படைத்தார். அதன் மீது ஏறி சென்ற நபி(ஸல்) அவர்கள் அங்கு நாடுகளும் கண்டங்களும், நகரங்களும் ,காடுகளும், கழனிகளும் இருப்பதையும், அங்கு மக்கள் இறைவனைத் துதித்துக் கொண்டும் , தம் மீது ஸலாவாத்து ஓதிக் கொண்டும் இருப்பதைக் கண்டு பெரு வியப்பெய்தினர்.

இதிலிருந்து எண்ண முடியாத கோளங்களும் அவற்றில் மனிதர்களும் உள்ளனர். அவர்களுக்கும் நபி (ஸல்) அவர்களே நபியாகவும் ரஸூலாகவும் இருக்கிறார்கள் .

وَمَاۤ اَرْسَلْنٰكَ اِلَّا رَحْمَةً لِّلْعٰلَمِيْنَ

(நபியே!) உங்களை அகில உலகத்தாருக்கு ஓர் அருளாகவேயன்றி நாம் அனுப்பவில்லை."
(அல்குர்ஆன் : 21:107)

ஆதாரம் : நபி ஸலவாத்தின் நற்பலன்கள் - அப்துற் - றஹீம்

விஞ்ஞானிகளும் பிரபஞ்சத்திலுள்ள எண்ணிலடங்கா கிரகங்களில் நம் பூமி போன்று தட்பவெப்ப நிலையைப் பெற்றுள்ள கிரகங்கள் எத்தனையோ உள்ளன என்றும் அவற்றில் நிச்சயம் மனித வாழ்வும் இருக்கும் என்று நம்பி தான் வாயேஜர் 1, 2 விண்கலங்கள் அனுப்பப்பட்டுள்ளது.

நபி (ஸல்) அவர்கள் திறந்து பார்த்த கிரகத்தை இன்ஷா அல்லாஹ் வாயேஜர் விண்கலம் ஒரு சமயம் எட்டலாம்.

وَلَقَدْ خَلَقْنَا فَوْقَكُمْ سَبْعَ طَرَآٮِٕقَ وَمَا كُنَّا عَنِ الْخَـلْقِ غٰفِلِيْنَ

(மனிதர்களே! இவ்வாறு நாம் உங்களை மட்டுமா படைத்திருக்கிறோம்?) நிச்சயமாக உங்களுக்கு மேலுள்ள ஏழு வானங்களையும் நாமே படைத்தோம். (அவை ஒவ்வொன்றிலும் உங்களைப் போன்ற எத்தனையோ படைப்புகள் இருக்கின்றன. இவைகளைப் படைத்து இருப்பதுடன்) இப்படைப்புக(ளுக்கு வேண்டியவைக)ளைப் பற்றி நாம் பராமுகமாகவும் இருக்கவில்லை. (அவைகளுக்கு வேண்டியவை அனைத்தையும் முழுமையாக நாம் படைத்தும் இருக்கிறோம்.)
(அல்குர்ஆன் : 23:17)

நாம் வாழ்ந்து கொண்டிருக்கும் பூமியை உள்ளடக்கிய நமது சூரிய குடும்பத்தைப் போல பல சூரிய குடும்பங்கள் பிரபஞ்சத்தில் பரவிக்கிடக்கின்றன இந்த பிரபஞ்சத்தில் லட்சோபலட்சம் நட்சத்திரங்களும் அதை சுற்றி கணக்கிலடங்கா கிரகங்களும் இருக்கின்றன.பிரபஞ்சத்தில் உயிரின வாழ்க்கை என்பது நம் பூமியில் மட்டும் தான் இருக்கமுடியும் என்று நினைப்பது சற்றும் பொருத்தம் இல்லாதது .பூமியில் இருந்து வெகு தொலைவில் உள்ள லட்சோபலட்சம் கிரகங்களில் சில நூறுகிரகங்களிலாவது உயிர் வாழ்க்கை அமையப் பெற்று இருக்கும் அவற்றுள் சிலவற்றில் உள்ள உயிரினங்கள் நம்மைவிட எல்லா நிலைகளிலும் மேம்பட்டு இருக்க வாய்ப்புள்ளது .சில கிரகங்களில் இன்னும் நுண்ணுயிரிகள் என்ற அளவிலேயே வாழ்க்கை அமையப் பெற்றிருக்ககூடும்.

தற்போது மனித இனம் மற்றும் பல உயிரினங்கள் இந்த பூமியின் சூழலுக்கு ஏற்ப வாழ்ந்து கொண்டு இருக்கின்றன.இந்த பிரபஞ்சத்தில் உள்ளடக்கிய நம் சூர்ய குடும்பத்தில் உள்ள கிரகங்களில் நம் பூமியில் மட்டுமே உயிரினங்கள் உள்ளதாக இதுவரை அறியப்பட்டு வந்துள்ளது ஆனால்,இந்த பிரபஞ்சத்தில் மற்ற பல சூரிய குடும்பங்களில் உள்ள கிரகங்களில் உயிரின வாழ்வு இருக்கக்கூடும் என்பது தற்போதைய அறிவியலாளர்களின் கருத்தாகும் மேலும் உலகம் முழுவதும் உள்ள விஞ்ஞானிகள் அனைவரும் வேற்றுகிரகங்கள் பலவற்றில் உயிரின வாழ்வு என்பது சாத்தியம்தான் என்று அறிவியில் பூர்வமாக சிந்திக்க தொடங்கி இருக்கின்றார்கள் .
நூறு வருடங்களுக்கு முன்பு விஞ்ஞானிகள் அனைவரும் வேற்றுகிரகத்தில் உயிரின வாழ்க்கை இருக்கும் என்பதை ஏற்றுக்கொள்ள மறுத்தார்கள் என்பதும் உண்மை.

இப்பிரபஞ்சத்தில் பூமியும் நம்மைத் தவிர வேற்று கிரகதத்தில் உயிரினங்களோ மனிதர்களோ இருக்கிறார்களா ?அவ்வாறு இருந்தால் நம்மை அவர்கள் பார்த்திருக்கிறார்களா ? நாம்தான் அவர்களைப் பார்க்க முடியுமா ?

... இப்படி எண்ணற்ற கேள்விகள் நவீன விஞ்ஞானத்தின் வளர்ச்சியால் கேட்கவும், தேடவும் செய்கிறோம்.

பறக்கும் தட்டுகள் (U. F. O ) வேற்று கிரகங்களில் இருந்து பூமிக்கு வந்து போனதாகவும், பல நாடுகளில் இச்செய்திகள் பலமாக பதியப்பட்டுள்ளது.

وَالسَّمَآءِ ذَاتِ الْحُبُكِ ۙ
(நட்சத்திரங்களின்) அழகிய பாதைகளுடைய வானத்தின் மீது சத்தியமாக!
(அல்குர்ஆன் : 51:7)

வேற்று கிரக வாசிகள் பூமியில் எதற்காக வரவேண்டும் ? அவர்களின் நோக்கம் என்ன என்பது பற்றி நிறைய பேர்கள் புத்தகம் புத்தகமாக எழுதி இருக்கிறார்களேத் தவிர ஆனால் இதுவரை "இதோ வேற்று கிரக வாசி இவர்தான் "என்று யாருமே நிரூபிக்கவில்லை . என்றாலும் அவர்களின் பல போட்டோக்கள் போலியானது என்று ஒதுக்கினாலும் சில போட்டோக்கள் தேர்ந்த விஞ்ஞானிகளையும் . கேமரா நிபுணர்களையும் தலை சுற்ற வைக்கிறது.

குர்ஆனில் சில வசனங்கள் சூசகமாக இது பற்றி விவரிக்க மாதிரியான நிறைய வசனங்கள் இருக்கின்றன.

"பூமிக்குள் பதிகின்றவைகளும் , அதில் இருந்து வெளிப்படும் இவைகளையும், வானத்தில் இருந்து இறங்குபவைகளையும் , அதன் பக்கம் ஏறுகின்றவைகளையும் அவன் நன்கறிவான். " குர்ஆன் (34 : 02)

இது விஷயமாக நபி (ஸல்) அவர்கள்
" நீங்கள் அறியாததையும் அவன் சிருஷ்டிப்பான் " குர்ஆன் ( 16 : 08)

என்ற குர்ஆன் வசனத்திற்கு விளக்கமளிக்கையில் " இவ்வுலகைப் பார்க்கிலும் 30 மடங்கு பெரியதாக உள்ள வெண்மையான பூமியை அல்லாஹ் சிருஷ்டித்துள்ளான் .நம் பூமியில் பச்சை நிறமும் நீல நிறமும் அதிகமாக இருப்பது போல் அக்கிரகம் வெண்மை நிரம்பி இருக்கிறது.அதில் இறைவனது சிருஷ்டிகளான மக்கள் நிரம்பி இருக்கின்றனர் .அக்கிரக மக்கள் அல்லாஹுத்தலாவுக்கு ஒரு கணப்பொழுதேனும் மாறு செய்வதே இல்லை" என்று கூறினார்கள் .

அப்பொழுது நபித்தோழர்கள்

"அம்மக்கள் ஆதமுடைய மக்களைச் சேர்ந்தவர்களா-...?"

"ஆதமை அல்லாஹ் படைத்திருக்கிறான் என்பதை அவர்கள் அறிய மாட்டார்கள் என்றார்கள் நபிகளார் (ஸல்) அவர்கள்.

"அவர்களில் இப்லீஸ் எங்கே...? என்று கேட்டனர் .

"அல்லாஹ் இப்பீஸ் - யை சிருஷ்டித்திருக்கிறான் என்பதையும் அம்மக்கள் அறிய மாட்டார்கள். என்றார்கள்.
ஆதாரம் : அல் புஸ்தான்

பூமிக்கு மிக அருகிலேயே பூமியை விட 30 மடங்கு பெரிய புதிய பூமி இருப்பதாக அமெரிக்க விண்வெளி ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

கலிபோர்னியா பல்கலைக்கழக விஞ்ஞானி , ஸ்டீவன் வாட் கூறுகையில் தண்ணீர், காற்று கொண்ட மற்றொரு பூமி இருக்கிறது. அதி நவீன தொலை நோக்கியில் பார்த்ததில் வளி மண்டலத்தில் சிறிய நட்சத்திரம் போல் அது சுற்றி வருவது கண்டுபிடிக்கப்பட்டது. ஆனால் அருகில் சென்றால் நம் பூமியை விட 30 மடங்கு பெரியதாக இருக்கும்.

அதில் உயிரினங்கள் வசிக்க 100 சதவீகித வாய்ப்பு இருக்கிறது என்றார்.

கலிபோர்னியா பல்கலைக்கழக வாஷிங்டன் கார்னிஜி ஆராய்ச்சி கழக விஞ்ஞானிகள் இது தொடர்பான ஆராய்ச்சியில் தொடர்ந்து ஈடுபட்டுள்ளனர்

ஆதாரம் :கலைக்கதிர் ஜூலை 2012 பக்கம் 55

வேற்று கிரக சித்தாந்தத்தை இஸ்லாம் ஏற்றுக் கொள்கிறதா ?

எக்ஸ் ஃபைல்ஸ் ( **The X Files** ) என்னும் டெலிவிஷன் தொடர் ஸ்டார் டிவியில் நீங்கள் பார்த்திருப்பீர்கள் . அமெரிக்காவில் மிகப் பிரபலமான தொடர் இது . இதில் அடிக்கடி வேற்றுக் கிரக மனிதர்கள் வந்து நம் மீது பரிசோதனை செய்வதாக மிக நுட்பமாக நம்பும்படி காட்டப்படுகிறது .

நம்ம விஷயத்திற்கு வருவோம். சூரியக் குடும்பத்தில் பூமியைத் தவிர , வேற்று கிரகங்களில் உயிரினங்கள் இருக்க முடியுமா என்பதுப் பற்றி பல ஆராய்ச்சிகள் நடந்து கொண்டு இருக்கின்றன .

வேற்றுகிரகங்களில் உயிரினங்கள் இருந்தால் அவை மனித உருவத்தில் இருக்கும் என்று கொள்வதே தப்பு என்று சொல்கிறார்கள் . 600 இறக்கைகளுடன் மிக பெரிய்ய்யா உருவத்தில் மனித முகத்தோடு ... மனிதன் பாதி பறவை பாதி கொண்ட உடலமைப்பில் ஓர் உயிரினம் பூமிக்கு பறந்து வந்தது என்று சொன்னால் நீங்கள் நம்புவீர்களா ?

"வானங்களையும் பூமியையும் அவனே படைத்தான். மலக்குகளைத் தன்னுடைய தூதைக் கொண்டு போகிறவர்களாகவும் ஆக்கினான். அவர்கள் இரண்டிரண்டு, மும்மூன்று, நான்கு நான்கு இறக்கைகள் உடையவர்களாக இருக்கின்றனர் "
குர்ஆன் 35 : 01

பறக்கும் அந்த உயிரினத்தை அடிவானத்தில் பார்த்ததாக குர்ஆன் வேதமும் பார்த்தவருக்காக சாட்சி சொன்னால் நீங்கள் நம்ப வேண்டும் . நம்புவீங்களா ?

وَلَقَدْ رَاٰهُ بِالْاُفُقِ الْمُبِيْنِ
" நிச்சயமாக அவர் (ஜிப்ரயீலை) தெளிவான வானத்தின் கோடியில் மெய்யாகவே கண்டார் " .
(அல்குர்ஆன் : 81:23)

பெரும்பாலான அமெரிக்கர்கள் பறக்கும் தட்டுக்களில் வேற்று கிரகவாசிகள் அடிக்கடி நம் பூமிக்கு இறங்கி வந்து நம்மில் சிலரை சந்திக்கிறார்கள் . பேசுகிறார்கள் .சில சமயம் கூட்டிக் கொண்டோ , கடத்திக் கொண்டோ போகிறார்கள் என்று எக்ஸ் ஃபைல்ஸ் பேட்டிக் கொடுக்கிறார்கள் .

உசைத் இப்னு ஹுளைர்(ரலி) அறிவித்தார்

நான் இரவு நேரத்தில் (என் வீட்டில்) 'அல்பகரா' எனும் (2 வது) அத்தியாயத்தை ஓதிக்கொண்டிருந்தேன். என்னுடைய குதிரை எனக்குப் பக்கத்தில் கட்டப்பட்டிருந்தது. திடீரென அந்தக் குதிரை மிகக் கடுமையாக மிரண்டது.

உடனே ஓதுவதை நிறுத்திக் கொண்டேன். குதிரை மிகக் கடுமையாக மிரண்டது. உடனே ஓதுவதை நிறுத்தினேன். குதிரை அமைதியாகிவிட்டது. பிறகு ஓதினேன்.

அப்போது குதிரை (முன் போன்றே) மிரண்டது. நான் ஓதுவதை நிறுத்தினேன். குதிரையும் அமைதியானது. மீண்டும் நான் ஓதியபோது குதிரை மிரண்டது.

நான் திரும்பிப் பார்த்தேன் அப்போது என் மகன் யஹ்யா குதிரைக்குப் பக்கத்தில் இருந்தான். அவனை அது (மிதித்துக்) காயப்படுத்திவிடுமோ என்று அஞ்சினேன். எனவே, அவனை (அந்த இடத்திலிருந்து) இழுத்துவிட்டு வானை நோக்கித் தலையைத் தூக்கினேன். அங்கு (விளக்குகள் நிறைந்த மேகம் போன்றதொரு பொருள் வானில் மறைந்தது. அதனால்) அதைக் காணமுடியவில்லை.

காலை நேரமானதுபோது நான் நபி(ஸல்) அவர்களிடம் நடந்ததைத் தெரிவித்தேன். அவர்கள் என்னிடம் 'இப்னு ஹுளைரே! தொடர்ந்து ஓதியிருக்கலாமே! இப்னு ஹுளைரே! தொடர்ந்து ஓதியிருக்கலாமே (ஏன் ஓதுவதை நிறுத்தினீர்கள்?)' என்று கேட்டார்கள்.

நான், என் மகன் யஹ்யாவைக் குதிரை மிதித்துவிடுமோ என்று அஞ்சினேன். இறைத்தூதர் அவர்களே! அவன் அதன் பக்கத்தில் இருந்தான். எனவே, நான் தலையைத் தூக்கிப் பார்த்துவிட்டு அவன் அருகில் சென்றேன். பிறகு, நான் வானை நெருங்கியபோது அங்கு மேகம் போன்றதொரு பொருளைக் கண்டேன். அதில் விளக்குகள் போன்ற (பிரகாசிக்கும்) பொருள்கள் இருந்தன. உடனே நான் வெளிய வந்(து பார்த்)தபோது அதைக் காணவில்லை' என்று சொன்னேன்.

நபி(ஸல்) அவர்கள், 'அது என்னவென்று நீ அறிவாயா?' என்று கேட்டார்கள். நான், 'இல்லை (தெரியாது)' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள் 'உன் குரலைக் கேட்டு நெருங்கிவந்த வானவர்கள் தாம் அவர்கள். நீ தொடர்ந்து ஓதிக்கொண்டிருந்திருந்தால் காலையில் மக்களும் அதைப் பார்த்திருப்பார்கள்; மக்களைவிட்டும் அது மறைந்திருக்காது' என்று கூறினார்கள். (புகாரி : 5018 )

1992 ல் வேற்று கிரகவாசிகள் பற்றி 6000 அமெரிக்கர்களிடம் நாடு தழுவிய கருத்துக்கணிப்பு எடுத்தபோது 18 % பேர் திடீரென்று இரவில் செயலற்று விழித்தெழுந்த போது வீட்டுக்குள்ளே விநோதமான உயிரினங்கள் வந்து போனதை சத்தியமிட்டு சொல்கிறார்கள்.

259. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
" (விண்ணுலகப் பயணத்தின்போது) என்னிடம் கோவேறு கழுதையைவிடச் சிறியதும், கழுதையைவிடப் பெரியதுமான வெள்ளை நிறத்திலமைந்த நீளமான புராக் எனும் (மின்னல் வேக) வாகனம் ஒன்று கொண்டுவரப்பட்டது. அது பார்வை எட்டுகிற தூரத்திற்குத் தனது கால் குளம்பை எடுத்து (எட்டு) வைக்கும். அதிலேறி நான் பைத்துல் மக்திஸ் (ஜெரூசலேம்) இறை ஆலயம் வரை சென்றேன்" .

அதில் 10% பேர்கள் வேற்று கிரகவாசிகளால் கடத்தப்பட்டு , அவர்களுடைய வாகனத்துக்குக் கொண்டு செல்லப்பட்டு, தம் உடல் மேல் சில பரிசோதனைகள் நடந்ததாக எக்ஸ் பைல்ஸ் TVவில் சொல்கிறார்கள்.

260. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
என்னை அ(ந்த வான)வர்கள் ஸம்ஸம் கிணற்றுக்குக் கொண்டுசென்றார்கள். என் நெஞ்சைப் பிளந்து, (இதயத்தை வெளியிலெடுத்து) ஸம்ஸம் கிணற்றின் நீரால் (என் இதயம்) கழுவப்பட்டது. பிறகு மீண்டும் (அதே இடத்திற்கு) நான் கொண்டுவந்து விடப்பட்டேன்.

வேற்று கிரகவாசிகள் மனித வடிவத்திலேயே வருகிறார்கள் அவர்கள் பயன்படுத்தும் பரிசோதனைக் கருவிகள் , ஆயுதங்களெல்லாம் எல்லாமே நம் ஆயுதங்கள் போலவே இருக்கின்றன என்று சிலர் பேட்டிக் கொடுக்கிறார்கள் .

பத்ரு களத்தில் கலந்துக் கொள்ள போர்கவசங்களுடன் ஜிப்ரயீல்(அலை) இறங்கி வருவதை நபி(ஸல்) அறிவிக்கிறார்கள்.
புகாரி 3995 .

பழைய கால யுத்தம் மாதிரி வாள் போர் கவசங்கள் தானா ... வேற்று கிரகவாசின்னா ஸ்டார் வார் மாதிரி அந்த கிரகத்தை தூக்கி போட்டு அழிக்க மாட்டார்களா ... என்று நீங்கள் கேட்பதற்காக

فَجَعَلْنَا عَالِيَهَا سَافِلَهَا وَ اَمْطَرْنَا عَلَيْهِمْ حِجَارَةً مِّنْ سِجِّيْلٍ
அச்சமயம் அவர்கள் மீது செங்கற்களை பொழியச் செய்து அவர்களுடைய ஊரை மேல் கீழாகப் புரட்டிவிட்டோம்.
(அல்குர்ஆன் : 15:74)

இப்போது நீங்கள்தான் சொல்ல வேண்டும் வேற்றுகிரக சித்தாந்தத்தை இஸ்லாம் ஏற்றுக் கொள்கிறதா ?

ர.ரா

கேள்வி-பதில்07/07/2020
(இன்ஸ்சூரன்ஸ் _ இடது கைப் பழக்கம் - திக்குவாய் )
https://m.facebook.com/story.php?story_fbid=2631034870489185&id=100007480923921
1 ) இன்ஸ்சூரன்ஸ்

சகோதரர் Abdul Nasar Ali அவர்கள் இரு தினங்களுக்கு முன்பு மருத்துவ காப்பீட்டின் அவசியம் குறித்து ஒரு பதிவு போட்டிருந்தார்
அதாவது தற்போதைக்கு உள்ள பொருளாதார நெருக்கடி சூழல் ஒவ்வொரு தனிநபருக்கும் மருத்துவ காப்பீடு திட்டம் மிக அவசியமாகிறது.
கடந்த கால பணப்புழக்கம் இருந்தது போன்று இனி மீண்டும் ஒருபோதும் வரப்போவதில்லை .
வேலைவாய்ப்புகளும் மக்களின் வாங்கும் சக்தி திறனும் வெகுவாக குறைந்து விடும் சூழல் போல் தெரிகின்றது.
இந்த சூழலில் மருத்துவ காப்பீடு திட்டம் மிக அவசியமாகிறது
தன் வாழ்நாளில் கஷ்டப்பட்டு சேர்த்த பணத்தை சில மணி நேரங்களிலேயே மருத்துவத்திற்காக பணத்தை இழந்தவர்கள் மிக அதிகம்.
ஆதலால் குடும்பத்திற்காகவும் தனி நபருக்காவும் காப்பீடு திட்டம் மிக அவசியமாகிறது .

அதனால் பெரும்பாலும் நாம் ஒவ்வொருவருக்கும் காப்பீடு திட்டம் மிக அவசியமாக தேவைப்படுகிறது. இது பற்றி இஸ்லாம் மார்க்கம் கூறுவது என்ன ?

இஸ்லாத்தின் பார்வையில் லைப் இன்சூரன்ஸ் (உயிர் காப்பீடு, வாகன காப்பீடு, சொத்து காப்பீடு, பொருள் காப்பீடு, மருத்துவ காப்பீடு) இவையல்லாம் கூடுமா? என்று பார்ப்பதற்கு முன்பு காப்பீட்டுத் திட்டம் என்றால் என்ன? என்பதை பார்க்கலாம்.

ஆயுள் காப்பீடு, பொருள் காப்பீடு, வாகனக் காப்பீடு, சொத்துக் காப்பீடு அல்லது மற்ற எந்தவகையான காப்பீடு முறையாக இருந்தாலும் அவை அனைத்தும் ஓர் ஒப்பந்தமாகும். காப்பீடு நிறுவனத்திற்கும் காப்பீடு செய்து கொள்ளும் நபருக்கும் மத்தியில் ஏற்படும் ஒப்பந்தம்தான் 'இன்சூரன்ஸ்' என்று அழைக்கப்படும்.

காப்பீட்டு முறையானது காப்பீடு செய்யப்படும் பொருளுக்கு சேதமோ அல்லது அழிவோ ஏற்படும்போது அல்லது காப்பீடு செய்துள்ள நபருக்கு விபத்து போன்றவற்றின் காரணமாக மரணம் ஏற்படும்போது ஒருகுறிப்பிட்ட தொகையை அல்லது ஒரு குறிப்பிட்ட இழப்பீட்டுத் தொகையை அல்லது பொருளின் சந்தை விலையை தனக்கோ அல்லது தான் குறிப்பிடும் நபருக்கோ அல்லது தனது வாரிசுகளுக்கோ காப்பீடு நிறுவனம் கொடுக்க வேண்டும் என்ற கோரிக்கையை காப்பீடு செய்யும் நபர் முன்வைக்கிறார்; அதற்காக காப்பீடு செய்யும் நபர் ஒரு குறிப்பிட்ட தொகையை செலுத்த வேண்டும் என்ற திட்டத்தின் அடிப்படையில் காப்பீடு நிறுவனம் அந்த கோரிக்கையை ஏற்றுக்கொள்கிறது, ஆகவே ஒரு கோரிக்கையை காப்பீடு செய்பவர் முன்வைக்கிறார், அதை ஒரு நிபந்தனையின் அடிப்படையில் காப்பீடு நிறுவனம் ஏற்றுக்கொள்கிறது.

இஸ்லாத்தில் காப்பீடுத் திட்டம் கூடுமா?

இஸ்லாத்தில் காப்பீட்டுத் திட்டம் கூடுமா? கூடாதா? என்று நேரடியாக பதில் கூறப்படவில்லை. ஆனாலும் சில வழிமுறைகளைக்கொண்டு கூடுமா? கூடாதா? என்பதை அறிஞர்கள் தெளிவாக கூறியுள்ளார்கள். காப்பீடு திட்டம் (இன்சூரன்ஸ்) என்பது நபி (ஸல்லலல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் காலத்தில் இல்லை. ஆனால் நபிகள் நாயகம் ஸல்லலாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் எந்த ஒரு வியாபாரமாக இருந்தாலும், கொடுக்கல் வாங்கலாக இருந்தாலும் அதில் எது கூடும்? எது கூடாது? என்பதை மிகத் தெளிவாக விளக்கி விட்டுச் சென்றிருக்கிறார்கள். இன்றைக்கு நடைமுறையில் உள்ள காப்பீட்டுத் திட்டங்களில் மார்கத்திற்கு மாற்றமான வட்டி கலந்த காப்பீட்டுத் திட்டங்களும் உள்ளன. வட்டியில்லாத காப்பீட்டுத் திட்டங்களும் உள்ளன. நம்முடைய பணத்திற்கு வட்டி கணக்கிட்டு தரக்கூடிய காப்பீட்டுத் திட்டங்களில் நாம் ஒரு போதும் சேர்ந்து விடக்கூடாது. இது மார்க்கத்திற்கு மாற்றமானதும் மறுமையில் நிரந்தர நரகத்தில் கொண்டு போய் சேர்க்கின்ற பாவமாகும்.

" ஈமான் கொண்டோரே!
இரட்டித்துக் கொண்டே அதிகரித்த நிலையில் வட்டி (வாங்கித்) தின்னாதீர்கள்; இன்னும் நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சி (இதைத் தவிர்த்துக் கொண்டால்) வெற்றியடைவீர்கள்.
(அல்குர்ஆன் : 3:130)

அபூ ஹுரைரா (ரலியல்லாஹு அன்ஹு) அறிவித்தார்கள்.

”அழித்தொழிக்கும் ஏழு பெரும் பாவங்களைத் தவிருங்கள்“ என்று இறைத்தூதர் (ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம்) அவர்கள் கூறினார்கள். மக்கள், “இறைத்தூதர் அவர்களே! அவை எவை?“ என்று கேட்டார்கள். நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள், “அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பதும், சூனியம் செய்வதும், நியாயமின்றி கொல்லக் கூடாது என்று அல்லாஹ் புனிதப்படுத்தியுள்ள உயிரைக் கொல்வதும், வட்டி உண்பதும், அனாதைகளின் செல்வத்தை உண்பதும், போரின்போது புறமுதுகிட்டு ஓடுவதும் அப்பாவிகளான, இறைநம்பிக்கை கொண்ட, கற்புள்ள பெண்களின் மீது அவதூறு கூறுவதும் தான் (அந்தப் பெரும் பாவங்கள்)” என்று (பதில்) கூறினார்கள். (ஷஹீஹ் புகாரி).

ஒருவர் வட்டியுடன் சேர்த்து திரும்பக் கிடைக்கும் இன்சூரன்ஸில் சேர்ந்து எனக்கு வட்டி வேண்டாம் என்னுடைய அசல் தொகை மட்டும் போதும் என்று கூறினால் அது மார்க்கத்தில் ஹலால் ஆகும். ஆனால் இன்னும் சில காப்பீட்டுத் திட்டங்கள் உள்ளன. அவற்றில் வட்டியின் எந்த ஒரு அம்சமும் கிடையாது. இவற்றில்

நாம் போடும் பணம் நமக்கு திரும்பக் கிடைக்காது. ஆனால் நமக்கு பாதிப்பு ஏற்படும் போது இன்சூரன்ஸ் நிறுவனம் நம்முடைய பாதிப்பிற்கு பொறுப்பேற்றுக் கொள்ளும். நமக்கு பாதிப்பு ஏற்படவில்லையில்லையென்றால் நம்முடைய பணம் நமக்கு திரும்பக் கிடைக்காது.

உதாரணமாக மருத்துவக் காப்பீடு (medical insurance), வாகனக் காப்பீடு (vechicle insurance) போன்றவற்றைக் கூறலாம். நம்முடைய மார்க்க அடிப்படையில் நாம் அனைவரும் பணம் போட்டு பைதுல் மால் ஒன்றை ஆரம்பிக்கின்றோம். நமக்கு நோய் ஏற்படும் போது அந்த பைதுல் மாலின் மூலம் நமக்கு உதவி செய்வார்கள். நாம் பைதுல் மாலிற்கு செலுத்திய பணம் குறைவாக இருந்தாலும் அனைவரின் பணமும் சேர்ந்து நமக்கு அதிகமாகக் கிடைக்கிறது. நமக்கு பாதிப்பு ஏற்படவில்லையென்றால் அந்தப் பணம் வேறு யாருக்காவது பயன்படும். இது போன்ற ஒரு ஒப்பந்தத்தில்தான் மருத்துவக் காப்பீடு, வாகனக் காப்பீடு செய்யப்படுகிறது. நாங்கள் இந்த மருத்துவக் காப்பீட்டில் பணம் செலுத்துகின்றோம். நமக்கு பாதிப்பு வரும்போது அந்த நிறுவனம் நம்முடைய பாதிப்பிற்கு உதவி செய்கிறது. நமக்கு பாதிப்பே வரவில்லையென்றால் நம்முடைய பணம் பாதிப்பு ஏற்பட்ட மற்றொரு சகோதரருக்கு உதவியாகச் செல்லும். இந்த அடிப்படையில்தான் அனைவரும் பணம் செலுத்துகின்றனர். இதில் பணத்திற்கு எந்த விதமான வட்டியும் கணக்கிடப்படுவதில்லை.ஆகவே இது போன்றுதான் வாகன இன்சூரன்சும். நாம் நம்முடைய வாகனத்திற்காக குறிப்பிட்ட கால அளவில் குறிப்பிட்ட தொகையை காப்பீடாகச் செலுத்துகின்றோம். இந்த குறிப்பிட்ட கால அளவில் நமக்கு பாதிப்புகள் ஏற்படும் போது அந்த நிறுவனம் இதற்கு பொறுப்பேற்றுக் கொள்கிறது. இதில் மூன்று விதமான பாதிப்புகள் ஏற்படும்.

1) ஒன்று நாம் ஓட்டும் போது எதிரில் வருபவர்களுக்கு பாதிப்பு ஏற்படும்.

2) இரண்டாவது நாம் ஓட்டுகின்ற வண்டிக்கு பாதிப்பு ஏற்படும்.

3) மூன்றாவது வண்டியின் ஓட்டுனருக்கு ஏற்படும்.

நாம் வாகனத்தை ஓட்டிச் சென்று ஒருவன் மீது மோதி அவன் இறந்து விட்டால் இஸ்லாத்தின் அடிப்படையிலேயே அவனுக்கு அவனுடைய குடும்ப நிலையை பார்த்து அவனுக்கு நஷ்டயீடு கொடுக்க வேண்டும் என்பது கட்டாய மார்க்க விதி. நாம் யாராவது ஒருவர் மீது மோதி அவர் மரணத்திதாலோ அல்லது வண்டிக்கு ஏதாவது ஆனாலோ அல்லது நமக்கு ஏதாவது ஆனாலோ எவ்வளவு செலவானாலும் அந்த நிறுவனம் பார்த்துக்கொள்ளும். அப்படி எதுவும் ஆகவில்லையென்றால் பணம் திரும்ப வராது. இவ்வாறாக கூறித்தான் அனைவரிடமும் பணம் வாங்கப்படுகிறது. இதில் வட்டி இல்லை. அதற்கான சாயலும் இல்லை. இது ஒரு கூட்டு உதவித் திட்டம் தான். இதற்கு மார்கத்தில் எந்தத் தடையும் இல்லை. ஆகையால் இது நமக்கு அனுமதியாகும். நீங்கள் குறிப்பிட்டுள்ள காப்பீட்டுத் திட்டம் வட்டியில்லாத வகையைச் சேர்ந்ததாகும். எனவே அதில் இணைவது தவறுகிடையாது.

உயிருக்கு பயந்து, தக்கவித்துக்கொள்ள செய்யப்படும் இன்சூரன்ஸ் காப்பீட்டுத் திட்டத்தை இஸ்லாம் மார்க்கம் அனுமதிக்கவில்லை
ஏனெனில் மரணம் என்பது எப்போதும் வரலாம் அந்த மரணித்தில் இருந்து தப்பிக்கொள்ள முன்கூட்டியே சேர்கப்படும் காப்பீட்டுத் திட்டம் கூடாது அது இறைநம்பிக்கையை குறைக்கின்றது அதுமட்டுமல்லாமல் கலாகத்ர் நம்பிக்கையை இழக்கச்செய்கிறது.

எனவே மேலே கூறப்பட்ட முறையில் இன்சூரன்ஸ்முறை ஷரியாவின் கண்ணோட்டத்தில் கூடுமானதான விஷயமாக இருக்கிறது, இதனடிப்படையில். சொத்துக் காப்பீடு வாகனக் காப்பீடு ,பொருள் காப்பீடு ஆகிய காப்பீடுகளும் இதரவகை காப்பீடுகளும் ஷரியாவிற்க்கு முறனில்லாததாக மேலும் வட்டியில்லாததாக இருந்தால் கூடும் வட்டி கலந்த திட்டங்கலாக இருந்தால் கூடாது.

2) இடது கை பழக்கம்



இடது கைப்பழக்கம் உள்ள குழந்தைகளை பற்றி பெற்றோர்கள் ரொம்பவும் கவலைப்படுகிறார்கள் . இடது கைப்பழக்கத்தை நிறுத்த முயற்சி செய்ய வேண்டாம் . விட்டுவிடவும் . மொத்த ஜனத்தொகையில் சுமார் 4 சதவீதம் இடது கைப்பழக்கம் உள்ளவர்கள்தான். சில பெரிய பிரபலங்கள் எல்லாம் இடது கை பழக்கம் உள்ளவர்கள்தான் .

காந்தியடிகள், மைக்ரோசாப்ட் நிறுவனர் பில்கேட்ஸ் , பில் கிளிண்டன் , ரொனால்ட் ரீகன் , புஷ் ஒபாமா , அமிதாப்பச்சன் ,சன்னி லியோனி, லியோனார்டோ டாவின்சி, ஐன்ஸ்டீன் , பெஞ்சமின் பிராங்கிளின் , மைக்கேல் ஆஞ்சலோ , சாப்ளின் , ட்ருமென் , பிரபல ஒரு கொலைகாரன் ஜாக்தி ரிப்பர் உட்பட அநேகர் இடது கைப்பழக்கம் உள்ளவர்கள் .

இருந்தும் நாம் வாழ்வது வலதுகை உலகத்தில்தான் . கதவுகள் திருப்புளிகள் , பூட்டுகள் , மோட்டார் கார்கள் , சங்கீத வாத்தியங்கள் எல்லாமே வலது கைக்காரர்களுக்கு என்று டிசைன் செய்யப்பட்டவை . இடது கைக்காரர்கள் சற்று சிரமப்பட்டாலும் பழகிக் கொள்கிறார்கள் .

இடது கைப் பழக்கத்திற்கு சரியான காரணம் இன்னும் தெரியவில்லை . ஒரு தியரி சொல்கிறேன் . நம் உடலில் இடம் வலம் என்று பார்த்தால் சற்று வித்தியாசப்படுகிறது . கண்ணாடியில் பாருங்கள் முகத்தின் வலதும் இடதும் ஒன்றுபோல் இருப்பதில்லை . காலில் சக்தி, பாதத்தின் சைஸ் இவற்றில் எல்லாம் கொஞ்சம் இடது வலது வித்தியாசம் இருக்கிறது .

மூளையின் இடது வலது பாகங்கள் வெவ்வேறு செயல்பாடுகளை கவனிக்கின்றன பெரும்பாலும் மூளையின் வலதுபாகம்தான் அதிக பவர் உள்ளது என்கிறார்கள் .

மூளையில் இருந்து வரும் செய்திகள் கழுத்து அருகில் தடம்மாறி மூளையும் இடது பக்கச் செய்திகள் உடலின் வலது பக்கத்திற்கு போகிறது .

அதே மாதிரி மூளையின் வலது பக்க செய்திகள் உடலின் இடது பக்கத்திற்கு போகிறது . நாம் படிப்பது , எழுதுவது பேசுவது ,வேலை செய்வது எல்லா ஆணைகளும் மூளையின் இடது பக்கத்தில் இருந்து வருகின்றன அதனால்தான் நம்மில் பெரும்பாலோர் வலதுகைப் பழக்கக்காரர்களாக இருக்கிறோம் .

இடதுகைப் பழக்கக்காரர்களுக்கு மூளையின் வலது பாகம் சக்தி அதிகம் இருக்கும் அதனால்தான் இடதுகைப் பழக்ககாரர்களாக இருக்கிறார்கள் .

இடது கைபழக்கத்தால் அவர்களுக்கு நினைவு கூறும் திறன் , கற்பனைத்திறன், வரைபடங்கள் தொடர்பான அறிவு ஆகியவை அதிகமாக இருக்கும் . இசை , ஓவியம் ஆகியவற்றில் சிறந்து விளங்குவார்கள் ஆகஸ்ட் 13ஆம் நாள் இடது கைப்பழக்கம் உள்ளவர்கள் நாளாக கொண்டாடப்படுகிறது.

3) திக்குவாய்

நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் குழந்தையாக இருக்கும்போது அவரை நைல் நதியில் தொட்டில் வைத்து அவரின் தாய் விட்டார்கள். அக்குழந்தையை ஃபிர்அவ்னுடைய மனைவி ஆசியா எடுத்து வளர்த்தார்கள்.

சிறுவயது பிராயத்திலேயே மூஸா (அலை) அவர்களை ஃபிர்அவ்ன் தூக்கும்போது அவன் நெஞ்சின் மீது மிதித்தார்கள்.

எனவே மூஸா அலை அவர்களுக்கு சிறு பிராயத்திலேயே தன்மீது வெறுப்புணர்ச்சி இருப்பதாக ஃபிர்அவ்ன் உணர்ந்தான். எனவே இதை சோதிப்பதற்காக தீ கங்குகளையும் , தீக்கங்குகள் போல் மணிகளையும் ஒன்றாக சேர்த்து வைத்து அவர்களின் முன் வைத்தான் .

மூஸா (அலை ) தீ கங்குகளை தவிர்த்து சிவப்பு மணியை கையில் எடுக்க எத்தனித்தபோது ஜிப்ரீல் (அலை) மூஸாவின் கையை மாற்றி தீ கங்குகளை எடுக்கும்படி செய்தார்கள்.

மூஸா (அலை ) தீ கங்கை எடுத்து தன் வாயில் போடவே ஃபிர்அவ்ன் இக்குழந்தைக்கு தன்மீது வெறுப்புணர்ச்சி இல்லை என்பதாக உணர்ந்தான் .

தீக்கங்குகள் நாவில் பட்டதால் மூஸா (அலை ) அவர்களுக்கு திக்குவாய் ஏற்பட்டது

" அவர்கள் என்னை பொய் ஆக்கினால் என் மனம் உடைந்து விடும் எனக்கு கொன்னல் இருப்பதால் என் நாவால் சரியாக பேச முடியாது ஆதலால் என்னுடன் வருமாறு ஹாரூனுக்கு நீ அறிவிப்பாயாக ! " குர்ஆன் (26 : 13)

திக்கு வாயின் காரணமாக தன் தம்பிக்கும் நபிப் பட்டம் கிடைத்தது .

திக்குவாயை முறையான பயிற்சி அளித்தால் அதனை நன்கு குணப்படுத்திவிட முடியும் என்பதாக மருத்துவர் கூறுகிறார்கள்.

ர.ரா

கூடு முதல் வீடு வரை ..
( சொற்பொழிவின் சாரம்சம்)



உண்ண உணவும் உடுக்க உடையும் இருக்க வீடும் மனித வாழ்விற்கு இன்றியமையாதது ஆனால் மனித இனத்தை தவிர்த்து மற்ற ஜீவராசிகளுக்கு ஆடைகள் தேவை இல்லாத போது உண்ண உணவும் இருக்க கூடோ , குகையோ , புற்றோ, வலையோ , பொந்தோ பொடையோ கண்டிப்பாக தேவைப்படுகிறது .

விலங்குகள் எதிரிகளிடமிருந்து தங்களை பாதுகாத்துக்கொள்ள எடுக்கும் முன் எச்சரிக்கை நடவடிக்கைகள் உயிரினங்களில் காணப்படும் அற்புதங்களில் ஒன்றாகும். பல உயிரினங்கள் தங்களுக்கு வரக்கூடிய இடையூறுகளை பற்றி மதிப்பிட்டு அதனை தடுக்கக்கூடிய பாதுகாப்பு நடவடிக்கைகளை கண்டு பிடிக்கும் திறமைகளைக் கொண்டுள்ளன. இவை அனைத்தும் இவைகளின் உள்ளுணர்வில் பதிவாகி இருக்கிறது என்கிறார்கள் விஞ்ஞானிகள் .

கரையான்கள் உருவாக்கும் புற்றின் சுவர்கள் ஒரு பெரிய கடப்பாறையை கொண்டு கூட தகர்க்க முடியாத அளவுக்கு கனமும் பலமும் கொண்டவை.

தூக்கணாங்குருவிகள் ஈச்ச, கருவை , உடை மரங்களில்தான் கூடு கட்டும் தங்களது பிரதான எதிரியான பாம்புகள் கூட நுழைய முடியாத அளவிற்கு தங்களது கூடுகளை அமைத்துக் கொள்கின்றன

பிலிப்பைன்ஸ் நாட்டின் " போயா (Boya) என்கிற பறவை மின்மினி பூச்சிகளை உள்ளே வைத்து கூடு கட்டுகிறது இதனால் இரவில் வெளிச்சமும் பாதுகாப்பும் கிடைக்கிறது

ஹுத்ஹுத் பறவைகள் தங்கள் கூடுகளை ஒரு வகை பசுந்தழையினால் கட்டுகின்றன. இதற்கு காரணம் இந்த இலைகளில் சுரக்கும் அமிலம் பூச்சி களைக் கொல்லும் என்பதாக பில்டெல்பியா ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள் . ஒட்டுண்ணிகள் பரவி தங்கள் குஞ்சுகளுக்கு தீங்கு விளைவிப்பதை இப்பறவைகள் இவ்வாறு தடுக்கின்றன என்று ஆய்வில் தெரிவித்துள்ளனர்.

ஆஸ்திரேலியா நியூகினியா காடுகளில் பாரடைஸ் பேர்ட் எனப்படும் சொர்க்கத்துக்கு கிளிகள் உயர்ந்த கரையான் புற்றில் துவாரங்களை உண்டாக்கி உள்ளே புகுந்து கூடுகள் அமைத்து முட்டைகள் இடுகின்றன. பெண் கிளிகள் அடைகாத்து குஞ்சு பொரிக்கின்றன . இங்கு உள்ள கரையான்களுக்கு தொல்லை கொடுப்பது இல்லை. கரையான்களும் ஈரக் களிமண் கொண்டுவந்து கிளிகள் உண்டாக்கிய துவாரங்களை அடைத்து சீல் செய்துவிடுமாம். இதனால் முட்டைகளுக்கும் குஞ்சுகளுக்கும் பாதுகாப்பு கிடைக்கிறது.

அடுத்து சிலந்தி பின்னும் வலை ரொம்பவும் ஆச்சரியம் ஊட்டுகிறது. சிலந்தி அந்த நூல் இழையை அதன் அடி வயிற்றுப் பகுதியில் இருக்கும் சுரப்பிகளிலிருந்து மிக நுட்பமான துவாரங்கள் மூலம் வெளியே அனுப்புகிறது . வெளியே வரும் போது திரவ வடிவில் இருக்கும் நூலிழை காற்று பட்டதும் இறுகி விடுகிறது .

சிலந்தி வலையில் பல வகை உண்டு ஒட்டிக்கொள்ளும் நூல் இது பூச்சிகளைப் பிடிப்பதற்கென்றே ஸ்பெஷல் .சிலந்தி வலைகளுக்கு குறுக்கே கட்டப்படும் நூல் கொஞ்சம் வலுவாக இருக்கும் . இதற்காக அமைக்கப்படும் நூல் ஒட்டாத வகை நூல் !

இத்தோடு முட்டைகள் இடும்போது அதை பாதுகாக்க சுரட்டப்படும் நூல் பஞ்சு மெத்தை போல் இருக்கும் .வலுவாக நார் நாராக இருக்கும் .

சிலந்தியைப் பற்றி குர்ஆனில் அல்லாஹ் .." வீடுகளில் எல்லாம் மிக்க பலவீனமானது நிச்சயமாக நூலாம் பூச்சியின் வீடுதான் குர்ஆன் ( 29: 41)

சிலந்தி பின்னுவதை வலை என்கிறோம் ஆனால் இறைவன் மேற்கண்ட வசனத்தில் சிலந்தியின் வீடு என்கிறான் அது ஏன் ஒரு சமயம் இப்படி இருக்குமோ பறவைகள் தங்கள் உணவை வெகு தொலைவில் தேடிக்கொண்டு கூட்டிற்கு வந்து தன் குஞ்சுகளுக்கு கூட்டுகிறது ஆனால் சிலந்தியின் உணவு பூச்சிகள் தனது அறைக்கு தேடி வந்து மாட்டிக் கொள்கிறது சிலந்தியின் உணவு தன் வலையில் தயாராகி விடுகிறது இதனால்தான் சிலந்தியின் வலையை இறைவன் சிலந்தியின் வீடு என்கிறானோ ?

அடுத்து தேன்கூடு தேன் கூட்டில் உள்ள அறைகள் ஒவ்வொன்றும் அருங்கோணம் வடிவத்தில் அமைக்கப்பட்டுள்ளது தேனீக்களின் உள்ளுணர்வில் பதிந்து வடிவம் அறுங்கோணம். காரணம் தேன்கூட்டின் உட்பகுதி சதுரமாகவோ வட்டமாகவோ இருந்தால் தேன்கூடு கட்டுவதற்குரிய மெழுகு அதிகம் தேவைப்படும். எனவே குறைந்த மெழுகில் திடமான கூட்டிற்கு அறுங்கோண வடிவம் சிறந்தது. மேலும் கூட்டின் அறையில்

சேமிக்கப்படும் தேனுக்கு பிடிமானம் மற்றும் அமைப்புகளை விட அறுங்கோண வடிவமே சிறந்தது என்று தேனீக்களுக்கு சொல்லிக் கொடுக்கப்பட்டிருக்கிறது !

" உங்களது இறைவன் தேனீக்கு மலைகளிலும், மரங்களிலும் ,மக்கள் கட்டும் கட்டிடங்களிலும் கூடுகளை அமைத்துக் கொள்ளும்படி அறிவூட்டினான் " .குர்ஆன் (16 : 68)

தேனீக்களைப் பற்றி வான்பிரீஸ் , லோரென்ஜ் , தின்பெர்ஜன் இந்த மூன்று விஞ்ஞானிகளும் ஆய்வில் ஈடுபட்டு தேனீக்களில் நடமாட்டங்களையும் , அவைகள் மலர்களில் இருந்து தேனை உறிஞ்சும் பாங்கையும் , தேனீக்கள் நடனமாடும் போது அதன் அங்க அசைவுகளில் இருந்து இதர தேனீக்களுக்கு என்னென்ன விஷயத்தை கூறுகின்றன என்பதையும், அதை உள்வாங்கி மற்ற தேனீக்களும் மலர்களைத் தேடி குறிப்பிட்ட திசையில் பயணிக்கின்றன என்பதையும் அலசி ஆராய்ந்த மூவருக்கும் 1973ஆம் ஆண்டு நோபல் பரிசு வழங்கப்பட்டிருக்கிறது.

அனைத்து ஜீவராசிகளும் தனித்தனியாக இரை தேடி அலையும் போது எறும்புகள் மட்டும் சாரிசாரியாக செல்வது ஏன் இப்படி ஒரு கேள்வி உங்களுக்கு எறும்பை பார்க்கும்போது வந்திருக்கும் .

எறும்புகள் தங்களுக்குள் பேசிக் கொள்வது , . தகவல் தெரிவிப்பது எல்லாம் மூக்கிலிருந்து துருத்திக்கொண்டிருக்கும் ஆண்டனா மூலம்தான் . ஆண்டனா ஒன்றை ஒன்று தொட்டுக் கொள்ளும் போது ஒரு எறும்பில் உள்ள செய்தி மற்ற எறும்புகளுக்கு சங்கேத பாஷையாக பரிமாறிக் கொள்கிறது

மேலும் இதுகள் போகிற பாதையில் செண்ட் , அத்தர் மாதிரி ஒரு வித ஹார்மோன்களைத் தெளித்து அடையாளக் குறியீட்டும் செய்தியை தெரிவித்துக் கொள்கின்றன.ஒரே ரூட்டில்தான் போக்குவரத்து மற்ற ரிஸ்க் எடுப்பதில்லை .பெரிய சைஸில் எதையாவது இழுத்து வந்து கூட்டில் சேர்க்க வேண்டும் என்றால் உடனே அத்தனை எறும்புகளும் பேரணியாக ஸ்பாட்டில் ஆஜராகி விடும்.

எறும்புகள் புற்று கட்டி விட்டால் வருஷக்கணக்கில் அப்படியே இருக்கும் எறும்பு புற்றுக்குள் வீதி ,தெருக்கள், குறுக்குத்தெரு ,தனித்தனி அறைகள் உணவுக்குரிய ஸ்டோர் ரூம் , பக்கத்து புற்றில் உள்ள எறும்பை கைதுசெய்து, அடிமைப்படுத்தி தங்கள் புற்றுக்குள் சிறை வைப்பதற்காக சிறைச்சாலை இப்படி எல்லா வசதி வாய்ப்புகளும் இருக்கும் ஒரு எறும்பு காலனியில் சுமார் ஒரு லட்சம் எறும்புகள் வரை இருக்கும்.

ஊரில் உள்ள அத்தனை எறும்புகளுக்கும் ஒரே ஜீவன் ஒன்றே உள்ளம் என்ற தியரி உண்டு தேன் ஈ மாதிரியே ஆண் எறும்பு , ராணி எறும்பு வேலைக்கார எறும்பு என்ற பாகுபாடுகள் உண்டு இங்கும் தலைவி ராஜ்யம் தான் ஆனாலும் பாதுகாப்பும் பொறுப்புமிக்க தலைவியாகத்தான் எப்போதும் செயல்படும் என்பதாக ஆய்வில் கண்டறிந்துள்ளனர் .

ஒரு எறும்பு தலைவியின் பொறுப்பை பாருங்கள் ....

" சுலைமானுடைய ராணுவம் ,ஜின்கள், மனிதர்கள், பறவைகள் ஆகியவைகளிலிருந்து இருந்து ஒன்று திரட்டப்பட்டு அணி அணியாக புறப்பட்டன .இந்தப் படைகள் எறும்புகள் வசிக்கும் ஒரு ஓடையின் சமீபமாக வந்தபோது அதில் ஒரு பெண் எறும்பு மற்ற எறும்புகளை நோக்கி , "எறும்புகளே நீங்கள் உங்கள் வீடுகளுக்குள் நுழைந்து கொள்ளுங்கள் சுலைமானும் அவருடைய ராணுவமும் நீங்கள் இருப்பது அறியாது உங்களை தங்கள் கால்களால் மிதித்து விட வேண்டாம் என்று கூறியது
குர்ஆன் ( 27 :18)

மேற்கண்ட வசனங்கள் மூலம் மிருகங்களும் பறவைகளும் மனிதனைப் போன்று சமுதாயங்களாகவே வாழ்கின்றன. இவர்களுக்கு தானாகவே ஒருவகை உள்உணர்வு ஏற்படுகிறது என்றும் இது இறைவனின் அருட்கொடை என்றும் இந்த உள்ளுணர்வு காரணமாக அவை கூட்டம் கூட்டமாக இயங்குகின்றன என்றும் கருத்து தெரிவிக்கின்றனர்.

பூமியில் ஊர்ந்து திரியக் கூடியவைகளும் தம்முடைய இறக்கைகளால் ஆகாயத்தில் பறக்க கூடியவைகளும் உங்களைப் போன்ற சிருஷ்டிகளே சமுதாயங்களை அன்றி வேறில்லை . குர்ஆன் (6:38)

அடுத்து மனிதர்கள் வாழ்ந்த குகை இல்லங்கள் , ஆதிகால மனிதர்கள் நிலங்களில் உள்ள குகைகளிலும் மலை குகைகளிலும் வாழ்ந்ததாக அனேக பண்டைய கால வரலாறுகள் குறிப்பிடுகின்றன . குர்ஆனில் அல்லாஹ் தமூத் கூட்டத்தினர் மலைகளை குடைந்து குகைகளை உருவாக்கி அதில் வாழ்ந்ததாக குறிப்பிடுகின்றான் .

இந்த தமூத் கூட்டத்தினர் மதீனாவுக்கும் ஷாமுக்கும் இடையில் மதினாவில் இருந்து 150 மைல் தூரத்தில் ஹிஜ்ரு என்னும் இடத்தில் பிரமாண்டமான மலைகளை குடைந்து அற்புதமான வாசஸ்தலங்களில் தங்களுக்காக அமைத்து பூமியில் ஏற்படும் எந்த தீங்கிலிருந்தும் அச்சமற்ற வாழலாம் என்ற நம்பிக்கையில் குகைகளை அமைத்தனர். இவ்வாறு மலைகளின் அடிவாரத்தில் அழகிய மாளிகைகள் குடைந்து தட்ப வெட்ப காலங்களுக்கு ஏற்ப தனித்தனி குகை இல்லங்களை உருவாக்கினார்கள்.

ஹிஜ்ருவாசிகள் அச்சமற்ற வாழலாம் எனக்கருதி அவர்கள் மலைகளைக் குடைந்து வீடுகளை அமைத்தார்கள் அவர்களை விடியற்காலையில் பேரிடிச் சத்தம் பிடித்துக்கொண்டது அவர்கள் தங்களை பாதுகாத்துக்கொள்ள செய்திருந்தவைகளில் ஒன்றுமே அவர்களுக்கு பலனளிக்கவில்லை
குர்ஆன் (15:82_84)

ஆகவே முன்னர் அவர்களுக்கு எச்சரிக்கப்பட்டு வந்த பூகம்பம் அவர்களைப் பிடித்துக் கொண்டது அதனால் அவர்கள் தங்கள் வீடுகளில் இருந்தவாறே இறந்து கிடந்தனர்
குர்ஆன் (7: 78)

வீடுகள் ஆடம்பரமான மாளிகைகள் உயரமான கோபுரங்கள் என இப்பூமியில் கட்டப்பட்ட கட்டடங்களை குறித்து குர்ஆனில் நிறைய வந்துள்ளது பழுதடைந்த அனாதைகளின் வீட்டுச் சுவரை ஹஜ்ரத் அவர்கள் சரிசெய்ததாக குர்ஆனில் அல்லாஹ்

"அவர் அங்கு விழுந்து விடக் கூடிய நிலையில் இருந்த ஒரு சுவற்றை கண்டார் ஆகவே அவர் அதற்கு மண் அப்பி செப்பனிட்டு அதனை விழாது நிலைநிறுத்தினார் குர்ஆன் (18: 77 )

அடுத்து வானத்தில் இறைவனைத் தேடி கண்டுபிடிக்க கட்டிய உயரமான கோபுரத்தை கட்டியது பற்றி..

"ஹாமானே ..! .களிமண்ணால் செய்த செங்கல் சூளைக்கு நெருப்பு வை. அச்செங்கல்லைக் கொண்டு வானளாவ மாளிகையைக் நீ கட்டு . அதில் நான் ஏறி மூஷாவின் உடைய இறைவனை நான் பார்க்க வேண்டும் குர்ஆன் (28: 38)

அடுத்து சுலைமான் அலை அவர்கள் விரும்பி கட்டிய அழகான உயரமான பளிங்கினால் ஒரு மாளிகையும் மாளிகையும் பளிங்குத் தரையும் பற்றி குர்ஆனில்...

" இம்மாளிகையில் நுழை" என்று அவளுக்கு கூறப்பட்டது அவள் தரையில் பதிக்கப்பட்டிருந்த பளிங்கு கற்களை தண்ணீர் என்று எண்ணி ஆடை நனைந்து போகாதிருக்க இரு கெண்டேகாலிருந்து உயர்த்தினாள். அதற்கு சுலைமான் அது தண்ணீர் அல்ல பளிங்கு கற்கள் பதிக்கப்பட்ட மாளிகைதான் என்று கூறினார் குர்ஆன் (27 : 44)

... இப்படி மனிதர்கள் அமைத்துக்கொண்ட இப் பூமியில் உள்ள குகை வீடுகளைப் பற்றியும் பளிங்கு மாளிகையைப் பற்றியும் கோபுரங்களை பற்றியும் இறைவன் குர்ஆனில் குறிப்பிட்டு காட்டியுள்ளான்.

ர. ரா

## கிணறுகளை சுற்றும் வரலாறுகள்

(சொற்பொழிவின் சாரம்சம் )



பொதுவாக உலகில் எங்கெல்லாம் கிணறுகள் இருக்கின்றதோ அங்கெல்லாம் அந்த கிணறுகளைச் சுற்றி வரலாறுகளும் இருக்கும் என்பதாக வரலாற்று ஆய்வாளர்கள் ஒரு புள்ளிவிபரம் கணக்கை வரலாற்றையும் பதிவு செய்துள்ளனர்.

இந்திய வரலாற்றில் ஜாலியன் வாலாபாக் படுகொலையை நாம் மறந்திருக்க முடியாது ஜாலியன் வாலாபாக் படுகொலை நடந்த மைதானத்தில் இருந்த கிணறு இன்றும் அது துப்பாக்கி குண்டுகள் துளைத்த அடையாளங்களுடன் தீராத ஈன அழுகுரலால் இன்னும் அழுதுகொண்டே இருக்கிறது .

நாமும் இந்த கோணத்தில் இஸ்லாத்தின் வரலாற்று சம்பந்தமான கிணறுகளைப் பற்றி ஆய்வு செய்யலாம் .

பத்ரி என்பது மக்கா மதீனா இடையே உள்ள ஒரு இடத்திற்கு பெயராகி மதினாவுக்கு தென்மேற்கே 84 மைல் தொலைவில் உள்ள இடத்தில் ஒரு கிணறு இருக்கிறது பத்ரு பின் நாரீன் என்பவர் அக் கிணற்றை தோண்டினார் எனவே கிணற்றுக்கும் அதைச் சுற்றியுள்ள இடத்திற்கும் அவர் பெயரே பத்ரு என்ற பெயரே நிலைத்துவிட்டது .

அதிலும் பள்ளத்தாக்கு ஐந்து மைல் நீளமும் நான்கு மைல் அகலமும் கொண்ட ஒரு சம வெளியாகும் அதன் வடக்கிலும் கிழக்கிலும் செங்குத்தான குன்றுகள் தெற்கே கருப்பான தரை மேல் மணல் பாங்கான சிறு சிறு குன்றுகள் இவைகளில் உற்பத்தியாகி பள்ளத்தாக்கில் வந்து விழும் ஒரு சிற்றாறு அங்கு உள்ளது அதனால் நீரூற்றுகள் பலவும் அங்கு உண்டு அவற்றில் குழிகள் தோண்டி தண்ணீரை தேக்கி பயன்படுத்துவது பயணிகளின் வழக்கம் இந்த நீரூற்று களுக்கு மத்தியில் தான் பத்ரு கிணறு உள்ளது

பத்ரு யுத்தத்தில் முஸ்லிம்கள் 313 பெயர்களும் எதிரணியில் ஆயிரத்துக்கும் மேற்பட்டவர்களும் மோதிக்கொண்டனர் முஸ்லிம்களுக்கு மாபெரும் வெற்றி கிடைத்தது இந்தப் போர் மூலம் எண்ணிக்கை பலம் முக்கியமல்ல எண்ணத்தின் பலமே முக்கியம் என்பதை உலகுக்கு உணர்த்திய போர்.

வெற்றிக்குப் பின்பு அதில் கிணற்றுக்கு அருகில் நபி (ஸல்) நின்றுகொண்டு ,
ஏ.. உத்பாவே ஷைபாவே, அபுஜஹிலே உங்களுடைய இரட்சகன் உங்களுக்கு அளிக்கப்பட்ட வாக்கை பெற்றுக் கொண்டீர்களா ? என்னுடைய இறைவன் எனக்கு அளித்த வாக்கை மெய்யாகவே நான் பெற்றுக்கொண்டேன் நீங்கள் என்னை நிராகரிக்கிறீர்கள் மக்கள் என்னை நம்பினார்கள் என்று நபி ஸல் அவர்கள் கூறினார்கள் இன்னும் இந்த கிணறு 1400 வருடங்கள் தாண்டியும் இந்த வரலாற்றை பேசிக் கொண்டே இருக்கிறது.

நபி யூசுப் (அலை) சிறுவராக இருக்கும்போது அவருடைய சகோதரர்கள் அதாவது மூத்தகுடி தாய் பெற்ற மகன்கள் தம் தந்தை யஃகூப் ( அலை) அவர்கள் யூசுப் மீது பிரியமாக இருப்பதைக் கண்டு பொறாமைப் படுகிறார்கள்

யூசுப்பை தம் தந்தையாரிடம் இருந்து பிரித்து விட்டால் தந்தையார் பாசம் தங்கள் மீது திரும்பும் என திட்டம் தீட்டி அவரை காட்டுக்கு அழைத்துச் சென்று பெரிய கிணற்றில் தள்ளிவிட்டு யூசுப்பை ஓநாய் கடித்து தின்று விட்டதாக அவருடைய சட்டையை கழட்டி அதில் ஆட்டின் ரத்தத்தை தடவி தந்தையிடம் காண்பிக்கின்றனர்

நபி யூசுப் (அலை) தள்ளிய கிணறு கன்ஆன் தேசத்தின் காட்டின் நடுவே இன்னும் உள்ளது . கிணறு உள்ள இடத்தை கொத்தன் என்று பைபிள் கூறுகிறது அந்த கிணற்றை மக்கள் இன்றும் கூட பார்த்து வருகின்றனர் அந்த கிணற்றை ஆது சமூக கூட்டத்தின் தலைவர் ஷத்தத்தினால் கட்டப்பட்டதாக இமாம் கஸ்ஸாலி (ரஹ்) எழுதியுள்ளார்கள் .

இக்கிணறு யாகூப் அலைஹிஸ்ஸலாம் வீட்டில் இருந்து மூன்று கல் தொலைவில் இருக்கிறது அதன் பெயர் ஜூப்புல் அஸ்ஹான் (நல்லோர்களின் கிணறு) என்றும் அதன் ஆழம் 70 கஜம் என்றும் கூறப்படுகிறது .

சிறுவர் யூசுப் (அலை ) கிணற்றின் பக்க சுவரைப் பிடித்துக் கொண்டு இருக்கையில் அக்கிணற்றில் இருந்த பூச்சி புழுக்கள் நம்மிடையே ஒரு நபி வந்து உள்ளார் எனவே நாம் வெளியே செல்லக் கூடாது என்று தம்மிடையே பேசிக் கொண்டனர் என்றும் ஆனால் பாம்பு மட்டும் வெளியே வந்தது என்றும் அது கண்டு வானவர் ஜிப்ரீல் (அலை) அவர்கள் பெரும் சப்தமிட்டதாகவும் அதன் காரணமாக அது செவிடு பட்டது என்றும் எனவே பாம்புகள் செவிட்டுத் தன்மை பெற்று உள்ளன என்றும் கூறப்படுகிறது .

அடுத்து நபி அய்யூப் உடல் புண்ணாகி புழுக்கள் வெளிவரும் நோயால் பாதிக்கப்படுகிறார்கள் இறுதியில் வானவர் ஜிப்ரீல் அலை மூலமாக இறைவன் செய்தியை அறிவித்தான் சிரியா நாட்டில் உர்துன் மாநிலத்தில் நாவர் என்னும் ஊருக்கு அருகில் வெந்நீர் ஊற்று உள்ளது அங்கிருந்து 40 தூரத்தில் இன்னொரு குளிர் நீர் ஊற்று உள்ளது .இந்த இரு நீரூற்றின் தண்ணீரை பருகிய பின்பு குளித்தும் நபியவர்கள் நோய் குணமடைந்தார்

இந்த நீரூற்றுகளை தனித்தனியாக கட்டப்பட்டு இன்றும் உள்ளது."அய்னே அயூப் " என்ற பெயருடன் அந்த நீர் சுனைகள் இன்னும் இருக்கிறது உலகத்தின் பல பாகத்திலுள்ள நோயாளிகள் வந்து குளித்து நோய் நீங்க பெறுவதாக ரௌஸதுஸ்சபாவில் கூறப்பட்டுள்ளது.

நபி மூஸா அலை செங்கடல் பிறந்து எகிப்தை விட்டு வெளியேறிய பின்னர் கடலின் கரையில் மரா என்னும் இடத்தில் தங்கி இருந்தனர் அங்குள்ள கிணற்றில் நீர் மிகவும் உவர்ப்பாக இருப்பதை கண்டு இஸ்ரவேலர்கள் நபி மூஸா அவர்களிடம் முறையிட்டனர் அவர்கள் இறைவனின் ஆணைப்படி அக்கிணற்றில் புள்ளை பறித்து போடுமாறு பணித்தனர் அவ்விதமே அவர்கள் செய்ய தேன் மதுரத் தண்ணீர் வெளிவந்தது இன்றளவும் அக் கிணற்றின் தண்ணீர் குடிக்க மிக சுவையாக நல்ல நீராக இன்னும் உள்ளது .

மத்யன் நகரத்தில்ஒரு கிணறு இருந்தது அதற்கு பெரிய பாறாங்கல் ம மூடியாக இருந்தது சில ஆட்டு இடையர்கள் தங்களின் ஆடுகளை ஓட்டிக் கொண்டு வந்து அதனை மூடியிருந்த கல்லைப் நீக்கி நீர் இறைத்து தங்களின் ஆடு மாடுகளுக்கு மட்டும் நீர் புகட்டிக் கொண்டிருந்தார்கள் அப்பொழுது அந்த கிணற்றின் பக்கம் நபி மூஸா (அலை )அவர்களும் வந்து நிற்கிறார்கள் இடையர்கள் தங்களின் ஆடு மாடுகளுக்கு நீர் இறைத்து முடிந்ததும் நபி மூஸாவையோ பக்கத்தில் இருக்கும் இரண்டு பெண்கள் ஓடி வந்திருக்கும் ஆடைகளைப் பற்றியும் பொருட்படுத்தாமல் பாரங்களை மூன்று இளைஞர்கள் சேர்ந்து கிணற்றை மூடி விட்டு சென்றனர்

நபி மூஸா அலை அப்பெண்களை விசாரித்ததும் அவர்கள் நாங்கள் நபி ஷுஐப் (அலை) அவர்களின் மக்களாவோம் . அவர்களோ வயோதிகர் எனவே நாங்கள் தான் இந்த ஆடுகளை மேய்க்க வந்தோம் என்று கூறினார்கள்

பல நாட்களாக பசியோடு இருந்த மூஸா அலை 3 பேர்கள் புரட்டி வைக்கக்கூடிய பாரங்களை தனி ஒரு மனிதனாக கிணற்றில் இருந்து தூக்கி அப்பால் எறிந்தார்கள் பின் கிணற்றில் தண்ணீர் இறைத்து அப்பெண்களில் ஆடுகளுக்கு புகட்டினார் அந்த ஒரு வாளி கிணற்று நீர் அத்தனை ஆடுகளுக்குப் போதுமானதாக இருந்தது. அப்பெண்களின் மூத்த பெண்ணான சபுராவைத்தான் நபி மூஸா அலை திருமணம் செய்தார்கள்.

அடுத்து மக்காவிலிருந்து மதினாவில் குடியேறிய முஸ்லிம்களுக்கு ஏற்பட்ட முதல் பிரச்சனை குடிநீர் தட்டுப்பாடு
"பீரே ரூமா " என்ற கிணற்றை தவிர்த்து மற்ற கிணறுகள் உவர்ப்பு நீராக இருந்தது அந்தக் கிணறு ஒரு யூதனுக்கு சொந்தமாய் இருந்தது. இஸ்லாத்தின் மீது பொறாமை கொண்ட அந்த யூதன் கிணற்று நீரை முஸ்லிம்களுக்கு கொடுக்காமல் தடுத்தான் நபிஸல் பீரே ரூமா விலை பேசி பெற்று முஸ்லிம்களுக்கு உடைமை ஆக்கும்பவர் உங்களில் எவரோ அவருக்குச் சுவனத்தை பற்றி நான் உறுதி அளிக்கிறேன் என்று அறிவித்தார்கள்.

உடனே உஸ்மான் ரலி அவர்கள் அந்த யூதர்களும் சென்று கிணற்றை விலை பேச யூதனும் கிணற்றை விற்க துவக்கத்தில் மறுத்துவிட்டான் எனினும் உஸ்மான் ரலி அவர்கள் நயந்து பேசி கிணற்றின் சரிபாதி உரிமையை 12,000 திர்ஹங்களுக்கு பெற்றனர் கிணற்றின் ஒரு நாள் வருவாய் உஸ்மான் ரலி அவர்களுக்கு மறுநாள் வருவாய் யூதனுக்கும் சேர வேண்டிய முடிவு செய்யப்பட்டது உஸ்மான் ரலி அவர்களின் முறை நாள் என்று முஸ்லிம்கள் தங்களின் மறுநாளுக்கு தேவையான நீரை இறைத்து சேமித்துக் கொண்டனர் . இதன் காரணமாக யூதனின் முறை நாள் என்று அவனுடைய வருவாய் மிகவும் குறைந்தது எனவே யூதன் கிணற்றின் மறுபாதியை உரிமையை விற்க முன்வந்தார் அதையும் உஸ்மான் ரலி அவர்களை 8000 திர்ஹங்களுக்கு

விலை கொடுத்து முழு கிணற்றையும் முஸ்லிம்களுக்கு உடைமை ஆக்கினார்கள் இன்றும் அக்கிணறு உஸ்மான் கிணறு என்று அழைக்கப்படுகிறது

அடுத்து லபீத் பின் ஆஃஷின் என்னும் யூதன் நபி ஸல் அவர்களுக்கு முடியிலும் சீக்கிரம் செய்வினை சூனியம் செய்து அதை ஆண் பேரீச்சம் பாளையின் உறையில் வைத்து பனூ ஸூரைக் குலத்தாரின் தோட்டத்திலுள்ள தர்வான் என்னும் கிணற்றினுள் வைத்தான்

இச்செய்வினை சூனியத்தால் நபி ஸல் அவர்களுக்கு ஒரு செயலை செய்யாமல் இருக்கவும் அதை செய்தது போன்று பிரமை ஊட்டவும் இப்படியாக சூனியம் செய்தான் .சூனியம் செய்யப்பட்டதை இறைவன் வானவர் ஜிப்ரீல் அலை மீக்காயீல் அலை மூலமாக அறிவித்துக் கொடுத்தான் நபி(ஸல்) செய்வினையை எடுப்பதற்காக அதுவரை போய் எடுக்காமல் திரும்பி வந்து விட்டார்கள் இதுபற்றி கேட்டதற்கு அக் கிணற்றின் அடியிலிருக்கும் பேரிச்ச மரங்கள் சைத்தான் தலைகள் போல உள்ளன அதை நான் எடுத்து விட்டால் அது மக்களிடையே சூனியக்கலை பரவ காரணமாய் குழப்பத்தை கிளப்பி விடும் என்பதால் எடுக்காமல் திரும்ப வந்துவிட்டேன் அல்லாஹ் என்னை செய்வினை சூனியத்திலிருந்து குணப்படுத்தி விட்டான் என்றார்கள் அந்த தர்வான் கிணறு தூர்க்கப்பட்டு விட்டது புகாரி (3268)

அடுத்து மதீனாவிலிருந்து இரண்டு மைல் தொலைவில் இருந்த ஒரு தோற்றத்தில் பீரே அரீஸ் என்ற கிணறு உள்ளது ஒருநாள் நபி (ஸல்) தங்கள் கால் இரண்டையும் அக்கிணற்றின் உட்புறம் தொங்க விட்டவாறு அமர்ந்திருந்தார்கள் அச்சமயம் அபூபக்கர் ரலி உமர் ரலி உஸ்மான் ரலி ஆகிய மூவரும் ஒருவரை அடுத்து ஒருவராக அங்கு வந்து நபி ஸல் அவர்களோடு உரையாடினார்கள்

நபி ஸல் அவர்களுக்கு பின்பு கலிபாக்கள் அனைவருமே பழைய நினைவுகள் பசுமைஅடையும் போதெல்லாம் புனித திருவடிகள் பட்ட தளங்களை எல்லாம் சென்று காணும் வழக்கம் உடையவராக இருந்தனர்

அவ்வழக்கப்படியே அன்று ஒருநாள் கலிபா உஸ்மான் ரலி அவர்கள் பீரே அரீஸ் கிணற்றை வந்து அதன் மீது அமர்ந்து இருந்தார்கள் சற்று நேரம் கழித்து உஸ்மான் ரலி தன் முகம் கழுவ எண்ணி கிணற்று நீரை அள்ள குனிந்த போது தன் விரலில் இருந்த மோதிரம் நழுவி கிணற்றினுள் விழுந்தது அந்த மோதிரம் நபி ஸல் அவர்கள் அணிந்திருந்த பின்பு கலீஃபாக்கள் அபூபக்கர் ரலி உஸ்மான் ரலி பிறகு உஸ்மான் ரலி அவர்களின் கைக்கு வந்த மோதிரம் எனவே மோதிரத்தை தேடி எடுத்து விட நீர் முழுவதும் இறைத்து தேடினார்கள் ஆயினும் அம்மோதிரம் மறைந்த தடமே தெரியாமல் மாயமாகி விட்டது.

நபி ஸாலிஹ் (அலை ) அவர்களிடம் அவர்களுடைய ஸமூத் சமூகத்தார்கள் எங்களுக்கு இந்த மலையைப் பிளந்து அதிலிருந்து ஒரு பெண் ஒட்டகம் வரவேண்டும் . அந்த உடனேயே அது கன்று ஈன்று பாலும் தரவேண்டும் அதுவும் தானாக ஒட்டகம் எங்கள் வீட்டின் வாசலுக்கு வந்து அதுவாகவே நாங்கள் வைக்கும் கலசத்தில் பாலைக் கறந்து தர வேண்டும் என்றனர்

அதன்படியே அல்லாவின் ஒட்டகம் மலையே பிளந்து வந்து அவர்கள் கேட்ட படியே நடந்து கொண்டது ஆனால் அல்லாஹ்வின் ஒட்டகமும் ஸமூத் சமுதாயத்தினரின் ஒட்டகமும் ஒரே கிணற்றில் நீர் அருந்தின அல்லாஹ்வின் ஒட்டகம் ஊருக்கே பால் வழங்குவதால் அது குடிப்பதற்கு அதிகம் தண்ணீர் தேவைப்பட்டது எனவே அல்லாஹ்வின் ஒட்டகம் தன் தலையை கிணற்றினுள் விட்டதும் கிணற்று நீர் பிரவாகம் எடுத்து கிணற்றிலிருந்து வழிந்தோடும் அல்லாஹ்வின் ஒட்டகம் ஒரே மூச்சில் அத்தனை நீரையும் குடித்து விடும் மீண்டும் கிணறு பழைய அளவு நீர் மட்டம் கிணற்றில் இருக்கும் இதனை கண்ட ஸமூத் மக்கள் அல்லாஹ்வின் ஒட்டகத்திற்கு நீரை ஒரு நாள் விட்டு ஒரு நாள் நீர் அருந்தவும் அல்லாஹ்வின் ஒட்டகம் நீர் அருந்தாத நாளில் ஸமூத் சமூகத்தாரின் ஒட்டகங்கள் நீர் அருந்தின இருப்பினும் குத்தார் என்பவன் அதன் கால் நரம்பை துண்டித்து வெட்டி விட்டான் .

ஹுதைபியா மக்காவிலிருந்து ஜித்தா பாதையில் சுமார் 20 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது .ஷம்ஸிய்யா என்றும் இதனை அழைப்பர் அங்குள்ள கிணற்றின் பெயரைக்கொண்டு அந்த இடம் ஹுதையியா என வழங்கப்பட்டது நபி ஸல் ஏறி வந்த ஒட்டகம் அவ்விடத்தை அடைந்ததும் மேலே செல்ல மறுத்துவிட்டது இது நீண்ட பயணம் என்பதால் அது களைத்து விட்டது என மற்றவர்கள் நினைத்தார்கள் ஆனால் அது இறைவனின் நாட்டப்படியே அங்கு நின்றதாக நபி ஸல் கூறினார்கள் அங்கு இருந்த கிணறு வறண்டு கிடப்பதை கண்டு நபி ஸல் வில்லும் அம்பும் கொண்டு வரச்சொல்லி நாஜியா பின் ஜந்துப் இடம் கொடுத்து அம்பை கிணற்றில் எய்தச் சொன்னார்கள் உடனே கிணற்றின் ஊற்றுக் கண் திறந்து நீர் குமிழியிட்டுக்கொண்டு வெளியே வந்தது.

### ஜம்ஜம் கிணறு

இறை தூதர் இப்ராஹிம்-ஹாஜரா தம்பதி தங்களது குழந்தை இஸ்மாயிலுடன் பயணித்தனர். தற்போது மெக்காவில் காபா அமைந்துள்ள இடத்தில், இறைவனின் கட்டளை என்பதால், இருவரையும் தனியாக விட்டு விட்டு இப்ராஹிம் நபி சென்றார்கள்.

அப்போது தாகத்தால் குழந்தை இஸ்மாயில் அழுதார்கள், குழந்தை குடிப்பதற்கு பாலோ தண்ணீரே இல்லாத நிலையில் தண்ணீரை தேடி பல இடங்களுக்கு தாய் ஹாஜரா அலைந்தார்கள்.

இறைவனிடம் பிராத்தனை செய்தார்கள், அப்போழுது தன்னந்தனியாக கிடந்த குழந்தை இஸ்மாயில், தன் பிஞ்சுக்கால்களை தரையில் உதைத்து அழுதபோது அந்த இடத்தில் தண்ணீர் கொப்பளித்துக் கொண்டு வந்தது.

அதை வழிந்தோடவிடாமல் சுற்றிலும் மேடெழுப்பி நீரை தேக்கி வைத்தார்கள். அதுவே ‘ஜம் ஜம்’ கிணறு என்று அழைக்கப்படுகிறது. ‘ஜம் ஜம்’ என்றால் நில் நில் என்றும் அதிகம் என்று அர்த்தம். அப்படி தடுத்திருக்காவிடில் பெரிய ஏரியாகி இருக்கும் .

சென்ற நூற்றாண்டில், ஒரு முறை ஜரோப்பா மருத்துவர்கள், சுகாதாரத்திற்காக இந்த கிணற்றினை சுத்தப்படுத்த வேண்டும் என்று சவுதி அரசுக்கு ஆலோசனை கூறினார்கள். இதை ஏற்றுக்கொண்ட சவுதி அரசு 8 அதி நவீன ராட்சத பம்பு செட்டுளை கொண்டு தொடர்ந்து இரவும், பகலுமாக 15 நாட்கள் இந்த நீரை இறைத்தது. ஆனால் நீரின் அளவு குறையவில்லை.

ஒரு வினாடிக்கு 8 ஆயிரம் லிட்டர் என்ற அளவில், தினமும் 691.2 மில்லியன் லிட்டர் தண்ணீரை இடவேளையின்றி ராட்சத மோட்டார்கள் மூலம் இந்த கிணற்றுத்தண்ணீர் உறிஞ்சப்படுகிறது.

நல்ல நீர் வளம் உள்ள ஒரு பெரிய கிணற்றில் உள்ள நீரை ஒரு வருடம் எடுக்கும் அளவு நீரை, ஒரே நாளில் ‘ஜம் ஜம்’கிணற்றில் இருந்து எடுக்கபடுவது மிகப்பெரிய அதிசயம், அதை விட அதிசயம் 691.2 மில்லியன் நீரை தினமும் எடுத்தும்,அப்போதும் இதன் அளவு குறைவதில்லை. சுவையும் மாறியதில்லை.ஹஜ் காலத்திலும் ரமலான் மாதத்திலும் சுமார் 20லட்சம் மக்கள் அங்கே குழுமுகிறார்கள். அனைவருக்கும் இந்தக் கிணற்றில் இருந்து தான் குடிநீர் வினியோகிக்கப்படுகிறது. ஒவ்வொருவரும் 20 லிட்டருக்குக் குறையாமல் அந்தத் தண்ணீரைத் தமது சொந்த ஊருக்கும் எடுத்துச் செல்கிறார்கள்.

குறைந்த ஆழம் உள்ள இந்தக் கிணறு, பாலைவனத்தில் அமந்துள்ள இந்தக் கிணறு, அருகில் ஏரிகளோ கண்மாய்களோ குளம் குட்டைகளோ இல்லாத அந்தக் கிணற்றில் இருந்து எப்படி லட்சோப லட்சம் மக்களுக்கு தண்ணீர் வழங்கப்படுகிறது என்பது முதலாவது அற்புதமாகும்.
எந்த ஊற்றாக இருந்தாலும் சில வருடங்களிலோ பல வருடங்களிலோ செயலிழந்து போய் விடும். ஆனால் இந்த ஊற்று பல ஆயிரம் ஆண்டுகளாக வற்றாமல் இருப்பது இரண்டாவது அற்புதமாகும்.

ஜம் ஜம் கிண்று அருகே எந்த தாவரமும் வளருவதில்லை.எந்த ஒரு நீர் நிலையாக இருந்தாலும் பாசி படிந்து போவதும் கிருமிகள் உற்பத்தியவதும் இயற்கை. இதனால் தான் குளோரின் போன்ற மருதுகள் நீர் நிலைகளில் கலக்கப்படுகின்றன. ஆனால் ஜம்ஜம் தண்ணீரில் அது உற்பத்தியான காலம் முதல் இன்று வரை எந்த மருந்துகள் மூலமும் அது பாதுக்காக்கப்படாமல் தன்னைத் தானே பாதுகாத்துக் கொள்வது மூன்றாவது அற்புதமாகும்.

பூமியிலுள்ள நீரில் மிகச்சிறந்தது
‘ஜம் ஜம்’ நீர் என்று நபிகள் நாயகம் கூறியுள்ளார்கள்.

பொதுவாக மற்ற நீரில் இருந்து ஜம்ஜம் தண்ணீர் வேறுபட்டுள்ளதும் சோதனையில் தெரிய வந்துள்ளது. கால்ஷியம் மற்றும் மேக்னீஷியம் எனும் உப்பு மற்ற வகை தண்ணீரை விட ஜம்ஜம் தண்ணீரில் அதிகமாக உள்ளது. இந்த உப்புக்கள் புத்துணர்ச்சியைக் கொடுக்கக் கூடியவை. இதை அனுபவத்தில் உணரலாம். மேலும் இந்தத் தண்ணீரில் ஃபுளோரைடு உள்ளது. இது கிருமிகளை அழிக்க வல்லது. அங்கே அற்புதம் நடக்கிறது இங்கே அற்புதம் நடக்கிறது என்றெல்லாம் பலவாறான நம்பிக்கை மக்கள் மத்தியில் நிலவுகிறது.

ர.ரா

அமானுஷ்யம்.
(விஞ்ஞான புனைக்கதை) 27/06/2020



"Dr.பொன்சேகரன் MA .Phd " சின்ன போர்டு அறைக்கு வெளியே சுவற்றில் அறையப்பட்டிருந்தது.

" குட்மார்னிங் சார் .ரவிக்குமார் MA வரலாறு படித்திருக்கிறேன் . அமானுஷ்யம் பற்றி ஓர் ஆய்வு செய்து கொண்டிருக்கிறேன் . அதற்கு நீங்க உதவ முடியுமா ..? "

" என்ன தலைப்பு சொன்னீங்க ? "

" அமானுஷ்யம் "

" நீங்க திருநெல்வேலி மனோன்மணீயம் யூனிவர்ஸிட்டியிலே , Dr ஆபித் தைப் பாருங்க .பல மொழி பேசக் கூடியவர் . நிறைய அமானுஷ்யம் பற்றி சொல்வார்.

யூனிவர்ஸிட்டியில் வந்து விசாரித்தேன் . லீவில் இருப்பதாக சொன்னார்கள் . செல் நம்பர் தந்தார்கள் .

" ஸார் .. ரவிக்குமார் பேசுறேன் .நீங்க
Dr ஆபித் ?

" ஆமாம் ஆபித் "

என் ஆய்வைப் பற்றி விபரம் சொல்லி ,
"தரவுகளைப் பார்க்க வரலாமா சார் ?"

"பாபநாசம் அத்ரிமலைக்கு வாருங்கள் "

போனேன். அடர்த்தியான கொஞ்சம் தொங்கலான தலைமுடி .புசுபுசுன்னு சேர்ந்த கண்புருவங்கள் .நல்ல உயரம் . வாட்டசாட்டமான உடல்வாகு .பார்த்ததும் சற்று பயம் கலந்த மரியாதையை கொடுக்க சொன்னது என் மனசு . கொடுக்கிறேன் .

" உட்காருங்கள் ராஜகுமாரன் "

" ராஜகுமாரன் இல்லே சார், ரவிக்குமார் "

" என்ன தலைப்பு ? "

" அமானுஷ்யம் "

" அமானுஷ்யம் இந்த உலகில் மனிதர்களால்தான் நடத்தப்படுகிறதா ? "
அந்தக் கேள்வி கேட்கும் போது அவர் புருவம் தூக்கி கண்ணும் கேள்வி கேட்டது.

" தெரியவில்லை சார் "

" மனிதர்களால் அல்ல . மனிதக் கண்களுக்கு புலப்படாத ' ஜின் ' என்ற அந்நிய படைப்பினங்களால் நடத்தப்படுகிறது "

" ஜின்களா ? "

" ஆமாம் . இஸ்லாமிய வேதத்தில் நிறைய சொல்லப்பட்டிருக்கிறது . முதல்ல அந்த படைப்பை பற்றி தெரிஞ்சிக்கங்க .அப்புறம் அமானுஷ்யம் பற்றி உங்களுக்கு தெரிய வரும்.

" அது பற்றிய நூற்கள் இருக்கிறதா ?"

" நிறைய . விசாரிங்க .படிங்க அப்புறமா என்னை சந்திங்க . சரியா ? "

லைப்ரரியில் ஜின் சம்பந்தப்பட்ட புத்தகங்கள் கிடைத்தது. புத்தகங்களில் நிறைய வரிகளில் சிவப்பு அடிக்கோடிட்டு முக்கிய குறி போடப்பட்டிருந்தது . இன்னும் படிக்க ஆரம்பிக்கவில்லை.

ஒரு வாரம் கழிந்தது. Dr ஆபித் செல்போனில் தொடர்பு கொண்டேன் .

" சார், ரவிக்குமார் பேசுறேன் "

" சொல்லுங்க"

" ஜின்கள் எப்படி தங்களை உருமாற்றிக் கொள்கிறது ? "

" இந்தப் பிரபஞ்சத்தில் எத்தனை பரிமாணங்கள் இருக்கிறது ? " என்று திருப்பி என்னிடம் கேட்டார் .

"புரியலை சார் "

" அதாவது ஒரு பொருளுக்கு 3 பரிமாணங்கள் நீளம், அகலம் , உயரம் சரிதானே ? "

" ஆமாம் ஸார் "

" நாலாவது பரிமாணம் 'காலம் '. இது மாதிரியே மொத்தம் 16 பரிமாணங்கள் உண்டு. ஜின்கள் நான்காவது பரிமாணத்திலிருந்து பத்து பரிமாணங்கள் வரை பயன்படுத்தி இப்பூமிவாழ் கண்களுக்குத் தெரியாமல் வாழ்கின்றன. ஜின் என்ற அரபு பதத்திற்கு மறைவானது என்றே அர்த்தம். அதே மாதிரி வானவர்கள் பத்தாவது பரிமாணத்திலிருந்து 16வது பரிமாணங்கள் வரை பயன்படுத்தி இப்பூமிக்கு வந்து போகிறார்கள். பாவம் மனிதர்கள் முதல் மூன்று பரிமாணங்களைத் தவிர மற்ற பரிமாணங்களைப் பற்றி அறியாதவர்கள் . இதனால் ஜின்கள் மனிதர்களின் கண்களுக்குத் தெரியாமல் உருமாற்றம் செய்து கொள்கிறார்கள் .

சார் , ஒரு சந்தேகம் ஜின்களுக்கு மறைவான விஷயங்கள் தெரியாது . பைத்துல் முகத்தஸ் கட்டும் போது அதை மேற்பார்வையிட்ட நபி சுலைமானுக்கு ஜின்கள் கட்டுப்பட்டு வேலை செய்தன.
ஆனால் அவர் இறந்து போய் பலகாலம் ஆன பிறகு அவரை தாங்கி நின்ற கைத்தடி கரையான் அரித்தது .அதனால் கீழே சாய்ந்தார் . அப்போது ஜின்கள், "அவர் இறந்த விஷயம் எங்களுக்கு தெரியாமல் போச்சே "...என்று வருத்தப்பட்டதாக குர்ஆன் குறிப்பிட்டதிலிருந்து ஜின்களுக்கு மறைவான விஷயம் தெரியாது என்று ஒர் இயக்கத் தலைவர் கருத்து சொல்லி இருக்கிறார் .

முட்டாள்தனமான கருத்து , மனிதர்களைப் பற்றி கூட குர்ஆனில் அவசரக்காரன், பலவீனன் , அநியாயக்காரன் , அவசரக்காரன் , நன்றி மறப்பவன் , உலோபி , தர்க்கம் செய்பவன் , நிராகரிப்பவன் என்றெல்லாம் கூறப்பட்டிருப்பதால் மனித குலத்தில் உள்ள எல்லா மனிதர்களுக்கும் இது பொருந்துமா ? இம் மனிதர்களில் இக்கெட்ட குணங்களையெல்லாம் கடந்த இறை நேசர்கள் இல்லையா ? அதுமாதிரிதான் சுலைமான் நபிக்கு கட்டுப்பட்டு வேலை செய்த அந்த கட்டுமானக்கார ஜின்களுக்கு மறைவான விஷயம் தெரியாமல் இருந்திருக்கலாம் .இது எல்லா ஜின் இனத்திற்கும் பொருந்தாது .

மலக்குமார்கள் மறைவாக பேசியதையே ஒட்டுக் கேட்ட உளவாளிகள் இந்த ஜின் இனங்கள் .இதை விட பெரிய சாதனை என்ன வேண்டும் ?

" ஹிந்தி சினிமா நாகின் , தமிழ் சினிமா நீயா போன்றவற்றில் வரக்கூடிய
இச்சாதாதி பாம்புகள் ஜின்களா ?

" ஆம். ஜின்களில் அது ஒரு வகை கந்தர்வ ஜின்கள் . பழிவாங்கும் மூர்க்க குணமுடையவைகள் ".

" நீயா " திரைப்படத்தை டவுண்லோடு செய்து , படம் பார்த்தேன் .அதில் கமலஹாசன் தன் மனைவி லதா கட்டிலில் உட்கார்ந்திருப்பாள். ஆனால் முகம் பார்க்கும் கண்ணாடியில் லதா உருவத்திற்கு பதில் இச்சாதாதி பாம்பு ஒன்று படம் எடுத்து கொண்டிருப்பதை கமல் பார்த்து விடுவார்.

" நான் கட்டில் மேலே கண்டேன் வெண்ணிலா ...
எனைக் கட்டிக்கொண்டு பேசும் பெண் நிலா " _ என்று பாட ஆரம்பிப்பார்.

ஆக முகம் பார்க்கும் கண்ணாடி , காமிராவிலுள்ள கண்ணாடி லென்ஸ் இவைகள் உண்மை சொரூபத்தை மட்டுமே காட்டுமே தவிர உருமாற்றத்தைக் காட்டாது என்பதை விளங்கிக் கொண்டேன் .

மறுநாள் பாபநாசத்திற்கு வாடகை டாக்ஸில் போனேன் . Dr ஆபித் வீட்டில் இல்லை. டாக்ஸி டிரைவர் காரோடு வெளியில் நின்றிருந்தார் . வீட்டிற்குள் நுழைந்தேன் .எபிரேய மொழியில் எழுதப்பட்டிருந்த ஏதோ ஒரு வேதகாம நூல் , அலமாரியில் கிண்ணியில் அழகான #முத்தும்பவளமும் சேகரிக்கப்பட்டிருந்தது. இவைகளுக்கு விற்றதற்கான அமெரிக்கன் ஜுவல்லரி நகை கடை ரசீது , பேங்க் ஆஃப் அமெரிக்க பிளாசா என்று அச்சடித்த கவரில் அமெரிக்க டாலர்கள் கொஞ்சம் கனமாக இருந்தன.

ஃபிரிட்ஜை திறந்தேன் கெட்டுப்போன மாமிச வாடை. . ஒரு தட்டில் ஏதோ ஒரு மிருகத்தின் இரத்தம் தோய்ந்த எலும்புகள் வெட்டி அடுக்கப்பட்டிருந்தன.

பெட்ரூமில் ரொம்பவும் அழகான பெண் போட்டோ . பக்கத்தில் 6 மாதத்திற்கு முந்தைய தினத்தந்தி . காணவில்லை அம்சவேணி (21) மனோண்மணீயம் பல்கலைகழத்திற்கு போனவள் திரும்பவில்லை . சம்பவத்தன்று ரோஸ் கலர் சுடிதார் போட்டிருந்தாள் . அம்சவேணி படமும் பெட்ரூம் பெண் படமும் ஒன்றே.

எல்லாவற்றையும் ஒன்று விடாமல் செல்போனில் போட்டோ எடுத்துக் கொண்டேன் .

வீட்டை விட்டு வெளியே வரும்போது Dr ஆபித் கோட் , சூட் போட்டு கையில் பொருத்தமில்லாத ஆளுயற ஒரு கம்பை வைத்துக் கொண்டிருந்தார் . அவரையும் போட்டோ எடுத்தேன் .

" சார் ... உங்களை சின்னதாக பேட்டி அவ்வளவுதான் .அப்புறமாக களப்பணியில் ஆய்வை தொடர்வேன் . உங்க முழுப் பெயர் ..

" ஆபித் "

"உங்க பெற்றேர்கள் பெயர் ? "

" ஜாஹித் / காஜின் "

" உங்கள் உடன்பிறந்தவர்கள் ? "

" ஆரிப் _ அஜாஜீல் "

" உங்களுடைய நெருங்கிய நண்பர்கள் ?"

" ஆரிப் _ வலிஹ்

" உங்கள் குரு - ஆசிரியர் ? "

"இப்ரீத் "

" நன்றி சார் .மற்ற உங்கள் விபரங்களை யூனிவர்ஸிட்டியில் கேட்டுக்கிறேன் "

நான் காரில் ஏறப்போகும் போது ,
Dr ஆபித் ஒரு கவரை என்னிடம் கொடுத்து , " இதை யூனிவர்ஸிட்டியில் கொடுத்து விடுங்கள் ராஜகுமாரன் " என்றார் .

நான் ரவிக்குமார்ன்னு சொல்ல வாயெடுத்தேன் . சொல்லவில்லை .
Dr ஆபித் கொடுத்த கவர் ஒட்டப்படவில்லை . லட்டரை எடுத்துப் படித்தேன் ராஜினாமா கடிதம் " மருத்துவ பரிசோதனைக்காக அவசரமாக அமெரிக்க செல்ல இருப்பதால் ராஜினாமா என்று எழுதப்பட்டிருந்தது .

ஜின்களைப் பற்றிய லைப்ரரி புத்தகத்தில் அடி சிவப்புக் கோடிட்ட வரிகளை மட்டும் படிக்க ஆரம்பித்தேன் .

1) ஜின் என்ற அரபு பதத்திற்கு "மறைவானது " என்று அர்த்தம் .

2) மனிதர்களையும் ஜின்களையும் என்னை வணங்குவதற்காக படைத்ததாக இறைவன் குர்ஆன்(51 : 56)

3) ஜின்களை நெருப்பிலிருந்து படைத்தாக குர்ஆன் (55 : 15 )

4) வீட்டில் வசிக்கும் ஜின்கள் புகாரி 3298

5) ஜின்கள் மனிதர்களோடு வாழ்பவை - "ஆமீர் ". சிறு பிள்ளை சேட்டை செய்வது
" அர்வாஹ் " அதி ஆற்றல் பெற்றவை "இப்ரீத் " ஜின்கள் ஒட்டுக் கேட்டு குறியும் சொல்லும் குர்ஆன் ( 37 : 8 )

ஜின்கள் கடலில் #முத்துபவளம் எடுத்து சுலைமானுக்கு கொடுத்ததாக குர்ஆன்(27 : 17)

6) ஜின்கள் காற்றில் சஞ்சரிப்பவை , ஆகாயத்தில் பறப்பவை. பாம்பு , நாய் , குரங்கு , பூனை , தேள் , ஒட்டகம் , மாடு, ஆடு ,கழுதை , போன்ற உருவில் உருமாறும் .மனிதர்கள் உருவிலும் உருமாறும் .

7) நபித்தோழர் சுராக்கா பின் மாலிக் அவர்களின் உருவில் ஜின் வந்துள்ளது .

8 ) ஜின்களின் காலடி தடங்கள், அவைகள் சமைத்த பாத்திரங்கள் , அடுப்புகளைப் பார்த்ததாக இப்னு மஸ்வூத் (ரலி) _ திர்மிதி 3311

9) பிடித்த உணவு : பிராணிகளின் இரத்தம் தோய்ந்த எலும்புகள்

10) ஜின்கள் மனிதர்களை திருமணம் செய்திருக்கின்றன . அழகான பெண்களைக் கடத்தி சென்று வாழ்க்கை நடத்திய வரலாறு ஹதீஸ்களில் உள்ளன லுக்துல் மர்ஜான் பக் 53
(#அம்சவேணி - கடத்தப்பட்ட பல்கலைகழக மாணவி)

11) நபி சுலைமான் (அலை) அவர்களின் மனைவி பல்கீஸ் அம்மையாரின் தந்தை ஒரு ஜின் - கௌதுல் ஆஃலம் - குன்யத்துத் தாலிபீன்

12) ஜின்களின் பெயர்கள்
1வது வானத்தில் #ஆபித்
2 வது வானத்தில் #ஜாஹித்
3வது வானத்தில் #ஆரிப்
4 வது வானத்தில் #வலிஹ்
5 வது வானத்தில் #காஜின்
6 வது வானத்தில் #அஜாஜீல்
லவ்ஹூல் மஃஹ்பூலில் - #இப்லீஸ்

இந்த பெயர்களைப் படித்ததும் நான் பதறி வாய் விட்டு கத்தி விட்டேன் .
டிரைவர் சட்டென பிரேக் போட்டு என்னை திரும்பி பார்க்க , 'ஒன்றுமில்லை' என்றேன் . மெதுவாக செல்போனில் எடுத்த ஒவ்வொரு படத்தையும் பார்த்துக் கொண்டே வந்தேன் . எபிரேய வேத காம புத்தக படம் அடுத்து ...அடுத்து ...கடைசி படம் சூட்கோட் போட்ட Dr ஆபித் படத்தை எதிர்ப்பார்த்தேன் . இல்லை ஆதிகால மனிதன் உருவில் அதே ஆளுயற கம்புடன் நியாண்டர்தால் மனிதன் நின்று கொண்டிருந்தான் .

மறுபடியும் 'ஆ' வென சத்தம் போட்டேன் .
டிரைவருவம் ' ஆ 'வென பிரேக் போட டாக்ஸி எதிரியில் அதே ஆளுயற கம்புடன் அதே நியாண்டர்தால் .

பின் சிறிது நேரத்தில் அந்த நியாண்டர்தால் மனிதன் கரங்களை மேலே தூக்கி , கால்களை மண்டியிட பாம்பாக மாறி பறந்தது .

**Dr** ஆபித் யார் **?** நீங்க சொல்லுங்க

**-** விஞ்ஞானப் புனைக்கதை
ரஹ்மத் ராஜகுமாரன்
செல் : **944 344 6903**

திருப்பித் தரும் வானம் ( Part 1)

(சொற்பொழிவின் சாரம்சம்)28/06/2020

திரும்ப அனுப்பும் ஆற்றலுடைய வானங்கள் மீது சத்தியமாக குர்ஆன் (86:11 )

கடலில் இருந்து தண்ணீரை மேகம் எடுத்துக்கொண்டு பூமியின் பால் மழையை திரும்ப அனுப்புகின்றன எனவே மழைக்கு அர்ரஜ்உ (திருப்புதல்) என்று அரபியர்கள் பெயரிட்டுள்ளனர் .

" இஃஜாஸுல் குர்ஆன் "என்னும் கிதாபில் அர்ரஜ்உ (திருப்புதல் ) என்பது சூரிய சந்திரன் உதயமாகும் அவைகள் மறைவதும் இருப்பதால் இந்நிகழ்ச்சிகள் திரும்பத்திரும்ப நடைபெற்று வானிலிருந்து திரும்புதல் என்ற அர்ரஜ்உ (திருப்புதல் ) வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது

ஆனால் அக்காலத்தில் உள்ள குர்ஆன் ஆய்வாளர்கள் அவர்களுக்கு கிடைத்த விஞ்ஞான அறிவின்படி சொல்லப்பட்ட விஷயங்கள் ஆகும் ஆனால் நவீன விஞ்ஞானம் இதை வேறு ஒரு கண்ணோட்டத்தில் பார்க்கிறது .

அதாவது வானம் என்றதும் அதிலுள்ள வளி மண்டலங்கள் பற்றி குறித்து பேசுகிறது. வானத்திற்கு ஏழு வகையான வளிமண்டலம் இருக்கிறது முதல் வளிமண்டலம் அடி வளிமண்டலம் ஆகும் இதை டிரோப்ஸ்பியர் எனப்படுகிறது

முதல் வளிமண்டலம் பூமியிலிருந்து இது எட்டு மைல் உயரத்தில் வானத்தில் அமைந்துள்ளது . பூமத்திய ரேகையில் இதன் உயரம் 12 மைல் ஆகும் பூமியின் வட தென் துருவத்தில் இதன் உயரம் நான்கு மைல் உயரமாக உள்ளது

இந்த வளி மண்டலத்தில்தான் புயல் உண்டாகிறது .செயற்கை கோள் படம் பிடித்து செய்தியை பூமிக்கு தெரிவிக்கிறது காலநிலை இங்கேதான் உண்டாகிறது

இரண்டாவது வளிமண்டலம் படை மண்டலம் எனப்படும் . பூமியிலிருந்து 15 மைல் உயரத்தில் உள்ளது .

இங்கேயே உந்தித் தள்ளும் காற்று நீரோடை ( ஜெட் ஸ்டீரீம் ) என்கிற காற்று ஓடை காணப்படுகிறது . இந்த காற்றோடையின் வேகம் மணிக்கு 400 மைலிருந்து 700 மைல் வரை ஆகும்

இதை 1944இல் அமெரிக்கா ஜப்பானின் தலைநகர் டோக்கியோவில் விமானம் மூலம் தாக்குதல் நடத்துவதற்காக பி-29 என்கிற விமானத்தை பயன்படுத்தும்போது அந்த விமானம் வானத்தில் உள்ள காற்றோடையில் மாட்டிக்கொண்டது .

இந்த காற்றோடு பற்றி குர்ஆனில் சுலைமானுக்கு காற்றை வசப்படுத்திக் கொடுத்தோம் அது அவருடைய கட்டளையின்படி அவர் செல்லக்கூடிய இடங்களுக்கெல்லாம் மிக சௌகரியமாக அவரை சுமந்து சென்று கொண்டிருந்தது குர்ஆன் ( 38 : 36) அடுத்து ஒரு வசனத்தில் சுலைமானுக்கு காற்றை வசப்படுத்திக் தந்தோம் அதன் காரணமாக காலை பயணம் ஒரு மாதமும் அதன் மாலை பயணம் ஒரு மாதமாக இருந்தது குர்ஆன் (34 :12)

மூன்றாவது வளிமண்டலம்
ஸ்டிரோப்ஸ்பியர் அதாவது இடை மண்டலம் எனப்படுகிறது. இங்கு காற்று திடீர் திடீர் என்று வெப்பமடையும் காரணம் சூரிய கதிரில் உள்ள புற ஊதாக் கதிர்கள் காற்றிலுள்ள பிராண வாயுவை இரண்டு இரண்டாக உடைத்து தகர்த்து விடுகிறது இதனால் பிராணவாயு இரண்டு அணுக்களாக பிரிந்து இவை மறுபடியும் கூடி போட்டு மூன்று அணுவாக மாறி 03 ஓசோன் படலம் ஆக மாறுகிறது ஓசோன் காற்றை சுவாசிக்க முடியாது ஆனால் சூரியனிலிருந்து வரும் புற ஊதாக் கதிர்களை தடுத்து பூமியில் உள்ள உயிர்களை இது காக்கிறது.

நாலாவது வளிமண்டலம் மத்திய மண்டலம் (**Mesospere )** இங்கு பல வேதியல் மாற்றங்கள் ஏற்படுகிறது மேலும் இதுபோக துருவ ஒளி இங்கேதான் உண்டாகின்றது இந்த துருவ ஒளி வடதுருவத்தில் வட துருவ ஒளி எனவும் தென்துருவத்தில் தென் துருவ ஒளி என்றும் கூறப்படுகிறது

இந்த வட தென் துருவங்களில் அண்டார்டிக் ஆகும் உலகம் தோன்றிய நாளிலிருந்து இரவு நேரத்தில் இந்த துருவ ஒளி தோன்றுகிறது

ஐந்தாவது வளி மண்டலம் அகக் கதிர்வீச்சு மண்டலம் . இங்கு அணுப்பிளவு உண்டாகிறது . இங்கு எலக்ட்ரான்களும் எலக்ட்ரான்களை இழந்த உட்கருவும் இங்கு ஏராளமாக காணப்படுகிறது. இந்த மண்டலம் வானொலி நிலையங்களில் இருந்து ஒளிபரப்பப்படும் ரேடியோ அலைகளை விண்வெளியில் தொடர்ந்து செல்ல விடாமல் தடுத்து மீண்டும் பூமிக்கு திருப்பி அனுப்புகின்றன.

ஆறாவது வளிமண்டலம் கதிர் வீச்சு மண்டலம் . இது பூமியிலிருந்து 2000 மைல் உயரத்தில் தொடங்குகிறது இங்கே ஆற்றல் வாய்ந்ததும் அதேசமயம் அழிவை உண்டாக்கக் கூடியதுமான கதிர்வீச்சு விண்வெளியின் மிக ஆழ்ந்த பகுதியில் இருந்தும் சூரியனில் இருந்தும் வருவதாக கருதப்படுகிறது

ஏழாவது வளி மண்டலம் ,கதிர் வீச்சு மண்டலம் இது பூமியில் இருந்து பத்தாயிரம் மைல் உயரத்தில் அமைந்திருக்கிறது இது அக கதிர்வீச்சு மண்டலத்தை விட அகலமாகவும் ஆழமாகவும் இருக்கிறது . அகப்புற கதிர்வீச்சு மண்டலங்களை இரண்டையும் சேர்த்து ஜேம்ஸ் வான் ஆலன் என்பவர் கண்டுபிடித்தார் இவை இரண்டையும் வான் ஆலன் மண்டலங்கள் எனப்படும்

ரேடியோ அலைகளை விண்வெளியிலிருந்து தடுத்து மீண்டும் பூமிக்கே திரும்புகின்ற இந்த வான யுக்தியை குறித்துதான் இறைவன் திரும்ப அனுப்பும் ஆற்றல் உடைய வானங்கள் மீது சத்தியமாக
குர்ஆன் (86 : 11)

ர.ரா

பிளவுபடும் பூமி



" பிளவுபடும் பூமியின் மீது சத்தியமாக" குர்ஆன் (86:12 )இவ்வசனத்தில் "அஸ்ஸத்உ" என்பதற்கு பிளத்தல் என்பது பொருள் .

பூமிக்குள் இருந்து முளைக்கின்ற புற்பூண்டுகளும் செடி கொடி மரங்களும் பூமியை பிளந்து கொண்டு வெளியில் வருவதால் பிளவுபடும் பூமி என்று கூறப்படுகிறது என்பதாக தப்ஸீர் ஹமீத் விளக்கம் அளிக்கப்பட்டுள்ளது

விதைகளால் பூமி பிளக்கப்படுவது என்பது பூமியின் மொத்த அளவோடு ஒப்பிடுகையில் மிகச் சிறிய செயலாக்கம் கொண்டதாக இது தெரிகிறது . நவீன விஞ்ஞானத்தோடு மேற்கண்ட வசனத்தை ஒப்பிடுகையில் பிளவுபடும் பூமி என்பது கண்டத் தட்டு பூமிக்குள் நகர்வது பூமி பிளவு ஏற்படுவதைதான் குர்ஆன் குறிப்பிடுகின்றது என்று தெரியவருகிறது

பூமியின் உட்பகுதி ஒரு பெரிய இரும்பு உருக்குத் தொழிற்சாலை போல செயல்படுகிறது. இங்கு 4300 டிகிரி செல்சியஸ் வெப்பநிலை நிலவுகிறது கதிரியக்க பொருட்களும் கனிமங்களும் மிகுந்த அழுத்தத்தில் திணிக்கப்பட்டிருக்கிறது . குறிப்பாக நிக்கலும் இரும்பும் அதிக கொதி நிலையில் இருப்பதால் அதிலிருந்து வாயுக்குள் வெளியாகும். இதனால் அங்கு இருக்கும் காந்தக்குழம்பு லேசாகி மேற்குப் பகுதியை நோக்கி தள்ளப்படும். மிகுந்த அழுத்தத்தில் அடைபட்டு கிடக்கும் இந்த காந்தக்குழம்புதான் பூமியின் மேல் அடுக்குகளை நகர்த்துகிறது . பெரிய பனிப்பாறைகள் பெருங் கடலில் மிதப்பது போல் பூமியின் பாறைத் தட்டுகள் கண்டத் தட்டுகள் நகர்கின்றன பசிபிக் தட்டு , வட அமெரிக்கா தட்டு , தென் ஆப்பிரிக்கா தட்டு , யூரேசியன் தட்டு , ஆப்பிரிக்கத் தட்டு, இந்தோ- ஆஸ்திரேலியன் தட்டு என ஏழு பெரிய தட்டுகளும் தவிர 11 சிறிய தட்டுகளும் இவையெல்லாம் சேர்ந்துதான் பூமி . இந்த தட்டுக்களின் மீதுதான் 7கண்டங்கள் ஏழு கடல்களும் இருக்கின்றன இவை நகர்வது தான் உலக வரைபடம் காலங்காலமாக மாறி வந்திருக்கிறது

இந்த கண்டங்களின் நகர்வு தெளிவாக உணர முடிவது அமெரிக்காவில்தான். அமெரிக்கா மற்றும் மெக்ஸிக்கோ நாடுகளிலும் எல்லையாக இருப்பது கலிபோர்னியா வளைகுடா . பசிபிக் தட்டும் வட அமெரிக்கத் தட்டும் பெரும்பாலும் கடலுக்குள் முட்டிக் கொண்டிருக்க, இந்த கலிபோர்னியா வளைகுடா பகுதியில் மட்டும் தான் இந்த தட்டுகளில் நிலத்தில் இருக்கிறது . இந்த பசிபிக் தட்டு வடக்கு நோக்கி நகர பல அமெரிக்க தட்டு தெற்கு நோக்கி நகர இந்த இரண்டு தட்டுகள் பிரியும் இடத்தில் நிலத்தில் பெரிய பள்ளமே உருவாகி இருக்கிறது .இதனை "சான் ஆண்ட்ரியாஸ் பிளவு " எனப்படுகிறது

இந்த பள்ளம் உருவானதோடு மட்டுமன்றி இதன் இரண்டு கரைகளிலும் மண் குவியல்கள் சேர்ந்துவிட்டது சாலைகள் வயல்கள் இதன் விளைவாக உண்டான பிளவுகள் தெரிகின்றன.

வரிசையாக மரங்கள் நட்டு வைத்திருந்த ஒரு தோப்பில் சில மரங்கள் மட்டும் வரிசையிலிருந்து மாறி வந்து புது வரிசை அமைந்திருந்தன அவள் பிளவின் இந்தப்பக்கம் இருந்தவை பாறைத் தட்டுகள் நகரத்தில் போது இரண்டு தட்டுகள் சந்திக்கும் இடத்தில் மூன்று விதமான சம்பவங்கள் நேரிடுகின்றன நிலஅதிர்வுகள் , பூகம்பம், இயற்கை சீற்றங்கள் வீரியம் இதை பொறுத்தே அமையும்.

முதலாவதாக மிகப்பெரிய இரண்டு தட்டுகள் ஒன்றுடன் ஒன்று நேரடியாக மோதுவது அதிக பாரம் ஏற்றிய இரண்டு லாரிகள் நேருக்கு நேர் வேகமாக வந்து மோதிக்கொள்ளும் போது என்ன ஆகும் ? முன்புறம் நசுங்கி சப்பையாகும் இரண்டு தட்டுகள் மோதும் போது இதே பாணியில் பூமியின் பரப்பில் சேதம் இருக்கும்

இரண்டாவது அடுக்கில் சறுக்குதல் ஒரு பெரிய தட்டும் ஒரு சிறிய தட்டு மோதும் போது ஒரு தட்டின் அடியில் இன்னொரு தட்டு சறுக்கிக் கொண்டு உள்ளே போய் விடும் உதாரணமாக ஒரு காரும் ஒரு லாரியும் மோதிக் கொள்ளும் போது அந்த வேகத்திற்கு தகுந்தாற்போல் லாரிக்கு அடியில் அல்லது காரின் மேல் ஏறி நிற்பது போல நடைபெறும்

மூன்றாவதாக உராய்வுகள் ஒரே திசையில் நகர்ந்து கொண்டிருக்கும் இரண்டு தட்டுகள் பக்கவாட்டில் உராய்தல் . ஒரு லாரி பேருந்து முந்தி செல்லும் போது எதிர்பாராத விதமாக உரசிக் கொள்வது போல் தட்டுகள் உரசிக் கொள்கின்றன. அப்போது எதிரில் அதிகமாக பாரம் இருக்கிறதோ அந்த வாகனத்தை அதிக சேதம் ஏற்படும் அதுபோல இதுவும்.

அஸ்ஸத்உ என்பது பிளவுபடும் அல்லது பிரிக்கும் படியான ஒரு சொல்
குர்ஆன் பிளவுபடும் பூமியின் மீது சத்தியமாக என்பது பாறைத் தட்டுகள் நகர்வதும் இதனால் ஏற்படும் விளைவு பற்றி தான் வர்ணிக்கிறது .இதற்கு அடுத்த வசனம் " நிச்சயமாக அது பிரிக்கும் படியான ஒரு சொல் " என்று வசனம் சொல்கிறது . இதைத் தொடர்ந்து வரும் வசனங்கள் பூமி பிளவுபடும் வசனங்களாகவே இருக்கிறது .

وَالۡاَرۡضِ ذَاتِ الصَّدۡعِ
(தாவரங்கள் முளைப்பதற்குப்) பிளவு படும் பூமியின் மீதும் சத்தியமாக,
(அல்குர்ஆன் : 86:12)
اِنَّهٗ لَقَوۡلٌ فَصۡلٌ
நிச்சயமாக இது பிரித்து அறிவிக்கக்கூடிய வாக்காகும்.
(அல்குர்ஆன் : 86:13)
وَّمَا هُوَ بِالۡهَزۡلِ
அன்றியும், இது வீணான (வார்த்தைகளைக் கொண்ட)து அல்ல.
(அல்குர்ஆன் : 86:14)
اِنَّهُمۡ يَكِيۡدُوۡنَ كَيۡدًا ۙ
நிச்சயமாக அவர்கள் (உமக்கெதிராகச்) சூழ்ச்சி செய்கிறார்கள்.
(அல்குர்ஆன் : 86:15)
وَّاَكِيۡدُ كَيۡدًا
நானும் (அவர்களுக்கெதிராகச்) சூழ்ச்சி செய்கிறேன்.
(அல்குர்ஆன் : 86:16)
فَمَهِّلِ الۡكٰفِرِيۡنَ اَمۡهِلۡهُمۡ رُوَيۡدًا
எனவே, காஃபிர்களுக்கு நீர் அவகாசமளிப்பீராக; சொற்பமாக அவகாசம் அளிப்பீராக.
(அல்குர்ஆன் : 86:17)

ர.ரா

ஆன்மீக அறிவியல் கேள்வி-பதில் சொற்பொழிவு நிகழ்ச்சிகள் பாகம் 2

#MoulaSyed

அஸ்ஸலாமு அலைக்கும். இன்றைய நவீன உலகில் ஆணும், பெண்ணும் சரிசமமானம் என்று பெண்ணிய வாதிகள். ஆனால் குராஆனில் ஆணுக்கு 2பங்கு,பெண்ணுக்கு1பங்கு சரியான முறையில் விளக்கம் தரவும்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

பெண்களிடம் நல்ல முறையில் நடந்து கொள்ளுங்கள் என நான் உங்களுக்கு அறிவுரை கூறுகிறேன்.

ஏனெனனில் பெண்கள் கோணலான வளைந்த விலா எலும்பிலிருந்து படைக்கப்பட்டுள்ளனர் . விலா எலும்பின் மிகக் கோணலான பகுதி அதன் மேல் பகுதியாகும் .அதை பலவந்தமாக நிமிர்த்திக் கொண்டே போனால் அதை நீ ஒடித்தே விடுவாய் .அதை அப்படியே நீ விட்டு விட்டால் கோணலாகவே அது நீடிக்கும்.அபூ ஹுரைரா (ரலி)புகாரி 3331

மார்புக் கூட்டில் உள்ளவை பன்னிரண்டு ஜோடிவிலா எலும்புகள் . ஒன்று போல மற்றொன்று கிடையாது - அளவிலும் சரி, அமைந்துள்ள கோணத்திலும் சரி இவற்றில் பத்து ஜோடிதான் நம் மார்ப்புப் பகுதி செயல்பட உதவுகின்றன . கீழ்ப்
பகுதியிலுள்ள மீதி இரண்டு ஜோடியும் ஒப்புக்குச் சப்பாணி இவற்றை ஃப்ளோட்டிங் ரிப்ஸ்
**(Floating Ribs)** என்கிறார்கள் .எனினும் வயிற்றின் பின் தசைகளுக்கு இந்த இரண்டு ஜோடியும் அரவணைப்பாக உள்ளன .

ஆதாரம் : "உச்சி முதல் உள்ளங்கால் வரை "மிஸ்டர் போன்ஸ் "
- Dr எம்.பார்த்தசாரதி

நம் உடலில் Extra ஒரு கிட்னி மாதிரி இந்த இரண்டு ஜோடி எலும்புகள் உள்ளன . அப்பென்டிஸ் ஆப்ரேஷனில் கடைசியாக உள்ள குடல் வாலை வெட்டி எடுத்தாலும் உடம்பு ஒன்றும் விடாது என்பது போல ....

இந்த கோணல் எலும்பை ஆதம் (அலை) அவர்கள் துயிலும் போது ஒரு வெள்ளிக்கிழமை அன்று வெளியே எடுத்து அவரது மனைவியைப் படைத்தான்.

சிறுநீராக மாற்று , இதய மாற்று அறுவை சிகிச்சை எல்லாம் அதே உறுப்பு பாதிப்படையும் போது அதே உறுப்பைக் கொண்டு மாற்றி அமைக்கிறது நவீன மருத்துவ விஞ்ஞானம் .

ஆனால் ஒரு கோணல் எலும்பைக் கொண்டு ஒரு பெண்ணை படைத்தது என்பது விஞ்ஞானம் கற்பனை செய்ய முடியாத விஷயம்.

ஏன் கோணல் எலும்பைக் கொண்டு இறைவன் பெண்ணை படைத்தான் ?

பெண் ஆணை விட 20 % எடைக்குறைவு .
அவனைப் போல் வேகமாக ஓடவோ , தாவவோ முடியாது. கால்களில் பலம் குறைச்சல். இதயசுவாசப்பையும் அவளுக்குச் சின்னது.

மூளையின் அளவு அவனுக்கு 1400 CC
அவளுக்கு 1250 CC . அளவு மட்டும்தான் சொன்னேன் .மற்றபடி புத்தியைப் பற்றி அல்ல .

ஆண்களை விட சின்ன பொருட்களையே விரும்புகிறாள் . சின்ன குடை, சின்ன பர்ஸ் , கைக்குட்டை சின்னது .ஆடை, உள்ளாடை சின்னது. காலணி மெல்லிய வாருடைய சின்ன செருப்பு .அவள் வாகனம் ஸ்கூட்டி மெல்லிய மல்லிகை வாசனை இப்படி எல்லாமே சின்னது.

புத்தகங்களை எப்போதும் நெஞ்சோடுதான் அணைத்துச் செல்வாள் . ஆண்களைப் போல் பக்கவாட்டில் இல்லை. மிரளும்
இள மான்விழி அதுவும் சின்னது.
விரல்சுளில் மென்மை இளவெண்டை.

அவளுடைய எலும்பு நளினமானது. தசை நார்கள் 30% வலிமை குறைவு . தொண்டை சின்னது. அதனால் கீச்சுக் குரல். பாடினால் பரவசம். ஆடினால் இவன் தடுமாறுவான் .

இடுப்பு கொஞ்சம் பெரிசு ( குழந்தைப் பிறப்புக்கு வசதியாக)

அவள் ரத்தத்தின் அடர்த்திக் குறைவு . ஹிமோகுளோபின் குறைவு .நாடித்துடிப்பு ஆணை விட அதிகம் .படக் கென வெட்கப்பட்டு கன்னம் சிவப்பாள். லேசாக கண்டித்தால் உடனே கண்ணீர் . அப்புறமா நேர் செய்ய இவனுக்கு ரொம்பவும் கஷ்டம் . தேவையா ?

அவள் உடம்பில் கால்சியம் ஸ்திரமாக இருக்காது. மாதவிலக்கின் போதும், கர்ப்ப காலத்திலும் அவள் நிறையவே கால்சியம் இழக்கிறாள். காரணம் அவள் படைப்பின் மூலப்பொருள் எலும்பு . எலும்பின் மூலம் கால்சியம் .

இதனால் அதிக தினங்கள் உடல் நலக்குறைவு , அதனால் மனத்தளவில் அதிகம் பாதிக்கப் பட்டிடுக்கிறாள்.

... இப்படி பெண்ணைப் பற்றி ஆய்வு செய்யும் ஸோஷியோ பயாலாஜி துறை கூறுகிறது .

நபி(ஸல்) அவர்கள் கோணல் என்று குறிப்படுவது இத்தனையும் சேர்த்துதான்.

ஆதம் (அலை) மண்ணால் படைக்கப்பட்டிருக்க ஹவ்வா எலும்பால் படைக்கப்பட்டதனால் , ஆண்கள் வயது ஏற ஏற அழகும் பெண்கள் வயது ஏற ஏற அழகின்மையும் பெறுகிறார்கள் .

மோனோபாஸ் என்கிற முதிர் பருவத்தில் பெண்களால் குழந்தை பெற முடியாது .ஆனால் ஆண்களால் அந்த கிழப்பருவத்திலும் ஒரு பெண்ணை கர்ப்பம் தரிக்க செய்ய முடியும் என்பது உலகம் அறிந்த உண்மை. இதுவரை ஆணுக்கு நிகராக பெண் இல்லை என்பதை விஞ்ஞானத்தின் மூலம் ஆய்வு செய்தோம் .

சரி பெண் நபியாக ஏன் தேர்ந்தெடுக்கப்படவில்லை ?

" (நபியே!) உமக்கு முன்னர் (பற்பல சமூகங்களுக்கும் ) நாம் அனுப்பிய தூதர்கள் (அந்தந்த சமூகங்களின்) ஊர்களிலிருந்த ஆண்களேயன்றி வேறில்லை; அவர்களுக்கு நாம் வஹீ மூலம் (நம் கட்டளைகளை) அறிவித்தோம் " - (குர்ஆன் : 12:109)

ஏராளமான நபிமார்களை ஆண்களை மட்டும் தேர்ந்தெடுத்து இவ்வுலகத்திற்கு இறைவன் அனுப்பியுள்ளான். அப்படியென்றால் நபியாக ஒரு பெண்ணை தேர்ந்தெடுக்க வில்லையே அது ஏன்? அல்லது ஒரு பெண் நபியாக வருவதில் இறைவனுக்கே உடன்பாடில்லையா?

மலக்குமார்கள் நற்செய்தி கூறினால் அவர்கள் நபிமார்கள் என்ற அளவு கோலை வைத்துக் கொண்டு பெண்களில் நபிமார்கள் உண்டே என்று நபி இப்ராஹீம் (அலை) அவர்களின் மனைவி சாரா அவர்களுக்கு இஸ்ஹாக் (அலை) அவர்கள் பிறக்கப்போகிறார்கள் என்றும் அந்த இஸ்ஹாக் (அலை) அவர்களுக்கு யாகூப் (அலை) அவர்கள் பிறப்பார்கள் என்ற நற்செய்தி கூறப்பட்டதே .

அடுத்து " மூஸாவின் தாயாரிடம் , 'இக்குழந்தைக்கு (மூஸாவுக்கு) ப் பாலூட்டுவீராக என அறிவித்தோம் ( 28 : 7 ) என்ற வசனத்தைக் காட்டுகிறார்கள் .

(நபியே! மர்யமிடத்தில்) மலக்குகள்; மர்யமே! நிச்சயமாக அல்லாஹ் உம்மைத் தேர்ந்தெடுத்திருக்கின்றான்; உம்மைத் தூய்மையாகவும் ஆக்கியிருக்கிறான்; இன்னும் உலகத்திலுள்ள பெண்கள் யாவரையும் விட (மேன்மையாக) உம்மைத் தேர்ந்தெடுத்திருக்கின்றான்”
(என்றும்), (குர்ஆன் : 3:42)

ஹவ்வாவை சுவர்க்கத்தில் குடியமர்த்தியதை 2:35

என்கிற இந்த வசனத்தை மேற்கொள் காட்டுகிறார்கள் .இந்த பெண்மணிகள் ' 'நபிமார்கள் ' என்பதற்கு இவர்களுடன் வானவர் உரையாடியதுதான் என்று இக்கருத்தாளர்கள் கருதுகின்றனர் .

பெண்களில் யாரும் நபியாக இல்லை அவர்களில் வாய்மையாளர்கள் (சித்தீகா) மட்டுமே இருக்கிறார்கள் என்பதே நபிவழி மற்றும் நபித்தோழர்களின் வழி வந்த அஹ்லுஸ் ஸுன்னத் வல்ஜமாஅத் அறிஞர்களின் கருத்தாகும் .

பெண் நபியாக ஏன் தேர்ந்தெடுக்கப்படவில்லை என்பதற்கான காரணங்கள் இதுவாகவும் இருக்கலாம்.

1 ) ஹைல் (மாதவிடாய் ) , நிஃபாஸ் (பிள்ளைப்பேற்றுத் தொடக்கு ) ஆகியவற்றை ஏற்படுத்தல்.

2) ஹால் (கருவுற்றிருத்தல்) 9 மாதம் முதல் 11 மாதம் வரை ).

3) பிள்ளைப் பேற்றுத் துன்பம். (ஒவ்வொரு தடவையும் இறப்பின் துன்பத்தை நுகருதல்).

4) மார்க்கத்தில் குறைவு. ( மாதவிடாய் மற்றும் பிள்ளைப் பேற்றின் தொடக்கின் போதும் தொழவோ, நோன்பு நோற்கவோ அனுமதி இல்லை )

5) இத்தா.

6) கணவர்களுக்குக் கீழ்படிந்து இருக்கும் நிலை .

7) தலாக் (மண விடுதலை ) செய்யும் அதிகாரத்தை கணவர்களின் கையில் கொடுத்தது.

8 ) வாரிசு பாத்தியதையில் குறைவு.

9) சாட்சி கூறுவதில் நஷ்டம் .

10) அறிவில் குறைவு.

(சாட்சி கூற ஆண்களாயிருப்பின் இருவரும் , பெண்களாயிருப்பின் நால்வரும் வேண்டும் .காரணம் பெண்கள் அறிவில் குறைவுடையவர்களாக இருப்பார்கள்)

11) ஸலாம் கூறக் கூடிய வாய்ப்புகளைக் குறைத்தது .

12) ஜும்ஆ தொழுகையும் . ஜமாத் (கூட்டுத் ) தொழுகையும் இல்லாமல் ஆக்கியது .

13 அரசு அதிகாரம் ஆகியவை பெண்களுக்கு கிடையாது .(எந்தப் பெண்ணும் காஜியாக நியமிக்கப் பெறுவதில்லை).

14) பிரயாணம் செய்வதோ, மார்க்கப் போர் செய்வதோ அவர்களுக்கு இல்லாமல் ஆக்கியது .

ஆகி இத்தனை காரணங்களால் நபித்துவம் பெண்களுக்கு இல்லாமல் ஆக்கியது .

இதுவரை வந்த 1, 24, 000 நபிமார்களில் பெண்களில் ஒருவர் கூட கிடையாது

உங்கள் மனைவிகள் உங்கள் விளைநிலங்கள் என்று பெண்ணை விளைநிலமாக உருவாகப்படுத்தி குர்ஆனில் அல்லாஹ்
نِسَآؤُكُمْ حَرْثٌ لَّـكُمْ فَاْتُوْا حَرْثَكُمْ اَنّٰى شِئْتُمْ وَقَدِّمُوْا لِاَنْفُسِكُمْ وَاتَّقُوا اللّٰهَ وَاعْلَمُوْٓا اَنَّكُمْ مُّلٰقُوْهُ وَ بَشِّرِ الْمُؤْمِنِيْنَ
" உங்கள் மனைவிகள் உங்கள் விளைநிலங்கள். ஆகவே, உங்கள் விளைநிலங்களுக்கு நீங்கள் விரும்பியவாறு சென்று உங்களுடைய பிற்காலத்திற்கு (வேண்டிய சந்ததியை)த் தேடிக் கொள்ளுங்கள். (குர்ஆன் : 2:223)

அடுத்த கேள்வி #Muhammadyaseer

அஸ்ஸலாமு அலைக்கும் உங்களின் ஆய்வுகள் அனைத்தும் அருமை. எனக்கு ஒரு சந்தேகம். பிரபஞ்சம் என்று கூறுகின்றோம். இதற்குள் சர்வமும் அடக்கம் என்கிறார்கள். இந்த பிரபஞ்சம் எனபது முழுவதும் வெட்ட வெளிதானே? அனைத்து கோள்களுக்கும் முடிவு இருக்கும். இந்த வெட்ட வெளியாகிய பரபஞ்சத்திற்கு முடிவு ஏதேனும் இருக்கிறதா? கற்பனை செய்யவே இயலவில்லை.

1905 ஐன்ஸ்டீன் அவர்களுக்கு 25 வயது இளம் விஞ்ஞானி . பொது சார்பியல் கொள்கையை சமர்ப்பித்த போது கடுமையான சர்ச்சை எழுந்தது ; அடுத்து 1906இல் சிறப்பு சார்பியல் தத்துவத்தை சமர்ப்பித்த போது இதுகாறும் கண்டுபிடிக்கப்பட்ட விஞ்ஞான கோட்பாடுகள் அனைத்திலுமே எல்லோரையும் திடுக்கிட வைத்த கோட்பாடு இது

1687 இல் ஈர்ப்பாற்றல் விளைவுகள் என்ற விதியை இயற்பியல் விதிகளை இயற்பியலில் விசைகளின் காரணமாக ஏற்படுவதை என்று நியூட்டன் சொன்னார் சூரியன் ஈர்ப்பாற்றல் காரணமாகத் தானே கோள்கள் எல்லாம் அதனைச் சுற்றி சுற்றி வருகிறது சரிதானே நல்லாத்தானே போய்க்கிட்டு இருந்தது

இந்த ஈர்ப்பு சக்தி இருப்பதை நிஜமென்று எடுத்துக்கொண்டு விஞ்ஞானி நியூட்டன் கிரகங்கள் சுற்றும் பாதைகளைத் துல்லியமாகக் கணக்கிட்டார்கள் .

நியூட்டன் விதிப்படி இந்த ஈர்ப்பு சக்தி என்பது ஒவ்வொரு பொருளின் ஆதார இயற்கை .ஒரு பொருளின் எதிரே மற்றொரு பொருளை வைத்தால், இரண்டும் ஒன்றுக்கொன்று கவர்ந்து கொள்வது அவற்றின் இயற்கை என்று அவர் நம்பினார்,

ஆனால் ஐன்ஸ்டீன் அப்படி அதை நம்பவில்லை. இந்த ஈர்ப்பாற்றல் ஜடப்பொருளின் இயற்கை அல்ல . அந்தப் பொருளைச் சுற்றியுள்ள வெளி , ஸ்பேஸ் , அந்தப் பொருள் இருப்பதால் வெளியை வளைத்து விடுகிறது. இந்த வளைவினால் ஏற்படும் சரிவே , வழுக்கலே , ஈர்ப்பாற்றாலாகி விடுகிறது

இந்தக் கருத்து நிரூபிக்க அமெரிக்கா வில் 1919 - மே 29 -ல் பட்டப் பகலில் சூரியன் மறைந்தது . ஹயாடெஸ் (Hyades) என்கிற நட்சத்திர விண்மீன் தொகுதியில் உள்ள நட்சத்திரத்தை முந்தைய இரவில் டெலஸ்கோப் மூலம் படம் பிடித்து , டெலஸ்கோப்பை நகர்த்தாமல் அப்படியே வைத்து அன்றைய சூரிய கிரண பகலில் ஏற்பட்ட போது மீண்டும் அதே நட்சத்திரத்தை படம் எடுக்க அந்த நட்சத்திரம் கொஞ்சம் இடம் மாறி இருந்த இடமாற்றத்தின் வளைவு 1.75 ° ஆர்க் வினாடி
ஆக விண்வெளி வளைந்திருக்கிறது. கிரகங்கள் சுற்றி வரும் பாதைகளும் வளைந்திருக்கிறது ; ஈர்ப்பாற்றல் என்று எதுவும் இல்லை என்றார்.

இந்த சூரிய கிரகணத்தின் போது சூரியனுக்குப் பின் மறைந்திருக்கும் நட்சத்திரங்கள் சூரியனைச் சூழ்ந்துள்ள "வெளி" வளைந்திருப்பதாக காட்டியது. அந்த நட்சத்திர ஒளி வளைந்து வளைந்து நம்மை வந்து சேரும் என்றார் ஐன்ஸ்டீன்

'இப்படி வளைந்து வளைந்து வெளி முழுவதும் திரும்ப ஒன்றுடன் ஒன்று சேர்ந்துகொண்டு விடும். அப்படியெனில் இங்கிருந்து புறப்பட்ட ஒளிக்கற்றை விண்வெளியில் சென்று கோடிக்கணக்கான வருஷங்களுக்குப் பிறகு புறப்பட்ட இடத்துக்கே திரும்ப வந்துவிடும் ! இதில் காலம் என்பது என்ன ? தூரம் என்பது என்ன ? சரித்திரம் என்பது என்ன ? எதிர்காலம் , இறந்த காலம் எல்லாம் ஒன்றிப் போகின்றன !

வளைந்த வெளியை சிந்தனையில் தேக்குவதற்கே முடியாமல் விஞ்ஞானிகள் திணறினார்கள் .

" வளைந்த வெளியாவது ...? சரி ! "

" வளைந்த வெளிக்கு அப்பால் என்ன ?
அதுவும் வெளிதானே ...? "

" இல்லை ! வெளிவளைவோடு அவ்வளவுதான் ! "

" எப்படி ? நினைத்துப் பார்க்கவே முடியவில்லையே !"

இதிலிருந்து விஞ்ஞானிகள் 'நம்புலன்களுக்கும் , சிந்தனைகளுக்கும் அப்பாற்பட்ட ஒரு ஞானம் இருக்கலாமோ என்று சிந்திக்கத் துவங்கியுள்ளார்கள்

இந்த வெளி குறித்து குர்ஆனில் அல்லாஹ் .....

لَا تُدْرِكُهُ الْاَبْصَارُ وَهُوَ يُدْرِكُ الْاَبْصَارَ وَهُوَ اللَّطِيْفُ الْخَبِيْرُ

பார்வைகள் அவனை அடைய முடியா; ஆனால் அவனே எல்லோருடைய (எல்லாப்) பார்வைகளையும் (சூழ்ந்து) அடைகிறான். அவன் நுட்பமானவன்; தெளிவான ஞானமுடையவன்.
(அல்குர்ஆன் : 6:103)

இந்த வகை ஞானத்தைப் பற்றி உபநிஷத்துகளிலும் சொல்லப்பட்டிருக்கிறது .

" அங்கே பார்வை போவதில்லை .பேச்சு நுழைவதில்லை. மனம் செல்வதில்லை அதை எப்படி தொடுவதென்று நமக்குத் தெரியாது , நமக்குப் புரியாது " என்று ' 'கேனோபநிஷத்தில் ' சொல்லியிருப்பது அவர்களை - நவீன பௌதீக விஞ்ஞானிகளை வேத சிந்தனை அழைத்தது இந்த ஈர்ப்பாற்றலின் கோட்பாடுகள் .

அல்லாஹ்வால் மட்டுமே அறிந்து கொள்ளும் நம்மால் விளங்கிக்கொள்ள முடியாத விஷயத்தை நண்பர் கேட்டிருக்கிறார் .அவருக்கு என்னால் இப்படித்தான் பதில் சொல்ல தெரிகிறது

ர.ரா

வகை ஞானத்தைப் பற்றி உபநிஷத்துகளிலும் சொல்லப்பட்டிருக்கிறது .

" அங்கே பார்வை போவதில்லை .பேச்சு நுழைவதில்லை. மனம் செல்வதில்லை அதை எப்படி தொடுவதென்று நமக்குத் தெரியாது , நமக்குப் புரியாது " என்று ' 'கேனோபநிஷத்தில் ' சொல்லியிருப்பது அவர்களை - நவீன பௌதீக விஞ்ஞானிகளை வேத சிந்தனை அழைத்தது இந்த ஈர்ப்பாற்றலின் கோட்பாடுகள் .

அல்லாஹ்வால் மட்டுமே அறிந்து கொள்ளும் நம்மால் விளங்கிக்கொள்ள முடியாத விஷயத்தை நண்பர் கேட்டிருக்கிறார் .அவருக்கு என்னால் இப்படித்தான் பதில் சொல்ல தெரிகிறது

ர.ரா

ஜீவன்களுக்கு போடப்படும் வேஷங்கள்

21.05 .2020 நேரலையின் சிறப்பு சொற்பொழிவு

https://m.facebook.com/story.php?story_fbid=2617110835214922&id=100007480923921

ஜீவன்கள் என்று நாம் சொல்லும்போது நமக்கு உயிருள்ள ஜீவன்கள் மட்டுமே ஞாபகத்திற்கு வருகிறது ஆனால் அல்லாஹ்வின் படைப்பில் ஜீவன்கள் என்றாலும் அவன் படைப்பு எல்லாவற்றுக்குமே ஜீவன் இருப்பதாகவே குர்ஆனில் கூறப்படுகிறது.

மூஸா அலை அவர்களின் கையில் உள்ள அஸா என்கிற கம்பைப் பற்றி.... "மூஸாவே உங்களது வலது கையில் இருப்பது என்ன அதற்கு அவர் இது என்னுடைய கைதடி இதன் மீது சாய்ந்து கொள்வேன் இதைக் கொண்டு என் ஆடுகளுக்கு ஏழைகள் பறிப்பேன் இன்னும் இதில் எனக்கு வேறு தேவைகளும் நிறைவேறுகின்றன குர்ஆன் (20 : 17-19)

கீழே எறியும் என்றதும் அந்த அஸா கம்பு பாம்பாக மாறியது அதனை கண்டு மூஸா (அலை) பயந்து ஓடினார்கள் இறைவன் அவர்களை நீங்கள் பயப்பட வேண்டாம் அதனை முன்போல நான் ஆகிவிடுகிறேன் என்று சொல்ல மூஸா (அலை) அந்த பாம்பை கையில் பிடித்ததும் அது மீண்டும் கம்பாக மாறியது.

நபி ஸல் அவர்கள் மிம்பர் படியிலிருந்து பயான் செய்யும்போது தங்களுடைய கரத்தை ஒரு பேரீத்த மரத்துண்டு மீது வைத்திருந்து பேசுவார்கள் பின் அந்த மிம்பர் மாற்றியமைக்க என்று முடிவு செய்யப்பட்டது ஆகையால் பேரீத்த மரத்துண்டை எடுத்துவிட்டு புதிய மிம்பர் செய்யப்பட்டது. அப்புறப்படுத்தப்பட்ட ஈச்ச மரத்துண்டு குழந்தை அழுவது போன்று அழுததாகவும் ,அதை நபிதோழர்கள் கேட்டதாகவும் கூறப்படுகிறது

நபி (ஸல்) அவர்கள் சிறுவராக இருந்தபோது அபூதாலிப் அவர்கள் சிரியாவிற்கு வியாபார நிமித்தமாக செல்லும்போது நபியவர்களை அழைத்துச் சென்றார்கள் அப்போது சிரியாவிற்கு சற்றுமுன்னர் அவர்களை கவனித்து பஹீரா என்கிற பிரபலமான ஞானி அவர்கள் அபூதாலிபிடம் , " இந்த சிறுவர் யார் ?" என்றார்கள் அவர் என் மகன் என்று கூறினார் அதற்கு பஹீரா "சாத்தியம் இல்லையே " என்று கூறினார்கள் உடனே அபுதாலிப் இவர் என்னுடைய சகோதரரின் மகன் இவர் பிறப்பதற்கு முன்பே இவருடைய தகப்பனார் இறந்து விட்டார்கள் இவரின் தாயார் இவர் பிறந்ததும் இறந்துவிட்டார்கள் எனவே நானே என் மகனாக எடுத்து வளர்க்கிறேன் என்று கூறினார்கள்

அதற்கு நீங்கள் சொல்வது உண்மையே மேலும் இவ்வாறு இறைவனால் அனுப்பப்பட்ட தூதுவராக இருப்பார் ஏனென்றால் இவருக்கு செடிகள் தாவரங்கள் ஸுஜூது செய்வதை நான் கவனித்தேன் எனவே இவரை சிரியாவிற்கு அழைத்துச் செல்ல வேண்டாம் இவரை உங்கள் தாய் நாட்டிற்கு உடனடியாக அனுப்பி வையுங்கள் இதனால் இவருக்கு வர இருக்கும் ஆபத்துகளிலிருந்து இவரை தவிர்க்கலாம்.

மேலே கூறப்பட்டுள்ள அஃறிணை பொருட்களுக்குள் எப்படி ஜீவன்கள் வந்தது ?

அடுத்து அல் மஸக் உரு மாற்றம் பற்றி இறைவன் குர்ஆனில் குறிப்பிடுகின்றான் உரு மாற்றம் என்பது இரண்டு வகைப்படும் 1) புற உருமாற்றம் 2) அக உருமாற்றம்.

நபி தாவூத் அலை மக்கள் அய்லா என்கிற பழைய நகரில் வாழ்ந்து வந்தனர் அவர்கள் மொத்தம் 70 ஆயிரம் பேர் வசித்துவந்தனர் அதில் 12 ஆயிரம் பேர் மீன்பிடி தொழில் செய்து வந்தனர் அவர்களுக்கு சனிக்கிழமை ஜும்ஆவுடைய நாளாக அறிவித்திருந்தான் ஆனால் அவர்கள் மீன்பிடித் தொழிலில் கவனம் செலுத்தி வந்ததால் ஜும்மா தொழுகையை அவர்கள் அலட்சியப்படுத்தினால் இதுகுறித்து தாவூத் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் " அல்லாஹ் உங்களை எச்சரிக்கின்றான் நீங்கள் இனிமேல் சனிக்கிழமை கடலில் சென்று மீன் பிடிக்க கூடாது என்பதாக அச்சுறுத்தி உள்ளான் என்று கூறினார்கள் ஆனால் இவர்கள் கடற்கரைக்கு சென்று சனிக்கிழமை அன்று மட்டும் ஏராளமான மீன்கள் கடலின் மேற்பரப்பில் வந்து இருப்பதை கவனித்தார்கள் எனவே அவர்கள் சனிக்கிழமை அன்றும் மீன்பிடிக்க ஏதாவது வழி இருக்கிறதா என்று யோசித்த வேளையில் ஷைத்தான் அவர்களுக்கு புது வகையான திட்டத்தை அறிவித்தான் அதாவது சனிக்கிழமை நீங்கள் கடலுக்குள் செல்ல வேண்டாம் ஆனால் கடல் நீர் கரைக்கு வந்து குட்டையில் தேங்கும் படி கடற்கரையில் குட்டைகளை வெட்டினால் அதில் கடல் நீருடன் மீன்களும் சேர்ந்து குட்ட்டைக்கு வரும் இதனால் நீங்கள் ஞாயிற்றுக்கிழமை அன்று எல்லா மீன்களையும் பிடித்துக் கொள்ளலாம் என்று புத்திமதி கூறினார்

இது அவர்களுக்கு தோதுவாக இருந்தது பின்பு கரையில் மீன் பிடித்து போக சனிக்கிழமை அன்று கடலில் சென்று மீன் பிடிக்கும் தைரியம் அவர்களுக்கு ஏற்பட்டது ஆகவே இம் மாநாட்டை புறக்கணித்து சனிக்கிழமை அன்றும் மீன்பிடிக்க தலைப்பட்டனர் நபியவர்கள் தடுத்து 40 வருடங்கள் ஆனபிறகும் இவர்கள் தொடர்ந்து மீன்பிடித் தொழிலை சனிக்கிழமை அன்றும் பிடித்து வந்தார்கள் எனவே இறைவனின் கோபப்பார்வை இவர்கள் மீது இறங்கிற்று இவர்கள் இரவு உறங்கிக் கொண்டு இருக்கும்போதே குரங்குகளாக

மாற்றப்பட்டனர். மூன்று நாள் மட்டும் இவர்கள் குரங்குகளாக இருந்து பின் மரணித்து இவர்களின் உடல் கடலில் சேர்க்கப்பட்டது

அடுத்து நபி (ஸல் ) அவர்கள் நபித்தோழர்களுடன் காட்டுப் பாதையில் சென்று கொண்டு இருக்கும்போது இவர்களுக்கு பசி தாகம் ஏற்படவே கூடாரம் அமைத்து காட்டில் தங்கி இருந்தனர் அந்த வேளையில் உணவுக்காக ஏதேனும் கிடைக்குமா என்று அக்காட்டு மலைப்பகுதியை சுற்றி வந்தார்கள். அந்த மலைப்பகுதியில் உடும்பு நிறைய இருப்பதை அறிந்து உடும்புகளை சுட்டும் சமைத்தும் உணவு தயார் செய்தார்கள் .நபியவர்கள் இந்த உணவு தயாரிப்பதற்காக விறகுகளை பொறுக்கிக் கொண்டு வந்ததும் உடும்புகள் சுடப்பட்டு கொண்டிருப்பதை கண்டு ஏன் இந்த பகுதியில் உள்ள உடும்புகளை ஏன் சுட்டீர்கள் என்று கேட்க நபித்தோழர்கள் யா ரசூலுல்லாஹ் உடும்பு ஹராம் என்று தற்போது வஹி வந்துள்ளதா என்று கேட்டனர் அதற்கு நபியவர்கள் இல்லை இந்த உடும்புகள் பனீஇஸ்ரவேலர்கள் ஒரு காலத்தில் வாழ்ந்த பூமி இவர்களை இறைவன் கண்டிக்கும் பொருட்டு உடும்புகள் ஆக மாற்றப்பட்டு உள்ளனர் என்று கூறினார்கள்.

நபிஸல் தங்களுடைய மக்களை உருமாற்றம் செய்வதிலிருந்து இறைவனிடம் மன்றாடி துவா கேட்டார்கள் அல்லாஹ்வும் அவர்களுக்கு புற உரு மாற்றத்தை கொடுக்கமாட்டேன் என்று கூறியுள்ளான் ஆனாலும் அவர்கள் செய்யும் தவறுகளுக்கு தண்டனை அகஉருமாற்றம் கண்டிப்பாக நடந்தே தீரும் என்பதாக கூறியுள்ளான்

பேராசை கொண்டவனின் அகம் நாயாக உரு மாறிக் கொள்கிறது; காமத்தில் அதிக நாட்டம் உடையவன் பன்றிகளாக உருவெடுக்கிறது. மூடத்தனம் முரட்டுக் குணம் கொண்டவனின் அகம் மாடாக உருமாற்றம் அடைகிறது . தந்திரம் சூழ்ச்சி இவைகளைக் கொண்டவனின் அகம் நரியாக மாற்றப்பட்டு விடுகிறது

ஒருவனை மெஸ் மெரிசம் ஆழ்நிலைத் தூக்கத்தில் ஆழ்த்தும் போது அவன் இறுதியில் மொழிகள் அற்ற மிருகங்களைப் போல் ஊளை விடுவதாகவும் , மிருகங்களைப் போல் நடப்பதாகவும் ஏதோ ஒரு காலகட்டத்தில் அவன் ஆன்மா மிருகமாக இருந்திருக்கிறது என்பதை விஞ்ஞானம் கூறினாலும் , நவீன விஞ்ஞானம் அவனின் ஆக ஒரு மாற்றத்திற்கு காரணம் அவனின் செய்கைகளை கொண்டே என்று கண்டுபிடித்துள்ளது
இவ்வாறு ஜீவன்களுக்கு பல்வேறு உருமாற்றம் களாக வேஷங்கள் போடப்படுகிறது

உயிர்கள் இல்லாத வஸ்துக்கள் ஆன கல்லை கொண்டு மட்டும் ஆய்வு செய்து பார்க்கும்போது அவைகளுக்குள்ளும் உருமாற்றம் நடந்திருக்கலாமோ என்று எண்ணத் தோன்றுகிறது

"நாம் மலைகளை தாவூதுக்கு வசப்படுத்திக் கொடுத்தோம் . மாலையிலும் . காலையிலும் அவைகள் அவருடன் சேர்ந்து துதித்தன. "
குர்ஆன் ( 38 : 18 )

நபி (ஸல்) அவர்களும் அபூபக்கர் சித்தீக் (ரலி) , உமர் (ரலி) , அலி (ரலி) இவர்கள் உஹது மலையின் மீது இருக்கும் போது உஹது மலை தளும்பியது உடனே
" உஹதே ... தழும்பாதே உன் மீது ஒரு நபியும் ,ஒரு சித்தீக்கும். இரண்டு ஷுஹதாக்களும் (இறைவழியில் உயிர் நீர்த்தவர் ) இருக்கும் போது நீ ஏன் தளும்புகிறாய் ? உடனே உஹது நிலைபெற்று நின்றது .

'பாறையின் மீது அமர்ந்திருக்கும் ஒருவனின் மன நிலை எப்படி இருக்கிறது என்பதை. அந்தப் பாறைக் கல் அறிந்து கொள்கிறது "

" அபூபக்கர் (ரலி) அவர்கள் வீட்டின் சுவற்றில் பதித்த கல் ஒன்று நான் நபியாவதற்கு முன்பே எனக்கு ஸலாம் சொன்னது "

சின்ன கூழாங் கற்கள் திக்ரு செய்கிறது என்பதாக நபி (ஸல்) அவற்றை கையில் எடுத்ததும் கல் திக்ரு செய்வதை நபித் தோழர்களும் கேட்டனர்.

நபி (ஸல் ) அவர்கள் தொழுகையில் ஸஜ்தா செய்யும் போது அபுஜஹில் ஒரு பெரிய கல்லை அவர்களின் தலையில் மீது போட எத்தனித்தபோது அக்கல் அவனுடைய கைகளில் ஒட்டிக்கொண்டது

நபி ஸாலிஹ் (அலை) மக்கள் நபியிடம் மலையை பிளந்து பெண் சினை ஒட்டகம் ஒன்று வெளியே வரவேண்டும் வந்ததும் அதன் கன்று ஈன வேண்டும் பின் எங்களுக்கு குடிப்பதற்கு பாலை தரவேண்டும் இவ்வாறெல்லாம் நீங்கள் செய்தால் நாங்கள் ஈமான் கொள்கிறோம் என்று கூறினர் நபிஸாலிஹ் (அலை) அவர்களும் இறைவனிடம் மன்றாடி அவர்கள் கேட்ட மாதிரியே மலை பிளந்து ஒட்டகத்தை வரவழைத்து கொடுத்தனர் .

நபி இப்ராஹீம் அலை கஃபாவை நிர்மாணிக்கும் போது ஒரு கல் சுமை தூக்கியாக இவர்களுக்கு உதவிக்கு இருந்தது கல்லிலேயே நபியுடைய கால் பாதம் பதிந்தது அந்த கல்லே மகாமே இப்ராஹீம் என்று கஃபாவின் ஆலயத்தினுள் கண்ணாடி கூண்டினுள் அமைக்கப்பட்டிருக்கிறது !

இஸ்ரவேலர்கள் ஒருவரை ஒருவர் பார்த்தவர்களாக, நிர்வாணமாகவே குளிப்பார்கள். மூஸா(அலை) அவர்கள் தனித்தே குளிப்பார்கள். இதனால் 'அல்லாஹ்வின் மீது ஆணையாக மூஸா விரை வீக்கமுடையவர். எனவே அவர் நம்முடன் சேர்ந்து குளிப்பதில்லை' என இஸ்ரவேலர்கள் கூறினார்கள். ஒரு முறை மூஸா(அலை) அவர்கள் குளிப்பதற்காகச் சென்றபோது, தங்களின் ஆடைகளை ஒரு கல்லின் மீது வைத்துவிட்டுக் குளிக்கச் சென்றார்கள். அவர்களின் ஆடையோடு அந்தக்கல் ஓடிவிட்டது. உடனே மூஸா(அலை) அவர்கள் அதைத் தொடர்ந்து 'கல்லே! என்னுடைய ஆடை!' என்று சப்தமிட்டுச் சென்றார்கள். அப்போது, இஸ்ரவேலர்கள் மூஸா(அலை) அவர்களின் மர்மஸ்தலத்தைப் பார்த்துவிட்டு 'அல்லாஹ்வின் மீது ஆணையாக மூஸாவிற்கு எந்தக் குறையுமில்லை' என்று கூறினார்கள். மூஸா(அலை) அவர்கள் தங்களின் ஆடையை எடுத்துக்

கொண்டு அந்தக் கல்லை அடிக்க ஆரம்பித்தார்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.
'அல்லாஹ்வின் மீது ஆணையாக மூஸா(அலை) அவர்கள் கல்லைக் கொண்டு அந்த கல்லின் மீது ஆறோ ஏழோ அடி அடித்தார்கள்' என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்.
ஸஹீஹ் புகாரி 278.

மகாகவி பாரதியார் தம் ஞானப் பாடல்களில் மேற்கண்ட கருத்துக்களை உள்ளடக்கிய இப் பாடலைக் கேட்டுப் பாருங்கள் .

" நிற்பதுவே நடப்பதுவே பறப்பதுவே நீங்களெல்லாம்
சொற்பனந்தானோ? பல தோற்ற மயக்கங்களோ?

கற்பதுவே கேட்பதுவே கருதுவதே நீங்களெல்லாம்
அற்ப மாயைகளோ? உம்முள் ஆழ்ந்த பொருளில்லையோ?

வானகமே இளவெயிலே மரச்செறிவே நீங்களெல்லாம்
கானலின் நீரோ? வெறும் காட்சிப் பிழைதானோ?

போனதெல்லாம் கனவினைப்போல் புதைந்தழிந்தே போனதனால்
நானும் ஓர் கனவோ? இந்த ஞாலமும் பொய்தானோ?

காலமென்றே ஒரு நினைவும் காட்சியென்றே பல நினைவும்
கோலமும் பொய்களோ? அங்குக் குணங்களும் பொய்களோ?

சோலையிலே மரங்களெல்லாம் தோன்றுவதோர் விதையிலென்றால்
சோலை பொய்யாமோ? இதைச் சொல்லொடு சேர்ப்பாரோ?

காண்பவெல்லாம் மறையுமென்றால் மறைந்ததெல்லாம் காண்பமன்றோ?
வீண்படு பொய்யிலே நித்தம் விதி தொடர்ந்திடுமோ?

காண்பதுவே உறுதிகண்டோம் காண்பதல்லால் உறுதியில்லை
காண்பது சக்தியாம்; இந்தக் காட்சி நித்தியமாம் "

மறைந்து போன அந்த வான சாஸ்திரம் எங்கே ?

( சிறப்பு சொற்பொழிவின் சாரம்சம் )20/05/2020




வானத்தில் நட்சத்திரங்கள் முன்னறிவிப்பு செய்து அதை விளக்கத்தை யூகிக்கும் திறமையும் கொடுத்த வல்ல நாயன் அவனுக்கே எல்லாப் புகழும்

இந்த வான சாஸ்திரத்தை பூமிக்கு கொண்டு வந்தவர் நபி இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்களாகும் ஒருநாள் இவர் வெயில் கடுமையாக இருந்தது அதன் வெப்பம் தாளாது இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் பெரிதும் துயருற்றார்கள் . சூரியனிலிருந்து இவ்வளவு தொலைவு பூமியிலிருந்தும் இங்குள்ள மக்களுக்கு இவ்வளவு வெப்பமாக இருக்கிறது. அந்த சூரியனை சுமக்கும் அந்த வானவருக்கு அதன் வெப்பத்தை எவ்வாறு பொறுத்துக் கொள்வார் ? இறைவனை அவரின் துன்பத்தை இலகுவாய் ஆக்குவாயாக !

அந்த உடனே சூரியனின் வெப்பம் குறைக்கப்பட்டது .அந்த வானவர் சந்தோஷப்பட்டு இத்ரீஸ் (அலை) அவர்களை காண பூமிக்கு வந்து , நபியவர்களை வானலோகத்திற்கு
அழைத்து சென்று மலக்குகள் பார்வையிடும் ஸிர்ருல் மலக்கூத்து என்கிற பிரபஞ்சங்கள் இரகசிய கிதாபை படிக்க கொடுத்தும் சூரியனுடைய கோள்கள் சுற்றி வரும் பாதைகளில் அந்தந்த கிரகங்களோடு அவரையும் பயணிக்க செய்தார்கள்

இப்படி சனிக்கோளுடன் சேர்ந்து 30 ஆண்டுகள் விண்ணிலே பயணித்து வந்தார்கள் ஆகையால் இவர்களால் தன்னால் நேரில் கண்ட நட்சத்திரத்திரங்களைப் பற்றியும் கிதாபு (பிரபஞ்சங்கள் இரகசியத்தை) ஒன்றாக சேர்த்து வான சாஸ்திரத்தை இவர்கள் தொகுத்து பூமிக்கு கொடுத்தார்கள்

தொடு குறி சாஸ்திரம், கிளி ஜோஸ்யம், பங்கஜா லாட்ஜ் பாமிஸ்ட் , "கிரகம் பாடாய் படுத்தும் " என்று சொல்லும் "பாலத்து ஜோஸ்யர்கள் " போன்ற வியாபாரக்காரர்களை எல்லாம் ஒரு புறம் ஒதுக்கிவிட்டு, இந்த சாஸ்திரத்தின் அடிப்படைச் சிந்தனையை யோசித்து பார்த்தால் , வசீகரமாகத்தான் இருக்கிறது.

அந்த சிந்தனை என்ன?

ஒரு குழந்தை பிறக்கும் போது, அதன் முதல் மூச்சு, வடிவம் பெற்று அது உலகத்தில் ஓர் உயிராய் பிரவேசிக்கும் போது, இந்த பிரபஞ்சவெளியிலும் ஒரு பிரத்தியேகமான நிகழ்ச்சி நிகழ்கிறது என்கிறார்கள்.

ஏதோ ஒரு நட்சத்திரம் ஒரு குறிப்பிட்ட நிலையில் உச்சம் பெறுகிறது. இந்த நட்சத்திரம் மற்றும் கிரகங்களின் நிலை இதெல்லாம் பிறந்த உயிருக்கு தொடர்புபடுத்தி நிறைய நிறைய கணிக்கிறார்கள் .

இதெல்லாம் நிஜமாலுமா ..? என்று நீங்கள் கேட்பது புரிகிறது. சொல்றேன்

பைலபூஸ் மன்னர் கிரேக்க அரச குமாரி கிலாயா மணக்கிறர் .சிற்றரசர் மல்க்கான் என்பவரை அவள் தங்கை அல்காவை மணக்கிறார் .பைலபூஸ் 40 ஆண்டு காலமாக சூரிய அஸ்தமனத்திற்குப் பிறகு வானத்தைப் பார்த்து கோள்கள் நட்சத்திரங்கள் ஆகியற்றின் அமைப்புகளையும் ஆராயும் வழக்கம் அவருக்கு உண்டு

"நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் நட்சத்திரங்களை கூர்ந்துப்பார்த்தார் " குர்ஆன் (37 : 88) " இலா "என்ற பதம் பயன்படுத்தப்பட்டிருந்தால் "கூர்ந்து " என்று அர்த்தம் வரும். எனவே நட்சத்திரக் கலையை பயின்றார். மேற்கண்ட வசனத்தைத் தொடர்ந்து இப்ராஹிம் (அலை) அவர்கள்

" பின்னர் நட்சத்திரங்களைக் கூர்ந்து பார்த்து . நிச்சயமாக எனக்கு ஒரு நோய் ஏற்படும் போல் இருக்கின்றது " என்று கூறவே குர்ஆன் (37 : 88,89)

"எந்த நபியுடைய ஜென்ம நட்சத்திரம் விண்ணில் அவர் பிறப்பதற்கு முன் தோன்றாமல் இருந்ததில்லை " இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்

நபி மூஸா (அலை) அவர்கள் பிறப்பதற்கு முன்னதாக பிர்அவ்னின் அரண்மனையில் உள்ள வான சாஸ்திரிகள் வானில் ஜென்ம நட்சத்திரம் தோன்றி விட்டது இது ஓர் அவதாரப் புருஷன் பனி இஸ்ரவேலர்களில் பிறந்தற்குரிய அறிகுறி என்று கணித்ததும் , ஒரு லட்சத்திறகும் அதிகமான பிறந்த ஆண் குழந்தைகளின் தலை சீவப்பட்டது . அக்கால வான இயல் வல்லுநர் கணித்ததில் தவறெதும் உண்டா ? மூஸா (அலை) பிறக்காமலா போனார்கள் ? பிறந்தார்கள் அல்லவா ?
குர்ஆன் ( 20 : 39 ) ( 28 : 07 )

இது போன்றே நபி ஈஸா (அலை) அவர்கள் பிறக்கும் போது 3 வான இயல் வல்லுநர்கள் ஜென்ம நட்சத்திரம் வானில் தோன்றியதை கண்டு பைத்துல் முகத்தஸ் வந்து சேர்ந்து இஸ்ரவேலர்களின் அரசர் பிறந்து விட்டாரா என்று ஐரதூஸ் மன்னனிடம் கேட்க பின் விசாரித்தில் மாட்டுத் தொழுவத்தில் மாநபி ஈஸா (அலை) அவர்கள் பிறந்தது உண்மைதானே.?

"பதினோரு நட்சத்திரங்களும் . சூரியனும், சந்திரனும் எனக்கு தலை வணங்கக் கண்டேன்" குர்ஆன் (12 : 04) என்று சிறுவர் நபி யூசுப் (அலை) கனவில் கண்ட நட்சத்திரங்கள் தன்னுடைய சகோதரர்கள் என்பதை தந்தை நபி யாகூப் (அலை) அவர்கள் அறிவிக்கவில்லையா ?

ரோமபுரி ஹெர்குலிஸ் மன்னர் "இன்றிரவு நான் நட்சத்திர மண்டலத்தை ஆராய்ந்தபோது, "விருத்தசேதனம் செய்யப்பட்டவர்களின் மன்னர் தோன்றிவிட்டதாக ஜென்ம நட்சத்திரத்தின் மூலம் அறிந்தேன்" என்று கூறி அண்ணலெம் பெருமானார் நபி முஸ்தபா (ஸல்) அவர்களின் பிறப்பை பதிவு செய்யவில்லையா ?
புகாரி பாகம் 1 - ஹதீஸ் 07

## மலக்குமார்களின் வயது

நபிஸல் அவர்கள் மகள் பாத்திமா ரலி அவர்களின் வீட்டில் இருக்கையில் வானவர் ஜிப்ரீல் அலை அவர்கள் வருகை தருகிறார்கள்

உடனே பாத்திமா ரலி அவர்கள் ஜிப்ரீல் அலை அவர்களைப் பார்த்து ,"வாருங்கள் சிறிய தந்தையாரே . ! அஸ்ஸலாமு அலைக்கும் என்கிறார்கள்

ஜிப்ரீல் அலை அவர்கள் பதில் ஸலாம் சொல்லாமல் தன்னைப் பார்த்து சிறிய தந்தையார் என்று பாத்திமா ரலி அவர்கள் சொன்னது குறித்து யோசிக்கையில் நபிஸல் அவர்கள் வருகிறார்கள் "என்ன விஷயம் ? " என வினவுகிறார்கள் உடனே ஜிப்ரீல் அலை அவர்கள் விபரம் சொல்கிறார்கள்

அது கேட்டு நபிஸல் அவர்கள் , ஜிப்ரீல் அலை அவர்களிடம் " ஜிப்ரீலே நீர் எனக்கு வயதால் மூத்தவர் என்பதற்கு என்ன அதிசயத்தை தெரிந்திருக்கிறீர் ?" என்று கேட்கிறார்கள்

அதற்கு ஜிப்ரீல் அலை அவர்கள் "வடபுறத்தில் ஒரு நட்சத்திரம் உதயமாகி 70,000 வருஷம் மறையாமலிருந்து , பின்னர் 70,000 வருஷம் மறைந்து போகும் இவ்விதமாக 70,000 தடவை கண்டு இருக்கிறேன் " என்று சொன்னார்கள்

அதற்கு நபிஸல் அவர்கள் ஜிப்ரீல் அலை அவர்களிடம் " இப்போது அந்த நட்சத்திரத்தைக் கண்டால் அடையாளம் காட்ட முடியுமா ? " என்றார்கள்

" முடியும் " என்றார்கள் ஜிப்ரீல் அலை அவர்கள்

உடனே நபிஸல் அவர்கள் தங்கள் தலைப்பாகையைக் கழற்றி கையில் வைத்துக்கொண்டு தன் தலையை காண்பிக்கிறார்கள் அந்தத் தலையின் உச்சியில் அந்த நட்சத்திரம் இலங்கிக் கொண்டிருக்கிறது உடனே ஜிப்ரீல் அலை அவர்கள் ஆவேசமாக நபிஸல் அவர்களைக் கட்டி அணைத்து முத்தமிட்டு " தாஜூல் அன்பியா முஹம்மது ஸல் என்கிறார்கள்

பிறகு ஜிப்ரீல் அலை அவர்கள் நபிஸல் அவர்களிடம் " இந்த நட்சத்திரத்தில் மூன்று அடையாளங்கள் இருந்தது என்றும் ஒன்று அந்த நட்சத்திரத்தின் தலையில் தாஜ் என்னும் தொப்பியும் இரண்டு காதில் இரண்டு முத்துக் கவச குண்டலமும் கழுத்தில் இரத்தின பதக்கமும் இருந்தது " என்று சொன்னார்கள்

உடனே நபிஸல் அவர்கள் " தலையில் இருந்த தாஜ் என்பது "அலி ரலி " அவர்கள் கழுத்தில் இருந்த இரத்தன பதக்கம் பீபி பாத்திமா ரலி அவர்கள் என்றும் காதில் இருந்த இரண்டு முத்துக் கவச குண்டலம் இமாம் அசன் ரலி அவர்கள் இமாம் ஹுசைன் ரலி அவர்கள் என்று நபிஸல் அவர்கள் சொன்னார்கள் அது கேட்டு ஜிப்ரீல் அலை அவர்கள் நபிஸல் அவர்களைக் கண்ணியப்படுத்தினார்கள்
ஆதாரம் : இரத்தின மஹம்மது காரண சரித்திரம் பக்கம் 13 _ 15 அச்சு 1946

நட்சத்திர கலையான வான சாஸ்திரத்தைப் பற்றி ஒரு நட்சத்திரம் எங்கே உருவாகப் போகிறது அந்த உருவான நட்சத்திரம் என்னென்ன நன்மையே தரப்போகிறது என்று தானே தேடப் போகிறீர்கள் ....அந்த கஷ்டமே உங்களுக்கு வேண்டாம். அந்த ஜென்ம நட்சத்திரமே பிறந்து மக்களோடு மக்களாய் வாழ்ந்து சென்று இருக்கிறது என்றால் அது போதாதா அந்த சத்திய வாழ்க்கையை நாமும் வாழ்ந்து நாமும் கூட நட்சத்திரம் மின்ன முடியாதா ? ஒரு நட்சத்திரத்தை பார்த்து ஆய்வு செய்து கணித்து இந்த உலகத்தின் மூலையில் எங்கோ யாரோ ஒருவர் தான் இருக்க முடியும் . ஆனால் மாபெரும் நட்சத்திரம் நம்முடன் வாழ்ந்து பிரகாசித்து விட்டு இப்போது மறைந்தும் பிரகாசிக்கிறது என்றால் அது யாராக இருக்க முடியும் நாம் பெருமானார் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தானே அதனை இருக்க முடியும் ....இந்த மாபெரும் நட்சத்திரத்தைப் பற்றி சுமார் ஐந்து இலட்சத்திற்கும் அதிகமானோர் ஆராய்ந்து ரிவாயத்து செய்திருக்கிறார்கள் என்றால் அதன் மகத்துவத்தை என்ன சொல்வது ?

இதில் பெரிய ஆச்சரியம் என்னவென்றால் நம் பெருமானார் (ஸல்) அவர்களின் தூய வாழ்க்கையை அதன் மூலமாக பாதுகாத்து பிரகாசிக்கிறது என்றால் அவர்களைப் பற்றி ரிவாயத்து செய்த ஐந்து லட்சத்து மஹான்களின் வாழ்க்கையும் பாதுகாக்கப்படுகிறது . மேலும் இவர்களும் தூயவர்கள் இந்த மாதிரியான பாக்கியம் உலகில் வேறு யாருக்காவது இனி கிடைக்கப் போகிறதா ? நபித்துவத்தின் வாசல் அடைத்திருப்பதுபோல் அவங்க வாழ்க்கை நெறியும் சொன்னவர்களின் வாசலும் அடைபட்டு விட்டது .

இத்ரீஸ் நபியவர்களை வானலோகத்திற்கு
அழைத்து சென்று மலக்குகள் பார்வையிடும் ஸிர்ருல் மலக்கூத்து என்கிற பிரபஞ்சங்கள் இரகசிய கிதாபில் ... " அல்லாஹ் படைத்தவற்றில் முதலாவது என்னுடைய பேரொளியாகும் அப்பேரொளியிலிருந்தே இறைவன் தன் படைப்புகள் அனைத்தையும் படைத்தான் என்கிற சேதியும் அதில் குறிப்பிடப்பட்டிருக்கும்.

தானும் நட்சத்திரமாக இலங்கிக் கொண்டு ,தம் நபித்தோழர்களையும் நட்சத்திரமாக , இவர்களில் யாரைப் பின்பற்றினாலும் நீங்கள் வெற்றியடைவீர்கள் என்று நபியவர்கள் கூறி இருப்பதிலும் ஒரு சிறப்பு இருக்கிறது .

மனிதகுல வாழ்க்கையை தேவையான எல்லா அம்சங்களும் இந்த மாபெரும் நட்சத்திரமான அண்ணலம் பெருமானார் (ஸல் ) அவர்களின் வாழ்க்கை முறையில் பரவிக்கிடக்கிறது ; மறைந்து போன அந்த வானசாஸ்திரம் இங்கே இங்கே மதீனத்துல் முனவ்வராவில் அது மங்கா ஒளியுடன் பிரகாசித்துக் கொண்டே இருக்கிறது அதன் சாஸ்திரங்கள் புகாரியாய் முஸ்லிமாய் ஹதீஸ் குத்ஸியாய் , ஜாமிவுத் திர்மிதியாய் , முஸ்னத் அஹமதாய் இன்னும் நம்மிடையே இலங்கிக் கொண்டே இருக்கிறது .

இப்போது தெரிகிறதா அந்த வானசாஸ்திரம் எங்கே இருக்கிறது என்று ?

ர.ரா

கேள்வி - பதில் நிகழ்ச்சியில் கேட்கப்பட்ட கேள்விகளுக்குரிய விளக்கம்18/05/2020




#Shamsuyousuffyousuff : இந்திய நேரமும் GCC நாடுகளுக்கும் இடையே 1.30 நிமிடங்கள் முதல் 2.30 நிமிடங்கள் வரை வித்தியாசம் உண்டு.

உதாரணமாக குவைத்தில் 9.25 இரவு நேரம் என்றால் இந்தியாவின் நேரம் 11.55 என்று நேரம் கணக்கிடப்படுகிறது.
தேதி ஒரே தேதி.

அதே நாளில் 9.20 இரவு ரமழான் மாதத்தில் வரும் பிறை அறிவித்தால் ஏன் இந்திய நேரப்படி இரவு 11.50 இருந்தும் நோன்பு பின்பற்ற படுவதில்லை.
(மறுநாள் துவங்க பத்து நிமிடம் இருக்கிறது.)

நமது பூமி ஒரு நாளைக்கு 23 மணிநேரம் 56 நிமிடம் 4 நொடிகளில் தானே சுற்றிக்கொள்ள எடுத்துக்கொள்கிறது வருடத்திற்கு 365 .25 நாட்கள் எடுத்துக் கொண்டு ஒரு நொடிக்கு 30 கிலோ மீட்டர் வேகத்தில் ஒரு மணி நேரத்தில் ஒரு மில்லியன் கி.மீக்கு மேல் வேகத்தில் சூரியனை சுற்றி வருகிறது .

சந்திரன் பூமியைச் சுற்றி வரும் நேரம்
27.32 நாட்கள் இதை சைடீரியல் மாதம் என்கிறோம் . சந்திரன் பூமியின் உப கிரகமாக இருப்பதால் தனது மற்றும் பூமியின் சுழற்சியில் உள்ள வித்தியாசத் இதனால் ஒவ்வொரு நாளும் பூமிக்கு சந்திரன் சுமார் 13 டிகிரி தள்ளி தள்ளி கிழக்கே போய் விடுகிறது .

குர்ஆனில் அல்லாஹ் சந்திர வருட கணக்கையும் பூமி வருட கணக்கையும் குறிப்பிட்டு இரண்டும் சரிதான் என்பதாக ஒரு வசனத்தில் குறிப்பிடுகிறான் .

"இன்னும் அவர்கள் குகையில் 300 வருடங்கள் தங்கி இருந்தனர் என்றும் இன்னும் அதற்கு மேல் 9 அதிகப்படுத்தி தங்கினார்கள் என்றும் சிலர் கூறுகின்றனர் நபியே நீர் கூறும் அவர்களது தங்கியிருந்த காலத்தை அல்லாஹ்தான் அறிவான்
குர்ஆன் (18 : 25 26 )

பூமி 365 - சந்திரன் 354 = 11 நாட்கள்
11 x 300 = 3300 / 365 = 9 வருடங்கள்
அதாவது 300 + 9 = 309 வருடங்கள்

ஆக சூரிய வருடக் கணக்கு 300 வருடமும் , சந்திர வருடக் கணக்கு 309 சரிதான் .

மேற்சொல்லப்பட்ட 13 டிகிரி என்பது பூமியின் சுற்றி வரும் நீள்வட்டப் பாதையின் விட்டத்தின் அச்சுக்கும் , சந்திரன் சுற்றி வரும் பாதையின் விட்டத்தின் அச்சுக்கும் இடையே உள்ள கோணம் 13 டிகிரி .
இது இரு அச்சுகளின் ஆரம்பத்தில் இந்த கோணத்தின் சிறியதாக இருந்தாலும் போகப்போக அதன் எல்லை பல ஆயிரம் கி.மீ தொலை இருக்கும் .

மேலும் ஒரு நாளைக்கு (24 மணி நேரத்திற்கு ) 13 டிகிரி சந்திரன் விலகிறது என்றால் ஒரு மணி நேரத்திற்கு O.54 டிகிரி விலகிறது .
நண்பர் குவைத் - இந்தியாவிற்கும் 2.5 மணி நேர வித்தியாசம் என்றால் கோணம் 2.5 x 0.54 = 1.35 டிகிரி இது இந்தியாவில் பிறை தெரியாமல் கூட போகலாம் .

சூரிய உதயம் காலை 6 மணி சூரிய அஸ்தமனம் மாலை 6 மணி என்பதுபோல் சந்திரனுக்கு உதயம் அஸ்தமனம் போன்ற விஷயங்கள் தெளிவாக இல்லை.

சூரிய ஒளி தன் மீது படும் கோணங்களிலும் வித்தியாசங்களோடு பகல் நிலா , பிறைநிலா என்று தோற்ற மாற்றம் ! இது தவிர இந்த உதயம் அஸ்தமனத்தில் நிறைய பிசகுகள் ஏற்படுகிறது படத்தை பார்க்கவும்

ஆனால் வானங்களையும் பூமியையும் படைத்த நாள் முதல் அல்லாஹ்வின் பதிவேட்டில் உள்ளபடி மாதங்களின் எண்ணிக்கை அல்லாஹ்விடம் பன்னிரண்டாகும் என்பதாக குர் ஆன்( 9:36 ) குறிப்பிடுகிறான்

வானங்கள் பூமி படைக்கும்போதே சந்திரனும் படைக்கப்பட்டுவிட்டது விஞ்ஞானத்தின் நவீன காலத்தின் கோட்பாட்டிபடி சந்திரன் பூமியிலிருந்து பிரித்தெடுக்கப்பட்டு தனியாக படைக்கப்பட்டதாக 450 கோடி வருஷத்துக்கு முன்னாடி நிகழ்ந்ததாக குறிப்பிடுகிறார்கள் . நிச்சயமாக இல்லை . காரணம் அல்லாஹ் தன் வேதத்தில் வானங்களும் பூமியும் படைக்கப்பட்ட நாளிலிருந்து 12 மாதங்கள் என சொல்லும்போது சந்திரன் மாதத்தை கணக்கிடப்படுவதாகவும் படைக்கப்பட்டது என்று மற்றொரு வசனத்தில் குறிப்பிடுகிறான்
இப்போது 365 நாட்களை 12 ஆல் வகுக்க 30. 41 கிடைக்கிறது .

சந்திரன் 11 நாட்கள் குறைவாகவே சூரியனை சுற்றி வருகிறது .அதாவது 354 நாள் எடுக்கிறது 354 யை 12 ஆல் வகுத்தால் 29.5 கிடைக்கிறது .

இரண்டு பௌர்ணமி களுக்கு இடையே 29 .531 நாட்கள் இடைவெளி வரும் .இதை சைனோடிக் மாதம் அல்லது லூனார் மாதம் என்கிறார்கள் .

இதைத்தான் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இப்படிக் கூறினார்கள்:
'ஒரு மாதம் என்பது இருபத்தொன்பது இரவுகளாகும். எனவே பிறையைக் காணாமல் நீங்கள் நோன்பு நோற்காதீர்கள்; உங்களுக்கு மேக மூட்டம் தென்படுமானால் முப்பது நாள்களாக எண்ணிக்கையை முழுமைப் படுத்துங்கள்.' என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார். (புகாரி 1907)

இந்த 13 டிகிரி என்பது பூமியின் சுற்றி வரும் நீள்வட்டப் பாதையின் விட்டத்தின் அச்சுக்கும் , சந்திரன் சுற்றி வரும் பாதையின் விட்டத்தின் அச்சுக்கும் இடையே உள்ள கோணம் 13 டிகிரி .
இது இரு அச்சுகளின் ஆரம்பத்தில் இந்த கோணத்தின் சிறியதாக இருந்தாலும் போகப்போக அதன் எல்லை பல ஆயிரம் கி.மீ தொலை இருக்கும் .

மேலும் ஒரு நாளைக்கு (24 மணி நேரத்திற்கு ) 13 டிகிரி சந்திரன் விலகிறது என்றால் ஒரு மணி நேரத்திற்கு O.54 டிகிரி விலகிறது .
நண்பர் குவைத் - இந்தியாவிற்கும் 2.5 மணி நேர வித்தியாசம் என்றால் கோணம் 2.5 x 0.54 = 1.35 டிகிரி இது இந்தியாவில் பிறை தெரியாமல் கூட போகலாம் .

அடுத்து #MohamadJakkariya : சந்திரனும் சூரியனும் ஒரே பாதையில் பயணிக்கிறதா ?எதிர் எதிர் திசையில் பயணிக் கிறதா ?

சூரியன் ஒரு நட்சத்திரம் . சந்திரன் பூமியின் ஒரு உபக் கிரகம் .பூமியும் , சந்திரனும் மற்ற கிரகங்களும் சூரியனைச் சுற்றி சுற்றி வருகின்றன .

நீங்களும் நானும் நம் பூமியோடு பயணிக்கிறோம் நம் பூமி நொடிக்கு (ஒரு சொடக்கு) 29 புள்ளி 8 கிமீ வேகத்தில் நம் சூரியனை சுற்றி பயணிக்கிறோம்

நம் சூரியன் நொடிக்கு 20 கிமீ வேகத்தில் தன் குடும்பமான 9 கோள்களையும் அவைகளின் துணை கோள்களையும் கூட்டிக் கொண்டு "ஹெர்குலிஸ் " என்னும் நட்சத்திர கூட்டத்தை நோக்கி பயணிக்கிறது .

நமது சூரிய குடும்பம் ஆகாய கங்கை என்னும் " மெட்டா கேலக்ஸி " யில் "பெர்சியஸ் ஓரியன் " என்கிற நட்சத்திர கூட்டத்தின் வளைவில் அமைந்து கொண்டு பயணிக்கிறது .

நமது சூரிய குடும்பமும் அதைச் சார்ந்த மற்ற நட்சத்திரக் கூட்டங்களும் சேர்ந்து நொடிக்கு 220 கிமீ வேகத்தில் "கைனக்ஸ் "என்கிற நட்சத்திர கூட்டத்தை நோக்கி பயணிக்கிறது .

நாமும் நம் சூரியனும் நமது நட்சத்திர கூட்டங்களும் சேர்ந்து நமது கேலக்ஸியில் நொடிக்கு 230 கிமீ வேகத்தில் வலம் சுற்றி பயணிக்கிறோம்.

நமது ஆகாய கங்கை என்கிற மெட்டா கேலக்ஸியில் நம் பூமி ஒரே ஒரு தடவை வலம் சுற்றி முடிக்க 240 மில்லியன் வருடங்கள் ஆகும் .

ர.ரா

அற்புத சம்பவங்களும் அதிசய உணவுகளும்16/05/2020



நாம் உயிர் வாழ இந்த உடலுக்கு உணவு அவசியம் என்பதை அறிவோம் இந்த உணவு உடலில் உயிர் வாழ என்னவெல்லாம் செய்கிறது என்பதை விஞ்ஞானம் மூலம் ஆய்வு செய்வோம்.

நாம் உடல் பெரும்பாலான மாலிக் கூட்டணுக்கள் பாதிக்குமேல் 15 நாட்களில் புதுப்பிக்கப்படுகிறது .
நம் உடலின் எலும்புகளில் உள்ள கால்சியம் நான்கு வருடத்தில் பாதிக்குமேல புதுப்பிக்கப்படுகிறது
86 நாட்களில் நம் தசை நார்களும் மூளையிலுள்ள புரோட்டீன்களும் புதுப்பிக்கப்படுகிறது

நம் சுவாசப்பையில் உள்ள புரோட்டீன்கள் 43 நாட்களிலும் வயிற்றிலுள்ள புரோட்டீன்கள் 12 நாட்களிலும் புதுப்பிக்கப்படுகிறது எலும்பின் மொத்த கால்சியம் 14 வருஷத்தில் புதுப்பிக்கப்படுகிறது

உடலில் எல்லாமே காலப்போக்கில் நீக்கப்பட்டு புதுசாக புதுப்பிக்கப்படுகிறது இவையெல்லாம் விட நம் இரத்தத்தில் உள்ள சிவப்பணுக்கள் ஒரே ஒரு செகண்டுக்கு 30 லட்சம் புதுப்பிக்கப்படுகிறது ! இவையெல்லாம் அவ்வப்போது புதுப்பிக்க நம் உடல் நாம் சாப்பிடும் உணவுகளை தான் பயன்படுகிறது ! உயிருடன் வாழ்வதற்கு நாம் உடலுக்கு உணவு எத்தனை அவசியம் என்பதை இந்தப் இந்த புள்ளிவிபரத்தை விஞ்ஞானம் கொடுக்கின்றது . இதை சற்று மெய்ஞானத்தின் மூலம் இதை ஆய்வு செய்தபோது அல்லாஹுத்தஆலா குர்ஆனில் ...

"நம்பிக்கையாளர்களே அல்லாவின் பாதையில் போர் செய்து வெட்டுப்பட்ட வரை இறந்து விட்டவர்கள் என நீங்கள் ஒருபோதும் எண்ண வேண்டாம் அவர்கள் நம் தம் இறைவன் இடத்தில் நிச்சயமாக உயிருடன் இருக்கிறார்கள் நன்றி அவர்களுக்கு உணவும் அளிக்கப்படுகிறது குர்ஆன் (3 : 169 )

உலகில் எத்தனையோ இறை நேச அடியார்களின் மண்ணறைகளில் நிர்ப்பந்தத்தின் காரணமாக தோண்டிய போதெல்லாம் அவர்களின் உடல்கள் எவ்வித பாதிப்பும் இன்றி அன்றைக்குத்தான் மரணத்து அடக்கப்பட்ட உடல்களாக காட்சியளித்தனர் .இது எவ்வளவு பெரிய அற்புத நிகழ்வு. காரணம் இவர்கள் மரணித்த பின்பும் இவர்களுக்கு உணவு உட்கொண்டு இருக்கிறார்கள் என்றால் இவர் இயங்குகிறார்கள் .

"(வீழ்ச்சி அடைந்து) மரணித்தவர்களாக இருந்தவர்களில் எவரை நாம் உயிர்ப்பித்து மனிதர்களுக்கிடையில் நடமாடுவதற்குரிய ஒளியையும் கொடுத்திருக்கின்றோமோ அவர், இருளில் சிக்கி அதிலிருந்து வெளியேற முடியாமலிருப்பவனுக்குச் சமமாவானா? இவ்வாறே நிராகரிப்பவர்களுக்கு அவர்களுடைய (தீய) செயல்கள் அழகாக்கப்பட்டு விட்டன.
(அல்குர்ஆன் : 6:122) "

இந்த நிகழ்வில் அல்லாஹுத்தஆலா அற்புதத்திற்கு காரணமான உணவின் அவசியம்தான் என்ன அதிசயம் .

அடுத்து பைத்துல் முகத்தஸ் ஜெருசலேம் என்னும் ஊரின் பக்கத்தில் உள்ள கிராமம் வழியாக நபி உஜைர் (அலை) அவர்கள் செல்லும் போது அக்கிராமத்தில் உள்ள வீடுகளில் முகடுகள் எல்லாம் இடிந்து பாழாய்க் கிடக்க கண்டு, " இவ்வூர் மக்கள் இவ்வாறு அழிந்து இறந்தபின் அல்லாஹ் இவர்களை எவ்வாறு உயிர்ப்பிப்பான் ? என்று கூறினர் ஆகவே அவருடைய சந்தேகத்தை நிவர்த்தி செய்வதற்காக அல்லாஹ் அவரை நூறு ஆண்டுகள் வரையில் மரணிக்கச் செய்து பின்னர் அவரை உயிர்ப்பித்து , அவரை நோக்கி, "இந்நிலையில் நீங்கள் எவ்வளவு காலம் இருந்தீர்கள் என்று கேட்க ஒரு நாள் அல்லது ஒரு நாளில் சிறிது பாகம் இருந்தேன் " என்று கூறினார் அதற்கு அவன் " அல்ல ! நீங்கள் நூறு ஆண்டுகள் இந்நிலையில் இருந்தீர்கள் இதோ உங்களுடைய உணவையும் உம்முடைய பானத்தையும் பாருங்கள் அவை இதுவரை கெட்டுப் போகவில்லை ஆனால் உங்களுடைய கழுதையே பாருங்கள் அது செத்து எலும்பாக கிடக்கிறது. இன்னும் உங்களை போல் சந்தேகிக்கும் மனிதர்களுக்கு இது ஒரு அத்தாட்சியாகும் . கழுதையின் எலும்புகளை நீங்கள் பாருங்கள் எவ்வாறு அவைகளை கூடாக சேர்த்து அதன் மீது மாமிசத்தை அமைக்கிறோம் எனக்கூறி உயிர்ப்பித்து காட்டினான்
குர்ஆன் (2: 259)

உஜைர் நபி இறந்து மீண்டும் உயிர்பெற்றது அற்புதம் என்றால் அவர்களின் வரலாற்றோடு ஒரு உணவைப் பற்றிக் கூறுவதும் அதிசயம்

ஜோர்டான் பக்கத்தில் உள்ள இபிஸியஸ் என்ற நகரத்தில் 7 வாலிபர்கள் ஏக இறைவழிபாட்டில் ஈடுபட்டு வந்தார்கள் கிபி 249 முதல் கிபி 259 வரை ஆட்சி புரிந்து வந்த டிஷிய்ஸ் என்ற அரசன் சிலை வணக்கக் காரனாக இருந்ததால் அவர்களின் ஏக இறை வழிபாட்டுக்கு இடையூறு விளைவித்து அவர்களைத் துன்புறுத்தினான் அரசனின் தொல்லைகளிலிருந்து தங்களைக் காத்துக்கொள்ள அருகில் உள்ள மலைக்குகை ஒன்றில் தேர்வு செய்து அங்கு சென்று இறை வழிபாட்டில் மூழ்கினார்கள். சிறிது நேரத்தில் உறக்கம் அவர்களை ஆட்கொண்டது அப்படியே ஆழ்ந்த உறக்கத்தில் ஆழ்ந்து விட்டார்கள் அதுவும் 300 வருடம் உறங்கிக் கொண்டே இருந்தார்கள்

இப்படி ஒரு அற்புத நிகழ்வை குர்ஆன் குறிப்பிடுகிறது . அவர்கள் விழித்து எழுந்தபோது அவர்களுக்கு பசித்தது கொஞ்சம் நேரம்தான் உறங்கி இருப்போம் என்று கருதி அவர்களில் ஒருவரிடம் பணம் கொடுத்து ஊருக்குள் சென்று நல்ல உணவு பொருள் எது எங்கிருக்கிறது என்பதை தேடி பார்த்து அதில் சிறிது வாங்கி வரவும் என்று அனுப்பினார்கள்

அவர் கொண்டு சென்ற வெள்ளிக் காசுகள் 300 வருடத்திற்கு முந்தையவை என்றும் அவைகளைக் கடைக்காரர்கள் செல்லாதவை என்றும் வாங்க மறுத்துவிட்டார் . இறுதியில் அரசரிடம் முறையிட்டார் அந்த வெள்ளிக் காசுகளை வாங்கி பார்த்து இது 300 ஆண்டுகளுக்கு முந்தைய பழைய காசுகள் ஆகும் என்பதை அறிந்துகொண்டு தீர்க்க விசாரிக்கிறார்கள் . அவர் இரண்டு மூன்று நாளைக்கு முன்னாடிதான் குகைக்குள் போனதாக குறிப்பிடுகிறார் . ஆனால் அவர்கள் 300 வருடங்களுக்கு முன்பே குகைக்குள் இருந்திருக்கிறார்கள் என்பதை அறிகிறார்கள் .

300 வருடங்கள் தூங்கியது அற்புதம் என்றால் அவர்களுக்கு உணவு தேவைப்படுவதை குறிப்பிடும் போது அது அதிசயமாக இருக்கிறது . 300 வருடங்கள் தேவைப்படாத உணவு அவர்கள் விழித்ததும் தேவைப்படுவதை கண்டு ஆச்சரியப்படுகிறோம் இதன் மூலம் அல்லாஹ் தன் வல்லமையை நிலை நாட்டுகிறான் என்பதை அறியமுடிகிறது

அடுத்து நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் மிக வயோதிகப் பருவமான 100 வயது இருக்கும்போது வானவர் மலக்குமார்கள் வாலிபர்கள் உருவத்தில் விருந்தாளியாக நபி இப்ராஹிம் (அலை) அவர்களின் வீட்டிற்கு வருகிறார்கள். அவர்களை வரவேற்று அவர்களுக்கு அறுத்த கன்றுக்குட்டியை பொரித்து உணவு வகைகளை பரிமாறுகிறார்கள் .வானவர்கள் அதை உண்ணாமல் இருப்பது கண்டு அச்சமுற்ற நபி இப்ராஹீம் (அலை) அவர்களிடம் விபரம் கேட்க அதற்கு வானவர்கள் ஏழு இரவு பகலாக விருந்தாளி கிடைக்காத காரணமாக தாங்கள் உணவு உண்ணாது நோன்பு நோற்பதை அறிந்த இறைவன் தாங்கள் நோன்பு திறப்பதற்காக இறைவன் எங்களை அனுப்பி வைத்தான் என்பதாக குறிப்பிடுகிறார்கள்

" இப்ராஹீம் சிறிதும் தாமதிக்காமல் அறுத்துச் சுட்டதொரு கன்றுக்குட்டியை கொண்டு வந்து அவர்கள் முன் வைத்தார்கள் அதே சமயத்தில் தன் மனைவிக்கு இஸ்ஹாக் என்னும் மகனைப் பற்றியும் இஸ்ஹாக்குப் பின்னர் ' யாகூப் ' என்னும் பேரன் பிறக்கப் போவது பற்றியும் நற்செய்தி கூறுகிறோம் என்பதை
அல்குர்ஆன் (11:71 )

இதில் உணவு குறித்து பேசிய குர்ஆன் அதே வசனத்தில் நபியவர்களுக்கு வயோதிகமாக நூறு வயதும் அவருடைய மனைவி சாரா அவர்களுக்கு 98 வயது. இந்த வயோதிக பருவத்தில் அற்புதமாக குழந்தை பிறப்பதையும் அதற்குப்பின் பேரக் குழந்தை பிறப்பது வரையிலும் குர்ஆன் அதிசய நிகழ்வாக குறிப்பிடுகிறது .

அடுத்து நபி ஈஸா (அலை ) அவர்களின் தாயார் மர்யம் (அலை) அவர்களை நபி ஜகரிய்யா (அலை) வளர்க்க பொறுப்பை ஏற்றுக் கொள்ளுமாறு அல்லாஹ் கட்டளையிட்டான் அப்பிள்ளை இருந்த மாடத்திற்குள் நுழையும் போதெல்லாம்
அவளிடத்தில் ஏதேனும் உணவுப்பொருள் இருப்பதைக் கண்டு " "மர்யமே ...இது உனக்கு ஏது ? எங்கிருந்து வந்தது ? என்று கேட்டார் அதற்கு அவள் இது , " "அல்லாஹ்விடமிருந்து தான் வருகின்றது ஏனென்றால் நிச்சயமாக அல்லாஹ்தான் விரும்புவர்களுக்கு அளவின்றி உணவளிக்கிறான் என்று கூறினாள் அப்போது அவ்விடத்தில் தனக்காக தன் இறைவனிடம் பிரார்த்தித்து என் இறைவன் புறத்திலிருந்து எனக்கு ஒரு நல்ல சந்ததியை அளிப்பாயாக என வேண்டினார் அவரை நோக்கி மலக்குமார்கள் சத்தமிட்டு கூறினார்கள் ஜகரிய்யாவே....! அவை நிச்சயமாக அல்லாஹ் " யஹ்யா " என்ற மகனே உங்களுக்கு அளிப்பதாக நற்செய்தி கூறுகிறான் குர்ஆன் (3 : 37 )

இந்த துவாவை கேட்கும்போது ஜக்ரிய்யா (அலை ) அவர்களுக்கு வயது 99 அவரது மனைவி ஈஷாவ்வுக்கு வயது 98 இந்தப் பருவத்தில் அற்புத நிகழ்வாக நபி யஹ்யா (அலை) அவர்களை இறைவன் கொடுக்கிறான் இந்த சம்பவத்திலும் இறைவன் உணவு பற்றி இறைவன் குறிப்பிடுகிறான்

அதனைத் தொடர்ந்து அதே நேரத்தில் மர்யம் (அலை ) அவர்களுக்கு ஆண் துணையின்றி பிறந்த அற்புத அதிசய குழந்தையான நபி ஈஸா (அலை) அவர்களை கொடுக்கிறான்.

"(மர்யமை நோக்கி) மலக்குகள் ' மர்யமே ! நிச்சயமாக அல்லாஹ் தன்னுடைய ஆகும் என்ற ஒரு வார்த்தையை கொண்டு உங்களுக்கு குழந்தை அளிக்க நற்செய்தி கூறுகிறான்" குர்ஆன் 3:45

சுபச்செய்தி மர்யம் (அலை) அவர்களுக்கு கிடைக்கிறது . பிறகு மர்யம் (அலை ) தானாகவே கர்ப்பம் ஏற்படுகிறது ! இந்த அற்புத நிகழ்வுக்கு முன்பே இறைவன் அவர்கள் இருக்கும் இடத்தில் உணவு கிடைக்கும்படி செய்தான். பின்பு அவர்கள் ஒரு பேரீத்த மரத்தின் அடியில் செல்லும் போது பிரசவ வேதனை ஏற்படுகிறது

" பேரீத்த மரத்தின் அடிப்புறத்தில் இருந்து ஜிப்ரில் சப்தமிட்டு, " மர்யமே ! நீங்கள் கவலைப்படாதீர்கள் உங்களுக்கு சமீபமாக உங்கள் இறைவன் ஒரு ஊற்று உதித்து ஓட செய்திருக்கிறான். இப்பேரீத்த மரத்தின் கிளையை நீங்கள் உங்கள் பக்கம் பிடித்து இழுத்து குலுக்குங்கள் . அது பழுத்த பழங்களை உங்கள் மீது சொரியும் .அப்பழங்களை நீங்கள் புசித்து இந்த ஊற்றிநீரை குடித்து இக்குழந்தையைக் கண்டு நீங்கள் கண்குளிர்ந்திடுங்கள் "
குர்ஆன் (19 : 24 )

அற்புதப் படைப்பான நபி ஈஸா (அலை) அவர்கள் மர்யம் (அலை) அவர்களின் கர்ப்பத்திற்கு மகனாக பிறக்கிறார்.
எந்த ஆண் துணையின்றி தன் மகன் நபி ஈஸா (அலை ) அவர்களை அற்புதப் படைப்பாக இறைவன் கொடுக்கிறான்

நபி ஆதம் (அலை) முதல் மனிதராக படைப்பதற்கு முன்பே அல்லாஹ்வின் உத்தரவுப்படி வானவர்களால் கஃபா கட்டி முடிக்கப்பட்டது . பின்பு நபி இப்ராஹீம் (அலை ) அவர்களால் கட்டப்பட்டது.

காலமெல்லாம் மனித சமுதாயம் ஹஜ்ஜு செய்வதற்கும் எந்நாளும் அவர்கள் வணங்கும் திசையாகவும் இறை இல்லமாகவும் உள்ள கஃபா என்னும் அற்புத கட்டிடத்தை கட்டி முடித்ததும் நபி இப்ராஹீம் (அலை) கேட்ட துஆ உணவைப் பற்றியதாகத்தான் இருந்தது

" மக்கவாகிய இதை பாதுகாப்பளிக்கும் பட்டணமாக ஆக்கி இதில் வசிப்பவர்களில் எவர் அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பிக்கை கொள்கிறாரோ அவருக்கு உணவாகப் பலவகைக் கனி வர்க்கங்களையும் அளித்து வா ! "எனக் கூறினார்கள் குர்ஆன் (2: 126)

மக்கா பழங்கள் காய்கறிகள் விளையக்கூடிய நிலப்பரப்பாக இல்லை. இருப்பினும் நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் கேட்ட துஆவிற்காக இறைவன் வானவர்களிடம் மக்காவில் உள்ள 36 கோஸ் நிலப் பகுதி பாலைவனத்தை எடுத்து சிரியாவில் உள்ள அதே அளவு அந்த செழிப்பான பூமியை எடுத்து மக்காவின் சூழலில் வைத்தார்கள் .
அந்த செழிப்பான நிலப்பரப்புத்தான் 'தாயிஃப் ' ஆகும் . தாயிஃப் என்றால் மாற்றி வைக்கப்பட்ட பூமி. இப்போதும் பழவர்க்கங்கள் விளையும் செழிப்பான பூமியாக இன்றும் உள்ளது .அதே நேரத்தில் சிரியாவில் எடுக்கப்பட்ட இடத்தில் இன்றும் பாலைவனமாக இருக்கிறது .

நபி இப்ராஹீம் (அலை) இறையில்லத்தை கட்டியதும் அற்புத நிகழ்வாக இருந்தாலும் அவர்கள் கேட்ட துஆ விற்காக பாலைவனப் பூமியை எடுத்து செழிப்பான பூமியாக மாற்றி அமைத்தது இன்னொரு அற்புத நிகழ்விற்கும் அதிசய உணவு இருப்பது தான் இறைவன் குறிப்பிடுகிறான்

அடுத்து, " மர்யமுடைய மகன் ஈஸா "எங்கள் இறைவனே வானத்திலிருந்து ஒரு உணவுத் தட்டை எங்களுக்கு நீ இறக்கி வைப்பாயாக எங்களுக்கும் எங்கள் முன் இருப்பவர்களுக்கும் எங்களுக்கு பின் வருபவர்களுக்கும் அது ஒரு பெரு நாளாகவும் , உன்னுடைய வல்லமைக்கு ஓர் அத்தாட்சியாகவும் இருக்கும் . ஆகவே அவ்வாறே எங்களுக்கும் உணவு அளிப்பாயாக! நீயோ உணவளிப்பதில் மிகச் சிறந்தவன் என்று பிரார்த்தித்து கூறினார் .
குர்ஆன் (5 : 114)

நபி ஈஸா (அலை ) துஆ கேட்டதும் அவரது சமூகத்தார் பார்த்திருக்க இறைவன் மேகங்களுக்கு இடையில் சிவப்பு நிறமுள்ள ஸூப்ரா -உணவுப் பதார்த்தங்கள் வைக்கப்பட்டுள்ள தட்டு அச் சமூகத்தின் மத்தியில் ஒரு பெரிய மீன் இருந்தது . அதில் எவ்வித முள்ளும் இல்லை செதிலும் இல்லை கொழுப்பு வடிந்து கொண்டிருந்தது .அமீனின் தலையில் உப்பும் அதன் வாலில் சிர்க்காவும் அம்மீனைச் சுற்றி பல விதமான கீரைகளும்

வைக்கப்பட்டுள்ளன. இன்னும் 5 ரொட்டிகளும் ஒரு ரொட்டியில் சைத்துன் எண்ணெய்யும் , ஒன்றிலும் தேனும் , மற்றொன்றில் நெய்யும் , இன்னொன்றில் பாலாடைக் கட்டியும் , மற்றொன்றில் சுட்ட இறைச்சியும் இருந்தன . ஈஸா (அலை ) அவர்களுடைய தோழர்களில் தலைவரான ஷம்ஊன் என்பவர் ஈஸா அலை அவர்களிடத்தில் "இது இம்மையில் உள்ள உணவா ? அல்லது மறுமையில் உள்ள உணவா என்று வினவினார் .

அதற்கு ஈஸா (அலை) "அங்கு உள்ளதும் இல்லை இங்குள்ளதும் இல்லை .இதை இறைவன் அற்புதமாக உண்டாக்கினான் என்று கூறி புசிக்கச் சொன்னார்கள்

ஹவாரிய்யூன்கள் நபியிடம் இந்த இறை அத்தாட்சியில் தாங்களும் ஓர் அத்தாட்சியை எங்களுக்கு காண்பிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர்

நபி ஈஸா (அலை )அவர்கள் அதனை நோக்கி , "அல்லாஹ்வின் உத்தரவுப் பெற்று நீ உயிர் பெற்று எழு " என்றார்கள் உடனே அம்மீன் உயிர்பெற்று துள்ளியது மறுபடியும் அவனை நோக்கி, "நீ உயிர் இல்லாமல் ஆகி விடு " என்றார்கள் உடனே அது முன்போல் சுடப்பட்ட மீனாகிவிட்டது .

உணவுத் தட்டில் இருந்த உணவை எல்லோரும் சாப்பிட்டனர் யாரும் அதில் இருந்து எடுத்து பத்திரப் படுத்திக் கொள்ள வேண்டாம் என்று சொல்லப்பட்டது அவர்களில் சிலர் சொல்லப்பட்டதற்கு மாறு செய்து அதிலிருந்து உணவை பத்திரப்படுத்தினார்கள் ஆகவே அதனை பத்திரப்படுத்தியவர்கள் குரங்குகளும் பன்றிகளும் உருவம் மாற்றப்பட்டனர் .

இவ்வாறு உருவம் மாற்றப்பட்ட அவர்கள் மொத்தம் 5000 பேர்கள் என்றும் இவர்கள் எல்லோரும் ரஸ்தாக்களிலும் குப்பை மேடுகளிலும் பன்றிகளைப் போல் மலத்தை தின்று கொண்டிருந்தனர் . ஈஸா (அலை) அவர்கள் ஒவ்வொருவரையும் பெயர் சொல்லி அழைத்த போது , அவர்கள் தங்கள் நிலைமையை குறித்து பேச இயலாமல் தலைகளை அசைத்து அசைத்து அழுது கொண்டிருந்தனர் இவ்வாறு மூன்று நாட்கள் வரை இருந்து பின் செத்தனர். இந்த அற்புத நிகழ்வை உணவுத் தட்டில் வைத்து இறக்கியது ஒரு மிகப் பெரும் அற்புதம். மேற்கண்ட வசனத்தில் இறைவன் உணவு குறித்து பேசியுள்ளான்

அடுத்து பனீஇஸ்ரவேலர்கள் எகிப்து தேசத்தை விட்டு புறப்பட்டு சமுத்திரத்தை கடக்கும்போது பிர்அவ்னும் அவனது படைகளால் விரட்டப்பட்டார்கள் பின்பு இஸ்ரவேலர்கள் கடல் கடந்து கரையேறிய பின்பு அவனும் அவனது படைகளும் கடலில் மூழ்கி மாண்டனர்.

இந்த அற்புத நிகழ்வுக்குப் பின் தீஹ் பிரதேசத்தில் நடந்து செல்லும் போது , நபி மூஸா (அலை) அவர்களிடம் உணவு பற்றிக் கேட்கிறார்கள் .அவர்கள் இறைவனிடம் துஆ செய்தார்கள் அல்லாஹ் இஸ்ரவேலுக்கு 'மன்னு ' என்னும் ஒரு வகை உணவை அவர்களுக்கு வானத்தில் இருந்து இறக்கினான்

மன்னு என்பது 'துரன்ஜபீன்' என்னும் ஒரு வகைப்பழம் இது பனியைப் போல் வெண்மையாக இருக்கும் . ருசியில் நெய்யுடன் சேர்த்து குழைக்கப்பட்ட தேன் போல் இருக்கும் எவ்வித கஷ்டமும் வருத்தமும் இல்லாமல் மன்னு வானத்திலிருந்து இறங்கி கொண்டே இருந்தது . கொஞ்ச காலம் மன்னுவை மட்டும் சாப்பிட்டு வந்தவர்களுக்கு சாப்பிட்டு வந்த பனீ இஸ்வேலர்களுக்கு பிரிய குறைவு ஏற்பட்டது. நபி மூஸா (அலை) அவர்களிடம் " மன்னு உணவை தினமும் சாப்பிட்டு அதன் ருசி மீது பிரியம் இல்லாமல் போய்விட்டது ஆதலால் எங்களுக்கு இறைச்சியை தரும்படி உமது இறைவனிடம் நீர் கேளும் என்று அதன்பேரில் இறைவன் அவர்களுக்கு ஸல்வா என்கிற உணவை வானத்தில் இருந்து இறக்கி வைத்தான்.

ஸல்வா என்பது கொழுப்பான ஒரு வகைக் குருவி. இதனை ஸமானி என்றும் கூறுவர் .இந்த பறவைகளை தெற்கத்திக் காற்று அடித்துக் கொண்டு மக்களிடம் கொண்டு சேர்க்கும் இந்த காற்றின் வேகத்தினால் அந்தப் பறவைகள் குரல்வளை அறுபட்டு வயிறு பிரிந்து இறகுகள் உதிர்ந்து போய் வெயில் வெப்பத்தினால் நன்றாக பொரிந்துவிடும். ஆகவே பனீ இஸ்ரவேலர்கள் இப்பறவைகளை மன்னுடன் சேர்த்து புசித்து வந்தனர் இந்த அற்புத நிகழ்வான அதிசய உணவு வானத்திலிருந்து இறங்கி கொண்டே இருந்தது இதுபற்றி குர்ஆன் (2 : 61) குறிப்பிடுகிறது .

அடுத்து நபி ஸல் அவர்கள் மிஃராஜ் என்னும் விண்ணுலக பயணத்தின் போது இறை சந்திப்பு கிடைக்கிறது இது பற்றி குறிப்பிடும் போது , ஒரு ஆச்சரியமான அற்புதமான விஷயத்தை கேள்விப்படும்போது நாம் செல்லக்கூடிய சுபஹானல்லாஹி என்ற வார்த்தை கொண்டே 17 வது அத்தியாயத்தில் அல்லாஹ் கூறுகிறான் என்றால் அந்த அளவுக்கு அதிசய அற்புத விஷயமாகவே விண்ணுலக பயணத்தின் நிகழ்வை இறைவன் குறிப்பிடுகிறான்

விண்ணுலப் பயணத்தில் 'சித்ரத்துல் முன்தஹா ' என்ற வான் எல்லை உள்ளது ' சித்ரத் 'என்பதற்கு இலந்தை மரம் என்று பொருள் 'முன்தஹா ' என்றால் இறுதியானது என்று பொருள் . அதாவது வானவர்களின் அறிவு அந்த இடத்தின் எல்லையோடு முற்றுப் பெறுவதாலேயே இதற்கு எல்லை (முன்தஹா ) என்னும் பெயர் வந்தது என்பார்கள்

நபி (ஸல் ) அவர்களை மண்ணிலிருந்து விணணுலக எல்லை வரை ஜிப்ரீல் (அலை) அழைத்துக்கொண்டு வந்தார்கள் . பின்பு நபி (ஸல்) அவர்கள் மட்டும் தனியாக இறைவனை சந்திக்கிறார்கள் . இறை சந்திப்பு என்கிற அதி அற்புதமான நிகழ்வு நடை பெற்றதைப் பற்றி நபி (ஸல் ) அவர்களே கூறுகிறார்கள் .

" என்னிடம் இரண்டு பாத்திரங்கள் கொண்டுவரப்பட்டன அவற்றில் ஒரு பாத்திரத்தில் மதுவும் மற்றொரு பாத்திரத்தில் பாலும் இருந்தது அவற்றில் ஒன்றே தேர்ந்தெடுக்குமாறு கூறப்பட்டது நான் பாலை தேர்ந்தெடுத்தேன் .அப்போது இயற்கை நெறியையே நீங்கள் பெற்றுள்ளீர்கள் இறைவன் உங்கள் மூலம் இயற்கை நலனையே நாடிஉள்ளான் உங்கள் சமுதாயத்தாரும் அந்த இயற்கை
நெறியிலேயே உள்ளனர் " என்று கூறப்பட்டது முஸ்லிம் ( 211 )

அற்புத நிகழ்வான விண்ணுலக பயணத்தின் போது நபி ( ஸல் ) அவர்களுக்கு உணவு பானமாக பால் கொடுக்கப்பட்டு பின் இறை சந்திப்பு கிடைக்கிறது

உணவும் அற்புத நிகழ்வுக்கு ஒன்றுக்கொன்று தொடர்பு இருப்பதை இருப்பதைக்கண்டு வலிமார்களின் ஹஸன் பஸரி (ரஹ்) அவர்களிடத்தில் ஒருவர் தனக்கு நேர்ந்துள்ள வறுமையை குறித்து முறையிட்டார் 'இஸ்திக்பார்' இறைவனிடம் பாவ மன்னிப்பு கேட்குமாறு பதிலளித்தார் வேறு ஒருவர் பஞ்சத்தை குறித்தும் கேட்டார் 'இஸ்திக்பார் ' செய்யும்படி சொல்லப்பட்டது . மற்றொருவர் தனது பூமியில் விளைச்சல் குறைவாக இருக்கிறது என்பது குறித்தும் இன்னொருவர் மக்கள் பேறு இல்லாதது குறித்தும் முறையிட்டனர் இவர்கள் ஒவ்வொருவருக்கும் இஸ்திக்பார் செய்யும்படியாக இமாம் ஹஸன் பஸரீ அவர்கள் கட்டளையிட்டார்கள்

அங்கிருந்த அவர்கள் நண்பர்கள் தங்களிடம் பலரிடம் வருகின்றனர் அங்குள்ள பல வகையான கஷ்டங்களை கூறி முறையிடுகின்றனர் அவர்கள் யாவருக்கும் தாங்கள் இஸ்திக்பார் செய்யுமாறு கட்டளை விடுகிறீர்கள் இது எவ்வாறு பொருத்தம் ஆகும் ? என்று வினவினர்

அப்பொழுது அவர்கள் " உங்கள் இறைவனிடம் மன்னிப்பு கோருங்கள் நிச்சயமாக அவன் மிக்க மன்னிப்பவன் என்று கூறினேன் அவ்வாறு செய்தீர்கள் அடைபட்டிருக்கும் மழையை உங்களுக்கு தொடர்ச்சியாக அனுப்புவான் பொருள்களையும் மக்களையும் உங்களுக்கு உதவி புரிவான் தோட்டங்களையும் உற்பத்தி செய்து அவற்றில் ஆறுகளையும் ஓட்டி வைப்பான் குர்ஆன் ( 71 : 10 - 12)

ஆக அற்புத நிகழ்வு குர்ஆனில் சொல்லப்படும் போதெல்லாம் அதிசயமான உணவுகளும் இறைவன் குர்ஆனில் சொல்லியுள்ளான் . எனவே நண்பர்கள் இந்த விஷயம் குறித்து தாங்கள் சிந்தித்து அன்னதானம் என்னும் அன்னக்கொடையை தாங்கள் வழங்குவீர்களாயின் தங்களுக்கு கிடைக்க முடியாத , கிடைக்கப்பெறாது என்று சொல்லப்பட்ட விஷயங்கள் எல்லாம் கைகூடி வரும் என்பதாக இந்த ஆய்வு நமக்கு தெரிவிக்கிறது

ர.ரா

எங்கிருந்து சொந்தம் வந்தது ?15/05/2020

13.05 .2020 நேரலை சொற்பொழிவின் சாரம்சம் .




https://m.facebook.com/story.php?story_fbid=2610653009194038&id=100007480923921

எங்கிருந்து சொந்தம் வந்தது என்றதும் நண்பர்கள் எல்லோருமே பெண் தானே சொந்தம் கொண்டு வரமுடியும் ஆகையால் இது பெண்ணைப்பற்றிய சொற்பொழிவு என்பது மாதிரி நிறைய பேர் பின்னூட்டமிட்டு இருந்தார்கள் ஆனால் சொந்தம் என்பது ரத்தத்தின் மூலம் பந்தத்தை தெரிந்து கொள்ளலை குறிக்கிறது இந்த சொற்பொழிவு

இந்த ஆய்வு ரத்த பந்தமூலம் சொந்தங்களை தெரிந்து கொள்ளல் .

உடன்பிறந்தவர்கள் இருவர் நபி தாவூத் அலை அவர்களிடம் வந்து,
" நபியவர்களே ! எங்களின் தந்தை எங்கள் இருவர் மீதும் ஒத்த அன்புடையவராக இருந்தார் . ஆனால் அவர் இறக்கும்போது எங்களை அழைத்து எங்களுக்கு அறிவுரை பல வழங்கி இறுதியாக அவர் கண்ணை மூடும்போது உன் என் சொத்து அனைத்தும் உங்களில் ஒருவனுக்கே உரியதாகும்.அவன் எவன் என்று அவர் கூறவில்லை எனவே அவரின் சொத்து அனைத்தும் எவருக்கு உரியது என அறியாது நாங்கள் விழித்துக் கொண்டிருக்கிறோம் என்று கூறினர் எவ்வாறு இவ்வழக்கில் தீர்ப்பு பகர்வது என அறியாது நபி தாவூத் அலை அவர்கள் திணறினார்கள் .

அப்போது அருகே இருந்த நபி சுலைமான் (அலை) அவர்கள்
"தந்தையே ! தாங்கள் ஆணையிடின் இதற்கான தீர்ப்பை நான் வழங்குகிறேன் என்று கூறினார் . "நல்லது . நீரே தீர்ப்பு வழங்குக என கூற , உடனே சுலைமான் (அலை ) அவர்கள் அவ்விருவரையும் நோக்கி நீங்கள் இருவரும் சென்று உங்களின் தந்தையின் அடக்க இடத்தை தோண்டி அவருடைய ஓர் எலும்பை எடுத்து வந்தால் நான் நீதி வழங்குகிறேன் " என்று கூறினார்

அதற்கு அவர்களில் மூத்தவன் " என் உயிர் போய்விடும் அச்செயல் நான் செய்ய மாட்டேன் . அச்செயல் புரிந்து சொத்துரிமையை பெறவும் நான் விரும்பவில்லை " என்று கூறினான்

ஆனால் இளையவனோ ஓடோடிச் சென்று அடக்க இடத்தை தோன்றி அங்கிருந்து எலும்பு ஒன்றை எடுத்துக்கொண்டு ஓடி வந்தான்

அப்போது சுலைமான் (அலை ) அவர்கள் இருவரையும் நோக்கி " நீங்கள் இருவரும் ஊசியால் உங்களின் விரலை குத்தி ரத்தம் எடுத்து இந்த எலும்பின் மீது விடுங்கள் " என்று கூறினார் . மூத்தவன் துயரத்தில் மூழ்கி கண்ணீர்விட்டு அழுத வண்ணம் ரத்தம் எடுத்து அந்த எலும்பின் மீது விட்டான் அத்துடன் சேர்ந்து அவனுடைய கண்ணீரும் அதன் மீது விழுந்தது அடுத்தகணம் நெருப்பில் இரும்பின் மீது சொட்டிய தண்ணீரை உண்பதுபோல் எலும்பு உண்டது .

பின்னர் இளையவன் விரலிருந்து ரத்தம் எடுத்து அந்த எலும்பின் மீது விட அது வெளியே வழிந்தோடியது .

உடனே நபி சுலைமான் (அலை) அவர்கள் " மூத்தவனே முறைப்படி அவருக்கு பிறந்த மகன் இளையவன் அவருடைய மகன் அல்ல ; " என்று தீர்ப்பு கூறினார்கள் .

தீர்ப்பைக் கேட்டதும் தன் தாயிடம் ஓடோடிச் சென்று இளையவன் இது பற்றி கூறினான் . அப்பொழுது அந்தத் தாய் தன் இளைய மகனை நோக்கி , " "உண்மைதான் ஓரிரவு தீயவன் ஒருவன் என்னை தகாத முறையில் வன்முறையாக கெடுத்து விட்டான் ஆகவே நீ பிறந்தாய் "என்று கண்ணீர் மல்க கூறினாள் . அவர் இந்த விஷயத்தை அறிவாரா.. என்று கேட்டான். அவர் குறிப்பால் இதனை அறிந்து கொண்டார் எனினும் இது பற்றி அவர் என்னிடம் யாது ஒன்றும் கேட்டுக் கொள்ளவில்லை என்று தேம்பி தேம்பி அழுதாள் இந்த சம்பவத்தில் நபி சுலைமான் (அலை ) ரத்தத்தை எடுத்து தந்தைக்கு பிறந்த மகன் யார் என்பதை நிரூபித்தார்.

அடுத்து உமர் (ரலி ) ஆட்சி காலத்தில் யுத்தம் நடைபெறும் சமயம் பெண்களும் சிறுவர்களும் தனியாக கூடாரம் அமைத்து அதில் தங்க வைத்து அவர்களை பாதுகாக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அந்த நேரத்தில் கர்ப்பிணி பெண்கள் இருவர் ஒரே சமயத்தில் குழந்தையை பெற்றெடுத்தனர். இதில் ஒரு பெண்ணுக்கு ஆண் குழந்தையும் மற்றொரு பெண்ணுக்கு பெண் குழந்தையும் பிறந்தது. கூடாரத்தில் பேறுகாலம் பார்த்த வயோதிக பெண்கள் குழந்தைகளை தவறுதலாக மாற்றி அமைத்து விட்டார்கள் யாருக்கு என்ன குழந்தை என்பதை அவர்களால் சொல்ல முடியவில்லை இந்த வழக்கு உமர் (ரலி) அவர்களிடம் வந்து தீர்ப்பு வழங்க கோரினர் . உமர் (ரலி ) உடனே அலி (ரலி) அவர்களிடம் விவரத்தை சொன்னார்கள்

அவர்கள் இரு தாய்மார்களின் தாய்ப்பால் ஒவ்வொன்றையும் ஒரே மாதிரியான இரு வண்ணங்கள் கொண்ட சிட்டிகையில் பிடித்து தர வேண்டினார்கள் . இரண்டையும் எடை போடும்போது அதில் நிறை அதிகமான தாய்ப்பால் யாருடையது எனக்கேட்டு, அவருக்கே ஆண் குழந்தை பிறந்துள்ளது என்றும் நிறை குறைவாக உள்ள தாய்ப்பாலுக்குரிய பெண் , பெண் குழந்தையை பெற்றிருப்பதாக தீர்ப்பு கூறினார்

இந்த விஷயத்தில் அலி (ரலி ) அவர்கள் தாய்ப்பாலை எடுத்தது பற்றி சுற்றியிருந்த நபித்தோழர்கள். "கலீபாவை இது உங்களின் சொந்த கருத்தா ? என்று வினவினர் அதற்கு அலி ரலி அவர்கள் திருக்குர்ஆனில் 4 : 11 -ல்

"தந்தையின் சொத்தில் இரண்டு பங்கு ஆண்களுக்கும் , ஒரு பங்கு பெண்களுக்கும் உரியது " என கூறி உள்ளதால் ஆண்குழந்தைக்கு கருவிலேயே உணவு இரண்டு பங்கு கொடுப்பதாகவும் பெண் குழந்தைக்கு கருவிலேயே ஒரு பங்கு கொடுப்பதாகவும் இருப்பதால் , அவர்கள் தாய்ப்பாலும் இதே பங்கு அடிப்படையில் நடைமுறைப்படுத்தப்படுகிறது என்று கூறினார்கள் . ஆக தாய்ப்பால் என்பதும் ரத்தத்திலிருந்தே உருவாகிறது .

அடுத்து திருவொற்றியூரைச் சேர்ந்த இளங்கோவன் மனைவி காமாட்சி பழைய வண்ணாரப் பேட்டையைச் சேர்ந்த அன்சாரி மனைவி பரக்கத் நிஷா இருவரும் சென்னை ராயபுரம்
ஆர்.எஸ்.ஆர்.எம் அரசு மருத்துவமனையில் 17.4.2009 இருவருக்கும் பேர் காலம் நடந்தது.
அதில் ஒரு ஆண் குழந்தையும் ஒரு பெண் குழந்தையும் பிறந்தன. அச்சமயம் இரண்டு தாய்மார்களுக்கும் கட்டப்பட்டிருந்த டோக்கன்கள் மருத்துவமனை குளறுபடியால் மாறிவிட்டது உடனே இரு குடும்பத்தாருக்க் இடையே பிரச்சினை விஸ்வரூபம் எடுத்தது.

மருத்துவமனை நிர்வாகம் ராயபுரம் காவல்நிலையத்தில் வழக்கு பதிவு செய்தது . ராயபுரம் போலீசார் ஜார்ஜ்டவுன் 16-ஆவது மெட்ரோபாலிட்டன் நீதிமன்றத்தில் நீதிபதி சுஜாதா அனுமதியின் பெயரில் சாந்தோமில் உள்ள தமிழக தடய அறிவியல் துறைக்கு அனுப்பப்பட்டது

தடய அறிவியல் துறை இயக்குனர் விஜயகுமார் தலைமையில் 10 பேர் கொண்ட பரிசோதனை குழுவினர் இரண்டு குழந்தை மற்றும் இரண்டு தாய் இரண்டு தகப்பன் ஆக மொத்தம் ஆறு பேரிடம் இருந்து மூன்று சொட்டு இரத்தத்தை எடுத்தனர். எடுத்த ரத்தத்தை கொண்டு டி என் ஏ பரிசோதனையின் மூலம் மிகத் துல்லியமாக செயல்பட்டு அன்சாரி பரக்கத் பேகம் தம்பதிக்கு ஆண் குழந்தையும் இளங்கோவன் காமாட்சி தம்பதியருக்கு பெண் குழந்தையும் பிறந்துள்ளது என தீர்ப்பு வழங்கியது . ஆக சொந்தங்களை நிரூபிக்க ரத்தங்களைப் பயன்படுத்தப்படுகிறது என்பது விஞ்ஞானமும் இரத்தப் பந்தங்களை சொந்தமாக ஏற்றுக்கொண்டுள்ளது.

இதில் டிஎன்ஏ என்பது பற்றிய விளக்கம்
( உ -ம் ) ஒரு கட்டடத்தின் வரைபடம் ப்ளூ பிரிண்ட் மாதிரி இந்த DNA .

ஆர்என்ஏ என்பது ஓடியாடி கட்டடத்தை கட்டி முடிக்கும் மேஸ்திரி மாதிரி .

டிஎன்ஏ வில் இருக்கும் எக்கச்சக்கமான தகவல்களை கம்ப்யூட்டரில் கொடுத்து அலசிப் பார்த்தால் நம்முடைய நீளமான கத்தி மூக்கு சின்னதான காது அகன்ற மார்பு போன்ற அத்தனை உருவ லட்சணங்களையும் நம்பர் நம்பராக தெரியவரும் அதாவது போட்டோ எடுத்தது போல் உங்களுடைய அடையாளம் முழுவதும்

டிஎன்ஏவின் பதிந்திருக்கிறது பெற்றோருக்கும் பிள்ளைக்கும் உள்ள டிஎன்ஏ ஒற்றுமை வைத்தது 99.999% கண்டுபிடித்து பரக்கத்திற்கு ஆண் குழந்தையும் காமாட்சிக்கு பெண் குழந்தையும் பிறந்துள்ளது என்பதை சொல்லிவிட முடிகிறது

அடுத்து உகண்டாவின் ஒரு பள்ளிக்கூடத்தில் 20க்கும் மேற்பட்ட குழந்தைகள் அடையாளம் தெரியாமல் தீயில் கருகி இறந்து விட்டன பெற்றோர்கள் வரவழைக்கப்பட்டார்கள். அவர்கள் எங்கள் குழந்தைகளின் உடலையே எங்களிடம் ஒப்படைக்க வேண்டிக் கொண்டனர் .

உடனே டிஎன்ஏ பரிசோதனை நடந்தது . குழந்தைகளுக்கும் பெற்றோர்களுக்கும் தனித்தனியாக டிஎன்ஏ டெஸ்ட் எடுக்கப்பட்டு அவரவர் குழந்தையை அந்தந்த பெற்றோர்களிடம் கொடுக்கப்பட்டது .

அடுத்து பில்டெல்ஃபியாவில் வசிக்கும் கிளைமண்ட்ஸ் என்பவர் ஏதோ ஒரு பிரச்சினை காரணமாக மனைவியை பிரிந்து சென்றுவிட்டார் . தன்னுடைய இரட்டை குழந்தைகளை பார்க்காமல் இருந்துவிட்டார் 14 வருடங்கள் கழித்து பின் திரும்பி வந்து டிஎன்ஏ டெஸ்ட் மூலம் அவர்களை அடையாளம் கண்டு தன் குழந்தை என்பதை அறிந்துகொண்டார்

அடுத்து ஆஸ்திரேலியாவில் வருடத்திற்கு 50,000 விவாகரத்துகள் நடக்கின்றன ரத்து செய்து துரத்தப்பட்ட கணவன்மார்களுக்கு ஒரு பிரச்சினை பிரிவுக்குப் பின் பிறந்த குழந்தை அப்பா யார் என் சங்கடம் நிறைந்த கேள்வி . இதற்குத்தான் இஸ்லாம் இத்தா இருக்க சொல்லி வலியுறுத்துகிறது ஆஸ்திரேலியா இந்த மாதிரி இத்தா இருக்க சொல்லாததால் குழந்தை யாரிடம் வளர்வது என்பது பிரச்சனை ஆரம்பிக்கிறது .18 வயது ஆகும்வரை குழந்தையின் பராமரிப்பு செலவுகள் அவ்வப்போது வந்து பார்க்கும் உரிமை என்று இதில் பல சட்ட சிக்கல்கள் இருக்கின்றன. யார்யாருடைய குழந்தைகளுக்கு மாதம் நாம் தண்டச் செலவு செய்து கொண்டிருக்கிறோமோ என்ற சந்தேகம் முன்னாள் கணவன்மார்களை விடாமல் அரித்துக் கொண்டிருந்தது .சின்ன டிஎன்ஏ பரிசோதனை செய்தால் தெரிந்து விடக்கூடியதான் . ஆனால் குழந்தை வைத்திருக்கும் அம்மாக்கள் பரிசோதனைக்கு அழைத்து வர மாட்டேன் என்று வன்மத்துடன் மறுத்துவிட்டார்கள் .

இப்போது குழந்தையின் டிஎன்ஏ சாம்பிள்களை கேட்டு வாங்கும் உரிமையை கணவன்மார்களுக்கு உண்டு என்று சட்டத்திருத்தம் கொண்டு வந்திருக்கிறது துரத்தப்பட்ட கணவன்மார்களுக்கு துன்பமும் துயரமும் தற்போது நவீன விஞ்ஞானத்தால் நீங்கி இருக்கிறது

அடுத்து இப்போது இணையதளத்தில் சமூகவலை என்கிற ஆர்குட் என்ற பிரபலமான வெப்சைட்டுகள் இயங்கி வருகிறது இந்த சமூக வலையும் டிஎன்ஏ தொழில்நுட்பமும் கைகோர்த்துக் கொண்டு புதிய சாத்தியங்களை உருவாக்கி உள்ளன.

நம்முடைய கொள்ளுத் தாத்தா காலத்தில் அவருக்கு ஏழெட்டு சகோதர சகோதரிகள் இருப்பார்கள் அவர்களில் ஒவ்வொருடைய வாரிசுகளையும் சேர்த்தால் இப்போது நூற்றுக்கணக்கில் பெருகி நம் குடும்ப விருட்சம் ஆல் போல் தழைத்து வளர்ந்து இருக்கும் ஆனால் அவர்களில் எத்தனை பேரை நமக்கு தெரியும் . உறவுமுறைகள் விட்டுப் போய்விடக்கூடாது என்பதற்காக நாம் ஒன்றுக்குள் ஒன்று திருமணம் செய்து உறவுகளை மேன்மைப்படுத்தி இருப்போம் . இப்போ நாம் தொலைந்துபோன சொந்தங்களை அத்தனைபேரையும் கண்டுபிடிப்பதற்காக (Family Find ) குடும்ப தேடல் ஒன்று ஆரம்பித்திருக்கிறார்கள் . இவர்களிடம் இருநூறு டாலர் கொடுத்தால் பஞ்சு உருண்டையை வாயின் உட்புறத்தில் தடவி மரபீனை செல்கள் ஒட்டிக் கொண்டதும் அதை கவரில் போட்டு சீல் வைத்து பரிசோதனைக்கு அனுப்பிவைத்து, டிஎன்ஏ டெஸ்ட் எடுத்து இன்டர்நெட்டில் பதிந்து விடுவார்கள்.

அம்பத்தூரில் இருந்து அமெரிக்கா வரை எங்கெங்கோ பரவி இருக்கும் என்னுடைய சொந்தங்கள் எல்லாம் ஃபேமிலி பையின்ட் கேள்விப்பட்டு தாங்கள் டிஎன்ஏ டெஸ்ட் எடுத்து இணையதளத்தில் பதிய வேண்டும் .

"நான் உங்களுக்கு தூரத்து சொந்தம்தான் உங்களுக்கு ஏழு தலைமுறைக்கு முன் உங்க தாத்தா ஒருவர் மூலமாக நான் உறவுக்காரனாக வந்து இருக்கிறேன் . ஆகையால் என் மகளை உங்க மகனுக்கு கல்யாணம் செய்து வைப்போம். உறவு விட்டு விடக்கூடாது பாருங்க ! " என்று சொல்லி அவர்கள் அமெரிக்காவில் இருந்தோ ஆஸ்திரேலியாவிலிருந்தோ உங்கள் ரத்த பந்தம் தேடி வரலாம்

டிஎன்ஏ வில் உள்ள மரபீனிகள் திரும்பத்திரும்ப வரும் அமைப்பை வைத்துக் கொண்டு இருவருக்கும் 8 தலைமுறைகளுக்கு முன்பு பொதுவான ஒரு கொள்ளுத்தாத்தா வாழ்ந்திருக்கிறார் என்று சொல்லிவிடுகிறார்கள்.

சொல்லப்போனால் இப்போது உலகத்தில் வாழும் அத்தனை பேருமே ஆப்பிரிக்காவில் வசித்த ஒரு ஆதாமின் வழி வந்தவர்கள்தான் என்று கூட கண்டுபிடித்திருக்கிறார்கள் நவீன விஞ்ஞானத்தால் .

குர்ஆனில் அல்லாஹ்..."

மனிதர்களை நீங்கள் உங்கள் இறைவனுக்குப் பயந்து கொள்ளுங்கள் அவன்தான் உங்கள் அனைவரையும் ஒரே ஆன்மாவிலிருந்து உற்பத்தி செய்தான் . ஆரம்பத்தில் அந்த ஒருவரை (ஆதமை )படைத்து அவரிலிருந்தே அவர் மனைவியையும் படைத்தான் .
பின்பு அவ்விருவரில் இருந்தும் ஆண் பெண்கள் என பலரை பூமியில் பரப்பினான்" . குர்ஆன் (4 : 01)

இப்போது நீங்கள் சொல்லுங்கள் சொந்தம் எங்கிருந்து வந்தது நபி சுலைமான் (அலை ) அவர்கள் எடுத்துக் கொண்டதும் ரத்தம் , அலி (ரலி ) அவர்கள் எடுத்துக் கொண்டதும் ரத்தத்தின் வழியே வந்த தாய்ப்பால் அதன் பின்வந்த டிஎன்ஏ பரிசோதனையும் இரத்தத்தால் சொந்தங்களை கண்டுபிடிக்க முடியும் என்கிறது ஆக சொந்தம் எங்கிருந்து வந்தது என்றால் ரத்தத்திலிருந்து . அதுவே இரத்த பந்தமாகும்.

ர.ரா

சாமுத்ரிகா லட்சணம்

11.05 .2020 நேரலை சொற்பொழிவின் சாரம்சம்13/05/2020



https://m.facebook.com/story.php?story_fbid=2609033406022665&id=100007480923921

உஜ்ஜெய்னி நாட்டில் , 5-ஆம் நூற்றாண்டில் குப்தர் காலத்தில் வாழ்ந்தவர் காளிதாஸர் . இவர் விக்ரமாதித்தியன் அவையில் கவிஞராகவும் , தத்துவஞானியாகவும் இருந்தவர் . இவர் ரகுவம்சம் , சாகுந்தலம் , மேகதூதம் போன்ற இலக்கியங்களை படைத்தாலும் சாமுத்ரிகா லட்சணம் பற்றி ரொம்பவும் ஆய்வு செய்து கொடுத்தவர் .

சாமுத்ரிகா லட்சணம் "மனிதனுடைய பொதுவான தோற்றம், பொதுவான உடலமைப்பு தெய்வம்சத் தொடர்பு உடையவை " என்கிறது

" ஹலக்கல் இன்ஸான அலா சூரத்திஹி - மனிதனை அவன் தன் ( எண்ணத்தில் உண்டான) உருவில் படைத்தான் " என்கிறது ஹதீஸ் குத்ஸி .

உலகத்தில் வாழ்கின்ற கோடிக்கணக்கான மக்களில் ஒரே மாதிரியான உடல் உறுப்புகளைப் பெற்ற இரண்டு பேரைச் சுட்டிக் காண்பிக்க யாராலும் முடியுமா ? முடியாது .

ஒரு மனிதனைப் போன்ற உடல் உறுப்புகளின் அமையப் பெற்ற வேறு மனிதனே இல்லை என்பதுதான் இறை சிருஷ்டியின் ரகசியம். (உ-ம்) கை விரல் ரேகை , கண்ணின் கருவிழி ரேகை.

அங்க அவயங்கள் ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொரு விதமாக முற்றிலுமாக வேறுபட்டு காணப்படுவது மட்டுமே ஆச்சரியமல்ல ; இந்த வேறுபட்டு காணப்படும் அங்க அமைப்பு ஒவ்வொன்றுக்கும் தனித்தனி அழமான அர்த்தமும் இருக்கிறது என்கிறது சாமுத்ரிகா .

அவயங்களின் அமைப்பு ஒரு மனிதனுடைய தோற்றத்திற்கு எழில் கூட்டுவது மட்டுமல்ல; பயன் சேர்ப்பது மட்டுமல்ல ; அவனுடைய உள் உணர்வுகளுக்கும் விளக்கம் தருகிறது .அவனது மன வளத்தையும் உடல் ஆரோக்கியத்தையும் முன்கூட்டியே அறிவிக்கும் சாதனங்கள் என்ற அறிவியல் உண்மைகளைப் போட்டு உடைக்கிறது சாமுத்ரிகா .

நபி (ஸல்) அவர்கள் காலத்தில் கூட சாமுத்ரிகா லட்சண சாஸ்திரம் இருந்ததையும் அதை நபிகளார் ஏற்றுக் கொண்டதற்கும் ஆதாரமாக ...

ஸைத் பின் ஹாரிஸா (ரலி) அவர்கள் நபி (ஸல் ) அவர்களின் வளர்ப்பு மகனாவார் .அவருடைய மகன் உஸாமா பின் ஸைத் (ரலி) அவர்கள் மீது நபியவர்கள் அதிக அன்பு வைத்திருந்தார்கள் . உஸாமாவின் தாயார் உம்மு அய்மன் (ரலி) அவர்கள்
அபிசீனிய கருப்பினத்தைச் சேர்ந்தவராவார் .இவருடைய கணவர் ஸைத் பின் ஹாரிஸா (ரலி) அவர்கள் வெண்ணிறமுள்ளவர் .இந்த நிற
வித்தியாசத்தை வைத்து தந்தை - மகன் உறவில் சிலர் களங்கம் கற்பித்தனர் .

இந்நிலையில் ஒரு நாள் தந்தையும் மகனும் ஒரே போர்வையில் படுத்திருக்க, இருவரின் கால்கள் மட்டுமே வெளியே நீட்டிக் கொண்டிருந்தன. இதனை அவ்வழியே சென்ற , இருவரின் சாயலை வைத்து உறவுமுறையை கணித்து விடும் ஆற்றலுடைய "முத்லிஜீ " என்பவர் இரு வேறு நிறங்களைக் கொண்டு நீட்டிக் கொண்டிருக்கும் கால்கள் தந்தையும் மகனும் ஆவார்கள் என்று கருத்து பட கூறினார்

ஆயிஷா(ரலி) அறிவித்தார்
(ஒருமுறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம் (பரவசத்தால்) அவர்களின் முகத்தின் (நெற்றி) ரேகைகள் மின்ன வந்தார்கள். அப்போது அவர்கள், 'முத்லிஜீ (என்னும் இருவரின் சாயலை வைத்து உறவு முறையை கணிப்பவர்) ஸைதைப் பற்றியும் என்ன கூறினார் என்று நீ கேள்விப்படவில்லையா? (போர்வையின் கீழிருந்து வெளிப்பட்ட) அவ்விருவரின் கால்களையும் அவர் பார்த்துவிட்டு. 'இந்தக் கால்கள் ஒன்று மற்றொன்றிலிருந்து தோன்றியவை' என்று கூறினார்' என்று கூறினார்கள்.
ஸஹீஹ் புகாரி 3555.

இந்த செய்தியை நபிகளார் சந்தேகப்பட்டவர்களும் அறிந்து கொள்ளும் பொருட்டு வெளியே சொல்லச் சொன்னார்கள் .

இமாம் ஷாபீஈ (ரஹ்) அவர்கள் ஓரிரவு ஜாமிஆ மஸ்ஜித்தில் தங்கியிருக்கும் போது, ஒரு மனிதர் அங்கு வந்து உறங்குபவர்களுடையே ஒருவரைத் தேடினார் .இமாம் ஷாபீஈ (ரஹ்) அவர்கள் பக்கத்திலுள்ளவரை அழைத்து , " நீர் சென்று ஒரு கண் மட்டும் தெரியக்கூடிய உனது நீக்ரோ அடிமை தப்பியோடி விட்டாரே அவரையா நீங்கள் தேடுகிறிர்கள் ? என்று கேள் .

அவரும் அவரிடம் கேட்க, "ஆமாம். இவ்வளவு துல்லியமாக அடையாளங்களை கூறும் உமக்கு அவன் இருப்பிடம் தெரியுமா ? அவரை இமாம் அவர்களிடம் அழைத்து வர, இமாமவர்களிடம் கேட்டதற்கு , சிறைக்கூடம் சென்று தேடிப்பார். அங்கு அந்த அடிமை இருப்பார் .

அதே மாதிரி அந்த அடிமை அங்கேயே இருந்தார் . "எப்படி உங்களால் சொல்ல முடிந்தது ?"

" அவசரமாக அவர் மஸ்ஜிதினுள் நுழைந்ததும் யாரோ ஒருவரைத்
தேடுகிறார் என்பதை அவரது அங்க அவயங்களின் பரபரப்பில் இருந்து உணர்ந்து கொண்டேன்.

மஸ்ஜித் நுழைந்ததும் நீக்ரோ அடிமைகள் உறங்குமிடத்திற்கு சென்று தேடினார் . ஆகையால் அவரது அடிமை நீக்ரோ என்பது தெரிந்தது

அவர் தேடுபவரின் முகத்தில் வலது கண்ணை உற்றுப் பார்த்து தேடியதில் , அவரின் அடிமைக்கு வலது கண் ஊனம் என்பது தெரிய வந்தது .

என் அனுபவத்தில் தப்பியோடும் அடிமை செலவுக்காக பணத்தையோ பசிக்காக உணவையோ திருடுவார்கள். அது கள்ளத்தொழிலை செய்து வரும் கன்வனைப் போல் அல்லாமல் கிடைத்ததும் திருடுவார்கள் அடிமைகள். ஆகையால் எளிதில் பிடிபடுவார்கள்.

அடிமைகள் திருடினால் சிறைச்சாலையில் அடைப்பார்கள் " என்று இமாம் ஷாபீஈ (ரஹ்) கூறினார் .

அடுத்து 2011 மே 2-ல் திருநெல்வேலி மாவட்ட தளபதி சமுத்திரம் கிராமத்திலுள்ள கூட்டுறவு வங்கியில் காலை 11 மணி ஒரு ஆசாமி கையில் துப்பாக்கியுடன் முகத்தை ஒரு துணியால் கட்டிக்கொண்டு பாங்கில் நுழைகிறான் பேங்க் ஊழியர் சண்முக சங்கர் ராஜா இவர்களை நோக்கி சுட்டு காயப்படுத்தி பேங்க் ஊழியர் முயற்சிக்க வந்தவன் கொள்ளை அடிக்காமலேயே தப்பிவிட்டான்

இச்சம்பவம் குறித்து ஏர்வாடி போலீஸ் போலீஸ் விசாரிக்க சிதறிக்கிடந்த துப்பாக்கி குண்டுகள் ஊழியரின் உடலிலுள்ள குண்டுகள் இவைகளை பார்த்த போலீஸ் இந்த வகை துப்பாக்கி
இன்சாஸ் - இந்தியன் ஸ்மால் ஆம்ஸ் சிஸ்டம் என்ற வகையைச் சார்ந்தது

ஊழியர்களிடம் கம்ப்யூட்டர் மூலமாக ஆசாமியை பற்றி தகவல்களை பேங்க் ஊழியர் இருவரிடமும் தனித்தனியாக கேட்டு கம்ப்யூட்டர் மூலமாக ஆசாமி படத்தை வரையப்பட்டது இந்த இரண்டு படமும் ஒரே மாதிரியாக இருந்தது இதுதான் நவீன காலத்தின் சாமுத்ரிகா

உடனே போலீஸ் சுற்றுவட்டார கிராமங்களில் ராணுவ வீரர் யாராவது விடுமுறையில் வந்திருக்கிறார்களா என்று துருவ ஆரம்பித்தது அப்போதுதான் நாங்குநேரியில் உள்ள கீழ சண்முகபுரம் கிராமத்தைச் சேர்ந்த உலகநாதன் மகன் பன்னீர்செல்வம் வயது 30 என்கிற ராணுவ வீரர் மேகலயா மாநிலம் தூரா என்ற கிராமத்திலுள்ள எல்லைப்படை பிரிவில் பணியாற்றுகின்றார் என்ற தகவலும் விடுமுறையில் வரும்போது துப்பாக்கியை ஒப்படைக்காமல் களவாடிக் கொண்டு வந்திருக்கிறார் என்பதும் தெரியவந்தது

மேலும் தன் குடும்பத்தோடு மேகலா செல்வதற்கு தளபதி சமுத்திர சிவன் கோவில் அருகே வைத்து பன்னீர்செல்வத்தை மடக்கிப் பிடிக்கிறது போலீஸ்

சாமுத்திரிகா லட்சணம் திருடனை பிடித்துக் கொடுத்ததா என்ன?

அடுத்து நபி (ஸல் ) அவர்களிடம் "நீங்கள் இறந்த பிறகு உங்களை எங்களில் யார் முதலில் சந்திப்போம் ? "என்று நபி (ஸல்) மனைவிமார்கள் கேட்க ,

அதற்கு நபி (ஸல் ) "உங்களில் யாருடைய கை நீளமாக இருக்கிறதோ அவர்கள் " என்றார்கள்.

உடனே எல்லோரும் ஒரு குச்சியை எடுத்து தங்களின் கைகளின் நீளத்தை அளக்க ஆரம்பித்தனர் .அதில் சௌதா (ரலி) அவர்களின் கைதான் நீளமாக இருந்தது . ஆனால் முதலில் இறந்தது ஜைனப் (ரலி ) அவர்கள் ஆவார்கள் அதன்பின்னர்தான் நீளமான கை என்பது தான தர்மம் அதிகமாக செய்பவரை குறிக்கிறது என்பதை மற்ற மனைவிமார்கள் புரிந்து கொண்டார்கள் புகாரி (1420 )

இப்போது சாமுத்ரிகா லட்சணப்படி கை நீளமான சௌதா (ரலி )அவர்களின் குணநலன்களை பார்ப்போம் .

" நீளமான கைகளை உடைய அவர்களுக்கு அரச போகத்தை அனுபவிக்கும் பாக்கியம் பெற்றவர்கள். இவர்கள் மனதில் பட்டதை யாருக்கும் அஞ்சாமல் வெளிப்படையாக சொல்லி விடுவதும் குற்றம் குறைகள் யாரிடம் அமைந்தாலும் நேருக்குநேர் கண்டதும் கண்டனம் தெரிவிப்பதும் இவர்களின் இயல்பாக இருக்கும் என்பதாக சாமுத்ரிகா சொல்கிறது . அதையும் சோதிப்போம் .

பத்ரு போரில் பிடிபட்ட எதிரிகளில் அன்னை சௌதா (ரலி ) அவர்களின் முதல் கணவராக இருந்த சக்கரம் பின் அமர் (ரலி) அவர்களது சகோதரர்
சுஹைல் பின் அம்ர் தப்பி ஓடி விட்டார் .

பின் அவரை தேடி அலைந்து மீண்டும் கைது செய்து அவரது கைகளை கட்டி அதனை கழுத்துடன் பிணைத்து இழுத்து வந்தார்கள் . இந்தக் கோரக் காட்சியை கண்ட அன்னை சௌதா (ரலி ) அவர்கள் உடனே உணர்ச்சிவசப்பட்டவர்களாக இந்த இழிநிலையை பார்த்துக் கொண்டு உயிர் வாழ்வதை காட்டிலும் நான் கண்ணியமான முறையில் இறந்து இருக்க வேண்டுமே ... அதுவே மேலானது . அவமானம் ! அவமானம் ! ! என்று வாய் தவறி கூற ஆரம்பித்து விட்டார்கள்.

இவர்கள் கூறியதை கேட்டு நபி (ஸல்) அவர்கள் மிகவும் வருத்தப்பட்டார்கள் " "நீங்கள் என்ன வார்த்தை சொல்லிவிட்டீர்கள் ? நீங்கள் கூறிய இந்த வார்த்தை அல்லாஹ்வின் எதிரியான இவர்களை உசுப்பேத்தி விடக் கூடியதாக இருக்கின்றதே... அல்லாஹ்வையும் அவனது தூதரையும் எதிர்த்துப் போர் செய்கின்ற எதிரிகள் எவ்வாறு கண்ணியமான முறையில் மரணம் அடைய முடியும் ? "என்றார்கள்

இறைத்தூதர் (ஸல் ) இந்த கேள்வி சௌதா (ரலி ) அவர்களை வெட்கப்பட செய்தது . உடனே அவர்கள் தான் உணர்ச்சிவசப்படும் இந்த செயலுக்காக வருத்தம் தெரிவித்து மன்னிப்பு கோரினார்கள் .

அடுத்து கை சற்று நீளம் குறைவாக அமையப் பெற்றவர்கள் வறியோர்க்கு வாரி வாரி வழங்கும் வள்ளலாக இருப்பார்கள். மற்றவர்கள் பசித்திருக்க இவர்கள் தான் வாழப்பொறுக்க மாட்டார்கள் . உடனே அவர்களுக்கு கொடுத்துவிட்டு தான் மறு வேலை பார்ப்பார்கள். குட்டையான கைகளை பெற்றவர்கள் முற்போக்கு சிந்தனை வாதிகளாகவும் சிறந்த உழைப்பாளிகளாகவும் இருப்பார்கள் என்கிறது சாமுத்திரிகா .

தான தருமங்கள் தேவை உள்ளவர்களுக்கு இறங்குதல் உள்ளச்சத்துடன் இறைவனைத் தொழுதல் ஆகியவற்றில் தனி சிறப்புடன் விளங்கினார்கள் என்று இவர்களைப்பற்றி அன்னை ஆயிஷா (ரலி )அவர்கள் கூறி விட்டு மேலும் அல்லாஹ்வின் நெருக்கத்தை விரும்ப கூடியவர்களில் இவரைப் போன்ற ஒருவரை நான் பார்த்ததே இல்லை இறைவனின் திருப்பொருத்தத்தை அடைய வேண்டும் என்பதற்காக இறைவனுக்கு உவப்பைத் தரக்கூடிய தான தர்மங்களில் மிகவும் தாராள போக்கு உடையவராகவும் உறவினர்களிடையே உறவே நன்முறையில் பேணக் கூடியவர்களாகவும் இருந்தார்கள் என்று கூறினார்கள் .

உமர் ரலியல்லாஹு ஆட்சிக்காலத்தில் நபி (ஸல் ) அவர்களின் மனைவியர்களுக்கு வருடத்திற்கு 12000 திர்ஹம் உதவி தொகையை வழங்கி வந்தார்கள் . இவை அனைத்தும் தானதர்மம் செய்வதோடு பணம் நமக்கு சோதனை கூறியது என்று ஜைனப் (ரலி) கூறினார்கள் .

உமர் (ரலி ) அவர்களும் கொடுத்து புத்தாடைகள் போன்ற எந்த பொருளாக இருந்தாலும் முதலில் தானம் செய்து விட்டுத்தான் மறுவேலை பார்ப்பார்கள் ஜைனப் (ரலி )

ஜைனப் (ரலி) இறக்கும் போது ஒரு திர்ஹம் ஒரு தினார் கூட விட்டு வைக்காமல் அனைத்தையும் அவர்கள் தர்மம் செய்திருந்தார்கள். இவர்களின் இறந்த செய்தியை கேட்டு மதினாவில் இருந்த அத்தனை ஏழைகளும் கண்ணீர் வடித்தனர் . சாமுத்ரிகா லட்சணம் இவர்களில் விஷயத்தில் தெள்ளத்தெளிவாக அறிவித்து இருந்ததா என்ன ?

ர.ரா

09.05 .2020 நேரலை சொற்பொழிவின் சாரம்சம்

காலம் மாறினாலும் கோலம் மாறாத மனிதர்கள்




ஒரே சூலில் இரட்டைக் குழந்தைகள்.. ஒரு குழந்தை மற்ற குழந்தை விட ஒரு சில நிமிடங்களுக்கு முன் பிறந்தது. அவர்கள் இருவரும் ஒரே நாளில் இறப் பெய்தனர் .ஆனால் .. அவர்களில் ஒருவருக்கு வயது 50 .மற்றவருக்கு வயது 150 .இது எவ்வாறு சாத்தியம் ?

1905 ஆம் ஆண்டு சூரிச் (Zurich) பல்கலைக்கழகத்தில் விஞ்ஞான அறிஞர் ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் சிறப்பு சார்பியல் தத்துவத்தை சமர்ப்பித்தார்.

- காலம் என்று தனிப்பட்டுஒன்றும் கிடையாது !
- சம்பவங்கள் இல்லையேல் காலமே கிடையாது !
- இரண்டு பொருட்கள் இல்லாது தனிப்பட்ட இடைவெளியே கிடையாது !
- அது போல தூரத்தையும் அல்லது இடைவெளிகளையும் காலத்திலிருந்து தனியாகப் பிரிக்க முடியாது !
- ஒளியின் வேகத்தில் பயணிக்கக்கூடியவர்களுக்கு காலம் என்பது இயங்குவது இல்லை.!

மேற்கண்ட தத்துவத்தின் சாரம்சம் "தவ்ராத்" என்னும் பழைய ஏற்பாடு வேதம், இஞ்ஜீல் என்னும் பைபிள்-விவிலியம்புதிய ஏற்பாடு மற்றும் அல்குர்ஆன் ஆகியவற்றில், சில சம்பவங்கள் குறித்து பேசும்போது

சம்பவங்கள் இல்லாத நிகழ்வுகளுக்கு காலமே இல்லாது இருப்பது குறித்து நம்மை வற்றாத ஆச்சரியத்தில் திளைக்கச்செய்கிறது.

கணிதப்பாடத்தில் நீங்கள் படித்திருப்பீர்கள். "Empty Set" என்னும் வெறுமை, அது போன்றே வேதத்தின் சில நிகழ்வுகள் காலமே இல்லாத வெறுமையாக காட்சி அளிக்கிறது.

ஒரே சூலில் இரட்டைக் குழந்தைகள். ஒரு குழந்தை மற்ற குழந்தையை விட சில நிமிடங்களுக்கு முன் பிறந்தது. அவர்கள் இருவரும் ஒரே நாளில் இறப்பெய்தினர். ஆனால், அவர்களில் ஒருவருக்கு வயது ஐம்பது. மற்றவருக்கு வயது நூற்றி ஐம்பது. இது எவ்வாறு சாத்தியம்?

ஒரு வரலாற்று சம்பவத்தைப் பார்ப்போம். அதன் முடிவில் மேற்கண்ட கேள்விக்குறிய பதிலைத் தேடுவோம்.

"புஸ்து நஸ்ர்" என்பவனுக்கு தவ்ராத் வேதம் எங்கு ஓதக் கேட்டாலோ அல்லது அதை மனப்பாடம் செய்தவரைக் கண்டாலோ முதல் வேலை அவர்களைக் கொன்றொழித்து விட்டு தான் மறுவேலை! இது என்ன சைக்கோ...? தெரியவில்லை.

அவனுக்கு ஒரு செய்தி கிடைத்தது. பைத்துல் முகத்தஸ் (ஜெருஸ்ஸலம்) செல்லும் வழியில் ஒரு நகரம்; அங்குள்ளோர் அனைவரும் தவ்ராத் வேதத்தைக் கற்றவர்கள் என்று!

உடனே அவனின் படையெடுப்பால் அந்த சின்ன நகரம் சின்னாபின்னமாக்கப்பட்டு அதன் முகடெல்லாம் உடைந்து பாழடைந்து போனது.

அவ்வழியே நபி உஜைர் (Uzyre) அலைஹிஸ்ஸலாம் (வயது 30) செல்லும்போது அந்நகரை எப்படி இறைவன் மீண்டும் உருவாக்குவான்? என்ற சிந்தனையிலேயே ஒரு மர நிழலில் அமர்ந்து சில அத்திப்பழங்களையும், திராட்சைப் பழச்சாறையும் சிறிது குடித்ததும், அல்லாஹ் அவரை நூறு ஆண்டுகள் வரை மரணித்திருக்கச் செய்து, பின்னர் அவரை உயிர்ப்பித்தான். தன் அருகில் இருந்த அவருடைய உணவும், அவருடைய பானமும் கெட்டுப் போகவில்லை.

ஆனால், கழுதை இறந்து அதன் எலும்புகள் மட்டும் கிடக்கக்கண்டார். இறந்த உயிரை தன்னால் உயிர்ப்பிக்க இயலும் என்பதை அவருக்கு உணர்த்த விரும்பிய இறைவன், அக்கழுதையை உயிர்ப்பெற்று எழச் செய்தான்.

இப்போது உயிர்ப்பெற்றெழுந்த உஜைர் (Uzyre) நபிக்கு வயது அதே 30 தான்!

நபி உஜைர் (Uzyre) அலைஹிஸ்ஸலாம் அவர்களுடன் ஒரே நேரத்தில் பிறந்தவர் அவரது சகோதரர் அஜீஸ் (Azeez) ஆவார். ஒரே சூலில் பிறந்த இரட்டையர். ஆனாலும் இப்போது அஜீஸ் அவர்களுக்கு வயது 130 ஆக இருந்தது. இதனால் 30 வயதுடைய தன் சகோதரர் நபி உஜைர் என்பதை அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. பின்பு நபி உஜைரின் நபித்துவத்தின் அங்க முத்திரையான "நுபுவ்வத்" உடலில் மச்சமாக இருப்பதை இனம் காணப்பட்டு தன் தம்பி உஜைர் தான் அவர் என்பதை ஏற்றுக்கொண்டார்.

அதற்குப்பின் நபி உஜைர் (Uzyre) அலைஹிஸ்ஸலாம் தனது சகோதரர் அஜீஸுடன் இவ்வுலகில் இருபது வருடம் வாழ்ந்தார். ஒரே நாளில் சகோதரர்கள் இருவரும் இறப்பெய்தினர். இறக்கும்போது உஜைர் நபிக்கு வயது 50 ஆக இருந்தது. அவருடைய சகோதரருக்கு இறக்கும்போது வயது 150 ஆக இருந்தது. உஜைர் நபி மரணித்திருந்த நூறு வருடங்களில் உலக சம்பவங்கள் எதுவும் அவருக்கு இல்லை. எனவே, அவருக்கு காலமும் இயங்கவில்லை.

அடுத்து ஆஸியா மைனான் மேற்கு கரையிலுள்ள ஸமீர்னாவுக்கு 50 மைல் தெற்கேயுள்ள இபிஸியஸ் நகரத்தில் ஏழு வாலிபர்கள் சுமார் 20 வயது மதிக்கத்தக்க இளைஞர்கள். இவர்கள் அனைவரும் ஏக இறைவழிபாட்டில் ஈடுபட்டு வந்தனர்.

கி.பி. 249 முதல் கி.பி.251 வரை ஆட்சி புரிந்த டிஷியல் என்ற மன்னன் கொடுங்கோலனாக இருந்ததால் ஏழு வாலிபர்கள் ஏக இறைவழிபாட்டுக்கு இடையூறுகள் பல விளைவித்தான்.

மன்னனின் தொல்லைகளில் இருந்து தங்களைத் தர்காத்துக்கொள்ள அவ்வாலிபர்கள் அருகிலுள்ள மலைக் குகை ஒன்றைத் தேர்ந்தெடுத்து அங்கு சென்று இறைவழிபாட்டில் மூழ்கினார்கள். கூடவே அவர்கள் கூட்டிச்சென்ற நாயும் அவர்களுடன் இருந்தது. சிறிது நேரத்தில் ஆழ்ந்த உறக்கம் அவர்களை ஆட்கொண்டது.

ஆழ்ந்த உறக்கம் தெளிந்து விழித்தபோது அவர்கள் அனைவருக்கும் பசித்தது. சிறிது நேரம்தான் உறங்கி இருப்போம் என்று கருதி தங்களின் ஒருவரிடம் பணம் கொடுத்து ஊருக்குள் சென்று உணவு வாங்கி வருமாறு அனுப்பினார்கள்.

அந்த வாலிபர் கொண்டு சென்ற வெள்ளிக்காசுகளை உணவுக்கடைக்காரர்கள் செல்லாதவை என்று வாங்க மறுத்துவிட்டனர். மேலும் வாலிபரின் உடை அலங்காரமும் மிகப் பழமையானதாக இருந்தது.

இறுதியில் அந்த வாலிபர் அவ்வூரின் அரசரிடம் சென்று முறையிட்டார். அந்த வெள்ளிக்காசுகளை வாங்கிப்பார்த்த அரசன் அவை 300 வருடங்களுக்கு முந்திய நாணயங்களாக இருந்தது கண்டு அதிசயித்து விசாரித்தான். அவர்கள் ஓரிரு தினங்களுக்கு முன்புதான் குகையினுள் சென்றதாக அந்த வாலிபர் தெரிவித்தார். இதனை விசாரித்த அரசனின் பெயர் இரண்டாம் தியோஷியஸ்.

உணவு வாங்க வந்த வாலிபரின் வாயிலாக குகைத் தோழர்களைப் பற்றி அறிந்த அரசன், அவரையும் அழைத்துக்கொண்டு குகைக்குச் சென்றான். அப்போதுதான் உணவு வாங்க வந்த வாலிபருக்கு தாங்கள் 300 வருடங்கள் உறங்கிவிட்ட உண்மை புலப்பட்டது.

சுமார் 20 வயது மதிக்கத்தக்க வாலிபர்களாக இருந்த அவர்களுக்கு 300 வருடங்கள் தூங்கி எழுந்த பிறகு அவர்களின் வயது 320 ஆக இருந்திருக்க வேண்டும். ஆனால் அப்படி இல்லாமல் 20 வயது உடையவர்களாகவே அவர்கள் இருந்துள்ளனர். அப்படியென்றால் அவர்கள் உறங்கிய அந்த 300 ஆண்டுகள் என்ன ஆனது....?

உறங்கிய 300 ஆண்டுகளில் இந்த ஏழு வாலிபர்களும் உலக சம்பவங்கள் எதிலும் பங்கு கொள்ளவில்லை. எனவே, இவ்வேழு வாலிபர்களுக்கும் காலம் இயங்கவில்லை.

குகைக்கு வந்த வாலிபருடன் சென்ற அரசன், அந்தக் குகையில் இவருடன் சேர்ந்து ஏழு வாலிபர்களும் அவர்களது நாயும் உறங்கிக்கொண்டிருக்க கண்டான். அரசனைக் கூட்டி வந்த வாலிபரும் குகைக்குள் சென்று மீண்டும் தன் உற்ற தோழர்களுடன் உறக்கத்தில் ஆழ்ந்துவிட்டார். குகையின் வாயிலும் அடைபட்டுவிட்டது.

அரசனும், அவனுடன் வந்தவர்களும் தாங்கள் கண்கூடாக நேரில் கண்ட அந்த அற்புதக் காட்சியைப் பற்றி அந்த மலைக்குகை வாசலின் கல்லில் விரிவாக எழுதி வைத்து விடுத் திரும்பினர்.

இதனை இறைமறையாம் திருக்குர்ஆன் கூறுவதைப் பார்ப்போமே!

"குகைத் தோழர்களும் அந்த மலையில் பொறிக்கப்பட்டிருக்கும் கல்வெட்டும் நம்முடைய அத்தாட்சிகளில் ஆச்சரியமாக இருந்தனர் என்று நீர் எண்ணுகிறீரா...?" (அல்குர்ஆன் 18:9)

ஆங்கில சரித்திர ஆசிரியரான லார்டு வில்லியம் மூர் "கிறிஸ்துவ தேவாலயங்களின் வரலாறு" என்ற நூலில் இந்த நிகழ்ச்சியைப் பற்றி குறிப்பிட்டு, இது உண்மையே என மேலும் உறுதிப்படுத்துகிறார்.

அடுத்து, ஹளரத் நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் என்னும் இயேசு தன் சீடர்களுடன் இரவுச் சாப்பாட்டை சாப்பிட்டு முடித்தார்கள். பின் தம்முடைய சீடர்களை நோக்கி "நான் உங்களை விட்டு பிரிவது பற்றி நீங்கள் வருத்தமுறுகிறீர்கள். இஸ்ரவேலர்கள் என்னைத் தேடி அலைந்து கொண்டிருக்கிறார்கள். எனினும் எனக்குச் செய்யும் இழிவை விட்டும் நீங்கள் என்னை காக்க மாட்டீர்கள்" என்று கூறினார்கள்.

அதற்கு அவர்கள், "எங்களின் உடலில் உயிர் உள்ளவரை எங்களுடைய எதிரிகளால் உங்களுக்கு யாதொரு இன்னலும் இழைத்துவிட முடியாது" என்று கூறினார்கள்.

அப்போது இயேசு, ஷம்ஊனை அழைத்து "நீர் இவர்களின் தலைவராயிருந்த போதிலும் நீர் என்னை இறைத்தூதர் என ஏற்றுக்கொள்ள மறுப்பீர்; அதுவும் மும்முறை மறுப்பீர்" என்று கூறினார்.

அதன்பின் தம் சீடர்களை நோக்கி புன்முறுவல் பூத்தவண்ணம், "இன்று இரவு உங்களில் ஒருவர் என்னை சொற்ப விலைக்கு விற்றுவிடுவார். ஆனால், அந்தோ அவர் பொழுது புலர்வதற்கு முன் கொல்லப்படுவார்" என்று இயேசு கூறினார்.

அதுகேட்ட சீடர்களில் ஒருவர், இயேசு அவர்களை நோக்கி, "யார் அவர்? என்னிடம் கூறுங்கள்" என்று வேண்டினார். அதற்கு இயேசு, "அதுபற்றி கூறுவதற்கான தருணம் இதுவல்ல; விரைவில் அத்தீயோனே தன்னை எவன் என்று காட்டி விடுவான். நான் உலகை விட்டுப் புறப்படும் நேரம் நெருங்கி விட்டது" என்று கூறினார்.

இயேசு அவர்களின் பதிமூன்றாவது சீடனாகிய ஜூடாஸ் எஸ்கேயட் (யஹூதா) என்பவன் பணம் வாங்கிக்கொண்டு யூதர்களிடம் அவர்களைக் காட்டிக்கொடுத்தான். அவன் வாங்கிய தொகை வெறும் 30 பொற்காசுகள் என்று பைபிள் கூறுகிறது.

இறுதியாக இஸ்ரவேலர்கள் இயேசு அவர்களை ஒரு வீட்டில் சிறை வைத்தனர். பின் அவருடன் ஷம்ஊன் பக்கம் திரும்பி, "நீர் இயேசுவை இறைத்தூதர் அல்ல என்று கூறினாலொழிய நாங்கள் உம்மை உயிரோடு விட மாட்டோம்" என்று மிரட்டினர். அவர்களின் மிரட்டலுக்கு அஞ்சி அவ்வாறே அவரும் மும்முறை மறுத்தளித்து கூறினார். இயேசு அதுகேட்டு புன்முறுவல் பூத்தார்.

பொழுது புலர்ந்து கொண்டிருந்தது. அன்றைய தினம் கி.பி. 33 ஆம் ஆண்டு ஏப்ரல் 3 ஆம் நாள் வெள்ளிக்கிழமை இரவு தஹ்ஜத் என்னும் பின் நேரம்; இறைவன் அவர்களை விண்ணகத்துக்கு அழைத்துக் கொண்டு தன்னளவில் உயர்த்திக் கொண்டான். அப்போது இயேசு அவர்களின் வயது 33 என்பதை நினைவில் கொள்ளவும்.

இயேசு என்கிற நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் திமிஷ்கின் கிழக்குப் பகுதியிலுள்ள பெரிய பள்ளிவாசலில் உள்ள "மனாரத்துல் பைளாவு" எனும் வெள்ளை மனாரா அருகே இரவு தஹ்ஜத் என்னும் பின் நேரம் விண்ணிலிலிருந்து இறங்கி வருவார்கள். அப்போது அவர்களின் வயது அதே 33 ஆகத்தான் இருக்கும்.

நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை உயர்த்தப்பட்டு, இவ்வருடம் 2020 லிருந்து கணக்கிட்டால் 2020 +33 = 2053 வருடம் பூர்த்தியாகிறது. இவ்வருடமே இயேசு (நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம்) வருவதாக வைத்துக் கொண்டால் 2053 வயது நிரம்பியவராக அவர் வரமாட்டார். அதே 33 வயது உடையவராகத்தான் இப்பூமிக்கு வருவார். விண்ணிற்கு உயர்த்தப்பட்ட நாளிலிருந்து இன்றுவரை உலக சம்பவங்கள் எதுவும் அவருக்கு இல்லை. எனவே, அவருக்கு காலமும் இயங்கவில்லை என்பதே விஞ்ஞான உண்மை.

நபி உஜைர் அலைஹிஸ்ஸாலாம் 30 வயதில் மரணித்து 100 வருடம் கழித்து உயிர்த்தெழுந்து வரும்போது 130 வயதுடையவராக் வரவில்லை. அதே 30 வயதுடையவராககத்தான் வந்தார்.

குகைத் தோழர்கள் 20 வயதுடையவர்களாக குகையில் ஆழ்ந்த நித்திரையில் 300 வருடம் தூங்கிய பிறகு அவர்கள் அனைவரும் 320 வயதுடையவர்களாக விழித்தெழவில்லை. அதே 20 வயதுடையவர்களாகவே வந்தனர்.

நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் (இயேசு) 33 வயதுடையவராக விண்ணில் உயர்த்தப்பட்டு விண்ணில் வாழ்ந்து வருபவர் எப்போது இப்பூமிக்கு வந்தாலும் அதே 33 வயதுடையவராககத்தான் வருவார்கள்.
அல்லாஹ்வே மிக அறிந்தவன்.

08.05 .2020 நேரலை சொற்பொழிவின் சாரம்சம்

காலமென்னும் மாய நதி

https://m.facebook.com/story.php?story_fbid=2606673532925319&id=100007480923921



" நிச்சயமாக காலத்தைப் பற்றிய ஞானம் அல்லாஹ்விடத்தில் மட்டும்தான் இருக்கிறது " . - குர்ஆன் (31 : 34)

... என்றால் நாம் அறிந்து தெரிந்து வைத்திருக்கும் காலத்தைப் பற்றிய சேதிகளை என்னென்பது ?

நமக்குத் தெரிந்த காலத்தின் தரகுகள்...
60 விநாடி ஒரு நிமிடம் , 60 நிமிடம் ஒரு மணி , 24 மணி ஒரு நாள் , 7 நாள் ஒரு வாரம் , 30 நாட்கள் ஒரு மாதம் , 365 நாட்கள் ஒரு வருடம் சரிதானே .? இது காலத்தின் ஞானம் தானே ?..

பூமியின் அட்சரேகைகளும், தீர்க்க ரேகைகளும் பூமியின் சுழலும் வேகத்தினுடைய காலத்தைக் கொண்டு நிர்ணயிக்கப்படுகிறது.

பூமத்திய ரேகை , கடக ரேகை , மகர ரேகை , ஆர்டிக் வட்டம் என்ற நீட்டளவுகள் அனைத்தும் சூரியன் - பூமியின் மேல் குறிப்பிட்ட இடத்தில் பிரகாசிக்கும் நேரத்தைப் பொறுத்து கணிக்கப்பட்டவை . பூமியில் வெவ்வேறு காலங்களில் ஏற்படும் பருவகால மாறுதல்களைக் கொண்டு அந்த அளவீடுகள் நிர்ணயிக்கப்படுகிறது .

நாம் "ஒரு மணி நேரம் "என்று குறிப்பிடுவது பிரபஞ்சவெளியில் நமது பூமி சூரியனைச் சுற்றி வரும் பாதையில் 15 டிகிரிகள் கொண்ட தூரத்தைக் கடக்க எடுத்துக்கொள்ளும் நேரமாகும்.

இவ்வளவு துல்லியமாக நாம் காலத்தைப் பற்றி தெளிவாக தெரிந்திருக்கும்போது காலத்தைப் பற்றி ஞானம் இறைவனிடம் மட்டும்தான்
இருக்கிறதென்றால் , நமக்குத் தெரியாத அந்த ஞானம்தான் என்ன ?

நாம் கணித்துள்ள காலம் நம் பூமியின் விசாலமான எல்லா இடங்களுக்கும் சரியாக பொருந்துகிறதா ? அதுதான் இல்லை. காலம் இந்த பூமியிலே உதைப்படுகிறது .

என் தங்கை மகன் சேக் அமெரிக்கா நியூயார்க்கியிலிருந்து சனிக்கிழமை காலை 7 மணிக்கு என்னிடம் செல்போனில் தொடர்பு கொள்கிறான் .
அப்போது எனக்கு ஞாயிறு இரவு 9.30 மணி ! இருவரும் " ஒரே சமயத்தில் " இந்த பூமியில்தான் பேசிக் கொள்கிறோம் .இந்த இரண்டு இடங்களிலும் பூமி சூரியனைச் சுற்றி வரும் காலத்தைக் கொண்டு கணிக்கப்பட்ட கடிகாரங்கள்தான் இயங்கிக் கொண்டிருக்கின்றன.
ஆனால் நாம் கணித்த காலம் " ஒரே சமயத்தில் " என்று அர்த்தப்படுத்தப்பட முடியாமல் உனதப்படுகிறது !

பூமியைத் தவிர மற்ற கிரகங்களில் காலம் சரியாக இருக்கிறதா ?

நமது பூமி தன்னத்தானே சுற்றி முடிக்க 24 மணி நேரம் எடுக்கிறது .இது 12 மணி நேரம் பகல் 12 மணி நேரம் இரவு .இப்படியே சூரியனை சுற்றி முடிக்க 365 .25 நாட்கள் எடுக்கிறது .

ஆனால் புதன் கிரகம் தன்னைத்தானே சுற்றி கொள்ள 88 நாட்களாகிறது .அது சூரியனைச் சுற்றி முடிக்க அதே 88 நாட்கள்தான் எடுக்கிறது . புதன் கிரகத்திற்கு 1 நாள் என்பதும் 1 வருடம் என்பதும் ஒன்றே. நாம வகுத்த காலம் புதன் கிரகத்திற்கு செல்லுபடியாகது .

சூரிய குடும்பத்தைத்தாண்டி நட்சத்திரங்களைப் பார்க்கிறோம் .ஒரே பிரகாசத்தில் ஒன்றுக்கென்று அருகாமையில் இரண்டு நட்சத்திரங்கள் தோன்றினாலும் , உண்மையில் அவற்றில் ஒன்று 40 ஒளிவருடம் தூரத்திலும் , மற்றொன்று 400 ஒளிவருட தூரத்திலும் இருக்கலாம் (1ஒளிவருடம் என்பது ஒளி 1 நொடிக்கு 3 லட்சம் கி.மீ பயணிக்கிறது) .அந்த ஒளி அந்த நட்சத்திரங்களிலிருந்து ஒன்றை 40 வருடமும் மற்றொன்றை 400 வருடமும் பயணித்து நம்மை வந்தடைகிறது .

" இப்போது " நாம் பார்க்கும் நட்சத்திரங்கள் 40 வருடத்திற்கும் இன்னொன்று 400 வருடத்திற்கு முந்தய நிலை. " இப்போது " அந்த இடத்தில் அந்த இடங்களில் அந்த நட்சத்திரங்கள் உண்மையில் இருக்கிறதா என்றால் சொல்லமுடியாது . நாம் அந்த நட்சத்திரங்களின் கடந்த காலத்தை நம்முடைய நிகழ்காலத்தில் பார்க்கிறோம் .இது எவ்வளவு பெரிய அபத்தம் . ஆக காலத்தைப் பற்றி ஞானம் நமக்கு சுத்தமாக இல்லை.

ஆனால் இறைவன் தன் திருமறையில் ,
"ஒவ்வொன்றிற்கும் காலம் அவனிடம் குறிப்பிடப்பட்டே இருக்கிறது "
குர்ஆன் (13 : 08)

காலத்தை மாய நதி என்று வர்ணிக்கிறார்கள் .அணை கடந்த வெள்ளம் அழுதாலும் வராது என்பது போல் கடந்து போன காலமும் திரும்ப வராது என்பதற்காக காலத்தை நதியுடன் ஒப்பிட்டிருக்கலாம் .

கிள்று ( அலை) அவர்களிடம் ஒரு மன்னர் " அற்புதமான விஷயங்கள் ஏதேனும் கூறுங்களேன் என்றதும் ,

" இந்த ஊருக்கு வெளியே ஒரு தோட்டத்தைப் பார்த்தேன் .அதன் ஒரு முனை காவாளி , "யாத்ரிகரே இங்கே வாரும் " என்று ஒரு குறிப்பிட்ட அளவு பழங்களை நிறுத்து கொடுத்தான் .நான் பணம் எவ்வளவு என்றேன் .இந்த நாட்டு பாஷா இலவசமாக கொடுக்கச் சொன்னார் என்றான் .அந்த தோட்டத்தின் மறுமுனையில் இன்னொரு காவாளி இனிப்பு பொட்டலம் கொடுத்தான் . பணம் எவ்வளவு என்று அதே கேள்வி கேட்டேன் அவனும் முதல் காவாளி சொன்ன பதிலையைச் சொன்னான் .

500 வருடங்கள் கழித்து அந்த இடத்திற்கு வந்து பார்த்தபோது தோட்டம் இல்லை பெரிய நதி ஓடிக் கொண்டிருந்தது . தோட்டத்தைப் பற்றி விசாரித்தேன் .தங்கள் முகாதையர்கள் காலத்தில் கூட நீங்கள் குறிப்பிடும் தோட்டம் இல்லை என்றனர் .

பின் 500 வருடங்கள கழித்து அந்த இடத்திற்கு வந்து பார்த்தபோது அங்கு நதி இல்லை பெரிய வறண்ட காடு இருந்தது . நதியைப் பற்றி விசாரித்தேன்
நதி ஒன்றும் இல்லை இந்த வறண்ட காடுதான் உண்டு .இங்கு ஊற்று தோண்டிதான் குடிநீரை பெறுகிறோம் .தங்கள் முதாதையர்கள் காலத்தில் கூட நீங்கள் குறிப்பிடும் நதி ஓடியதாக இல்லை என்றனர் .

பின் 500 வருடங்கள கழித்து அந்த இடத்திற்கு வந்து பார்த்தபோது , ஆரம்பத்தில் அதாவது 1500 வருடங்களுக்கு முன்பு பார்த்த அதே தோட்டம், அதே இலவச பழம் , அதே இனிப்பு, அதே காவாளிகள் அவை இலவசமாகக் கொடுத்துக் கொண்டிருந்தனர் .

அவர்கள் அருகில் சென்றதும் ,என்ன விலை என்று கேட்டேன் .அதற்கு "போப்பா நேற்று நீ இங்கு வந்த போதுதான் சொன்னேனே , இந்த வழியாக செல்பவர்களுக்கு இந்த நாட்டு பாதுஷா இலவசமாக பழம் கொடுக்கச் சொன்னார் என்று திரும்பவும் அதே கேள்வியைக் கேட்டுக் கொண்டு, பேசாமல் வாங்கிட்டுப் போ !

எனக்கு 1500 வருடங்கள் ஆன காலம் இத் தோட்டக்காவலாளிகளுக்கு ஒரு நாள்தான் ஆகிறது " என்று கிள்று நபி (அலை) கூறி முடித்தார்கள்

ஆதாரம் : மல்ஃபூழாத்தே ஃபகீஹுல் உம்மத் பாகம் 1 பக்கம் 67

இந்த மாதிரி இப்பூமியில் இடங்கள் மாறி போயிருக்கிறதா என்று விஞ்ஞானத்தின் மூலம் ஆய்வு செய்த போது ,

அமெரிக்க கண்டத்தில் மத்தியப் பகுதியில் " டகோட்டா " என்ற மாகாணத்துக்கும் கடலுக்கும் துளி கூட சம்மந்தமே இல்லை .ஆனால் அங்கு மணல் படுக்கையில் 7 கோடி ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த ராட்சச கடல் ஆமையின் ஓடு மற்றும் எலும்புகள் கிடைத்தது .

சீனாவில் உரும்கி நகரில் 2 மீட்டர் ஆழத்தில் பாறைகள் தென்பட்டன. அதில் கருமை நிறத்தில் பெரிய மீன்களின் புதைபடிவங்கள் சித்திரம் போல் தீட்டப்பட்டிருந்தன . இந்த உரும்கிக்கும் கடலுக்கும் சம்பந்தமே இல்லை.

கிள்று (அலை) அவர்களின் சம்பவங்கள் விஞ்ஞானத்தோடு ஒத்துப் போகிறது .

ஜூனைதுல் பாக்தாதி (ரஹ்) அவர்களின் சீடர் ஈராக் தஜ்லா நதியில் சுபுஹ் தொழுகைக்கு பாங்கு கூறியதும் குளிக்கச் செல்கிறார் . ஆடையை கரையில் வைத்து விட்டு ஒரு முங்கு போட்டார் .அவ்வளவுதான் அவர் கண்டம் விட்டு கண்டம் தாண்டி வேறு ஒரு நாட்டில் உள்ள ஆற்றிலிருந்து வெளியேறுகிறார் . ரொம்ப காலமாக அங்கே வாழ்கிறார் . தொழுகிறார் .பல காலமாக நோன்பு நோற்கிறார் .

ஒருநாள் அங்கே யதார்த்தமாக குளிப்பதற்கு அங்குள்ள நதியில் ஒரு முங்கு போடுகிறார் அவ்வளவுதான் அவர் முன்பு குளித்த ஈராக் தஜ்லா நதியில் அதே நாளில் எழுகிறார் .அவர் கரையில் வைத்த துணி கூட அப்படியே இருந்தது. இன்னும் சுபுஹ் தொழகை கூட நடக்கவில்லை .உடனே குளித்து விட்டு தொழுகையில் கலந்து கொள்கிறார் .

இது பற்றி தன் ஷைகான ஜூனைதுல் பக்தாதி (ரஹ்) அவர்களிடம் கூறிய போது " சில சமயம் சாதகருக்கு கூட இப்படியான ஒரு அந்தஸ்து கிடைக்கிறது அதில் கொஞ்ச காலத்தில் பல காலம் வணங்கும் பாக்கியமும் வாய்ப்பும் கிடைக்கிறது .

இந்நிகழ்வு விஞ்ஞானத்தில் சாத்தியமாகிறதா ... என்றால் சாத்தியம்.

எங்கும் விரிந்த அண்டவெளியில் சதாசர்வ காலமும் வெற்றிடத்தில் அணுவுக்குள் அணுவின் நுண்துகள் தோன்றி மறைந்தபடி உள்ளன ஒன்றுமே இல்லாத சூன்யத்தில் இருந்து திடீரென்று ஒரு துகளும் அதன் எதிர் துகளும் ஒரே இடத்தில் தோன்றி ஒன்றுடன் ஒன்று கலந்து பின் ஒன்றை ஒன்று வெட்டிக் கொண்டும் ஒன்றுமே இல்லாத சமநிலையை அடைகிறது .
இந்த சமநிலையில் "புழுத் துளை"
( warm Hole ) ஏற்படுகிறது .

பூமியில் குறுக்கு வழியில் பயணிப்பது போல் காலத்திலும் ஒரு குறுக்கு வழி உண்டு அதுதான் இந்த புழுத் துளை.
புழுத் துளை வழியாக இன்னொரு காலத்திற்குள் பிரவேசிக்கலாம் முன்பொரு காலத்தில் வாழ்ந்த மக்களோடு வாழலாம் . உங்களின் பாட்டனாரைக் கூட பார்க்கலாம் .

ஜூனனதுல் பாக்காத் சீடருக்கு இந்த புழுத் துளை வழியாகத்தான் பயணத்திருக்கலாம் .

காலம் ஒரு மாய நதி. அது இரு கரைகள் இல்லாமல் கூட நகர்கிறது .சில சமயம் மண்ணிலிருந்து கிளம்பி விண்ணை நோக்கிக் கூட பாய்கிறது !

ர.ரா

## கனவுலக நிஜங்கள் 14
## (கனவைப் பற்றி அறிவியலும் ஆன்மீகமும் ) 24-04-2020



கனவுகள் வரக்கூடிய தூக்கத்தைப் பற்றி முதலில் ஆய்வு .

தூக்கம் வட்டம் (**Sleep cyele** ) என்பது நாம் பகலில் வேலை செய்யும் போது , நம் உடலிலுள்ள செல்கள் பல தேய்வுற்று பழுதடைகின்றன.

நாம் இரவில் தூங்கும் போது பழுதுள்ள செல்கள் புதுப்பிக்கப்படுகின்றன . புதுப்பிக்க ஒரு குறிப்பிட்ட நேரம் தேவைப்படுகிறது . இதை ஒரு வட்டம் என்கிறார்கள் விஞ்ஞானிகள் . இப்படி ஒரிரு சுற்று முடிந்த பிறகு அதிகாலைப் பொழுதில் தூக்கம் சற்று நீங்குகிறது . இந்த அதிகாலைப் பொழுதில் தூக்கம் நீங்கியதும் நமது செல்களுக்கு ஆரோக்கியமான நல்ல காற்றும் அந்த அதிகாலைப் பொழுதில் தேவைப்படுகிறது . அந்த நேரம் சுபுஹ் வஃது நேரம் .

தூக்கம் என்பது நமது வெளிப்புற நடவடிக்கைகளின் தற்காலிக நிறுத்தம் .
தூங்கும் போது வெளிப்புறச் செய்திகள் மூளைக்குப் போவதில்லை . இதனால் நம் மூளை செயலிழந்து இருக்கிறது என்று அர்த்தமில்லை .' பாஸ் , தன் உதவியாளரான மூளைத் தண்டை உஷார்படுத்தி விட்டுத்தான் ரெஸ்ட் எடுப்பார் .

தூக்கத்தின் போது மூளைத் தண்டில் "விழிப்பு உணர்ச்சி நெட்வொர்க்" பாஸ் கண்காணிப்பு இல்லாத குறை தெரியாத அளவில் முழு அளவில் இயங்கிக் கொண்டுதான் இருக்கும் .

இதில் 'ஹிப்போகேம்பஸ் ' என்கிற இப்பகுதி முழுச்சுறுசுறுப்புடன் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது . விழித்திருக்கும் போது நடந்த அனுபவங்களை அலசி ஆராய்ந்து நினைவில் பதித்துக் கொள்ள வேண்யவற்றை மூளை தேர்ந்தெடுப்பது தூக்கத்தின் போதுதான் . இந்த நேரத்தில்தான் நீங்கள் நினைக்காத , பார்க்காத , அனுபவித்திருக்காத சில செய்திகள் எங்கிருந்து வந்தோ தெரியவில்லை அதையும் கூட்டி சம்பவங்களாக மாற்றி ஹிப்போ கேம்பஸ் பகுதிக்கு திரையிட வருகிறது. இதுவே கனவாக தெரிகிறது .

இந்த செய்திகளின் சம்பவங்கள் நடக்கிற மாதிரியே நமது மனதை நம்பும்படி மூளை செய்து விடுகிறது. "அட , கள்ளி இது உன் வேலைதானா ? என்று விழித்து உணர்வு பெற்றதும் விளங்கி விடுகிறது .

இந்த கனவு செய்திகளின் பிறப்பிடம்தான் எங்கே ? யாரப்பா இந்த செய்திகளை தொகுத்து எடிட் டெல்லாம் செய்து கனவு படத்தை ஓட்டியது ? (சில நேரத்தில் ரீல் அந்தும் போகும்) படத்தை ஒட்டுவது யார் என்றால் விஞ்ஞானத்தில் பதில் இல்லை.

உடனே விஞ்ஞானம் சப்பைக்கட்டு கட்டி பழையபடி தூக்கத்தைப் பற்றி பேசுகிறது

தூக்கம் இரண்டு வகை
1) REM - Rapaid Eye movement
2) NREM - Non - Rapaid Eye movement

REM - தூக்கம் , மூடிய இனமக்குள் விழிகள் உருண்டபடி இருக்கும் . நீங்கள் சாதாரணமாக தூங்கினால் ஒவ்வொரு மணி நேர இடைவெளி விட்டு மூன்று நான்கு தடவை REM தூக்கம் வரும்.

இந்த REM தூக்கத்தில்தான் படு சந்தோஷமான நிகழ்ச்சி நிரல்கள் கனவுகளாக தெரியும் . ' பெட்டியைத் திறந்தால் கத்தை கத்தையாக கொரோனா தொற்று இல்லாத அமெரிக்க டாலர் ! சந்தோஷம்தானே ?

NREM - அப்படி இல்லை , கெட்ட கெட்ட கனவுகள் , தலைமுடியை விரித்து போட்டு "நானே வருவேன் ... என்ற பாட்டை சிக்கலில்லாமல் பாடிக்கிட்டே ஒரு பெண் வரும். அல்லது யானை துரத்தி அடிக்கும் . மரத்தில் ஏறினாலும் பிடித்து இழுத்து ....

... இந்த மாதிரி கெட்ட கனவு கண்டால் இடது பக்கம் திரும்பி , "அவூது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம் " என்று மூன்று முறை பக்கத்தில் படுத்திருக்கும் மனைவி மூஞ்சி மேலே துப்பாமல் , லேசாக வேறு பக்கமாக திரும்பி துப்ப வேண்டும் .

இஸ்லாத்தில் கனவுகளைப் பற்றி ஆராயும் போது , ' கனவு என்பது இவ்வுலக நிலைகளுக்கு அப்பாற்பட்டு , ரூஹுக்கு ஏற்படும் ஒரு நிலையாகும் .

கனவு 2 தோன்றுவதற்கு காரணங்களை இஸ்லாம் வரையறை செய்கிறது .

1 ) மலக்குகளின் தூண்டுதலினால் ஏற்படுவது .

2) ஷைத்தானின் தீண்டுதலினால் ஏற்படுவதும்

மலக்குகள் தூண்டுதலினால் ஏற்படும் கனவு பொருள் பொதிந்ததாகவும் , முன்னறிவிப்புச் செய்யத்தக்கதாகவும் இருக்கும் .

ஷைத்தானின் தீண்டுதானால் ஏற்படும் கனவு அர்த்தமற்றதாகவும் , ஆசையைத் தூண்டுவதுமாகவும் இருக்கும்.

விஞ்ஞான ரீதியில் சொன்னால் மலக்குகளால் ஏற்படும் கனவு REM தூக்கத்திலும் , ஷைத்தானின் தீண்டுதானால் ஏற்படும் கனவு NREM தூக்கத்திலும் ஏற்படுகிறது .

கனவு டைரியில் எழுதி வைத்துக் கொள்ளுங்கள் .

சந்திரன் பிறை பிறந்ததும் துல்லியமாக கணித்து வைத்துக் கொண்டு ...

பிறை 6, 7 ,8 , 9, 10 , 15 , 16 ,19 , 26 ,27 , 30 ஆகிய பிறை தேதிகளில் காணும் கனவு துரிதமாய் பலன் தரும் .

பிறை : 4 , 5 , 11, 12 , 17 ஆகிய பிறை தேதிகளில் காணும் கனவு தாமதமாய் பலன் தரும் .

பிறை : 13, 21 ,22 , 24 ஆகிய தேதிகளில் காணும் கனவு நன்மையாயினும் , தீமையாயினும் அது உண்மையாக வெளிப்படும் என்று நம்ப வேண்டும் .

ர.ரா

கனவுலக நிஜங்கள் (பாகம் 9 ) 23-04-2020

இப்னு ஸீரீன் ரஹ் அவர்களிடம் ஒருவன் வந்து , தான் பாங்கு சொல்வதாகக் கனவு கண்டேன் என்று கூற " உன்னுடைய கை வெட்டப்படும் " என்று கூறினார்கள்

சற்று நேரத்தில் இன்னொருவர் வந்து ,தான் பாங்கு சொல்வதாகக் கனவு கண்டேன்" என்று கூற " நீர் ஹஜ்ஜு செய்வீர்கள் என்று கூறினார்கள்

இரண்டையும் கேட்ட அவரது நண்பர்கள் " "இருவரும் ஒரே மாதிரியான பாங்கு சொல்வதாகக் கனவு கண்டதை தாங்கள் அவ்விருவருக்கும் வெவ்வேறு விதமான விளக்கங்கள் அதெப்படி ?

முதலாமனின் முகத்தில் தீமையின் அடையாளத்தை கண்டேன்
இரண்டாமவரின் முகத்தில் நன்மையின் அடையாளத்தை கண்டேன் அவ்வளவுதான் என்றார்கள்
அதன்படியே கொஞ்ச காலத்தில் நடந்தது

கனவில் பாங்கு சொல்வதை கை வெட்டப்படுவதாகவும்
ஹஜ்ஜு செல்வதாகவும் வெவ்வேறு அர்த்தங்கள் மொழிபெயர்ப்பு செய்யப்படுகிறது
நன்கு கவனிக்கவும்.

ர.ரா

கனவுலக நிஜங்கள் (பாகம் 7 ) 23-04-2020

அமெரிக்கவின் அதிபராக இருந்த ஆப்ரஹாம் லிங்கன் ஒரு கனவு கண்டார்

ஜனாதிபதி மாளிகையில் எல்லோரும் அழுது கொண்டு இருக்கிறார்கள் லிங்கன் அவர்களைப் பார்த்து ஏன் அழுகிறீர்கள் ? எனக் கேட்கிறார் உடனே அவர்கள் உங்களுக்குத் தெரியாதா . . ஜனாதிபதி இறந்து விட்டார் என்று சொல்லி விட்டு மறுபடியும் அழுகிறார்கள்

லிங்கன் இப்படியொரு கனவு கண்டார் அந்த கனவுக்கு அவர் எந்த முக்கியத்துவமும் கொடுக்கவில்லை ஆனால் தன்னுடைய டைரியில் மட்டும் அதைக் குறித்து வைத்தார்

இந்த கனவு கண்ட சில தினங்களுக்குள்ளாகவே ஒரு நாள் தியேட்டரில் நாடகம் பார்த்துக் கொண்டு இருந்த போது , ஜான்பூத் என்ற நாடக நடிகனால் சுட்டுக் கொள்ளப்பட்டார்

அந்த நடிகன் ஏன் சுட்டான் என்ற கேள்விக்கு இன்று காலை வரை பதில் இல்லை .

இந்த நிகழ்ச்சி எப்படி அவருக்கு கனவாக முன்பே காட்டப்பட்டது ?
அப்படி இருந்தும் ஏன் அவரின் பாதுகாப்பை அவர் அதிகப்படுத்தவில்லை?
என்பனவற்றையெல்லாம் கனவியல் ஆய்வாளர்கள் இன்னும் ஆய்வு செய்து கொண்டு இருக்கிறார்கள்

கனவு குறித்து லிங்கன் எழுதிய டைரி இன்னும் வெள்ளை மாளிகையில் கேள்விகள் பல கேட்டுக் கொண்டே இருக்கிறது . பதில்தான் யாருக்குமே தெரியவில்லை .

கனவுலக நிஜங்கள் ( பாகம் 6 ) 23-04-2020

1966 -ம் ஆண்டு அக்டோபர் 21 ந் தேதி
பிரிட்டனில் அபெர்ஃபேன் என்னும் கிராமத்து ஒன்பது வயது சிறுமி எரில் ஜோன்ஸ் அந்த கிராமப் பள்ளியில் படித்து வருகிறாள் .

அந்தச் சிறுமி ஹோம் ஓர்க் செய்து கொண்டே , தன் தாயிடம் , "அம்மா நேற்று இரவு ஒரு கனவுக் கண்டேன் . அதில் நான் பள்ளிக்கூடம் போகிறேன் . ஆனால் அங்கு பள்ளிகூடமே இல்லை.
மிகப் பெரியதொரு கருப்பு மேகம் கீழே வந்து ஸ்கூலை மூடிக்கொண்டு விடுகிறது .

நான் அதில் சிக்கிக் கொண்டு செத்துபோவது மாதிரி இருக்கிறது. ஆனால் சாகிறேமே என்கிற பயம் எதுவும் ஏற்படவில்லை ! நானும் என்
ஃப்ரெண்ட்ஸ் ரெண்டு பேரும் கைகோத்தவாறு சொர்க்கத்துக்குப் போகிறோம் " .

அம்மாவிடம் சொல்லிய கையோடு அந்தச் சிறுமி தன் டைரியிலும் அந்தக் கனவை எழுதி அந்த கரும் மேகத்தையும் கருப்பாக வரைந்து வைக்கிறாள் .

அதைக் கண்ட தாய் , "பைத்தியக்காரத்தனமாக எதையாவது கற்பனை செய்து கொள்ளாதே , நிறைய சினிமா பார்த்தால் இப்படித்தான் கெட்ட கனவுகள் வரும் ! என்று ஆறுதல் சொன்னாள் .

மறுநாள் பிரிட்டனில் அபெர்ஃபேன் கிராமத்தில் மிகப் பெரிய நிலக்கரிச் சுரங்கம் உண்டு .மில்லியனுக்கும் மேலான டன்கள் நிலக்கரியை ஒரு சிறு மலைப் பகுதியில் சேமித்திருந்தார்கள் அதன் அடிவாரத்தில் சில வீடுகள் , ஒரே ஒரு பள்ளிக்கூடம்.

அக்டோபர் 21 ந் தேதி , திடீரென சிறிய அளவு நிலநடுக்கத்தால் அந்த மலை பிளந்து கொள்ள கருங்கடலைப் போல நிலக்கரி சரிய , மொத்த பள்ளிக் கூடமும் அடியோடு அதற்குள் அமிழ்ந்து 139 பேர் பலியானார்கள். அதில் சிறுமி எரில் ஜோன்ஸும் ஒருவள்.

பிற்பாடு , அந்த கிராமத்துக்குப் போய் எல்லா விஷயங்களையும் சேகரித்த நிருபர்களில் ஒருவர் அங்கே தனியாக உருவெடுத்த இடுகாட்டுக்குச் சென்ற போது திகைப்போடு ஒன்றைச் சுட்டிக் காட்டினார் .

எரில் ஜோன்ஸ் கல்லறைக்கு அந்தப் பக்கமும், இந்தப் பக்கமும் , முன்பு அவள் தாயிடம் குறிப்பிட்ட அந்த இரு ஃப்ரெண்டு களின் கல்லறைகள் ... எரிலோடு கைகோத்துக் கொண்டது போல !

அந்தச் சிறுமியின் டைரி இன்னும் பாதுகாக்கப்படுகிறது அந்தப் பள்ளிக்கூடத்தில்

கனவுலக நிஜங்கள் (பாகம் 2 )
(கனவுகளும், குரல்களும் )

அண்ட வெளியில் குரல்கள்
( VOICE FROM THE UNIVERSE ) 23-04-2020




- சுவிடன் நாட்டு ஜிர்கென்சன் என்ற ஆய்வாளர் எழுதிய புத்தகம் ரொம்பவும் சுவராசியமானது .

இறந்தவர்களை புதைத்தப் பிறகோ , அவர்கள் மண்ணோடு மண்ணாகி மக்கிய பின்போ அவர்களின் குரல்களை நீங்கள் கேட்டிருக்கிறீர்களா ...?

அதெப்படி அவர்களால் பேச முடியும் ? அதை நாம எப்படி கேட்க முடியும் ? என்று நீங்கள் கேட்பது புரிகிறது .

ஆனால் "முடியும் " என்கிறார் ஜிர்கென்சன் .

இந்த ஆய்வு நூலின் விஞ்ஞானி ஜிர்கென்சன் இசை ஆர்வம் உள்ளவர். மனித சஞ்சாரமற்ற காடுகளிலும் மலைப் பிரதேசங்களிலும் பல சப்த ஒலிகளை டேப் ரிக்கார்டு மூலம் பதிவு செய்தார் .

அவற்றை பொறுமையாக வீட்டில் போட்டுக் கேட்ட பொழுது சில வித்தியாசமான குரல்கள் ஒலிப்பதைக் கேட்டார் . நிச்சயமாக அது பறவைகளின் குரல்கள்களோ, மிருகங்களின் குரல்களோ அல்ல என்பதையும் மெல்ல மெல்ல புரிந்து கொண்டார் .

மீண்டும் ஏகாந்தமான பல வனாந்திர வெளியில் பறவைகள் இல்லாத இடங்களில் டேப்பை ஓடச் செய்தார். இப்படி நூற்றுக்கணக்கான முறை ஆய்வு செய்தார் .அதில் பல வித்தியாசமான குரல்கள் டேப்பில் பதிவானது.

சில சமயங்களில் ஆராய்ச்சியாளரது இறந்து போன நண்பர்கள் மற்றும் உறவினர் குரல்களும் பதிவாயின . மேலும் முகம் தெரியாத பல மனித குரல்களும் பதிவாயின. மற்ற விஞ்ஞானிகள் இவரின் ஆய்வை

பரிசோதனை செய்து ஒத்துக் கொண்டுள்ளனர். ஜிர்கென்சன் தாம் செய்த ஆய்வை நம்மையும் செய்யத் தூண்டுகிறார் . நீங்கள் தயாரா ?

" (நிராகரித்துக் கொண்டிருக்கும்) அவர்களில் எவனுக்கும் மரணம் வந்தாலோ (அவன் தன் இறைவனை நோக்கி) "என் இறைவனே! என்னை (உலகத்திற்கு) திரும்ப அனுப்பிவிடு.

நான் விட்டு வந்த அ(ந்த உலகத்)தில் (இனி) நல்ல காரியங்களையே நான் செய்து கொண்டிருப்பேன்" என்று கூறுவான். (எனினும்,) அது ஆகக்கூடிய காரியமன்று. (இத்தகைய சந்தர்ப்பங்களில்) அவன் கூறக்கூடியது வெறும் வார்த்தையே (யன்றி வேறில்லை) அவர்களுக்கு முன் ஓர் அரண் ஏற்பட்டு விடும். (உயிர் கொடுத்து) எழுப்பப்படும் நாள் வரையில் அதில் தங்கிவிடுவார்கள் ."
(குர்ஆன் : 23: 99,100)

நாம் உலகில் ரூஹும் உடலும் இணையப் பெற்று வாழ்வதைப் போன்று, அவர்களும் ஆலம் பர்ஜக்கேற்ற (மண்ணறையில்) முறையில் ரூஹும் , உடலும் இணையப் பெற்று வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் எனினும் அது நம் உடலைப் போன்று அல்ல .

ஹஜ்ரத் ஸஃது இப்னு ஜிதாமா (ரலி ) அவர்களும் , ஹஜ்ரத் அவ்பு இப்னு மாலிக் (ரலி ) அவர்களும் உற்ற நண்பர்கள் இருவரில் யார் முதலில் மரணம் அடைந்தாலும் இருப்பவரின் கனவில் வந்து அங்குள்ள நிலவரம் பற்றி சொல்ல வேண்டும் என்ற முடிவு செய்திருந்தனர்.

ஸஃது (ரலி ) அவர்கள் முதலில் இறந்து அவ்பு (ரலி) அவர்களின் கனவில் தோன்றி , பல கஷ்டங்களுக்குப் பிறகு எனக்கு மக்ஃபிரத் கிடைத்தது என்பதை சொல்லும் போது , ஸஃது (ரலி) நினைவில் நேரில் வந்து சொல்வது போல் இருந்ததாம் அவ்பு (ரலி) அவர்களுக்கு .

ஸஃது கழுத்தில் கரு நிறக் கோடு இருந்ததைப் பற்றி அவ்பு விசாரித்தார்கள்.

அதற்கு ஸஃது , " இன்ன யூதனுக்கு 10 அஷ்ரப் காசுகள் கடன் கொடுக்க வேண்டும். என் வீட்டில் இன்ன இடத்தில் அந்த காசுகள் இருக்கிறது அதை எடுத்து அந்த யூதனுக்கு கொடுத்து விடவும் .

என் மரணத்திற்குப் பிறகு என் வீட்டில் நடந்த சகல காரியங்களும் எனக்கு தெரியும் ; நான் வளர்த்த பூனை இறந்தது உட்பட எனக்கு எல்லாமே தெரியும் , இன்னும் 6 நாட்களில் என் அன்பு மகள் இறக்கப் போவதையும் என் வீட்டில் தெரிவித்து விடுங்கள் " .

ஸஃது இட்ட கட்டளைகளை அவ்பு நிறைவேற்றினார்கள். பூனை இறப்பும் சரியாக இருந்தது , அதே மாதிரி 6 நாட்களில் அவருடைய மகள் இறப்பும் துள்ளியமாக நடந்தது .
(ஆதாரம் உயூனுல் ஹிகாயத்)

அண்டவெளியில் மரணித்த ஆத்மாக்களால் சலனத்தை ஏற்படுத்த முடியும் என்பது மட்டும் அல்லாமல் உயிருடன் இருக்கும் நம்முடைய ஆன்மாக்களும் அண்ட வெளியில் சலனத்தை ஏற்படுத்துகிறது .

உமர் (ரலி) அவர்கள், அலீ (ரலி) அவர்களிடம் " ஹஸனின் தந்தையே ! ஒருவர் கனவு கண்டால் சில உண்மையாகவும் , சில பொய்யாகவும் ஆகிவிடுகின்றனவே , இது பற்றி தங்கள் கருத்து என்ன ?

" ஆம் , இது பற்றி நபி (ஸல்) அவர்கள் கூற நான் செவியுற்றிருக்கின்றேன் .

" அதாவது தூங்கக் கூடிய ஆண் , பெண்களின் ஆன்மாக்கள் அண்டவெளியைக் கடந்து , அல்லாஹ்வின் அர்ஷு வரை சென்று பின்பு விழிப்படைகிறதோ அந்த ஆன்மா கண்ட கனவு விஷயங்களனைத்தும் நிச்சயம் நடந்தேறும் .

இன்னும் எவர் ஆன்மா அர்ஷு வரை செல்லாத நிலையில் விழிப்படைகிறதோ அந்த கனவு பொய்க் கனவாக ஆகிவிடுகிறது
ஆதாரம் - முஸ்தத்ரக் ஹாகிம்.

ர.ரா

கனவுலக நிஜங்கள். ( பாகம் 1 ) 23-04-2020



நபிகள் நாயகம் ﷺ அவர்கள் நல்ல கனவைப் பற்றிக் குறிப்பிடும்போது 'கனவு நபித்துவத்தின் நாற்பத்தாறில் ஒரு பாகம் ' எனவும் "நபித்துவம் என்னோடு முற்றுப்பெற்று விட்டது. ஆனால் நற்செய்தி அளிக்கும் நல்ல கனவுகள் எஞ்சி நிற்கும் " என்றார்கள்

தி இந்து 05 ஜூலை 2018 ....

இந்தோனேஷியாவில் ஒன்றரை வருடங்களுக்கு முன்பு காணாமல் போன பெண், தொலைந்துபோன இடத்திலேயே மீண்டும் கிடைத்திருக்கிறார். காணாமல் போனபோது அணிந்த உடைகளையே அணிந்திருந்தார். 52 வயது நைனிங் சுனார்ஷி, சுற்றிப் பார்ப்பதற்காக மேற்கு ஜாவாவில் உள்ள சைட்பஸ் கடற்கரைக்குச் சென்றிருந்தார். அலைகளில் கால்களை வைத்துக்கொண்டு நின்றிருந்தபோது எதிர்பாராமல் ராட்சத அலை அவரை இழுத்து சென்றது. பெரிய அலைக்கு நடுவே ஒரு பெண்ணின் கைகள் உதவி கேட்டு கத்தியதைக் கடற்கரையில் இருந்தவர்கள் பார்த்திருக்கிறார்கள்.

யாராலும் பாய்ந்து சென்று காப்பாற்ற முடியவில்லை. காவல் துறைக்கு தகவல் தெரிவிக்கப்பட்டது. மீட்புப் படையினர் வந்து நாள் கணக்கில் தேடிய போதும் நைனிங் எங்கே போனார் என்றே தெரியவில்லை. ஒரு வாரத்துக்குப் பிறகு ஓர் உடலைக் கண்டுபிடித்தார்கள். நைனிங் குடும்பத்துக்கு தகவல் தெரிவிக்கப்பட்டது. உடல் மிக மோசமாக சேதமடைந்திருந்தபோதும் இவர் இல்லை என்பதை உறுதியாகச் சொல்லிவிட்டனர்.

ஆனால், அவராகத்தான் இருக்கும் என்று மீட்புப் படையினர் கூறினர். பிறகு டிஎன்ஏ பரிசோதனை மேற்கொள்ளப்பட்டது. அதில் நைனிங் இல்லை என்பது உறுதியானது. இனியும் அவர் உயிருடன் இருக்க வாய்ப்பில்லை என்று கூறி, மீட்புப் படையினர் தேடுதலைக் கைவிட்டனர். எங்கோ உயிருடன் இருக்கிறார், என்றாவது திரும்பி வருவார் என்ற நம்பிக்கையில் குடும்பத்தினர் வாழ்ந்து வந்தனர்.

சில நாட்களுக்கு முன்பு நைனிங்கின் மாமா, பாலபுஹன்ராட்டு கடற்கரையில் ஒரு பெண் திரும்பி வருவதாகக் கனவு கண்டார். முதலில் அதைப் பெரிதாக அவர் எடுத்துக்கொள்ளவில்லை. ஆனால் அடுத்தடுத்த நாட்களில் அதே கனவு வந்ததால் குடும்பத்தினரிடம் தெரிவித்தார். உடனே எல்லோரும் அந்தக் கடற்கரைக்குச் சென்றனர். நைனிங் தொலைந்துபோன கடற்கரையில் இருந்து வெகு அருகில் இருந்தது இந்தக் கடற்கரை. நீண்ட நேரம் காத்திருந்தும் அங்கே யாரும் வரவில்லை. ஏமாற்றமாக இருந்தது. மறுநாள் வீடு திரும்பலாம் என்று முடிவெடுத்தனர். ஞாயிற்றுக்கிழமை, காணாமல் போய் மிகச் சரியாக ஒன்றரை வருடம் கழித்து கடற்கரையில் மணலால் மூடப்பட்டு ஒருவர் கண்டுபிடிக்கப்பட்டார். உடனே குடும்பத்தினர் ஓடிவந்தனர்.

தொலைந்து போனபோது என்ன உடைகளை அணிந்திருந்தாரோ, அதே உடைகளுடன் நைனிங் சுயநினைவின்றி கிடந்தார். எல்லோருக்கும் ஆனந்த அதிர்ச்சியாக இருந்தது. அவரை வீட்டுக்கு அழைத்து வந்து, சுத்தம் செய்து படுக்க வைத்தனர். சுயநினைவு இல்லாததாலும் உடல் மிகவும் பலவீனமாக இருந்ததாலும் மருத்துவமனையில் சேர்த்தனர். இப்போதைக்கு இவரது உடல் பலவீனமாக இருந்தாலும் பெரிய அளவில் பாதிப்பு எதுவும் இல்லை. விரைவில் குணமாகிவிடுவார் என்று மருத்துவர்கள் தெரிவித்திருக்கிறார்கள். நைனிங் நினைவு திரும்பிய பிறகுதான் அவர் காணாமல் போய், திரும்பி வந்தது எப்படி என்ற விஷயம் தெரியும். ஆனால் அதைப் பற்றி எங்களுக்கு கவலை இல்லை, எங்கள் அம்மாவுக்கு தெய்வீக சக்தி இருப்பதால்தான் மீண்டும் திரும்பி வந்திருக்கிறார் என்கிறார்கள் இவரது குழந்தைகள். அட, என்ன ஓர் அதிசயம்!

اَللّٰهُ يَتَوَفَّى الْاَنْفُسَ حِيْنَ مَوْتِهَا وَالَّتِىْ لَمْ تَمُتْ فِىْ مَنَامِهَا فَيُمْسِكُ الَّتِىْ قَضٰى عَلَيْهَا الْمَوْتَ وَ يُرْسِلُ الْاُخْرٰٓى اِلٰٓى اَجَلٍ مُّسَمًّى اِنَّ فِىْ ذٰ لِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّتَفَكَّرُوْنَ

மனிதர்கள் இறக்கும்பொழுதும், இறக்காமல் நித்திரையில் இருக்கும்பொழுதும் அல்லாஹ்வே அவர்களுடைய உயிரைக் கைப்பற்றுகிறான். பின்னர், எவர்கள் மீது மரணம் விதிக்கப்பட்டதோ அவர்களுடைய உயிரை(த் தன்னிடமே) நிறுத்திக் கொள்கிறான். மற்றவர்க(ளின் உயிர்க)ளை, குறிப்பிடப்பட்ட காலம் வரையில் வாழ அவன் அவர்களிடமே அனுப்பி விடுகின்றான். சிந்திக்கக் கூடிய மக்களுக்கு, நிச்சயமாக இதில் பல

படிப்பினைகள் இருக்கின்றன.
(அல்குர்ஆன் : 39:42)

‘ஒவ்வொரு மனிதனுக்கும் நஃப்ஸ் (ஆத்மா)-வும், ரூஹ் (உயிர்)- ம் உள்ளன. நஃப்ஸில் உணரும் தன்மையும் அறிவும் உள்ளன. ரூஹில் அசையும் தன்மையும் மூச்சு வாங்கும் தன்மையும் உள்ளன. மனிதன் தூங்கும் போது அல்லாஹ் நஃப்ஸை மட்டுமே கைப்பற்றுகிறான். ரூஹை கைப்பற்றுவதில்லை. ரூஹ் தனது அசையும் தன்மையால் அந்நேரத்தில் சுற்றித் திரிகிறது. அப்பொழுது அந்த ரூஹிற்கு மற்ற ரூஹ்களுடன் நடைபெறும் சம்பாஷனைகள் மற்றும் நிகழ்ச்சிகளே கனவுகளாகும்.
இப்னு அப்பாஸ் (ரலியல்லாஹு அன்ஹு) (நூல் : குர்துபி)

சிந்தனை.

மஃரிஃபா என்னும் ஞானத்தின் முதல் படியே படைப்பினங்களைச் சிந்தனை செய்வதாகும் .

"ஒரு மனிதனுக்கு சிந்தனை செய்வதாக இருந்தால் உலகின் ஒவ்வொரு பொருளிலும் அவனுக்கு நிறைய படிப்பினைகள் இருக்கிறது "

வானங்கள் , பூமி அவ்விரண்டிமுள்ள பொருட்கள் அனைத்தையும் சிந்தனை செய்பவர்கள்தான் புத்திசாலிகள் என்பதாக அல்லாஹ் குர்ஆனில் குறிப்பிடுகின்றான் .

"சற்று நேரம் சிந்தனை செய்வது ஆயிரம் ஆண்டுகள் வணக்கம் புரிவதைவிடச் சிறந்தது ! " என்பதாக நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கூறியுள்ளார்கள் .

" உன்னையே நீ சிந்தித்துப் பார்ப்பது உனக்குப் போதுமானதாகும் " என்று அலீ (ரலி) அவர்கள் கூறியுள்ளார்கள் .

சிந்தனையில் 3 வகை

1) பிறருக்கு உதவி செய்வதில் சிந்தனை செய்வது .- இது ஓராண்டு வணக்கம் செய்வதை விட மிகச் சிறப்பானதாகும் !

2) தன்னுடைய குற்றங்குறைகளைப் பற்றி சிந்தனை செய்வது - இது 70 ஆண்டுகள் வணக்கங்கள் செய்வதை விட மிகச் சிறப்பானதாகும் !

3) அல்லாஹு தஆலாவை தரிசிப்பதற்குரிய ஞானத்தைப் பெறுவதில் சிந்தனை செய்வது ._ இது மனிதர்கள் , ஜின்கள் ஆகியோர் அனைவரும் செய்கின்ற வணக்கங்கள் அனைத்தை விடவும் மிகச் சிறந்ததாகும்!

நபி ஈஸா (அலை) அவர்களிடம் அவர்களுடைய சீடர்கள் , "மர்யமுடைய குமாரரே ...! இக்காலத்தில் தங்களைப் போன்று வேறு எவரேனும் இருக்கிறார்களா ? "

"யார் தன்னுடைய பேச்சை திக்ராகவும், தன்னுடைய மௌனத்தைச் சிந்தனையாகவும் , தன்னுடைய பார்வையை உறுதிப்பாடானதாகவும் ஆக்கிக்கொள்கிறாரோ அவர் என்னைப் போன்றவராவார் "

லுக்மானுல் ஹகீம் அவர்கள் பெரும்பாலும் தனிமையில் இருப்பார்கள்
" நீங்கள் மக்களுடன் சேர்ந்திருந்தால் அவர்களுடன் நேசம் ஏற்படுமே ! "

"தனித்திருப்பது சிந்தனையைத் தூண்டும் . சிந்தனை இறை நெருக்கத்தை தரும் . இறை நெருக்கம் சுவனத்தைப் பெற்று தரும் .

அல்லாஹ்வுடைய அருட்கொடைகளைப் பற்றி சிந்தனை செய்யுங்கள் ; அவனுடைய உள்ளமையைப் பற்றி சிந்தனை செய்ய வேண்டாம். அது குஃப்ரை உண்டாக்கிவிடும் .

உலகத்தைச் சம்பாதிப்பதில் சிந்தனை செய்வது , மறுமைக்குத் தயார் செய்வதை விட்டும் மனிதனைத் தடை செய்து விடும் . ஆனால் மறுமைக்குரிய விஷயங்களில் சிந்திப்பது செழிப்பான வாழ்வை உண்டாக்கி, இதயத்தை உயிர்ப்பிக்கும் .

ர.ரா

சைக்கிள் 22-4-2020

ஐந்து இளம் சீடர்கள் சைக்கிளில் மார்க்கொட்டுக்குச் சென்று பின் ஆசிரமம் திரும்பினார்கள் .குரு ஐந்து பேரையும் அழைத்தார் .

" எதற்காக சைக்கிளை ஓட்டினீர்கள் ?"
என்று ஐந்து பேரிடமும் அவர் கேட்டார்.

முதல் சீடன் : " என்னிடம் நிறைய உருளைக்கிழங்குகள் இருந்தன. அவற்றை சுமக்க சைக்கிளைப் பயன்படுத்தினேன் "

குரு : "நீ புத்திசாலி வயதான காலத்தில் என்னைப் போல் நீ நடப்பதற்குக் கஷ்டப்பட மாட்டாய் "

2 வது சீடன் : "மரங்களையும் செடி கொடிகளையும் பார்க்க சைக்கிளில் சென்றேன் "

குரு : "உன் கண்கள் திறந்திருக்கின்றன. அதனால் நீ உலகத்தை எப்போதும் பார்த்துக் கொண்டிருக்கிறாய் "

3 வது சீடன் : "சைக்கிளில் வருகிற போது நான் மந்திரங்களை உச்சரித்துக் கொண்டு வருவேன் "

குரு : " புதிய சைக்கிளின் சங்கரம் போல் உன் மூளையும் நன்கு வேலை செய்கிறது "

4 வது சீடன் : "எல்லா உயிர்களுடன் நான் ஒன்றிப் போகிறேன் "

குரு : " நல்லது நீ செல்லும் வழி நல்ல வழி. எல்லா சௌக்கியங்களையும் பெறுவாய் "

5 வது சீடன் : " நான் சைக்கிளை ஓட்டுவதற்காக சைக்கிளில் போய் வந்தேன் "

குரு : " உன்னிடம் நான் கற்றுக் கொள்ள நிறைய இருக்கிறது .இனி நான் சீடன் " என்று முகம் மலர்ந்து கூறினார் .

ர.ரா

ஃபால் கிதாபு (3 பாகம்) 23-04-2020

எங்களூர் மேலப்பாளையத்தில் எங்க தெருவைச் சேர்ந்த கருத்த மஸ்தான் ஆலீம்ஷா என்ற பெரியவர் எங்க மாமா வீட்டுக்கு அருகாமையில் இருந்தார் .

பெயருக்கு பொருத்தமாக கருத்தநிறத்திலும் , நெட்டையாக , ஒல்லியாக , முகத்தைச் சுற்றி தாடி இல்லாமல் தாடி நாடியில் மட்டுமே நீளமாக வைத்திருப்பார் .

எப்போதுமே வீட்டுத் திண்ணையில் இருந்து மௌனமாக குர்ஆன் ஓதக்கூடியவர் .எதிர்த்த வீட்டுக்காரர் , "ஆலீம்ஷா ..! குர்ஆனை சத்தமாக ஓதினால் , நாங்களும்
கேட்கமாட்டோமா ? என்று கிண்டலாக கேட்டார் .

அதற்கு கருத்த மஸ்தான் ஆலீம் அவர்கள் : " இப்படித்தான் என் நண்பர் கடையநல்லூர் ஆலீம்ஷா திண்ணையில் உட்கார்ந்து எதிர்த்த வீட்டுக்காரன் காதிலே விழட்டும் என்று சத்தமா குர்ஆன் ஓதிட்டே இருந்திருக்கிறார் .

ஒரு நாள் எதிர் வீட்டுக்காரனுக்கு பேரன் பிறந்திருக்கிறான் . என்ன பெயர் வைக்கப் போகிறீர்கள் என்று குடும்பத்தார் முதல் ஊர்காரங்க வரை கேட்டிருக்காங்க , 'நான் பெயர் வைக்கிற சபையிலேத்தான் சொல்வேன் " என்றார்.

சபை கூடியது . தினம் குர்ஆன் ஓதும் ஆலீம்ஷா பெயர் வைக்க இருக்கும் போது , " என்ன பெயர் வைக்க வேண்டும் ? " அந்த ஆலீம்ஷா கேட்க ,

"பிர்அவ்ன் " எனப் பெயர் வைங்க ஆலீம்ஷா " ( ! ? )என்று சொல்லி இருக்கிறார்.

ஆலீம்ஷா முதல் ஊர்காரங்க வரை திகைத்துப் போய் விட்டார்களாம் .

" என்ன ஆலீம்ஷா நீங்கதானே குர்ஆன் ஓதும்போது , " பிர்அவ்ன் " " பிர்அவ்ன் " என்று அடிக்கடி ஓதுவீங்க என்றாராம்.

" அதுமாதிரி நான் சத்தமா குர்ஆன் ஓதி நீ தப்பா விளங்கி , நீ ஒன்னு கிடக்க ஒன்னை செஞ்சா யார் பொறுப்பு ? என்று வேடிக்கையாகவும் , வினயமாகவும் பேசக் கூடியவர் எங்க கருத்த மஸ்தான் ஆலீம்ஷா .

ஆனால் எங்க கருத்த மஸ்தான் ஆலீம்ஷா ஃபால் கிதாபு பார்த்து விபரம் சொல்வதில் மஹா வல்லவர் . பெரிய பெரிய ஆலீம்ஷாமார்களுக்கு ஃபால் கிதாபில் விளக்கம் சொல்லக் கூடியவர் .

கருத்த மஸ்தான் ஆலீம்ஷா அவர்கள் பெரிய பணக்காரர் ஒருவரின் வீட்டுக்கு ஏதேச்சையாக போய் இருக்கிறார் அங்கே சுவற்றில் மக்கா - மதீனா படம் தொங்கி இருக்கிறது . ஆலீம்ஷா அவர்கள் , அந்த பணக்காரரிடம் , " இந்த மக்கா - மதீனா படத்தை சுருட்டி உள்ளே வையுங்கள் " என்றாராம். அவரும் ஆலீம்ஷா ஃபால் கிதாபு வல்லவர் , எனவே எந்த கேள்வியும் கேட்காமல் , ஏதோ காரணம் இருக்கும் . விபரம் கேட்டால் வினயமாக ஏதாவது சொல்லிவிட்டால் .. என்று அந்த பணக்காரர் படத்தை சுருட்டி உள்ளே வைத்து விட்டாராம் .

கொஞ்ச காலத்திற்குப் பிறகு , அந்த பணக்காரர் , கருத்த மஸ்தான் ஆலீம்ஷாவை விருந்துக்கு அழைக்க சென்ற போது , ஆலீம்ஷா வீட்டில் பெரிய மக்கா - மதீனா படம் சுவற்றில் தொங்கியதாம் .

ஆலீம்ஷாவிடம் " நீங்க என் வீட்டு மக்கா - மதீனா படத்தை கழற்ற சொல்லிவிட்டு , உங்க வீட்டில் மட்டும் ஏன் தொங்க வீட்டிருக்கிறீர்களே ? " என்று ஆலீம்ஷா இடம் கேட்க இந்த பணக்காரருக்குப் பயம் . எனவே ஆலீம்ஷாவின் முகம் பார்த்து பேசாமல் , அந்த படம் பார்த்தே பணக்காரர் பேசியதைக் கண்ட ஆலீம்ஷா ,

" என்ன மக்கா -மதீனா படம் என் வீட்டில் தொங்குகிறதேன்னு பார்க்கிறீங்களா ?"

"ஆமாம் "

நான் ஹஜ்ஜுக்குப் போவதற்காக என் வீட்டு மெயின் ஹாலில் மண் தரையில் ஒரு பானையை வாயை மூடி உண்டியலாக வைத்துள்ளேன் . நெசவு சம்பளத்தில் வீட்டுச் செலவுக்குப் போக மீதியை உண்டியில் காலாணா, அரையாணாவாக சேர்த்து வருகிறேன் என் மக்களும் தங்கள் ஹாஜ்ஜத்திற்காக என் உண்டியல் காணிக்கைப் போடுவார்கள் .வைச்சி மூணு வருமாச்சி.
மக்கா - மதீனா படத்தைப் பார்க்கும் போது ஹஜ்ஜு ஞாபகத்திற்கு வரும். கூடவே சேமிப்பும் ஞாபகத்திற்கு வரும் " என்றார் .

" அது சரி இருக்கட்டும் ஆலீம்ஷா எதுக்காக எங்க வீட்டு மக்கா மதீனா படத்தை ஏன் கழற்ற சொன்னீங்க ?" என்று பணக்காரர் கேட்க .

" உங்க வீட்டில் மக்கா - மதீனா படத்திற்கு கீழே ரேடியோ பெட்டி இருந்ததது .எனவே ஹரத்தின் கண்ணியத்திற்காக கழற்றச் சொன்னேன் "

ஹஜ் காலம் வந்தது . அந்தப் பணக்காரர் " ஆலீம்ஷா இந்த வருஷம் ஹஜ்ஜுக்கு போக வேண்டியதுதானே ?"

" சரி , நீங்க சாயங்காலம் என் வீட்டிற்கு வாங்க " -என்று ஆலீம்ஷா அந்த பணக்காரரை அழைத்திருக்கிறார் .

அவர் வந்ததும் உண்டியலை வெளியே எடுத்தார் ஆலீம்ஷா.உண்டியலை திறந்த போது , காலணா , அரையணாவாக கிடந்தது . மற்றும் 100 ரூபாய் தாள் தனித்தனியாக சின்னதாக நிறைய கிடந்தது !

ஆலீம்ஷா 100 ரூபாய் நோட்டுத் தாளை கண்டு ஆச்சரியப்பட்டுப் போனார் . கூடவே ஆலீம்ஷா தான் எழுதிப் போட்ட காகித மடக்கையும் எடுத்து அந்த பணக்காரரிடம் கொடுத்து , நீங்களே படியுங்கள் என்றாராம்.

அதில் " இன்றிலிருந்து 3 வருடம் கழித்து ஹஜ் செய்வீர் . நீங்கள் அறியாத புறத்திலிருந்து ஹலான முறையில் சம்பாதித்த காசும் இதில் கலந்திருக்கும் என்று உண்டியல் வைத்த அன்று ஃபால் கிதாபில் வந்த செய்தியையும் சேர்த்தே எழுதி போட்டிருந்தார் ஆலிம்ஷா .

பணக்காரர் தான் 100 ரூபாய் தாளை தனித்தனியாக சின்னதாக மடித்து யாருக்கும் தெரியாமல் ஆலீம்ஷா உண்டியலில் போட்டதை அவரும் வெளியே சொல்லவில்லை . பணக்காரருக்கு பெரிய சந்தோஷம் தன் பணம் ஹலால் என்று ஃபால் கிதாபில் குறிப்பிட்டிருந்தைக் கண்டு மிக்க மகிழ்ச்சி அடைந்தார் .

ர.ரா

,ஃபால் கிதாபு (2 பாகம்) 22-04-2020

இது இமாம் ஜஃபர் ஸாதிக் (ரஹ்) அவர்களால் தயாரிக்கப்பட்டதாக சொல்லப்படுகிறது .

உளூச் செய்து இரண்டு ரகஅத் தொழுது ஃபாத்திஹா ஓதிய பின் இதனைக் கண்களை மூடிக் கொண்டு திறந்து , அதில் தங்களின் விரலை வைத்து அதில் உள்ள எழுத்து அல்லது எண்ணுக்கான விளக்கத்தைப் படித்துத் தன்களுக்கான ஃ பாலை விளங்கிக் கொள்கிறார்கள்.

இமாம் ஜஃபர் ஸாதிக் (ரஹ்) அவர்களின் ஃபால் எவ்விதத் தீமையும் செய்யாது என்று ஃபார்ஸியில் ஒரு பழமொழியும் இருக்கிறது .

ஷைகு பஹாயீ எழுதிய மற்றொரு ஃபால் நாமாவும் உள்ளது .'லறூறுல் முஃமினீன்' என்ற நூலில் 9 முதல் 12 பாகங்களில் ஒன்பது கட்டங்களில் எண்களிட்டு ஃபால் பார்க்கும் முறையும் , 24 கட்டங்களில் எண்களிட்டு ஃபால் பார்க்கும் முறையும் , உள்ளது .

அப்ஜத் கணக்கின்படியும் , விண்மீன்களைக் கொண்டும் ஃபால் பார்க்கும் முறையும் , இன்னும் நுட்பமான விஷயங்களைக் கொண்டும் ஃபால் கணிக்கப்படுகிறது .

நட்சக்கித்தைப் பற்றிய வான சாஸ்திர நூல் ஃபால் கிதாபுகளுக்கு முன்னோடி என்று கீழ்க்கண்ட சேதிகளைக் குறிப்பிடப்படுகிறது .

மறைந்து போன "அந்த" வான சாஸ்திரம்

தொடு குறி சாஸ்திரம், கிளி ஜோஸ்யம், பங்கஜா லாட்ஜ் பாமிஸ்ட் , "கிரகம் பாடாய் படுத்தும் " என்று சொல்லும் "பாலத்து ஜோஸ்யர்கள் " போன்ற வியாபாரக்காரர்களை எல்லாம் ஒரு புறம் ஒதுக்கிவிட்டு, இந்த சாஸ்திரத்தின் அடிப்படைச் சிந்தனையை யோசித்து பார்த்தால் , வசீகரமாகத்தான் இருக்கிறது.

அந்த சிந்தனை என்ன?

ஒரு குழந்தை பிறக்கும் போது, அதன் முதல் மூச்சு, வடிவம் பெற்று அது உலகத்தில் ஒர் உயிராய் பிரவேசிக்கும் போது, இந்த பிரபஞ்சவெளியிலும் ஒரு பிரத்தியேகமான நிகழ்ச்சி நிகழ்கிறது என்கிறார்கள்.

ஏதோ ஒரு நட்சத்திரம் ஒரு குறிப்பிட்ட நிலையில் உச்சம் பெறுகிறது. இந்த நட்சத்திரம் மற்றும் கிரகங்களின் நிலை இதெல்லாம் பிறந்த உயிருக்கு தொடர்புபடுத்தி நிறைய நிறைய கணிக்கிறார்கள் .

இதெல்லாம் நிஜமாலுமா ..? என்று நீங்கள் கேட்பது புரிகிறது . தொடர்ந்து படியுங்கள் .

நட்சத்திரங்களாலதான் நம் வாழ்வு பிரகாசிக்கிறது எனவே அதனை "ஷிஃரா " என்னும் நட்சத்திரத்தை கடவுளாக்கி வழிபட்டதாக "ஆது" மக்களைப் பற்றி குர்ஆன் (53 : 49,50) குறிப்பிடுகிறது.

ஷிஃரா 10 ஒளியாண்டு தூரத்தில் உள்ளது. டெலஸ்கோப் மூலம்தான் பார்க்க முடிகிற நட்சத்திரத்தை வெறுங் கண்ணால் "ஆது மக்கள் "எப்படி பார்த்தார்களோ. ? இது குர்ஆன் கூற்று .

"நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் நட்சத்திரங்களை கூர்ந்துப்பார்த்தார் " குர்ஆன் (37 : 88) " இலா "என்ற பதம் பயன்படுத்தப்பட்டிருந்தால் "கூர்ந்து " என்று அர்த்தம் வரும். எனவே நட்சத்திரக் கலையை பயின்றார். மேற்கண்ட வசனத்தைத் தொடர்ந்து இப்ராஹிம் (அலை) அவர்கள்

" பின்னர் நட்சத்திரங்களைக் கூர்ந்து பார்த்து . நிச்சயமாக எனக்கு ஒரு நோய் ஏற்படும் போல் இருக்கின்றது " என்று கூறவே குர்ஆன் (37 : 88,89)

"எந்த நபியுடைய ஜென்ம நட்சத்திரம் விண்ணில் அவர் பிறப்பதற்கு முன் தோன்றாமல் இருந்ததில்லை " இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்

நபி மூஸா (அலை) அவர்கள் பிறப்பதற்கு முன்னதாக பிர்அவ்னின் அரண்மனையில் உள்ள வான சாஸ்திரிகள் வானில் ஜென்ம நட்சத்திகம் தோன்றி விட்டது இது ஓர் அவதாரப் புருஷன் பனி இஸ்ரவேலர்களில் பிறந்தற்குரிய அறிகுறி என்று கணித்ததும் ஒரு லட்சத்திறகும் அதிகமான பிறந்த ஆண் குழந்தைகளின் தலை சீவப்பட்டது அக்கால வான இயல் வல்லுநர் கணித்ததில் தவறெதும் உண்டா ? மூஸா (அலை) பிறக்காமலா போனார்கள் ? பிறந்தார்கள்
குர்ஆன் ( 20 : 39 ) ( 28 : 07 )

இது போன்றே நபி ஈஸா (அலை) அவர்கள் பிறக்கும் போது 3 வான இயல் வல்லுநர்கள் ஜென்ம நட்சத்திரம் வானில் தோன்றியதை கண்டு பைத்துல் முகத்தஸ் வந்து சேர்ந்து இஸ்ரவேலர்களின் அரசர் பிறந்து விட்டாரா என்று ஐரதூஸ் மன்னனிடம் கேட்க பின் விசாரித்தில் மாட்டுத் தொழுவத்தில் மாநபி ஈஸா (அலை) அவர்கள் பிறந்தது உண்மைதானே.?

"பதினோரு நட்சத்திரங்களும் . சூரியனும், சந்திரனும் எனக்கு தலை வணங்கக் கண்டேன்" குர்ஆன் (12 : 04) என்று சிறுவர் நபி யூசுப் (அலை) கனவில் கண்ட நட்சத்திரங்கள் தன்னுடைய சகோதரர்கள் என்பதை தந்தை நபி யாகூப் (அலை) அவர்கள் அறிவிக்க வில்லையா ?

ரோமபுரி ஹெர்குலிஸ் மன்னர் "இன்றிரவு நான் நட்சத்திர மண்டலத்தை ஆராய்ந்தபோது, "விருத்தசேதனம் செய்யப்பட்டவர்களின் மன்னர் தோன்றிவிட்டதாக ஜென்ம நட்சத்திரத்தின் மூலம் அறிந்தேன்" என்று கூறி அண்ணலெம் பெருமானார் நபி முஸ்தபா (ஸல்) அவர்களின் பிறப்பை பதிவு செய்யவில்லையா ?
புகாரி பாகம் 1 - ஹதீஸ் 07

மனிதர்களின் பிறப்புகளுக்கும் வான நட்சத்திரங்கள் கிரகங்களுக்கும் அப்படி ஒரு தொடர்பை அக்கால வான இயல் வல்லுநர்களால் எப்படி வகுக்க முடிந்தது ? இப்போ எங்கே மறைந்து போனது அந்த வான சாஸ்திரம் ?

ர.ரா

பால் - பார்ப்பது என்பது சகுனம் பார்ப்பது மாதிரியா ? 22-04-2020



ஃபால் - பார்ப்பது சகுனம் பார்ப்பது மாதிரி இல்லை . சொல்றேன் .

ஒரு ஞானி தன் வீட்டின் மரத்தடியில் உள்ள கிணற்றை ஒட்டி உட்கார்ந்து ஃபால் கிதாபு பற்றி பாடம் எடுத்துக் கொண்டிருந்தார் .

அப்போது சுமார் 30 வயதுள்ள இளைஞர் அவரிடம் வந்து , " நானும் என் மனைவியும் 7 வருடமாக குடும்பம் நடத்தி வந்தோம் . செல்வத்திற்கும் குறைவில்லை . இரண்டு மழலைச் செல்வமும் உண்டு. எங்களுக்குள் ஏற்பட்ட சிறிய கருத்து வேறுபட்டால் பிரிந்து இருக்கிறோம் .பல முறை அழைத்தும் வரவில்லை . நீங்கள் எங்களை சேர்த்து வைக்க வேண்டும் " என்றார் .

இந்த இளைஞர் தன் பிரச்சனை சொல்லி முடிக்கவும் , ஞானியுடைய மனைவி அக் கிணற்றில் நீர் இறைக்கும்போது தாம்புக் கயிறு அறுத்து குடம் கிணற்றில் விழுந்துவிட்டது !

வந்த இளைஞனை சிறிது நேரம் பக்கத்தில் அமரச் சொல்லிவிட்டு ,தம் சீடர்களுக்கு ஒரு பரீட்சை வைத்தார் ஞானி .

" இந்தப் பாருங்கப்பா இவரோ தன் மனைவியைப் பிரிந்து தாங்க முடியாத துயரத்தில் இருக்கிறார் .மனைவியுடன் சேர்ந்து வாழ விரும்புகிறார் .இது குறித்து அவர் கூறும்போது , ஓர் அறிகுறி என் மனைவி குடம் தாம்புக் கயிறு அறுந்து கிணற்றில் விழுந்துவிட்டது இந்த அறிகுறி வைத்து, இவர் பிரச்சனைக்கு ஃபால் கூறுங்கள் " என்றார் .

உடனே சீடர்கள் எல்லோரும் ஒரே குரலில் , " இவர்கள் ஒரு காலும் ஒன்று சேரவே மாட்டார்கள் .இந்த இளைஞன் இப்படியே வாழ்க்கையை கழிக்க வேண்டியதுதான் . அல்லது வேறு ஒரு பெண்ணை திருமணம் செய்யட்டும் " என்றார்கள் ஒரே கோரஸாக .

சீடர்களின் இந்த கோரஸைக் கேட்டதும் வந்த இளைஞர் நடுநடுங்கி , 'ஓ ' என்று அழ ஆரம்பித்து விட்டார் .

உடனே ஞானி அந்த இளைஞனை சமாதானப்படுத்தி , " கவலைப்படாதே ! அதி சீக்கிரத்தில் உன் மனைவி உன்னிடம் வந்து சேர்வாள். இது உறுதி!"

அவனுக்கு ஞானியின் மகிமை தெரிந்த போதிலும், " இவ்வளவு மாணவர்கள் இப்படிச் சொல்லும்போது இவர் மட்டும் மாற்றிச் சொல்கிறாரே ! உண்மையைச் சொல்கிறாரா அல்லது நம்மை சமாதானப்படுத்த இப்படிச் சொல்கிறாரா ? என்று புரியாமல் அழுதான். ஞானி அவனை தேற்றி அனுப்பி வைத்தார் .

அதன் பிறகு ஒரு மாதத்திற்குள் , அந்த இளைஞன் பெரிய பரிசுப் பொருட்களோடு சிரித்த முகத்தோடும் , ஒரு பெண்ணோடும் வந்து ஞானியைப் பார்க்க வருகிறான்.

சீடர்கள் .. " இதோ அந்த இளைஞன் அன்று எவ்வளவு ஆர்ப்பட்டம் செய்து மனைவியை வருத்தப்பட்டானே , இன்று வேறு ஒரு கல்யாணம் செய்து கொண்டு வந்துள்ளான் பார் . நம்ம ஞானி பார்த்த ஃபால் தவறிவிட்டது என்று அவர்களுக்குள் ஏளனமாகச் சிரித்தார்கள்.

அந்த இளைஞன் ஞானியை கண்ணியப்படுத்தி விட்டு , " இதோ என் பிரிந்து போன மனைவி மீண்டும் என்னிடம் அடைக்கலமாகி விட்டாள் என்று சொல்லு போதே இளைஞன் பெற்ற இரண்டு பிள்ளைகளும் வாகனத்தில் இருந்து இறங்கி வந்தன.ஞானி மிக்க சந்தோஷப்பட்டார் .

சீடர்களின் முகத்திலும் வியப்பு தென்பட்டது . அந்த இளைஞன் ஞானியிடம் , " சீடர்கள் அனைவரும் 'நாங்கள் ஒன்று சேர மாட்டோம் ' என்று கூறிய போது , தாங்கள் மட்டும் , 'அதி விரைவில் ஒன்று சேர்வீர்கள் ' என்று எப்படி உறுதியுடன் கூறினீர்கள் ? " என்று கேட்டான் .

உடனே ஞானி தன் சீடர்களை நோக்கிப் பாடம் நடத்துவது போல் கூறலானார் :
" அன்று இவர் மனைவியைப் பிரிந்து வந்தபோது , என் மனைவி தாம்புக் கயிறு அறுந்து குடம் கிணற்றில் விழுந்துவிட்டது என்ற சம்பவத்தை துர்க்குறியாக எடுத்துக் கொண்டு அவர்களது வாழ்க்கைப் பிணைப்பும் அறுந்து விட்டதாக நினைத்தீர்கள் .அது தவறு . கிடைக்கும் அறிகுறிகளை வைத்து பலன் சொல்லும் விஷயத்தில் இவ்வளவு அவசரம் கூடாது. முதலில் நிகழும் சம்பவங்களை கருத்து ஊன்றி கவனிக்க வேண்டும்.

கயிறு என்ன செய்தது ? கிணறு என்ற குடும்பத்தில் உள்ள ஒரு குடம் நீரைப் பிரித்து எடுத்து வந்தது . கயிறு அறுந்தவுடன் , குடும்பத்தைப் பிரிந்து வந்த குடத்து நீர் மீண்டும் தன் கிணற்றுக் குடும்பத்துடன் சேர்ந்து விட்டது. ஆகவே இவர்கள் மீண்டும் சேர்வார்கள் என்றேன் ! "

இஸ்லாத்தில் நற்குறி பார்ப்பது மட்டும் அனுமதிக்கப்பட்டு , துர்க்குறி பார்ப்பது விலக்கப்பட்டுள்ளது . " துர்க்குறி பார்ப்பதுதான் 'ஷிர்க்' (இணைவைத்தல்) ஆகும் என நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கூறியுள்ளனர் .

" துர்க்குறி பார்ப்பவரையன்றி வேறு எவரையும் துர்க்குறி யாதொரு தீங்கும் செய்யாது " என்று இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியுள்ளனர் .

நபிகள் நாயகம் ﷺ அவர்கள் மக்காவிலிருந்து மதீனாவுக்கு தோழர் அபூபக்கர் (ரலி) அவர்களுடன் ஹிஜ்ரத் (வலசை) செல்லும்போது , அஸ்லம் கூட்டத்தினர் 70 பேர்கள் சுற்றி வளைத்தார் . அவர்களின் தலைவரிடம் , "உம்முடைய பெயர் என்ன ? " என்று நபிகளார் கேட்க, அவர் "புரைதா " என்றார் அவர் .'குளிர்ச்சி ' என்று பொருள் உள்ள அச்சொல்லைக் கேட்டதும் , நபிகள் நாயகம் ﷺ அவர்கள் அபூபக்கர் (ரலி) அவர்களை நோக்கி, "செல்லும் ; நம் அலுவல் நலமே முடிவுறும் !"

அதன் பின் , " உம் குலம் யாது ?" என்று நபிகளார் கேட்க, அவர் " அஸ்லம் " - (பாதுகாப்பு ) என்றார்.

அதைக் கேட்டதும் , நபிகள் நாயகம் ﷺ அவர்கள் அபூபக்கர் (ரலி) அவர்களை நோக்கி , " அபூபக்கரே ! நாம் பாதுகாக்கப்பட்டோம் " என்று மகிழ்ச்சி யுடன் பகர்ந்தனர் . இந்த இனிய மொழிகளால் கவரப்பட்ட புரைதா தம் கூட்டத்தாருடன் இஸ்லாத்தைத் தழுவினார் .

ஃபால் என்றால் நற்குறி மட்டுமே !

ர.ரா

தற்செயல் என்று உண்டா ? ( 9ம் பகுதி)

புத்தகத்தின் பெயர் : 1) நூற்றாண்டுகள்
2) Les Propheties

புத்தகங்களின் ஆசிரியர் : "நாஸ்ட்ராடமஸ்" 21-04-2020




"நாஸ்ட்ராடமஸ் " பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள் தெற்கு பிரான்ஸில் ரெமி என்னும் நகரில் 1503 -ல் பிறந்தவர் , தின வாழ்வில வைத்தியர் .சுமார் 1000 எதிர்காலச் சம்பவங்களை அவர் குறி சொல்லி அதற்கு "நூற்றாண்டுகள்" என்கிற தலைப்பில் புத்தகமாக வெளியிட மிகப் பிரபலமானது. அத்தனையும் கவிதை வடிவில் ஒரு மாதிரியான புரிந்தும் புரியாத அயோமயமாக எழுதி தள்ளி இருக்கிறார் .

பிரெஞ்சுப் புரட்சி . நெப்போலியன் வாழ்வும் தாழ்வும் ,,,,,,,,இப்படி ஆரம்பித்து இரண்டு உலகப் போர்கள் , காந்தி இறந்தது , இரான் - இராக் சண்டை , , வளைகுடா யுத்தம் ,

ஆனாலும் நாஸ்ட்ராடமஸில் ஒரு பெரிய ஆச்சரியமும் இருக்கிறது ஹிட்லர் பற்றி அவர் "ஹிஸ்டர்" என்று சொல்லி இருக்கிறார் .

"சுதந்திரம் மறுக்கப்படும். ஒரு கரியகுள்ள கொடிய வில்லன் மற்ற பேருடன் சேர்ந்து சுதந்திரத்தைப் பறிப்பான் ,வெனிஸ் நகரம் ஹிஸ்டரால் அழியும் , பசித்த மிருகங்கள் நதிகளைத் தாண்டும் பெரும்பாலானோர் ஹிஸ்டருக்கு எதிராக
இருப்பார்கள்.தலைவனை இரும்புக் கூண்டில் அடைப்பான். ஜெர்மனியின் புதல்வன் சட்ட திட்டங்களைப் பார்க்க மாட்டான் , " இதை அதிசயம் என்று சொல்லத்தான் தோன்றுகிறது ,

ஹிட்லரின் எழுச்சியைக் குறித்தும், ஐரோப்பிய நாடுகளை அவர் துவம்சம் செய்ததையும் தன்னுடைய " Les Propheties " என்னும் புத்தகத்தில் குறிப்பிட்டுள்ளார் நாஸ்டிரடாமஸ்.

இவை மட்டுமல்ல டைட்டானிக் கப்பல் மூழ்கியது, பிரிட்டனின் அரசியல் வானத்தில் அடுத்தடுத்து ஏற்பட்ட மாற்றங்கள், உலகப்போர்கள் என எதையும் விட்டுவைக்காமல் அடித்து நொறுக்கியிருக்கிறார் நம் சோதிடர்.

முதலாவதாக, 1666 இல் லண்டனை பேரழிவிற்கு உட்படுத்திய பெரும் நெருப்பு பற்றி தனது லெஸ் ப்ராபெட்டீஸ் புத்தகத்தில் 52 வது கவிதையில் எழுதி இருக்கிறார். இந்த லண்டன் தீ விபத்து வரலாற்றில் The Great Fire of London என அறியப்படுகிறது.

கொரோனா வைரஸ் பற்றி நாஸ்ட்ரடாமஸ் எழுதிய 56 வது கவிதையை பாருங்கள்! இவர் பிரெஞ்சு மொழியில் எழுதிய கவிதையின் ஆங்கில மொழிபெயர்ப்பு இது தான்.

The sloping park, great calamity,

Through the Lands of the West and Lombardy

The fire in the ship, plague, and captivity;

Mercury in Sagittarius, Saturn fading."

– Nostradamus

Sloping Park என்பது 'சரிவான இடத்தில் உள்ள பூங்கா' என பொருள்படும். சீனாவில் வுஹானில் உள்ள ஹாங்கோ ஜியாங்டான் பூங்கா தான் கொரோனா வைரஸ் தொடங்கிய இடம்.

இந்த பூங்கா ஓரத்தில் ஓடும் ஆற்றைச் சுற்றியுள்ள சரிவுகளைக் கொண்டுள்ளது. Calamity என்பதற்கு பேராபத்து என பொருள். Through the lands of the West எனப்படுவது மேற்கத்திய நாடுகளையும், Lombardy என்பது இத்தாலியில் உள்ள நகரம் ஆகும். இப்போது, இத்தாலியில் கொரோனா மிகப்பெரும் அளவில் அழிவை ஏற்படுத்தி இருப்பதும் இந்த Lombardy நகரம் தான்.

Fire in the Ship என்பது நொறுங்கிப்போன பொருளாதாரத்தின் நிலைமையைக் குறிக்கிறது. 'Plague' என்பது கொரோனா வைரஸையும் மற்றும் 'Captivity' என்பது தனிமைப்படுத்துவதையும் குறிப்பதாக நாஸ்ட்ரடாமஸ் ஆர்வலர்கள் கூறுகின்றனர். Mercury is in Sagittarius, and Saturn is fading என்பது ஜனவரி மாதத்தை குறிக்கிறது.

ஜனவரியில் தான் கொரோனா சீனாவின் வுஹானில் பரவத் தொடங்கியது. ஆக மனிதர் கொரோனா பற்றியும் கூறியிருக்கிறார் என்கிறார் அவருடைய ஆதரவாளர்கள்.

ர.ரா

குறிப்பு : இத்துடன் இத்தொடர் நிறைவு பெறுகிறது .

தற்செயல் என்று உண்டா ? (பகுதி 8 )

புத்தகத்தின் பெயர் : "சைக்கிக் மிஷன்" (Psychic Mission)

ஆசிரியர் : ஜோசப் டி லூயிஸ் (முடிதிருத்தும் கலைஞர் )20-04-2020




ஜோசப் டி லூயிஸ் என்பவரைப் பற்றி படித்திருக்கிறீர்களா ? விநோதமான ஆள். அவரைப் பற்றி சொல்றேன்.

அமெரிக்காவிலுள்ள சிகாகோ மாகாணத்தைச் சேர்ந்த ஜோசப் டிலூயிஸ் (Joseph Delouise). 1969-ம் ஆண்டு ஜனவரி மாதம் 16-ம் தேதி, ஒரு ஓட்டலின் பாரில் நுழைந்த ஜோசப், அங்கிருப்பவர்களிடம் பேப்பரில் ரயில் விபத்துக் குறித்து ஏதேனும் செய்தி பிரசுரமாகியுள்ளதா எனக் கேட்டார்.

அப்படியேதும்,வரவில்லை என அங்கிருப்பவர்கள் தெரிவிக்க அவர்களிருக்கும் இடத்திலிருந்து தெற்கில் பனிமூட்டம் காரணமாக இரு ரயில்கள் மோதி விபத்துக்கு உள்ளானதாகத் தெரிவித்தார். இருப்பினும், அவரைச் சூழ்ந்திருந்த வழக்கமான மக்கள், சற்று வித்தியாசமாகவே அவரை நோக்கினர்.

வானொலியை அலை வரிசைக்கிரமமாய்த் திருப்ப, இரவு பதினொரு மணியளவில் கூட அவ்விபத்துக் குறித்து எத்தகவலும் இல்லை. அது வரை நடக்கவில்லை என்பதை அறிந்த டிலூயிஸ் உறுதியாகச் சொன்னார். "இந்தப் பகுதியில் கடந்த 25 வருடங்களில் இது போன்ற பெரிய விபத்து நடந்திருக்காது. அப்படிப்பட்ட விபத்து நடக்கும்."

இரண்டுமணிநேரம் கழித்து (அதாவது இரவு ஒரு மணிக்கு) 'சற்றுமுன் கிடைத்த செய்தி, சிகாகோவிற்குத் தெற்கே, இல்லினாய் சென்ட்ரல் ரயில்கள் இரண்டு, பனியில் மோதிக்கொண்டன. இப்போதைய நிலவரப்படி 3 பேர் இறந்து போனார்கள், 43 பேர் படுகாயம் அடைந்தார்கள்' என செய்தி வந்தது.

1967 நவம்பர் 25-ல் "ஒரு பாலம் இடிந்து விழும் " என்றார் .3 வாரம் கழித்து டிச 16 ல் ஒஹையோ நதியின் குறுக்கே "வெள்ளிப் பாலம் "இடிந்து 36 பேர் மரணம். பத்துப் பேரை காணவில்லை .

1968, ஜனவரி 8 ம் தேதி டி லூயிஸ் 'நாட்டில் கலவரம் வரும் ' என்றார்.
ஏப்ரல் 7 ம் தேதி சிகாகோவில் பெரிய கலவரம் வந்து , ஐயாயிரம் மைய அரசுப் படையினர் வரவேண்டியிருந்தது .

1968 டிசம்பர் 15 ல் _டி லூயிஸ் ஒரு தகவல் சொன்னார் : 'கென்னடி குடும்பத்துக்குத் தண்ணீர் மூலம் ஒரு கண்டம் இருக்கிறது .ஒரு பெண் நீரில் முழ்குவதைப் பார்த்தேன் ' என்றார் .

1969 ஜூலை 18 , மேரி ஜோ என்னும் பெண் , எட்வர்ட் கென்னடியுடன் காரில் சென்றுகொண்டிருக்கும்போது , நீரில் முழ்கிய சம்பவம் எட்வர்ட் கென்னடியின் அரசியல் வாழ்வுக்கு முற்றுப்புள்ளி வைத்தது .

1969, மே 21ல் டிலூயிஸ் "இண்டியானாபோலிஸ் அருகே ஒரு விமானம் விபத்துக்குள்ளாகும். அதில் 79 பேர் மரணமடைவார்கள். ஏதாவது ஒரு வகையில் 330 என்ற எண் அதில் சம்பந்தப்படும்" என்றார். 1969, செப்டம்பர் 9 ஆம் தேதி அலிகனி ஏர்லைன்ஸ் விமானம் ஒரு தனியார் விமானத்துடன் மோதி 79 பயணிகள் இறந்தனர். விபத்து நேர்ந்த நேரம் மதியம் 3.30.

இப்படி நடப்பதை முன் கூட்டியே சொல்லி திகைப்பில் ஆழ்த்திய டிலூயிஸ் ஒரு சாதாரண முடிதிருத்தக் கலைஞர். பள்ளிப்படிப்பை பாதியிலேயே விட்டவர். பின்னர் கடற்படையில் சேர்ந்தார். பணியிலிருந்து விலகுவதற்கு முன்பு ஒரு முறை தான் வேலைக்கு செல்லும் கிடங்கில் ஏதோ ஒரு பெரிய விபத்து ஏற்படுவதாக அவர் உள்ளுணர்வு சொல்ல அவர் அன்று வேலைக்குப் போகாமல் இருந்து விட, உண்மையாகவே அங்கு ஒரு பெரும் விபத்து அன்று நிகழ்ந்தது. அன்று வேலைக்குப் போகாததால் அவர் உயிர் தப்பித்தார்.

சிலர் முகம் பார்க்கும். கண்ணாடி , மெழுகுவர்த்தி சுவாலை, தேக்கி வைத்த தண்ணீர் , பேப்பரில் தெளிக்கப்பட்ட இங்க்கின் ஒழுங்கற்ற உருவங்கள் இவற்றைப் பார்த்து ( ? ) அதற்கெல்லாம் தங்களுக்குத்

தோன்றுகிறபடி விளக்கம் தருகிற ஆள் மாதிரி ,இவரும் கிரிஸ்டல் பந்தைப் பார்த்து எதிர்காலக் கணிப்புகளைச் சொல்ல ஆரம்பித்தார்.

அந்த ஆரம்ப உள்ளுணர்வின் பின் இவருடைய எல்லா முன்கூட்டிய கணிப்புகளைக் கவனித்தீர்களானால் ஒரு உண்மை புரியும். எல்லாமே விபத்துக்கள் பற்றியதாகத் தான் இருந்தன.

இவர் தனது ஆரூடங்கள் குறித்து பின்னாளில், "சைக்கிக் மிஷன்" (Psychic Mission) என்கிற பெயரில் ஒரு புத்தகமும் எழுதியுள்ளார்.

தற்செயல் என்று உண்டா ? (பகுதி 6)



தற்செயல் பதிவுகள் ஒன்றிரண்டு பதிவுகளை இன்னொரு தடவை படித்து விட்டு இந்தப் பதிவை படித்தால் நல்லது . அப்போதான் நான் சொல்லவருவது உங்களுக்கு புரியும்.

இங்கிலாந்து கணித இயற்பியல் பேராசிரியர் வாஸ்ஸர்மன் என்பவர் தற்செயலைப் பற்றி ஒரு சித்தாந்தம் சொல்கிறார் .

'உலகத்தில் நடக்கிற , நடக்கப் போகிற சம்பவங்கள் அனைத்தும் கால வரையறையற்ற மனபிம்பங்களாக வடிவம் கொண்டிருக்கின்றன .

அவைகளுடன் உலகில் உள்ள ஒவ்வொரு உயிருள்ள , உயிரற்ற துகளுக்கும் (கொரோனா வைரஸாக இருந்தாலும் ) சம்பந்தம் உள்ளது ' என்கிறார்.

சொன்னது புரியவில்லையா ? தெளிவாக சொல்றேன் .

எல்லா சம்பவங்களுக்கும் இடையில் ஒரு தொடர் இணைப்பு சங்கிலிப்போல பிணைத்திருக்கிறது . இவையெல்லாம் மனங்கள் மூலம் ஏற்படும் இணைப்புகள். கவனிக்கவும் மனங்கள் மூலம் ஏற்படும் இணைப்புகள் .

இந்த மனத்தோடு இணைப்புகள் அந்த மனத்தோடு இணைப்புகளோடு இணைந்து கொள்கின்றன . இரண்டு மனம் நான்காகி , 16 ஆகி .....மேகத் திவலைகள் ஒன்றோடொன்று ஒட்டிக் கொண்டு சிறு சிறு மேகத் துண்டுகளாகி பின் பெரிய மேகமாக மாறுவது மாதிரி சம்பவங்களும் ஒன்றையொன்று ஒட்டிக் கொண்டு உருவெடுக்கின்றன .

ஒரு சம்பவம் நடக்கும்பொழுதே அடுத்தடுத்த சம்பவங்கள் நடைபெற ஆய்த்தமாகின்றன .

இவையெல்லாம் கால வரையறை அற்ற வெளியில் மிதந்து கொண்டிருக்கின்றன

உங்கள் ஸ்கூட்டி ஸ்கூட்டரில் ஒரு விநோதமான சத்தம் வந்தால் சீக்கிரமே இன்ஜின் நின்று போகப்போகிறது என்று நீங்கள் எப்படி யூகிக்கிறீர்கள் ? அட , இப்போ நின்னு போச்சே .

அதாவது மூளையில் ஏற்படும் ஒரு பிம்பத்திற்கும் சலனத்திற்க்கும் எதிர்காலச் சம்பவத்துக்கும் ஓர் மாய இணைப்பு உங்க மனத்திலேயே இருக்கிறது , அது போல சிலருக்கு இந்த இணைப்பு கொஞ்சம் விஸ்தாரமாகவே இருந்து , அந்த வெளியில் மிதக்கும் இணைப்புகளை தங்களின் மனதில் இணைத்து கதையோ கட்டுரையோ எழுத உந்த அது கொஞ்ச வருடத்தில் நடந்தேறி விடுகிறது !

இதில் பெரிய விநோதம் என்னவென்றால் , நம்ம கதை நாளை அப்படியே உலகில் நடைபெறப்போகிறது என்று அவர்களுக்கே தெரியாது !

இதை இப்படி கூட சொல்லலாம் சாபங்களோ , வேண்டுதல்களோ எல்லாம் ஒரு வகையில் எதிர்கால நோக்கங்களே ! அது ஷாஹின் பார்க்கா இருந்தால் என்ன ? கொரோனாவா வந்தால் என்ன ?

அடுத்து கேம்ப்ரிட்ஜ் பேராசிரியர் ஏட்ரியன் டாப்ஸ் என்பவர் 'சைட்ரானிக் அலை முகப்புகள் - Psitronic Wavefronts என்கிற சங்கதி சொல்லியிருக்கிறார் .
அதைச் சொன்னால் இந்தப் FB பதிவை கடந்து வேறொரு App-யில் போய் வேறெதையாவது பார்ப்பீங்க ! தேவையா எனக்கு ?

தற்செயல் என்று உண்டா ? (பகுதி 5)
நாவலின் பெயர் : “The Wreck of Titan”
நாவலாசிரியர் : ஆங்கில எழுத்தாளர் மோர்கன் ராபர்ட்சன் (Morgan Robertson)
எழுதப்பட்ட ஆண்டு : 1898 20-04-2020




1898 ஆம் ஆண்டு ஆங்கில எழுத்தாளர் Morgan Robertson என்பவர் The Wreck of Titan " என்ற தலைப்பில் ஒரு நாவலை எழுதினார் அதில் கதையில் 70000 டன் எடையுள்ள மிகப்பெரிய கப்பல் ஒன்று அட்லாண்டிக் கடலின் வடக்கே ஐஸ் பாறையில் மோதி முழ்கிறது அந்த கப்பலில் 2500 பயணிகள் உயிரிழக்கிறார்கள் இந்த கதை 1898 இறுதியில் எழுதினார்

1912 ஏப்ரல் 14 தேதி 66000 டன் எடையுள்ள டைட்டானிக் என்கிற கப்பல் அதே அட்லாண்டிக் கடலில் ஐஸ் கட்டி மீது மோதி 1513 பயணிகள் உயிரிழக்கிறார்கள்

வடக்கு அடலாண்டிக்கில் உலகின் மிக பெரிய கப்பல் ஐஸ் பாறையில் இடித்து மூழ்கியது. கதையில் அந்த கப்பலை மூழ்காத கப்பல் என்று வர்ணித்து இருந்தார் .நிஜத்திலும் அந்த கப்பல் அப்படித்தான் வர்ணிக்கப்பட்டது.

கதையில் அது நடந்தது ஏப்ரல் மாதம் நிஜத்திலும் அது ஏப்ரல் மாதம் தான் மூழ்கியது. கதையில் நியூ பவுண்ட்லேண்ட் எனும் இடத்தில இருந்து 400 மைல் தள்ளி விபத்து நடந்ததாக எழுதி இருந்தார். நிஜத்திலும் விபத்து அங்கு தான் நடந்தது. எல்லாவற்றிற்கும் மேலாக கதையில் அந்த கப்பலின் பெயர் "டைட்டானிக்"நிஜத்தில் அந்த கப்பலின் பெயர் "டைட்டானிக் ".

மோர்கன் ராபர்ட்ஸன் என்னும் எழுத்தாளர் வியப்பான இந்த நாவல் கற்பனையில் உதித்த கரு என்று சொல்வதை விட உள்ளுணர்வு சொல்லிய கதை

நூற்றுக்கணக்கான ஒற்றுமைகள் இருந்தன.இது எப்படி சாத்தியமாயிற்று ?
ஆதாரத்துடன் இருக்கும் இந்த நிகழ்ச்சியைப் பற்றி மனோ தத்துவ விஞ்ஞானிகளால் விளக்கமளிக்க முடியவில்லை.

நாவலாசிரியர் மோர்கன் ராபர்ட்சன் (**Morgan Robertson)** கதையில் முழ்காத கப்பல் என்று வர்ணித்தது போல நிஜ கப்பலையும் வர்ணித்தார்கள் .

டைட்டானிக் கப்பல் விபத்து குறித்து இதுவரை கேள்விப்படாத உண்மைகள் என்று கீழே உள்ள தகவலை இப்போது வெளியிட்டாலும் நாவலாசிரியர் இந்த தகவலை தன் கதையின் ஊடே ஆங்காங்கே வெளிப்படுத்தி எழுதி இருந்தார் என்பது வியப்பின் உச்சத்திற்கு நம்மை கொண்டு செல்கிறது !

இது எப்படி நிஜத்திலும் நடந்தது ? என்பது குறித்து பல சந்தேகங்களை இன்னும் எழுப்பிக் கொண்டே இருக்கிறது !

உலக கப்பல் போக்குவரத்து வரலாற்றில் காலத்தால் அழிக்க முடியாத சோக வடுவை ஏற்படுத்திய சம்பவமாக டைட்டானிக் கப்பல் விபத்து கருதப்படுகிறது. கடந்த 1912ம் ஆண்டு ஏப்ரல் 14 ந் தேதி இரவு 11.40 மணிக்கு பனிப்பாறையில் மோதி டைட்டானிக் கப்பல் தனது முதல் பயணத்திலேயே விபத்துக்குள்ளானது.

பனிப்பாறையில் மோதிய பிறகு இரண்டரை மணி நேரத்தில் டைட்டானிக் கப்பல் கடலில் முழுமையாக மூழ்கியதது. இந்த கோர சம்பவத்தில் 705 பயணிகள் உயிரிழந்தனர். டைட்டானிக் விபத்துக்கு காரணமாக பல பாதகமான விஷயங்கள் அமைந்துவிட்டன. அதன் விபரங்களை தொடர்ந்து காணலாம்.

அந்த காலத்தின் உலகின் மிகப்பெரிய உல்லாச கப்பல் என்ற பெருமையை டைட்டானிக் பெற்றிருந்தது. இக்கப்பல் 882.5 அடி நீளமும், 92.5 அடி அகலமும், 175 அடி உயரமும் கொண்டது. இந்த பிரம்மாண்ட கப்பலில் பயணிக்க ஆவலோடு வந்த பயணிகள், பணியாளர்கள் என 2,200 பேரை நடுக்கடலில் தத்தளிக்க விட்டுவிட்டது. பல உயிர்களையும் காவு வாங்கியது.

டைட்டானிக் கப்பல் செல்லும் வழித்தடத்தில் பனிப்பாறை மிக அருகில் இருப்பது தெரிய வந்தததும், கப்பலை இயக்கிய கமாண்டர்கள் அதிர்ச்சி அடைந்தனர். கப்பலுக்கும் பனிப்பாறைக்கும் இடையே 37 வினாடி அளவுக்கே நேரம் இருந்தது.

இதையடுத்து, டைட்டானிக் கப்பலின் தலைமை அதிகாரி மூர்டோச், கப்பல் எஞ்சினை ரிவர்ஸ் முறையில் இயக்க உத்தரவு போட்டார். கப்பல் செல்லும் திசையையும் மாற்ற கூறினார். அதுவும் பலனளிக்காமல், கப்பல் பனிப்பாறை மீது மோதி விபத்தில் சிக்கிவிட்டது.

டைட்டானிக் கப்பல் மூழ்கிய தினத்தன்று, உயிர்காக்கும் படகுகளில் தப்பிப்பது குறித்த செயல்முறை நிகழ்வுக்கு ஏற்பாடு செய்யப்பட்டு இருந்தது. ஆபத்து சமயத்தில் எந்த இடத்தில் பயணிகள் கூட வேண்டும்; அங்கிருந்து உயிர்காக்கும் படகுகளில் எவ்வாறு ஏறி தப்பிப்பது குறித்த செயல்விளக்க நிகழ்வாக இருந்தது.

ஆனால், கடைசி நேரத்தில் அந்த செயல்விளக்க நிகழ்ச்சியை கப்பல் கேப்டன் ஸ்மித் ரத்து செய்துவிட்டார். ஒருவேளை, அந்த உயிர்காக்கும் படகுகளில் தப்புவதற்கான செயல்விளக்க நிகழ்ச்சி நடத்தப்பட்டிருந்தால், அதிக பயணிகள் விழிப்புணர்வோடு செயல்பட்டு தப்பி இருக்க முடியும்.

துரதிருஷ்டவசமாக அந்த செயல்விளக்க நிகழ்ச்சி ரத்து செய்யப்பட்டதால், பலர் உயிர் காக்கும் படகுகளில் எவ்வாறு தப்புவது என்பது குறித்த புரிந்துணர்வு இல்லாமல் உயிரைவிட்டனர். டைட்டானிக் கப்பல் கேப்டன் ஸ்மித் செய்த தவறுகளில் ஒன்றாக இது பார்க்கப்படுகிறது.

டைட்டானிக் கப்பலில் பயணிகள் மற்றும் பணியாளர்கள் என 2,200 பேர் இருந்தனர். அவர்கள் அனைவரும் தப்புவதற்கு தோதுவான எண்ணிக்கையில் உயிர் காக்கும் படகுகள் அந்த கப்பலில் இல்லை. கப்பல் விபத்துக்குள்ளான பிறகுதான் இந்த அதிர்ச்சி தரும் விஷயம் அம்பலமானது.

பெண்கள், சிறுவர்களுக்கு முன்னுரிமை என்ற அடிப்படையில் உயிர்காக்கும் படகுகள் இயக்கப்படும். அதேநேரத்தில், பலருக்கும் உயிர்காக்கும் படகுகளில் தப்புவதற்கான வாய்ப்பை இல்லாமல் போனது. டைட்டானிக் கப்பலில் இருந்து சென்ற உயிர்காக்கும் படகுகள் குறைவான பயணிகளுடன் கரையை நோக்கி சென்றன.

டைட்டானிக் கப்பலில் இருந்த 7ம் எண் உயிர்காக்கும் படகில் 65 பேர் செல்ல முடியும். ஆனால், 24 பேர் மட்டுமே அதில் ஏறி தப்பி இருக்கின்றனர். அதேபோன்று, ஒன்றாம் எண் படகில் 40 பேர் செல்ல முடியும். ஆனால், 7 பணியாளர்களும், 5 பயணிகளும் மட்டுமே சென்றுள்ளனர். கப்பலில் தத்தளித்த பலருக்கும் உயிர் காக்கும் படகில் ஏறுவதர்கான வாய்ப்பு இல்லாமல் போனது.

டைட்டானிக் கப்பல் பேராபத்தில் இருப்பதை காட்டும் விதத்தில் வானில் விளக்கு ஒளியை செலுத்தி அருகில் இருந்த பிற கப்பல்களுக்கு உதவி கோரும் சமிக்ஞை அளிக்கப்பட்டது. அருகில் இருந்த கர்பாதியா என்ற கப்பல் சிக்னலை பார்த்து உதவிக்கு வந்துவிட்டது.

சிறிது தொலைவில் கலிஃபோர்னியன் என்ற கப்பலும் சென்றுள்ளது. ஆனால், அந்த கப்பலின் கேப்டன் படுக்கைக்கு சென்று தூங்கி இருக்கிறார். அன்றைய இரவு 12.45 மணிக்கு கலிஃபோர்னியன் கப்பல் பணியாளர்கள் கேப்டனை எழுப்பி ஆபத்து ஒளி சமிக்ஞை குறித்து சொல்லி இருக்கின்றனர்.

ஆனால், கலிஃபோர்னியன் கப்பலின் கேப்டன் அதனை பெரிதாக எடுத்துக் கொண்டு உத்தரவு எதையும் பிறப்பிக்கவில்லை. மேலும், கப்பலில் இருந்த வயர்லெஸ் ஆபரேட்டரும் தூங்க சென்றுவிட்டதால், டைட்டானிக் கப்பலில் விடுக்கப்பட்ட வயர்லெஸ் அழைப்புகளுக்கும் பலன் இல்லாமல் போனது.

அதேநேரத்தில், கர்பாதியா கப்பல் கடலில் தத்தளித்த பல பயணிகளை காப்பாற்றி, கப்பலில் ஏற்றிக் கொண்டது. கலிஃபோர்னியன் கப்பலும் உரிய நேரத்தில் உதவிக்கு வந்திருந்தால், நிச்சயம் ஏராளமானோரை காப்பாற்றி இருக்க முடியும்.

டைட்டானிக் கப்பல் விபத்தில் சிக்கியதற்கு பின் 5 நாட்கள் கழித்து அமெரிக்காவின் ஹலிஃபேக்ஸ் என்ற இடத்தில் இருந்து விபத்து பகுதிக்கு மெக்கே- பென்னெட் என்ற கப்பல் அனுப்பப்பட்டது. அங்கு கடலில் மிதந்த உடல்களை மீட்கும் நோக்கில் அனுப்பப்பட்டது.

அந்த கப்பலில் உடலை பதப்படுத்துவதற்கான எம்பாம்பிங் செய்வதற்கான வசதிகளும், 40 எம்பாம்பிங் மருத்துவ நிபுணர்கள் மற்றும் பணியாளர்களுடன் சென்றது. பல டன் ஐஸ் கட்டிகள் மற்றும் 100 சவப்பெட்டிகளும் எடுத்துச் செல்லப்பட்டன.

மெக்கே- பென்னெட் கப்பல் மூலமாக 306 பேரின் உடல்கள் மீட்கப்பட்டன. அதில், 116 பேரில் உடல்கள் மிக மோசமாக சிதைந்துவிட்டன. அவர்களை அடையாளம் காண்பதற்கான முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன. உடல்களை மீட்பதற்கு கூடுதல் கப்பல்களும் அனுப்பப்பட்டன.

மொத்தமாக கடலில் மிதந்த 328 பேரின் உடல்கள் விபத்து பகுதியிலிருந்து மீட்கப்பட்டன. அதில், 119 உடல்கள் மோசமாக சிதைந்ததால், கடலிலேயே புதைக்கப்பட்டன. அவற்றை எடுத்து வர முடியாத நிலை ஏற்பட்டதாக மருத்துவக் குழு தெரிவித்துவிட்டது.

டைட்டானிக் கப்பல் விபத்து பெரிய சோகமாக அமைந்தது. ஆனால், கப்பலில் இருந்த சில விஷயங்களும் முகம் சுழிக்க வைப்பதாகவே இருந்தது. இந்த கப்பலில் மூன்றாம் வகுப்பில் பயணித்த 700 பயணிகளுக்கு

இரண்டு பாத் டப் மட்டுமே கொடுக்கப்பட்டு இருந்தது. முதல் வகுப்பில் பயணம் செய்தவர்களுக்கு மட்டுமே தனி குளியலறை வசதி இருந்தது.

டைட்டானிக் கப்பலில் இங்கிலாந்து தபால் துறையின் அதிகாரப்பூர்வமான அஞ்சல் போக்குவரத்து கப்பலாகவும் இருந்தது. இந்த கப்பலில் தபால் நிலையம் ஒன்றும் செயல்பட்டது. அந்த தபால் நிலையத்தில் 2 இங்கிலாந்து பணியாளர்களும், 3 அமெரிக்க பணியாளர்களும் இருந்தனர்.

இந்த பணியாளர்கள் 3,423 கோணிப்பைகளில் எடுத்துச் செல்லப்பட்ட 7 மில்லியன் கடிதங்களை கையாண்டதாக தெரிவிக்கப்பட்டுள்ளது. அதேநேரத்தில், இதுவரை நடந்த டைட்டானிக் கப்பல் தேடுதல் பணிகளில் ஒரு கடிதம் கூட கைப்பற்றப்படவில்லை என்று தெரிவிக்கப்படுகிறது. இந்த கடிதங்கள் அமெரிக்காவில் டெலிவிரி செய்யப்பட எடுத்துச் செல்லப்பட்டன.

டைட்டானிக் கப்பல் மூழ்கி 73 ஆண்டுகளுக்கு பின்னர் 1985ம் ஆண்டு செப்டம்பர் 1ந் தேதி டாக்டர் ராபர்ட் பல்லார்ட் என்ற அமெரிக்க கடல் ஆராய்ச்சியாளர் மூழ்கிய கிடந்த டைட்டானிக் கப்பலை முதல்முறையாக கண்டறிந்தார்.

தற்போது டைட்டானிக் கடல் மட்டத்திலிருந்து 2 கிமீ ஆழத்தில் அந்த கப்பல் மூழ்கி கிடக்கிறது. அந்த கடல் பகுதி யுனெஸ்கோ அமைப்பின் பாதுகாக்கப்பட்ட இடமாக அறிவிக்கப்பட்டு இருக்கிறது

டைட்டானிக் சினிமாவில் விலை மதிக்கமுடியாத நீல வைரக்கல் ஒன்று கப்பலில் மூழ்கிவிட்டதாக காட்டப்பட்டது. அது கற்பனையாக சேர்க்கப்பட்ட காட்சிதான். அதேநேரத்தில், டைட்டானிக் கப்பலில் இருந்து ஏராளமான ஆபரணங்கள் மற்றும் அரிய பொருட்கள் கைப்பற்றப்பட்டு, பெரும் தொகைக்கு ஏலம் விடப்பட்டதும் குறிப்பிடத்தக்கது.

தற்செயல் என்று உண்டா ? (பகுதி 4 )

நாவலின் பெயர் : The Narrative of Arthur Gordon Pym of Nantucket.

நாவலாசிரியர் : எட்கர்ட் ஆலன்போ

எழுதப்பட்ட ஆண்டு : 1838




எட்கர்ட் ஆலன்போ ஒரு புகழ் பெற்ற அமெரிக்க எழுத்தாளர். 1838 ஆம் ஆண்டு அவர் "The Narrative of Arthur Gordon Pym of Nantucket. " என்ற பெயரில் ஒரு நாவல் எழுதி இருந்தார்.

புயலில் சிக்கிய ஒரு கப்பலில் இருந்து லைஃப் போட் மூலம் ஒரு நான்கு பேர் கொண்ட குழு ஒன்று கடலில் சிக்கி உயிருக்கு போராடுகிறது. உண்ண உணவு இல்லாமல் அங்கே கிடைத்த ஆமைகளை பிடித்து அதை கொன்று அதன் ரத்தத்தை குடித்து உயிர் வாழ்கிறது .

ஆனால் அதிக நாள் தாக்கு பிடிக்க முடியாமல் உயிர் தப்பிக்க ஒரு கொடூர முடிவை எடுக்கிறது. அதாவது தங்களில் ஒருவரை கொன்று அவரை தின்று உயிர் வாழ்வதை தவிர வேறு வழி இல்லை மூவர் வாழ ஒருவரை கொல்வதை தவிர வேறு வழி இல்லை என்று முடிவு செய்கிறது. பிறகு தங்களில் இளைய வயது உடைய ஒரு சிறுவனை அவர்கள் தேர்ந்தெடுகிறார்கள். அவனை கொன்று தின்று ரத்தம் குடித்து உயிர் தப்புகிறார்கள்.

அவர்கள் மீட்கப்படும் போது அவர்களில் இருவர் சாகும் தருவாயில் இருக்கிறார்கள்.
தனது இந்த கதை பற்றி ஆலன் போவே "very silly " என்று கருத்தை சொல்லி இருந்தார்.

இது நடந்து 46 ஆண்டுகள் கழித்து 1884 ஆம் ஆண்டு இங்கிலாந்தில் இருந்து சிட்னி நோக்கி சென்ற ஒரு கப்பல் புயலில் சிக்கி அதிலிருந்து 4 பேர் லைஃப் போட்டில் கடலில் தப்புகிறார்கள்.

உண்ண உணவு மற்றும் தண்ணீர் இன்றி அவர்கள் அங்கே கிடைத்த ஆமைகளை பிடித்து ரத்தத்தை குடிக்கிறார்கள். ஆனாலும் அதிக நாள் தாக்கு பிடிக்க முடியவில்லை. அப்போது அவர்களில் இளைய வயது உடைய சிறுவன் ஒருவன் தாகம் தாங்காமல் கடல் நீரை பருகி உடல் நிலை கெட்டு போகிறது.

அவன் நிலை மோசமாகி இறக்க தான் போகிறான் எனும் போது எப்படியும் அவன் இறக்க தான் போகிறான் அவனை நாமே கொன்று அவன் ரத்தத்தை குடிக்கலாம் என்று அந்த குழு ஒரு முடிவிற்கு வருகிறது காரணம் அவன் நோயால் இறக்கும் வரை காத்திருந்தால் அவன் ரத்தம் கெட்டு போய் பயன்படாமல் போகலாம் .

அவர்கள் திட்ட படி அந்த சிறுவனை சின்ன கத்தியை வைத்து கழுத்தை அறுக்கிறார்கள். பிறகு ரத்தத்தை குடித்து தாங்கள் மீட்க படும் வரை உயிர் தப்புகிறார்கள் .

இதில் விசித்திரம் என்ன வென்றால் ஆலன்போ எழுதிய அந்த கதையில் வரும் சிறுவன் பெயர் "ரிச்சர்ட் பார்க்கர்." இந்த நிஜ கதையில் அந்த சிறுவன் பெயரும் ரிச்சர்ட் பார்க்கர்.

இந்த பயங்கர நிஜ சம்பவம் அந்த காலத்தில் வைரலாக பேசப்பட்ட ஒரு வழக்கு ஆகும்.

மீட்க பட்ட 3 பேரில் இருவருக்கு தூக்கு தண்டனை அறிவித்தது நீதி மன்றம். பிற்பாடு தண்டனை குறைத்துக் கொண்டது.

கற்பனை கதைக்கும் நிஜ சம்வத்திற்குமான இந்த அபூர்வ மர்ம ஒற்றுமை பலரையும் ஆச்சர்யத்தில் ஆழ்த்தியது.

இது தற்செயலா ?

ர.ரா

தற்செயல் என்று உண்டா ? (3 பகுதி) 19-04-2020

நாவலின் பெயர் : இருளின் கண்கள்
(The Eyes of Darkness )
(வூஹான் 400 வைரஸ் பற்றிய கதை )

கதை எழுதப்பட்ட ஆண்டு : 1981

நாவலாசிரியர் : அமெரிக்க எழுத்தாளர் டீன் கூன்ட்ஸ் எழுதிய
த்ரில்லர் நாவல் . பக்கம் 371

கிறிஸ்டினா எவன்ஸ் என்கிற பெண். மைக்கேல் என்பவரால் விவாகரத்து செய்யப்பட்டவள் . டேனி என்கிற மகனை சுற்றலாவிற்கு அனுப்புகிறார். சுற்றுலாவுக்கு போனவர்கள் ஒரு கோர விபத்தில் பலியானதாகவும் ,அந்த விபத்தில் மகன் டேனியும் இறந்ததாகவும் , உடல்கள் நிறைய சேதமானதால் அங்கேயே புதைக்கப்பட்டதாகவும் செய்தி வருகிறது

ஓராண்டிற்கு பிறகு டேனியின் அம்மாவின் கனவில் மகன் அடிக்கடி வந்து தான் சாகவில்லை உயிருடன்தான் இருப்பதாகவும் , தன்னை வந்து காப்பாற்றவும் சொல்கிறான்.

மகன் இருந்த அறையின் பலகையில் திடீர் திடீரென்று எழுத்துக்களில்
"NOT DEATH " நான் சாகவில்லை என்ற எழுத்துக்கள் வந்து மறைகிறது. தாய் வேலை பார்க்கும் கம்ப்யூட்டர் மற்றும் பிரிண்டரில் NOT DEATH வாசகம் வந்து மறைகிறது.

தன் மகனை தான் பார்க்காமல் அடக்கம் செய்ததினால் மகன் இறந்து போனதை நம் மனம் ஏனோ ஏற்க மறுக்கிறதோ என்ற எண்ணம் தாயிக்கு வர ஆரம்பிக்கிறது .. எனவே மகனின் கல்லறையை ஒரு தடவை திறந்து மகனின் பிணத்தைப் பார்த்தால் , ஒரு சமயம் இந்த மனப்பிறழ்யத்திலிருந்து விடுதலை பெறலாம் என்று எண்ணுகிறாள் .

இதற்கு உதவியாக எலியட் ஸ்ட்ரைக்கர் - இராணுவ புலனாய்வுத்துறையில் பணியாற்றிய ஒரு வழக்கறிஞரின் நட்பு கிடைக்கிறது . இந்த வழக்கறிஞர் தனக்கு நெருக்கமான நண்பர்தான் நீதிபதியாக இருப்பதால் , அவரின் மூலம் மகன் டேனியின் கல்லறையை திறந்து பார்க்க அனுமதி பெறுகிறார்.

கல்லறை திறந்து பார்க்கப் போகும் செய்தி காட்டுத் தீயாய் செய்தித்தாள் மூலம் பரவ , தாய் கிறிஸ்டினா எவன்ஸையும் , வழக்கறிஞ்சர் எலியட் ஸ்ட்ரைக்கரையும் கொல்வதற்கு ஒரு குழு தயாராகிறது.

இக்குழு நம்மை ஏன் கொல்ல வருகிறது ? என்பதை சிந்திக்கும் போதுதான் இதற்குரிய விடை மகன் டேனி சுற்றுலா சென்ற இடத்தில்தான் பதில் இருக்கிறது என்பதை புரிந்து கொள்கிறார்கள் .

இதற்கிடையில் தன் மகன் டேனியின் கனவு , மறையும் எழுத்துக்கள் பற்றி ஒரு மனோதத்துவ மருத்துவரிடம் வழக்கறிஞ்சர் எலியட் ஸ்ட்ரைக்கர் - கிறிஸ்டினா எவன்ஸை அழைத்துச் செல்கிறார் .

அந்த மருத்துவர் டெலிபதி (இங்கே நினைக்கப்படுவதை தொலையில் உணர வைப்பது ) மற்றும் டெலி கயின்ட்னஸ் (தொலை உள்ள பொருட்களை நகர்த்தி இயக்குவது) மூலம் மகன் உயிரோடு இருப்பதையும், அவனும் டெலிபதி மூலமாகத்தான் கனவு மற்றும் எழுத்துக்களை பதிப்பித்தான் எனவும் கூறி அவன் இருக்கும் இடத்தை மேப் போட்டு கொடுக்கிறார் .

இருவரும் அந்த எல்லையை அடையும் போது அங்கு ஒரு பெரிய ஆய்வகம் இருப்பதையும் அந்த ஆய்வகத்தை ஈவு இரக்கமின்றி கொலை செய்யக் கூடிய தலைமை விஞ்ஞானியும் , ஆய்வக உரிமையாளருமான அலெக்ஸாண்டர் , அவருக்கு சோதனை செய்வதற்கு பயணிகளை பிடித்து கொண்டு வரும் கொலையாளி வின்சென்ட் மற்றும் ஆய்வக மருந்தியல் ஆய்வு நிபுணர் லெடிசியா மரியா போன்றவர்களைப் பற்றிய விபரம் தெரிய வருகிறது .

அந்த ஆய்வகத்தில் வூஹான் 400 வைரஸை ஆய்வு செய்யும் விஞ்ஞானி தக்க பாதுகாப்பு குறைவால் அந்த வைரஸ் வெளியே எடுக்க அது பரவ ஆரம்பிக்கிறது . உடனே ஆய்வு விஞ்ஞானி அந்த ஆய்வகத்தை விட்டு தப்புகிறார் . அவர் தப்பி மகன் டேனி கூட்டத்தாரிடம் உதவி கேட்கிறார் . அவரை 5 கி.மீ தூரத்தில் விடும் போது போது ஆய்வக கொலையாளி வின்சென்டிடம் அத்தனை பேர்களும் சிக்குகிறார் .

ஆய்வாக விஞ்ஞானியிடம் தொற்றிய வைரஸ் பயணிகளிடம் தொற்றி அத்தனை பேரையும் கொன்று விட மகன் டேனியிடம் வைரஸ் விளையாட்டு செல்லுபடியாகவில்லை .

உடனே ஆய்வகத்தில் ஏன் இந்த வைரஸ் டேனியை பாதிக்கவில்லை ? என்பதை ஆராய்கிறார்கள் .

விஞ்ஞானி லெடிசியா மரியா இந்த வைரஸ் பற்றி டேனி தாயிடமும் வழக்கறிஞரிடம் விளக்கிறார் . இந்த வைரஸ் சீனாவில் வூஹான் மாகாணத்திலுள்ள ஆய்வகத்தில் உருவாக்கப்பட்டதை சீனா விஞ்ஞானி லீசென் அமெரிக்க ராணுவ ஆய்வகத்திற்கு கொடுத்தார் எனவும்,

சீன இராணுவம் இந்த வைரஸ்சை உயிரி ஆயுதமாக உருவாக்குகின்றது. அந்த வைரஸ் மனிதர்களிடம் இருந்து மனிதர்களுக்கு காற்றின் மூலம் பரவக்கூடியது . நுரையீரலைப் பாதித்து பின் மூளை பாதிப்படையச் செய்யும் அதற்குள் நோயாளி இறந்து விடுவான் , மனித உடல் கிடைக்கவில்லை என்றால் அடுத்த நாளே அந்த வைரஸ் இறந்துவிடும். இதனால் இந்த வைரஸ்சை சீனா ஒரு சிறந்த பயோ ஆயுதமாகக் கருதுகின்றது. இந்த வைரஸ் ஆயுதம் சீனாவின் வூஹான் நகரில் பாதுகாக்கப்படுவதால், வைரஸ் வூஹான் -400 என்றே அழைக்கப்படுகின்றது.

ஆனால் இந்த வூஹான் 400 வைரஸ் உங்க மகன் டேனியை பாதிக்கவில்லை என்பதால் அவன் உடலில் என்ன மாதிரியான எதிர்ப்பு சக்தி இருக்கிறது அந்த நோய் எதிர்ப்பு சக்தியைத் தாண்டி வூஹான் 400 வைரஸால் வேலை செய்வதற்காக ஊக்கப்படுத்த ஆய்வு செய்யப்படுகிறது என்று கதை நீளுகிறது . நீளட்டும் .

இப்போ விஷயத்திற்கு வருவோம் .
இந்த கதை 1981 -ல் எழுதப்பட்டது அப்போது இந்த வைரஸ்க்கு கோர்கி 400 என்று முதலில் பெயர் வைக்கப்பட்டு பின் வூஹான் 400 என்று மாற்றி அமைக்கப்பட்டது கூட தற்செயலா ?

கோர்கி ரஷ்யாவில் உள்ள மாகாணம் ரஷ்யா பலமிழந்த பிறகு இந்த நாவல் 2008-ல் நான்காம் பதிப்பு செய்து பதிக்கும் போது நாவலாசிரியரால் கோர்கி 400 பெயரை நீக்கிவிட்டு வூஹான் 400 என்று மாற்றி பதிக்கப்பட்டது .

வூஹான் சரி , அதென்ன 400 ?
400 = 20 x 20 அதாவது 2020ம் வருடத்தை குறிக்கிறதா ? பயோ வைரஸ் பற்றி நிறைய கதை எழுதப்பட்டுள்ளது. ஆனால் மிக துல்லியமாக வூஹான் 400 என்று எப்படி முன்கூட்டியே அறியப்பட்டது ? 2020 -ல் சீனா வைரஸ் விஞ்ஞானி லீசென் பெயரையும் நாவலில் 1981 லேயே பயன்படுத்தப்பட்டது எப்படி ? இது கூட தற்செயலா ?

டேனி அம்மா கிறிஸ்டினா எவன்ஸ் வேலை செய்வது கோல்டன் பிரமிட் என்கிற விடுதி . கோல்டன் பிரமிட் என்பது இல்லுமினாட்டிகள் தொடர்பான ரகசிய இடம் . இங்குதான் உலகின் முக்கியமான முடிவுகள் ரகசியமாக 13 பேர்களால் எடுக்கப்படும். டேனி அம்மா கிறிஸ்டினா எவன்ஸ் வேலை செய்யக் கூடிய விடுதிக்கு வேறு எந்த பெயர்களையாவது வைத்திருக்கலாமே இருந்து இருந்து இல்லுமினாட்டிகள் தொடர்பான ரகசிய இடத்தின் பெயர்தான் வைக்க வேண்டுமா ?

வூஹான் 400 வைரஸான கொரோ உலகம் முழுவதும் பரவுவதற்கு இல்லுமினாட்டிகள்தான் காரணமா ?

இப்படி அடுக்கடுக்கான கேள்விகள் வளர்ந்து கொண்டே போகிறது ? பதில் யாரிடம் இருக்கிறது என்பதுதான் இப்போதைய தலையாய முக்கிய கேள்வி ?

ர.ரா

இக் கதைக்கு தேவையான சில தகவல்கள் என்னுடைய பின்னூட்டத்தில் சொல்லி இருக்கிறேன் .




"I'm not interested in the philosophy or morality of biological warfare," Tina said. "Right now I just want to know how the hell Danny wound up in this place."

"To understand that," Dombey said, "you have to go back twenty months. It was around then that a Chinese scientist named Li Chen defected to the United States, carrying a diskette record of China's most important and dangerous new biological weapon in a decade. They call the stuff 'Wuhan-400' because it was developed at their RDNA labs outside of the city of Wuhan, and it was the four-hundredth viable strain of man-made microorganisms created at that research center.

"Wuhan-400 is a perfect weapon. It afflicts only human beings. No other living creature can carry it. And like syphilis, Wuhan-400 can't survive outside a living human body for longer than a minute, which means it can't permanently contaminate objects or entire places the way anthrax and other virulent microorganisms can. And when the host expires, the Wuhan-400 within him perishes a short while later, as soon as the temperature of the corpse drops below eighty-six degrees Fahrenheit. Do you see the advantage of all this?"

Tina was too busy with Danny to think about what Carl ... the scientist meant.

exotic birds. Known medications and antibiotic... completely ineffective against this funguslike, extre... tagious disease, ... its victi... discovered that th... bacteria can be destroyed thro... combination of electrical currents and extreme heat. In around 2020 a severe pneumonia-like illness wi... throughout the globe, attacking the lungs and the ... tubes and resisting all known treatments. Almost ... ...ling than the ill... itself will b... the fact that it wi... vanish as quickly as it arrived, attack again ten years ... then disappear completely.

...mental health in the first half of this century wi...

போதை 18/07/2020

(மனித குணநலன்கள் 17 )



உலகெங்கும் கொரோனா வைரஸால் நோய் பரவுவதை தடுத்த நிறுத்த உலகமே ஊரடங்கை நடைமுறைப்படுத்தி , அநேக கடைகள் மூடப்பட்டு அதிலும் மதுபானகடைகள் , Tasmak போன்ற அரசு மதுபானக் கடைகளும் மூட ....

மது கிடைக்காததால் நடிகை மனோரமாவின் மகன் பூபதி (வயது 64) தூக்க மாத்திரைகளை சாப்பிட்டு அப்போலோ மருத்துவமனையில் அனுமதி .

புதுக்கோட்டை மாவட்டம் அறந்தாங்கியில் மது கிடைக்காத விரக்தியில் லாரி ஓட்டுநர் தூக்கிட்டு தற்கொலை .

கோட்டைப் பட்டினத்தைச் சேர்ந்த 3 நண்பர்கள் மது கிடைக்காததால் , சேவிங்க் லோஷனை குளிர்பானத்தில் கலந்து குடித்து 3 பேருமே மரணம் .

மதுப்பழக்கம் அத்தனை ஆபத்தானது இப்பழக்கத்தை பழக்கப்படுத்திக் கொண்டவர்களால் முற்றிலும் விட முடியவில்லை எனவே இஸ்லாம் மதுப் பழக்கத்தை இல்லாமல் ஆக்க கைக்கொண்ட முறை அலாதியானது .

மதுவிலிருந்து முற்றிலும் விடுபட திருக்குர்ஆன் செய்த மருத்துவம்

குடிப்பதையே வாழ்க்கையாகக் கொண்டு, எழுத்தறிவில்லாத, காட்டு மிராண்டிகளைப் போல் வாழ்ந்து கொண்டிருந்த அரேபிய சமுதாயம் தன் கையாலே மதுப் பானைகளை உடைத்தெறியும் அளவிற்குப் பெரும் மறுமலர்ச்சி அரபு தேசத்தில் உருவானது. இந்தக் கருத்தை நாம் மக்களிடம் கூறினால் இந்த மாபெரும் மாற்றத்தை ஏற்படுத்திய அந்தச் சீர்திருத்தவாதி யார்? அவர் என்ன மருத்துவம் செய்தார்? அவர் சாதாரண ஆளாக இருக்க முடியாது என்றெல்லாம் வியந்து கேட்பார்கள்.

அரபியர்களிடத்தில் ஏற்பட்ட இந்த மறுமலர்ச்சிக்கு, குர்ஆன் அவர்களுக்கு அளித்த அற்புதப் பயிற்சியே காரணம். இந்தப் பயிற்சி தான் அவர்களுக்கு மதுவின் மீது இருந்த மோக நோய் தீர சிறந்த மருந்தாக இருந்தது.

எடுத்த எடுப்பிலே மதுவை யாரும் பயன்படுத்தக் கூடாது என்று குர்ஆன் கட்டளையிடவில்லை. மதுவை ஒழிப்பதற்காக வேறுபட்ட கால கட்டங்களில் வெவ்வேறு கோணங்களில் மதுவைப் பற்றி குர்ஆன் மக்களுக்கு எச்சரித்தது. மது நல்ல பொருள் அல்ல என்ற கருத்தை முதலில் குர்ஆன் முன்வைத்தது.

பேரீச்சை மற்றும் திராட்சைக் கனிகளிலிருந்து மதுவையும், அழகிய உணவையும் தயாரிக்கிறீர்கள். விளங்கும் சமுதாயத்திற்கு இதில் சான்று உள்ளது. (குர்ஆன் 16:67)

இந்த வசனம் மது தடை செய்யப்படுவதற்கு முன்னால் இறங்கிய வசனம். இந்த வசனத்தில் இறைவன் உணவு மற்றும் மது ஆகிய இரண்டையும் பற்றிப் பேசுகிறான்.

இரண்டு பொருட்களைப் பற்றி பேசும் போது ஒன்றை மட்டும் சிறந்தது என்று கூறினால் இன்னொன்று சிறந்ததல்ல என்றக் கருத்து வரும். எனவே உணவு, மது ஆகிய இரண்டில் உணவு தான் அழகானது; சிறந்தது. மது சிறந்ததல்ல என்றக் கருத்தை முதலில் முன்வைக்கிறான். இந்நேரத்தில் மது அருந்தக் கூடாது என்று குர்ஆன் தடை விதிக்கவில்லை.

இதன் பிறகு மதுவில் கேடுதான் அதிகமாக இருக்கிறது என்று திருக்குர்ஆன் தெளிவாக உணர்த்தியது. என்றாலும் மதுவைப் புறக்கணிக்க வேண்டும் என்ற கட்டளையை குர்ஆன் இப்போதும் இடவில்லை.

" மது மற்றும் சூதாட்டம் பற்றி (முஹம்மதே!) உம்மிடம் கேட்கின்றனர். அவ்விரண்டிலும் பெரும் கேடும், மக்களுக்குச் சில பயன்களும் உள்ளன. அவ்விரண்டின் பயனை விட கேடு இவ்வுலகிலும், மறுமையிலும் மிகப்

பெரியது" எனக் கூறுவீராக!
(குர்ஆன் 2:219)

இதன் பிறகு தொழுகைக்கு வரும் போது போதையுடன் வரக்கூடாது என்று குர்ஆன் கட்டளையிட்டது. ஒரு நாளைக்கு ஐந்து முறை தொழுவது கடமையாக்கப் பட்டுள்ளது.

தொழுகைக்கு போதையில்லாமல் வர வேண்டும் என்றால் குறைந்தது தொழுவதற்கு ஒரு மணி நேரத்திற்கு முன்பாவது மது அருந்தாமல் இருக்க வேண்டும். இதை ஒரு நாளைக்கு ஐந்து முறை கடைப்பிடிக்கும் போது எப்போதும் போதையில் திளைத்தவர்கள் சிறந்த பயிற்சிக்கு உட்படுத்தப்படுவார்கள். போதையின்றி வாழ்வதற்கு பழகிக் கொள்வார்கள். எனவே தான் மனித இயல்பை அறிந்த இறைவன் மதுவை முற்றிலும் தடுத்து விடாமல் தொழுகை நேரத்தில் மட்டும் அருந்த வேண்டாம் என்று முதல் உத்தரவு பிறப்பித்தான்.

" நம்பிக்கை கொண்டோரே! போதையாக இருக்கும் போது நீங்கள் கூறுவது உங்களுக்கு விளங்கும் வரை தொழுகைக்கு நெருங்காதீர்கள்!"
(குர்ஆன் 4:43 )

இந்த வசனம் இறங்குவதற்குப் பின்வரும் சம்பவம் காரணமாக இருந்தது.

அலீ (ரலி) மற்றும் அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) ஆகிய இருவரையும் அன்சாரிக் குலத்தைச் சார்ந்த ஒருவர் விருந்துக்கு அழைத்திருந்தார். அவ்விருவருக்கும் மதுவை குடிக்கக் கொடுத்தார். (இச்சம்பவம்) மது தடை செய்யப்படுவதற்கு முன்பு (நடந்தது).
அலீ (ரலி) அவர்கள் (போதையுடன்)
"குல் யா அய்யுஹல் காஃபிரூன் " என்ற சூராவை ஓதி மக்களுக்கு மஃக்ரிப் தொழ வைத்தார்.

(போதையின் காரணத்தினால்) தொழுகையில் தவறுதலாக ஓதிவிட்டார். அப்போது தான், "நம்பிக்கை கொண்டோரே! போதையாக இருக்கும் போது நீங்கள் கூறுவது உங்களுக்கு விளங்கும் வரை தொழுகைக்கு நெருங்காதீர்கள்!' (4:43) என்ற வசனம் இறங்கியது. அறிவிப்பவர்: அலீ (ரலி)
நூல்: அபூதாவூத் 3186

இறுதிக் கட்டமாக மதுவை முற்றிலும் புறக்கணிக்க வேண்டும் என்று குர்ஆன் கட்டளையிட்டது.

" நம்பிக்கை கொண்டோரே! மது, சூதாட்டம், பலிபீடங்கள், (குறி கேட்பதற்கான) அம்புகள், ஆகியவை அருவருப்பானதும், ஷைத்தானின் நடவடிக்கையுமாகும். எனவே இதிலிருந்து விலகிக் கொள்ளுங்கள்! வெற்றி பெறுவீர்கள்!

மது மற்றும் சூதாட்டம் மூலம் உங்களுக்கிடையே பகைமையையும், வெறுப்பையும் ஏற்படுத்தவும், அல்லாஹ்வின் நினைவை விட்டும், தொழுகையை விட்டும் உங்களைத் தடுக்கவுமே ஷைத்தான் விரும்புகிறான். எனவே விலகிக் கொள்ள மாட்டீர்களா?
(குர்ஆன் 5:90 )

எத்தனையோ சட்டங்கள் ஏட்டளவில் இருக்கின்றன. மக்களில் எவரும் இந்தச் சட்டங்களை மதிப்பதும் இல்லை. பொருட் படுத்துவதும் இல்லை. ஏனென்றால் யாருமே கடைப்பிடிக்க முடியாத அளவிற்கு மிகக் கடினமாக இச்சட்டங்கள் இருக்கின்றன.

சட்டங்கள் இடுவது முக்கியமல்ல. எப்போது, எப்படிச் சட்டம் இயற்றினால் பலன் ஏற்படும்? என்ற தூர நோக்குப் பார்வையில் சட்டங்களை இயற்ற வேண்டும். மக்களின் மனநிலைகளை அல்லாஹ் முற்றிலும் அறிந்திருப்பதால் இத்தகைய வழிமுறையைக் கையாண்டுள்ளான்.

எடுத்த எடுப்பிலே மதுவை குடிக்கக் கூடாது என்று கூறியிருந்தால் இச்சட்டத்திற்கு யாரும் கட்டுப்பட்டிருக்க மாட்டார்கள். இதை ஆயிஷா (ரலி) அவர்கள் தெளிவுபடுத்துகிறார்கள்.

ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுவதாவது:
எடுத்த எடுப்பிலேயே நீங்கள் மது அருந்தாதீர்கள் என்று வசனம் அருளப்பட்டிருந்தால் மக்கள் நாங்கள் ஒரு போதும் மதுவைக் கைவிட மாட்டோம் என்று கூறியிருப்பார்கள். (ஆகவே தான் அல்லாஹ் படிப்படியாகச் சட்ட விதிகளைக் கூறும் வசனங்களை அருளினான்.) நூல்: புகாரி 4993

இறை நம்பிக்கை அவசியம்

இஸ்லாம் என்பது உண்மையான ஆன்மீகம். மனிதனுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு அங்கத்திலும் கலந்து வழி காட்டும் மார்க்கம். மறுமை வாழ்க்கையை முக்கிய குறிக்கோளாகக் கொண்டு மறுமைக்காகத் தான் இவ்வுலகத்தில் வாழ வேண்டும் என்ற எண்ணத்தை மக்கள் மனதில் ஆழமாகப் பதித்தது. எனவே இஸ்லாத்தை நேசித்து ஏற்றுக் கொண்ட நபித்தோழர்கள் மதுவின் சுகத்துக்கு அடிபணியாமல் மதுவை விடப் பன்மடங்கு நேசித்த குர்ஆனின் கட்டளைக்கு உடனே பணிந்தார்கள்.

மக்களிடத்தில் இது போன்ற பெரும் மாற்றங்களை ஏற்படுத்த வேண்டுமானால் வெறும் தந்திரங்கள் இருந்தால் மாத்திரம் போதாது. உண்மையான ஆன்மீகக் கொள்கை அவசியம் என்பதை நாம் மறந்து விடக்கூடாது.

ர.ரா

பதவி மோகம் 17-04-2020

(மனித குணநலன்கள் 16)



நாம் உலகத்திற்கு வரும்போது எதையும் எடுத்துக்கொண்டு வரவில்லை.
வெறுங்கையுடனே வந்தோம் .
எதையும் அணிந்துக்கொண்டு வரவில்லை ; நிர்வாணமாக வந்தோம் .

அவ்வாறே நாம் உலகிலிருந்து செல்லும்போது வெறுங்கையுடனும்,
கஃபன் புடவையுடனும்தான் செல்ல இருக்கிறோம் . பிறப்பிற்கும் இறப்பிற்குமிடையில் நாம் உலகில் மிகக் குறுகிய காலங்களே வாழக்கூடியவர்களாக இருக்கிறோம்.

“உங்களில் ஒவ்வொருவரும் பொறுப்பாளியே. மேலும் உங்கள் பொறுப்புக்குட்பட்டவை குறித்து விசாரிக்கப்படுவீர்கள். ஆட்சித் தலைவரும் பொறுப்பாளியாவார்
தன் பிரஜைகள் குறித்து அவர் விசாரிக்கப்படுவார். ஆண் தன் குடும்பத்தாருக்குப் பொறுப்பாளியாவார். அவன் தன் பொறுப்புக்குட்பட்டவர்கள் குறித்து விசாரிக்கப்படுவார். பெண் தன் கணவனின் வீட்டிற்குப் பொறுப்பாளியாவாள். அவளது பொறுப்புக்குட்பட்டவை குறித்து அவள் விசாரிக்கப்படுவாள். பணியாள் (அடிமை) தன் எஜமானின் செல்வத்திற்குப் பொறுப்பாளியாவான். அவன் தன் பொறுப்புக்குட்பட்டவை பற்றி விசாரிக்கப்படுவான்.” புகாரி : 2558

இந்த குறுகிய காலங்களில் வாழ்வதற்குத் தேவையான அருட்கொடைகளை மனிதர்களுக்கு மத்தியில் அல்லாஹுத்தஆலா பிரித்து வழங்கியிருக்கிறான்.

இவை ஒவ்வொன்றைப் பற்றியும்
அல்லாஹுத்தஆலா மறுமைநாளில்
கேள்வி கணக்குக்கேட்பான்.
ثُمَّ لَتُسْأَلُنَّ يَوْمَئِذٍ عَنِ النَّعِيمِ

“பின்னர் அந்நாளில் (இம்மையில் உங்களுக்கு அளிக்கப்பட்டிருந்த) அருட் கொடைகளைப் பற்றி நிச்சயமாக நீங்கள் கேட்கப்படுவீர்கள். குர்ஆன் (102:8)

எந்த அளவுக்கு என்றால் மனிதன், கடும் சூட்டில் அவன் குடித்த குளிர்ந்த நீரைப் பற்றியும்,வெய்யிலிருந்து பாதுகாப்புப் பெற ஒதுங்கிய நிலழைப் பற்றியும் கேட்கப்படுவான்.

இப்பேற்பட்ட இறைவன் வகித்த பதவியைப் பற்றி கேள்வி கேட்காமல் விட்டு விடுவானா என்னே ..?

நபித்தோழர் அபூதர் ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் சென்று பதவி கேட்டு விண்ணப்பித்தபோது, ‘அபூதர்ரே! நீர் பலவீனமானவர். ஆனால் பதவியோ நம்பிக்கையான நிறைவேற்றப்படத் தகுந்த ஒரு பொறுப்பு. அதற்கு நீர் சக்தி பெற மாட்டீர். சரியாக நிறைவேற்றியவரைத் தவிர மற்றவருக்கு அப்பொறுப்பு பெரும் இழிவாகவும் துக்கமாகவும் மாறிவிடும்’ என்றார்கள். (நூல்: புகாரி)

‘நீங்கள் ஆட்சிப் பதவியை அடைய பேராசைப் படுகிறீர்கள். ஆனால் மறுமை நாளில் அதற்காக வருத்தப்படுவீர்கள். பாலூட்டுபவை தரும் இன்பங்களிலேயே பதவிப்பால் தான் இன்பமானது. பாலை மறக்க வைப்ப(தன் துன்பத்)திலேயே பதவிப் பாலை நிறுத்துவது தான் மோசமானது. (நூல்: புகாரி)

அப்துர் ரஹ்மான் இப்னு ஸமூரா ரளியல்லாஹு அன்ஹு அவர்களிடம் அண்ணலார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ‘அப்துர் ரஹ்மானே! ஆட்சிப் பொறுப்பை நீங்கள் வலியக் கேட்காதீர்கள். ஏனெனில் நீங்கள் கேட்டு அது உங்களுக்கு அளிக்கப்பட்டால் இறையுதவியின்றி அதோடு நீங்கள் (தனியாக) விடப்படவீர்கள். கேட்காமல் உங்களுக்கு அது அளிக்கப்பட்டால் அது தொடர்பாக உங்களுக்கு அல்லாஹ்வின் உதவி கிடைக்கும்’ என்றார்கள்.
(நூல்: புகாரி)

பதவியை முறையாகச் செயல்படுத்துபவர்கள் வாழ்த்துக்கு உரியவர்கள். ஏனெனில்,..

‘யா அல்லாஹ்! என் சமுதாயத்தினரின் காரியங்களில் சிலவற்றுக்குப் பொறுப்பேற்றுக்கொண்டு பின்னர் அவர்களிடம் கடுமையாக நடந்து கொண்டவரிடம் நீயும் கடுமையாக நடந்துகொள்வாயாக!

என் சமூகத்தினரின் காரியங்களில் சிலவற்றுக்குப் பொறுப்பேற்றுக் கொண்டு மென்மையாக நடந்து கொண்டவரிடம் நீயும் மென்மையாக நடந்துகொள்வாயாக!' என்று நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் 'துஆ'ச்செய்துள்ளார்கள்.
(நூல்: முஸ்லிம்)

நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் மரணத்திற்குப் பிறகு, யார்அவாகளின் கலீஃபாவாக வர வேண்டும் என்பதில் முஸ்லிம்களுக்கு மத்தியில் பெரிய கருத்து வேறுபாடு நிலவியது.

உமர் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்கள் மக்களை நோக்கி "நீங்கள் அபூபக்ர் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்களிடம் சென்று சத்தியப் பிரமாணம்(பைஅத்துச்) செய்து கொள்ளுங்கள்" என்று கூறினார்கள்.

இதைக் கேட்டதும் அபூபக்ர் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்கள் உமர் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்களிடம், "(உமரே!) நீங்கள்தாம் என்னை விட மிகவும் பலம் மிக்கவர்கள்"; என்று கூற,

உமர் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்கள், "(அபூபக்ரே!) நீங்கள்தாம் என்னை விட மிகச்சிறந்தவர்கள்" என்று பதில் கூறிவிட்டார்கள்.

இவ்வாறு இரு ஸஹாபாக்களும் ஒவ்வொரு காரணத்தைச் சொல்லி தலைமைத்துவத்தை ஏற்க மறுக்க, இறுதியாக உமர் (ரழியல்லாஹு அன்ஹு) அவர்கள்,"(அபூபக்ரே!) உங்களுடைய சிறப்புடன் எனது பலமும் சக்தியும் சேர்ந்து உங்களுக்கு உறுதுணையாக இருக்கும் என்று" கூறி அபூபக்ர்(ரழியல்லாஹு அன்ஹு) அவர்களின் மீது இப்பொறுப்பு சுமத்தப்பட்டது. பிறகு, நிர்பந்தத்தில் அதை அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள்.
(நூல்:ஹயாதுஸ் ஸஹாபா,
பாகம்:2, பக்கம்:19)

கிரீடத்தைப் பார்த்துத் தேர்ந்தெடுங்கள். ஏனெனில், பல கிரீடங்களில் முத்துக்களைவிட முட்களே நிறைந்துள்ளன என்கிற தத்துவம் கவனத்திற்குரியது.

ர-ரா

ஏமாற்று மோசடி

(மனித குணநலன்கள் 15) 17-04-2020

நபிகள் நாயகம் ﷺ அவர்கள்
கூறினார்கள் : (பனூ இஸ்ராயீல்) ஒரு மனிதர் இன்னொரு மனிதரிடமிருந்து அவருக்கிருந்த அசையாச் சொத்து (நிலம்) ஒன்றை வாங்கினார்.

அந்த நிலத்தை வாங்கிய மனிதர் தனது நிலத்தில் தங்கம் நிரம்பிய ஜாடி ஒன்றைக் கண்டெடுத்தார். நிலத்தை வாங்கியவர் (நிலத்தை) விற்றவரிடம் என்னிடமிருந்து உன் தங்கத்தை எடுத்துக்கொள் என்றார் .

(ஏனெனில்) உன்னிடமிருந்து நிலத்தைத் தான் நான் வாங்கினேன். இந்தத் தங்கத்தை வாங்கவில்லை என்றுக் கூறினார். நிலத்தின் (முந்தைய) உரிமையாளர் நிலத்தை அதிருப்பவற்றுடன் சேர்த்துத் தான் நான் உனக்கு விற்றேன். (ஆகவே இந்தத் தங்கம் உனக்குத் தான் உரியது) என்று கூறினார்.

(இருவருக்குமிடையே தகராறு முற்றி) மற்றொரு மனிதரிடம் தீர்ப்புக் கேட்டு சென்றனர். அவர்கள் இருவரும் தீர்ப்புக் கேட்டுச் சென்ற அந்த மனிதர் ,
" உங்கள் இருவருக்கும் குழந்தை இருக்கிறதா? " என்று கேட்டார்.

அவ்விருவரில் ஒருவர் எனக்குப் பையன் ஒருவன் இருக்கிறான் என்று சொன்னார். மற்றொருவர் எனக்குப் பெண்பிள்ளை இருக்கிறது என்று சொன்னார்.

தீர்ப்புச் சொல்பவர் அந்தப் பையனுக்கு அந்தச் சிறுமியை மணமுடித்து வையுங்கள். அவர்கள் இருவருக்காகவும் அதிலிருந்து செலவழியுங்கள். தான தர்மம் செய்யுங்கள் எனத் தீர்ப்பளித்தார்.
அறிவிப்பவர் : அபு ஹுரைரா (ரலி) அவர்கள் நூல் : புகாரி (3472)

இது பற்றி குர்ஆனில் அல்லாஹ் ...
"அன்றியும், உங்களுக்கிடையில் ஒருவர் மற்றவரின் பொருளைத் தவறான முறையில் சாப்பிடாதீர்கள்; மேலும், நீங்கள் அறிந்து கொண்டே பிற மக்களின் பொருள்களிலிருந்து (எந்த) ஒரு பகுதியையும், அநியாயமாகத் தின்பதற்காக அதிகாரிகளிடம் (இலஞ்சம் கொடுக்க) நெருங்காதீர்கள்" (குர்ஆன் 2:188)

நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கடைத்தெருவில் உள்ள ஓர் உணவுக் குவியலைக் கடந்து சென்றார்கள். அப்போது அதனுள் தமது கையை நுழைத்தார்கள். அவர்களது கையில் ஈரம் பட்டது.

உணவுக்காரரே (கடைக்காரரே) ,
" என்ன இது ? " எனக்கேட்க,

"அல்லாஹ்வின் தூதரே மழை பொழிந்து (நனைத்து) விட்டது" என்று கூறினார்.

அதற்கு நபிகள் நாயகம் ﷺ அவர்கள் மக்கள் பார்க்கும் அளவிற்கு அதை நீ மேலே வைத்திருக்க வேண்டாமா? என்று கூறிவிட்டு .... "எவர் ஏமாற்றுகிறாரோ அவர் என்னைச் சார்ந்தவரல்லர்"என்று கூறினார்கள். (முஸ்லிம் 295)

ஒட்டகம், ஆடு போன்ற கால்நடைகளை விற்பனை செய்வதற்காக அதன் பாலை (கறக்காது) தடுத்து நிறுத்தி (அவற்றின் மடியை கனக்கச் செய்து அதிகமாகப் பால் தருவது போன்று) காண்பித்து விடாதீர்கள் என்று நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கூறினார்கள்.
(புகாரி 2148, முஸ்லிம் 3890)

103 ஹம்மான் பின் முஅப்பிஹ் (ரஹ்) அவர்கல் தமது அறிவிப்பில்

"இறைநம்பிக்கையாளர்கள் தம் விழிகளை உயர்த்திப் பார்த்துக் கொண்டிருக்கக் கொள்ளையடிப்பவன் அதை கொள்ளையடிக்கும் போது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி கொள்ளையடிக்கமாட்டான் “என்று அறிவித்துள்ளார்கள்.

மேலும், “மோசடி செய்பவன் செய்யும் போது அவன் இறை நம்பிக்கையாளனாக இருந்தபடி மோசடி செய்வதில்லை. (இவற்றிலிருந்து விலகிக் கொள்ளுமாறு) உங்களை நான் எச்சரிக்கிறேன்என்று நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கூறினார்கள் .
ஸஹீஹ் முஸ்லிம்

ர.ரா

"தற்செயல் " என்று உண்டா ? 15-04-2020




' The Roots of coincidence ' ( தற்செயலின் ஆதாரங்கள் ) என்ற ஓர் அருமையான புத்தகத்தை 'ஆர்தர் கோஸ்லர் ' என்பவர் எழுதியிருக்கிறார். ரொம்பவும் சுவராசியமானது .

இந்த புத்தகம் வெளிவந்ததும் , அயர்லாந்தில் இருந்து அந்தோணி
க்ளான்ஸி என்பவர் எழுதிய கடிதத்தில் ...

" நான் வாரத்தின் 7 வது நாள் , 7 மாதம் பிறந்தேன். நான் 7 வது குழந்தையாகப் பிறந்தவருக்குப் பிறந்த 7 வது குழந்தை எனக்கு 7 சகோதரர்கள் . என் 27 வது பிறந்த நாளில் ஒரு குதிரைப் பந்தயத்தில் 7 வது பந்தயத்தில் ஓடும் குதிரைகளின் பட்டியலில் 7 வது குதிரையின் பெயர் 'ஏழாவது சொர்க்கம்'
என்ற குதிரையின் மேல் 7 ஷில்லிங் பணம் கட்டினேன் .அந்தக் குதிரை 7 ஆயிரம் பவுண்ட் ஜெயித்தது என்று சொல்லியிருந்தால் , அந்தக் கடிதத்தை நம்புவதில் தயக்கம் ஏற்படும் .மாறாக அந்தக் குதிரை 7 வதாக வந்தது ! என்று கடிதம் முடிகிறது .மனுஷன் அத்தனைக்கும் ஆதாரம் வைத்து கடிதம் அனுப்பியிருந்தார். இது தற்செயலா ?

அடுத்து பிரெஞ்சு தேச 16 லூயி மன்னன் பிறந்த போது , அரசவையில் இருந்த துறவி , " இந்தக் குழந்தை ஒவ்வொரு மாதமும் 21 ந் தேதி ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் " என்று பெரிய சாசனம் எழுதிக் கொடுத்து விட்டார் .

மன்னர் லூயியின் வாழ்வின் திருப்பு முனை சம்பவங்கள் எல்லாம் 21 ந் தேதி களில் நிகழ்ந்தன .

இறுதியாக 1791 ஜூன் 21ல் மன்னனும், அரசியும் பிரெஞ்சு புரட்சியின் போது கைது செய்யப்பட்டனர் . செப் 21ல் பிரான்ஸ் குடியரசாகத் தன்னை அறிவித்தது .ஜன 21 ல் லூயி மன்னன் தூக்கிலிடப்பட்டான் . இதுவும் தற்செயலா ?

அடுத்து , அமெரிக்க அரசியல் வரலாற்று ஆதாரத்தோடு சம்பவங்களை குறிப்பிடுகிறேன் .

1) ஆப்ரஹாம் லிங்கன் 1860 லும் , ஜான் கென்னடி 1960 லும் அமெரிக்க ஜனாதிபதியானார்கள்.சரியாக100 வருஷம் .

2) இருவரும் நீக்ரோ இனத்தவர்களின் உரிமைகளில் தீவிரமாக இருந்தனர்.

3) இருவரும் வெள்ளிக்கிழமை தத்தம் மனைவிகளின் அருகில் இருக்கும் போது, சுட்டுக் கொல்லப்பட்டனர் .

4) இருவரின் தலையின் பின் பக்கம் துப்பாக்கி குண்டு துளைத்தது .

5) இரு மனைவியரும் வெள்ளை மாளிகையில் வாழும்போது பிள்ளை பெற்று, பிறந்ததும் குழந்தைகள் இறந்துள்ளது.

6) லிங்கன் இறந்தது ஃபோர்டு அரங்கத்தில் .கென்னடி இறந்தது லிங்கன் என்ற பெயர் கொண்ட காரில் ! அந்தக் காரைத் தயாரித்து ஃபோர்டு மோட்டார் கம்பெனி !

7) இருவரும் இறந்த பின்னர் ஜான்சன் என்ற பெயருள்ளவர்கள் அடுத்த ஜனாதிபதியாக உடனே பதவியேற்றார்கள் . ஆண்ட்ரு ஜான்சன் , லிண்டன் ஜான்சன் .

8 ) ஆண்ட்ரு ஜான்சன் பிறந்தது 1808 ,
லிண்டன் ஜான்சன் பிறந்தது 1908 . சரியாக 100 வருஷம்.

9) லிங்கனின் செயலாளரின் முன் பெயர் ஜான் . அதே சமயம் ஜான் கென்னடியின் செயலாளரின் பின் பெயர் லிங்கன் !

10) இருவரையும் கொன்றவர்கள் பிறந்த
வருடங்கள் ஜான் வில்க்ஸ் பூத் 1839 , லீ ஹார்வி ஆஸ்வார் டு 1939 சரியாக 100 வருஷம் .

11) கொன்ற இருவரும் தென் மாநிலத் தீவிரவாதிகள் .

12) இருவரும் பிடிபட்டு , வழக்கு தொடுப்பதற்கு முன் சுட்டுக் கொல்லப்பட்டனர் .

13 ) பூத் , லிங்கனை ஒரு தியேட்டரில் கொன்று விட்டு , ஒரு கிடங்குக்கு ஓடினான். ஆஸ்வால்டு ஒரு கிடங்கிலிருந்து கொன்று விட்டு , தியேட்டர் நோக்கி ஓடினான்.

14) லிங்கன் , கென்னடி இரண்டு பெயர்களும் ஆங்கிலத்தில் ஏழு எழுத்துக்கள் .

15) அடுத்த ஜனாதிபதியான ஆண்ட்ரு ஜான்சன், லிண்டன் ஜான்சன் இருவரின் பெயரும் 13 எழுத்துக்கள் .

16) கொன்றவர்களான ஜான் வில்க்ஸ் பூத் , லீ ஹார்வி ஆஸ்வால்டு இருவரின் பெயரும் 15 எழுத்துக்கள் .

இந்த நிகழ்வுகள் எல்லாம் தற்செயலாக நடப்பததாக தெரிந்தாலும் பௌதிக விதிகளுக்கு அப்பாற்பட்ட ஏதோ ஒரு விதி அல்லது தொடர்பு இருப்பது போல ஒரு பிரமையை அவை ஏற்படுத்துகின்றன என்று விஞ்ஞானிகளே கருதுகின்றனர் .

ஏதோ இதெல்லாம் தற்செயலால்தான் நடந்ததா ? இறைவன் எழுதி வைத்த திட்டத்தின்படி நடந்ததா ? என்றால் ...

மறைவானவற்றின் சாவிகள் அவனிடமே இருக்கின்றன. அவற்(றில் உள்ளவற்)றை அவனையன்றி வேறெவரும் அறிய மாட்டார். நிலத்திலும், நீரிலும் உள்ளவைகளையும் அவன் நன்கறிவான். அவன் அறியாமல் யாதொரு இலையும் உதிருவதில்லை. பூமியின் (ஆழத்தில்) அடர்ந்த இருளில் (புதைந்து) கிடக்கும் (கடுகு போன்ற சிறிய) வித்தும், பசுமையானதும், உலர்ந்ததும் அவனுடைய தெளிவான (பதிவுப்) புத்தகத்தில் இல்லாமலில்லை.
(அல்குர்ஆன் : 6:59)

இறை நாட்டமில்லாத தற்செயல் " என்று எதுவுமே இல்லை

ர.ரா

குறிப்பு : இக்கட்டுரையை ஏறத்தாழ 10 வருடங்களுக்கு முன் குர்ஆனின் குரல் மாத இதழுக்காக எழுதினேன் .அதை நண்பர் திருப்பூர் Abdullah Baqavi அவர்கள் கேட்டுக் கொண்டதற்காக இன்றைக்கு FB -ல் தருகிறேன் .



## வதந்தி

(மனித குணநலன்கள் 13) 15-04-2020



“தான் கேட்பதையெல்லாம் பரப்புரை செய்பவன் பரிபூரண முஸ்லிமாக முடியாது; மேலும் அவன் ஒரு போதும் தலைமைத்துவத்திற்கு தகுதியும் பெற முடியாது” (பைஹகீ)

ஒரு தடவை நபி (ஸல்) அவர்கள் ஜகாத் நிதியை வசூலிப்பதற்கு ஹஜரத் வலீத் பின் உக்பா (ரலி) அவர்களை பனீமுஸ்தலிக் எனும் கோத்திரத்தாரிடம் அனுப்பி வைத்தார்கள்.

இவருக்கும் அந்த கோத்திரத்தாருக்கும் இஸ்லாத்திற்கு வரும் முன் ஒரு கொலை சம்பந்தமான பகை உணர்வு இருந்து வந்தது. இஸ்லாத்திற்கு வந்தபின் அந்த பகை மறைந்து போனது.

ஹஜரத் வலீத் பின் உக்பா (ரலி) அவர்கள் வருகை புரியும் செய்தியறிந்து, அந்த கோத்திரத்தார் அவரை வரவேற்பதற்காக பெரும் படையை திரட்டி புடைசூழ ஊரின் எல்லையில் குழுமியிருந்தார்கள்.

இதை கண்ட ஹஜரத் வலீத் பின் உக்பா (ரலி) அவர்கள் உண்மை என்னவென்று உறுதிப்படுத்தாமல் பழைய பகை உணர்வை மனதில் வைத்து நம்மை தீர்த்து கட்ட இவர்கள் ஒன்று குழுமியிருக்கிறார்கள் என மனதில் நினைத்துக் கொண்டு, வந்த வழியை நோக்கி நபி (ஸல்) அவர்களிடம் திரும்பிவிட்டார்கள்.

மேலும் அந்த கோத்திரத்தார் குறித்து தம் எண்ண அடிப்படையில் பின்வரும் சில வதந்திகளை பரப்பி விடுகிறார்கள்.
1) அவர்கள் இஸ்லாத்திலிருந்து வெளியேறி விட்டார்கள், 2) ஜகாத் நிதியை தர மறுக்கிறார்கள், 3) என்னை கொலை செய்யவும் தயாராகி விட்டார்கள்.

இந்த வதந்திகளை நபி (ஸல்) அவர்கள் கேட்டதும் நம்பவில்லை. நடந்தது உண்மையா? அல்லது வதந்தியா? என்பதை ஆய்வு செய்வதற்காக ஹஜரத் காலித் பின் வலீத் (ரலி) அவர்களின் தலைமையில் ஒரு சிறிய படையை அனுப்பி வைத்து, அவர்களுக்கு தெரியாமல் இரவு நேரத்தில் அந்த ஊருக்குள் நுழையும்படி ஆலோசனை வழங்கினார்கள்.

அந்த ஊரின் எல்லை அருகே படை வந்ததும், ஹஜரத் காலித் (ரலி) அவர்கள் சில ஒற்றர்களை உளவு பார்க்க அனுப்பி வைத்தார்கள். அந்த நேரம் மக்ரிப் தொழுகை நேரமாகும். ஒற்றர்கள் சென்றபோது அந்த கோத்திரத்தார் தொழுகையில் ஆர்வமாக ஈடுபட்டதை கண்டார்கள்.

இந்த செய்தியை அறிந்து கொண்ட காலித் (ரலி) அடுத்த நாள் காலையில் அவர்களிடம் சென்று ஜகாத் நிதியை வசூலித்துக் கொண்டு, நபி (ஸல்) அவர்களிடம் திரும்பிச் சென்று நடந்த உண்மை நிலவரத்தை எடுத்துச் சொன்னார்கள். அப்போதுதான்
இத்திருவசனம் இறங்கியது.

“முமின்களே! தீயவன் எவனும் உங்களிடம் ஒரு செய்தியைக் கொண்டு வந்தால் அதைத் தீர்க்க விசாரித்துக் கொள்ளுங்கள். (இல்லையேல்) அறியாமையினால் (குற்றமற்ற) ஒரு சமூகத்தாருக்கு நீங்கள் தீங்கு செய்து விடலாம்; பின்னர் நீங்கள் செய்தவை பற்றி நீங்களே கைசேதப்படுபவர்களாக (கவலைப்படுபவர்களாக) ஆவீர்கள்” (திருக்குர்ஆன் 49:6).

உடனே நபி (ஸல்) அவர்கள் “நிதானம் இறைவனின் செயல். அவசரம் ஷைத்தானின் செயல்” என்று கூறினார்கள்.

மேற்கூறப்பட்ட சம்பவத்தில் நபி (ஸல்) அவர்கள் அவசரப்படாமல் நிதானமாக சமயோசிதமாக நடந்து கொண்டதினால் ஒரு பெரும் போர் தவிர்க்கப்பட்டது. அந்த நபித் தோழரின் வதந்தியை நம்பி,
நபி (ஸல்) அவர்கள் செயல்பட்டால் , அநியாயமாக ஒரு சமூகத்தாருக்கு அநீதி இழைத்தவர்களாக ஆகியிருப்பார்கள்.

கண்டதை எல்லாம் பேசுவது வதந்தியின் ஆரம்ப நிலையாக அமைந்து விடுகிறது. நாம் பேசக்கூடிய ஒவ்வொன்றுக்கும் நாமே பொறுப்பு. வதந்தியால் ஏற்படக்கூடிய அனைத்து விதமான அசம்பாவிதங்களுக்கும் அதனை பரப்பியவர் மீதே சாரும். புரிகிறதா ?

“எதைப் பற்றி உமக்கு(த்தீர்க்க) ஞானமில்லையோ அதை(ச் செய்யத்) தொடர வேண்டாம்; நிச்சயமாக (மறுமையில்) செவிப்புலனும், பார்வையும், இருதயமும் இவையாவுமே (அதனதன் செயல் பற்றி) கேள்வி கேட்கப்படும்” (திருக்குர்ஆன் 17:36)

அடுத்த திரு வசனத்தைக் கவனியுங்கள்

“முமின்களே! (சந்தேகமான) பல எண்ணங்களிலிருந்து விலகிக்கொள்ளுங்கள். ஏனெனில், நிச்சயமாக எண்ணங்களில் சில பாவங்களாக இருக்கும்; (பிறர் குறைகளை) நீங்கள் துருவித்துருவி ஆராய்ந்து கொண்டிராதீர்கள்; அன்றியும் உங்களில் சிலர் சிலரைப் பற்றி புறம் பேச வேண்டாம்” (49:12) என்பது திருக்குர்ஆன் வசனமாகும்.

இறைவன் இங்கே மூன்று விதமான அம்சங்களை பட்டியல் போடுகிறான்.
1) ஊகம், 2) துருவித்துருவி ஆராய்வது,
3) புறம்.

இம்மூன்று அம்சங்களிலும் நன்மையைவிட பாவமே மிகைத்து நிற்கும். இம்மூன்றுமே ஒன்று மற்றொன்றுடன் தொடர்புடையவையாகும்.

ஊகம் என்பது உறுதிப்படுத்தாத வதந்தியாகும். வதந்தியை துருவித்துருவி ஆராயும்போது பிறர் மீது புறம் பேசக்கூடிய நிலைக்கு தள்ளிவிடும். வதந்தியால் பரவக்கூடிய செய்தியால் நன்மையை விட தீங்குகளே அதிகம்.

எனவே, வதந்தியை பாவங்களின் பட்டியலில் சேர்த்துவிட்டு அதிலிருந்து முஸ்லிம்கள் முற்றாக விலகி நிற்க வேண்டும் என இஸ்லாம் உத்தரவு பிறப்பிக்கிறது

வதந்தியால் பலரின் வாழ்க்கை பாழாகி போயிருக்கிறது. இன்றைய நவீன காலத்தில் தகவல் பரப்பும் சாதனங்களால் உண்மையை விட உண்மைக்கு புறம்பான வதந்திகள்தான் அதிகம் பரப்புரை

செய்யப்படுகிறது. பகிரவும் செய்யப்படுகிறது. அது பற்றிக் கொண்டு எரிகிறது .இதனால் கலவரம் கூட ஏற்படுகிறது. வதந்திகளை நம்பாமலும் பரப்பாமலும் வாழ்வதே அண்ணலாரின் அறிவுரையாகும் .

நீங்கள் வீட்டில் இருந்தவாறே கையில் உள்ள செல்போன் மூலம் உண்மைக்கு மாற்றமான செய்திகளை உலகுக்கு பரப்பாதீர்கள் .

“தான் கேட்பதையெல்லாம் ஒருவன் பரப்புரை செய்வது அவன் பொய்யன் என்பதற்கு இதுவே போதுமானது” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பாளர் : ஹஜரத் ஹப்இபின் ஆஸிம் (ரலி) அவர்கள், (நூல்:முஸ்லிம்).

ஹஜரத் உமர் (ரலி) அவர்கள் கூறும்போது “உங்களையும், குழப்பத்தையும் நான் எச்சரிக்கை செய்கின்றேன். ஏனெனில், வாளால் ஏற்படும் அதே பாதிப்பு நாவினாலும் ஏற்படும்” என்றார்கள்.

ஆக நீங்கள் வைத்திருக்கும் செல்போன் வதந்தியைப் பரப்பும்போது வாளாகவும் மாறிவிடக் கூடும் .

ர.ரா

## ஈனன் (வேசி மகன் )

(மனித குணநலன்கள் 11 ) 13-04-2020

ஈனன் என்றால் வேசி மகன் . புனித குர்ஆனில் வேசி மகன் (ஸனீம்) என்று சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது இதற்கான வரலாற்றை பார்ப்போம் .

நபி (ஸல்) அவர்கள் இறைத்தூதுச் செய்தியை எத்தி வைக்க ஆரம்பித்தவுடன், அந்தப் பிரச்சாரத்திற்கு எதிராக கவிதை இயற்ற, அந்தப் பிரச்சாரத்தை முடக்க இறைநிராகரிப்பாளர்கள் முனைந்தார்கள். அதற்கு அவர்கள் தேர்ந்தெடுத்த நபர்தான் வலீத் இப்னு முகைரா.

அவனை விட சிறந்த கவிஞர் அன்றைய மக்கா புழுதியில் வேறு எவரும் இருந்திடவில்லை. எனவே அண்ணல் நபிகளாரின் அழகிய பிரச்சாரத்தை முடக்கும் பொறுப்பை அவனிடமே கொடுத்தார்கள் மக்கா நிராகரிப்பாளர்கள்.

வலீத் இப்னு முகீரா நேரடியாக அண்ணல் நபிகள் (ஸல்) அவர்களிடம் சென்றான் . அவ்வமயம் அண்ணலார் திருக்குர்ஆனின் சில வசனங்களை ஓதிக் கொண்டிருந்தார்கள். எதேச்சையாக அதனைக் கேட்க ஆரம்பித்த வலீத் இப்னு முகீரா, அதன் இனிமையிலும், கருத்தாழத்திலும் இலயித்துப் போனான் . ஒன்றும் பேசாமல் திரும்பி வந்தான் .

அன்றைய மக்காவில் ஓர் அவையில் பனீ மக்ஸூம் கோத்திரத் தலைவர்களும், வியாபாரப் பிரமுகர்களும், தனவந்தர்களும்,மக்கா பிரமுகர் சமூகத்தில் முக்கியமானவர்கள் பலரும் கூடியிருந்தனர்.

கூட்டத்திலிருந்து வலீத் இப்னு முகீரா எழுந்து நின்றான் . அனைவரையும் தீர்க்கமாகப் பார்த்தான் . அன்றைய அரேபிய மண்ணில் மிகப் பிரபலமான கவிஞன் அவன். கூடியிருந்த அனைவரும் அவனையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டிருந்தனர்.

வலீத் இப்னு முகீரா உரையாற்ற ஆரம்பித்தான் : “சமுதாயப் பிரமுகர்களே! தனவந்தர்களே! அது நீங்கள் சொல்வதைப்போல் ஒரு கவிதையோ, கற்பனையோ அல்ல. அதை நான் என் இரு காதுகளாலும் கேட்டேன்.

அவை நிச்சயமாக மனிதர்களின் வார்த்தைகள் அல்ல : அது ஜின்களின் வார்த்தைகளும் அல்ல . சத்தியமாக அதற்கு ஓர் இனிமையும், தனிப்பட்ட ஒரு கவர்ச்சியும் இருந்து கொண்டு இருக்கின்றன".

கூட்டத்தில் சிறு சலசலப்பு. ஒருவர் எழுந்து, “அப்படியென்றால் அது குறித்து உங்கள் கருத்து என்ன?” என்று கேட்டார். கேட்டவரின் குரலில் படபடப்பு தெரிந்தது.

வலீத் இப்னு முகீரா மௌனமாக இருந்தான். என்ன சொல்லப் போகிறானோ என்ற எண்ணத்தில் அனைவரது கண்களும் அவனையே மொய்த்தன. வலீத் மீண்டும் தன் உரையைத் தொடர்ந்தான் :

“அது இனிமையானது. சுவையான தேனைப் போன்றது. உன்னதமான உரைநடை கொண்டது. அதன் மேற்பரப்பு மலையை விட உயரமானது. அதன் அடிப்பரப்பு கடலை விட ஆழமானது. ஆதலால் அது வெற்றியின் சிகரத்தை நிச்சயம் அடைந்தே தீரும். அதனை வெல்ல யாராலும் முடியாது.” என்றான் .

இதனால் நபி (ஸல்) அவர்கள் வலீத் இப்னு முகைரா இஸ்லாத்தில் இணைத்துவிட வேண்டும் என்ற ஆர்வத்துடன் அவனோடு உரையாடிக் கொண்டிருக்கும் பொழுதுதான் இப்னு உம்மு மக்தூம் (ரலி) அவர்கள் குறுக்கிட்டு யாதோ கேட்க, நபிகளார் அவரை பொருட்படுத்தாது, இவனுடன் உரையாடிக் கொண்டிருந்ததும் அதற்காக அவர்கள் இறைவனால் கண்டிக்கப்பட்டதும் ஆகும்.

பின் இறைவன் வலீத் இப்னு முகைராவைப் பற்றிய செய்தியை குர்ஆனில் பதிவு செய்தான்
وَلَا تُطِعْ كُلَّ حَلَّافٍ مَّهِيْنٍۙ
அன்றியும், இழிவானவனான அதிகம் சத்தியம் செய்யும் ஒவ்வொருவனுக்கும் நீர் வழிபடாதீர்;
هَمَّازٍ مَّشَّآءٍ بِنَمِيْمٍۙ
(அத்தகையவன்) குறைகூறித்திரிபவன், கோள் சொல்லிக் கொண்டு நடப்பவன்.
مَّنَّاعٍ لِّلْخَيْرِ مُعْتَدٍ اَثِيْمٍۙ
(எப்பொழுதும்) நன்மையானவற்றைத் தடுத்துக் கொண்டிருப்பவன்; வரம்பு மீறிய பெரும் பாவி.
عُتُلٍّ بَعْدَ ذٰلِكَ زَنِيْمٍۙ
கடின சித்தமுடையவன்; அப்பால் இழி பிறப்புமுடையவன்.

عُتُلٍّ بَعْدَ ذٰلِكَ زَنِيْمٍ
கடின சுபாவமுள்ளவன். இவ்வளவெல்லாம் இருந்தும் பிறப்பிலும் ஈனன். (குர்ஆன் : 68:10- 13)

மேற்கூறப்பட்டுள்ள வசனங்களில்
1 ) எடுத்ததற்கெல்லாம் சத்தியம் செய்வான் (ஹல்லாஃப் ) 2) அற்பமான புத்தியுள்ளவன் (மஹீன்) 3) புறம் பேசுபவன் (ஹம்மாஸ்) 4) கோள் சொல்லபவன் (மஷ்ஷாஇன் பி நமீம் )
5) நன்மையைத் தடுப்பவன்
(மன்னாஇன் லில் கைர்) 6) எல்லை மீறுபவன் (முஅததின் ) 7) பாவம் புரிபவன் (அஸீம்) 8) கல் நெஞ்சக்காரன் (உ(த்)துல்லின்) 9) தவறான வழியில் பிறந்தவன் (ஸனீம்)

இத்தகைய தன்மைகள் அனைத்தும் வலீத் இப்னு முகைராவிற்கு அப்படியே பொருந்தியது .

வலீத்தின் தகப்பனார் முகைரா என்பவன் குறைஷிக் குலத்தைச் சேர்ந்தவன் என்றாலும் வலீதுடைய தாய் குறைஷிக் குலத்தைச் சேர்ந்தவள் அல்ல ; அவள் ஓர் அடிமைப் பெண். தன்னுடைய எஜமானனுக்குப் பிள்ளை பெற்ற "உம்மு வலத் (குழந்தையின் தாய்) வகையைச் சேர்ந்தவள் . வலீத் பிறந்து 18 ஆம் வயதில்தான் முகைரா வலீதை தனக்குப் பிறந்தவன் , தன் புதல்வன் என்று அறிவித்தான் .ஆகவே, அதுவரை அவனுக்குத் தந்தை எவர் என்பதே தெரியாமலிருந்தது.

இவ்வசனங்கள் அருளப்பட்டு, பகிரங்கமாக நபி (ஸல்) அவர்களால் அறிவிக்கப்பட்ட பொழுது, இங்கு குறிப்பிடப்பட்டுள்ள தன்மை தம்மைப் பற்றிதான் என்பதை வலீத் இப்னு முகைரா உணர்ந்து கொண்டான் .

வலீத் இதனை செவியேற்று , கையில் வாளேந்திக் கொண்டு , " நான் குறைஷிகளின் தலைவன் , என் தந்தை முகைரா பிரபல்யமானவர் ; ஆனாலும் முஹம்மது பொய்யுரைக்க மாட்டார் என்பதை நான் அறிவேன். அப்படி இருக்க இப்பேச்சு எப்படி குர்ஆனில் வந்தது ? என்று தன் தாயிடம் வற்புறுத்திக் கேட்டான். அப்போது அவன் தாய் " நான் ஆட்டிடையன் முதல் பலருடன் விபச்சாரம் செய்து அதில் கர்பமாகி உன்னைப் பெற்றெடுத்தேன்" என்று கூறினாள்.

இந்த வசனங்கள் அருளப்படும் வரை அவன் வேசி மகன் என்பது எவருக்கும் தெரியாது .

இவன் இறப்புப் படுக்கையில் கிடக்கும் போது கூட , 'அபூகப்ஷாவின் கை ஓங்கிவிடக் கூடாதே ' என்ற கவலை இருந்தது . தான் உயிரோடுள்ள வரை அது நடக்காது என்று அபூஜஹ்ல் உறுதி கூறிய பிறகே இவனுடைய உயிர் பிரிந்தது.

ஒருவனுடைய குணத்திலிருந்து அவனுடைய பிறப்பின் ரகசியம் வெளிப்படும் என்பதற்கு மேற்கண்ட வரலாற்று நிகழ்வை குர்ஆன் படம் பிடித்துக் காட்டுகிறது .

ர.ரா
மூடநம்பிக்கை

## மூடநம்பிக்கை

( மனித குணநலன்கள் 10) 13-04-2020

முற்காலத்தில் கஃபாவில் வைக்கப்பட்டிருத்த சிலைகளுக்கு பூஜை செய்வதற்காக நியமிக்கப்பட்டிருந்த பூஜாரியிடத்தில் 3 தாயகட்டைகளில் "எனவு கடவுள் இப்படி செய்யலாம் என்று கட்டளை இட்டான்,எனவு கடவுள் இப்படி செய்யக் கூடாது என்று கட்டளை இட்டான் . மூன்றாவதில் எதுவும் செய்ய வேண்டாம் என்று கட்டளையிட்டான் " என்று 3 தாயகட்டைகளை தயார் செய்து வைத்திருப்பார்கள்

மக்கா முஷ்ரிக்கள் வியாபாரம் செய்யலாமா ? வியாபார கூட்டத்தை கொள்ளை அடிக்கலாமா ? அந்த கோத்திரத்து பெண்ணை விவாகம் செய்யலாமா ? இருக்கிறவளை விவகாரத்து செய்யலாமா ? போன்ற கேள்விகளை பூஜாரிடம் கேட்க , அதை
பூஜாரி துணியில் எழுதி சிலையின் மீது எறிவார் .அச்சிலையின் எந்த பாகத்தில் விழுகிறதோ அதற்கேற்றவாறு பலன் துரிதமாக கிடைக்கும் என்று நம்பினர் .
يٰۤاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْۤا اِنَّمَا الْخَمْرُ وَالْمَيْسِرُ وَالْاَنْصَابُ وَالْاَزْلَامُ رِجْسٌ مِّنْ عَمَلِ الشَّيْطٰنِ فَاجْتَنِبُوْهُ لَعَلَّكُمْ تُفْلِحُوْنَ
ஈமான் கொண்டோரே! மதுபானமும், சூதாட்டமும், கற்சிலைகளை வழிபடுதலும், அம்புகள் எறிந்து குறி கேட்பதும், ஷைத்தானின் அருவருக்கத்தக்க செயல்களிலுள்ளவையாகும்; ஆகவே நீங்கள் இவற்றைத் தவிர்த்துக் கொள்ளுங்கள் - அதனால் நீங்கள் வெற்றியடைவீர்கள். (குர்ஆன் : 5:90)

நவீன காலமான இன்றும் ஹவாய் தீவு மக்களிடம் ஒரு மூடநம்பிக்கை , கதவுக்கு நேராக கால் நீட்டி படுக்க மாட்ட மாட்டார்கள் ; அப்படி தூங்கினால் தூக்கத்திலேயே உயிர் கால் வழியே இறங்கி வாசல்கதவு வழியாக வெளியே போகிவிடுமாம்.

அமெரிக்காவில் கல்லறைத் தோட்ட வழியில் நடக்கும் போது மூச்சைப் பிடித்து கொண்டு விரைவாக போய் விடுவார்கள் .காரணம் இறந்து போனவர்களின் ஆவி நடப்பவர்களின் மூக்கை தொட்டுப் பார்க்கும் போது , "அவனுக்கு மட்டும் மூச்சு இருக்கு , நமக்கு இல்லையே " என்று 'பளார்' என அறைந்து விடுமாம்.

ஜப்பானில் வலது பக்கம் தலை வைத்து படுக்க மாட்டார்கள் .காரணம் இறந்தவர்களின் திசை அது. புதைக்கும் போது இறந்தவர்களின் தலை வடக்கு திசையில் வைத்துதான் புதைப்பார்கள் .

துருக்கியில் இடது உள்ளங்கை அரித்தால் , வருமானம் வரும் . வலது உள்ளங்கை அரித்தால் செலவு .

அமெரிக்காவிலும் பூனை குறுக்கே போன காரியம் உருப்படாது . அதிலும் கறுப்பு பூனை என்றால் கேட்கவே வேண்டாம் . உடனே திரும்பிப் போய் சோபாவில் படுத்துக் கொள்வார்கள். கறுப்பு பூனை சாத்தானின் குறுயீடு. இது நம் நாட்டிலும் உண்டு.

அடை மழை பொழிந்தாலும் வீட்டுக்கு வெளியே சென்று , மழையில் கொஞ்சம் நனைந்து பின்தான் குடையை விரிப்பார்கள் . அதைப் போல் திரும்பி வரும்போது குடையை மடக்கி விட்டு மழையில் கொஞ்சம் நனைந்த பின் தான் வீட்டிற்குள் நுழைவார்கள் . இந்த சென்டிமென்ட் பார்க்கலில்லை என்றால் வீட்டில் ஒருவர் திடீரென மரணித்துவிடுவார் .

கொரிய நாட்டினர் இரவில் நகம் வெட்ட மாட்டார்கள். இரவில் நகம் வெட்டி , அந்த நகத்தை எலிகள் தின்று விட்டால் ஆன்மாவின் அளவு குறைந்துவிடும். நகம் உடலின் ஒரு பாகம்.

லண்டனில் எந்த கால்பந்தாட்ட அணி ஜெயிக்கும் என்பதை ஆக்டோபஸ் என்கிற நட்சத்திர மீனை வைத்து கணிக்கிறார்கள் . அது எந்த அணியால் போடப்படும் தீனியை தின்றால் , அந்த அணி ஜெயிக்கும். ஆக்டோபஸ்க்கு பசி இருக்க வேண்டும் .

இந்தோனேஷியாவில் 'கெய்கோ' என்ற சிறு பல்லி சத்தம் போட்டால் நல்லது நடக்கும் .பிரசவ வலி ஏற்பட்டால் சுகப்பிரசவம் . அட நம்ம இந்தியாவில் தமிழ்நாட்டில் 'கெளரி பஞ்சாங்கம் ' என்று திருவாளர் பல்லிக்கு பெயர் வைத்து மனிதர்களின் மொத்த வாழ்வையும் அந்த ஒத்த ஜீவராசியின் சத்தத்திலே கணித்து விடுகின்றனர் .

இது மட்டுமா அட்சய தீர்த்த நாள் தங்கம் வாங்குவது ,கழுதை போட்டோவை வியாபார ஸ்தலத்தின் தலைமை இடத்தில் வைத்து ' என்னைப் பார் யோகம் வரும் ' என்று எழுதி வைப்பது ...
இது மாதிரி நிறைய நண்பர்கள் பின்னூட்டத்தில் சொல்வார்கள்

இதெல்லாம் முட்டாள்தனமான மூட நம்பிக்கை என்று டிஜிட்டல் இந்தியாவில் இன்றும் பின்பற்றப்படுகிறது.

ர.ரா

முகஸ்துதி

(மனித குணநலன்கள் 9 )




அல்லாஹ்விற்காக மட்டும் செய்ய வேண்டிய அமலை மற்றவர்கள் பார்க்க வேண்டும் என்பதற்காகச் செய்வது சிறிய இணைவைத்தல் ஆகும்.

“நான் உங்கள் மீது மிகவும் பயப்படுவது சிறிய இணை வைத்தலாகும்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அப்போது நபித்தோழர்கள், “அல்லாஹ்வின் தூதரே, சிறிய இணை வைத்தல் என்றால் என்ன?” என்று கேட்டனர்.

அதற்கு நபி (ஸல்) அவர்கள்,
“ரியா (முகஸ்துதி)” என்று பதிலளித்தார்கள். “நீங்கள் உங்கள் அமல்களை உலகத்தில் யாருக்குக் காட்டுவதற்காக செய்தீர்களோ அவர்களிடம் செல்லுங்கள். அவர்களிடம் கூலி கிடைக்குமா என்று பாருங்கள் என அடியார்களின் அமல்களுக்குக் கூலி கொடுக்கும் நாளில் அல்லாஹ் கூறி விடுவான்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் - மஹ்மூத் பின் லபீத் (ரலி)
நூல்: அஹ்மத் 23006

அபூ ஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிப்பதாவது: நபி (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டேன். ”மறுமை நாளில் முதன் முதலாக தீர்ப்பளிக்கப் படுபவர்களில் ஒருவன் அல்லாஹ்வின் பாதையில் கொல்லப்பட்ட தியாகி. அவன் கொண்டு வரப்பட்டு அவனுக்கு உலகில் அருளப்பட்ட அருட்கொடைகள் எடுத்துரைக்கப்படும். அவன் ஒப்புக் கொள்வான். அவனிடம் அதைக் கொண்டு என்ன அமல்களைச் செய்தாய் என்று கேட்கப்படும். ”அவன்

உனக்காக போர் செய்து ஷஹீதாக்கப்பட்டேன்" என்று கூறுவான். அல்லாஹ் "நீ பொய் சொல்கிறாய். நீ வீரன் என்று புகழப்படுவதற்காக போர் செய்தாய். அவ்வாறு உலகில் சொல்லப்பட்டு விட்டது" என்று கூறிவிடுவான். பிறகு, முகம் குப்புற இழுத்துச் சென்று நரகில் வீசுமாறு உத்தரவிடப்படும்.

மற்றொரு மனிதன் கல்வியைக் கற்று பிறருக்கு கற்றுக் கொடுத்தான். குர்ஆனை ஓதியிருந்தான். அவன் கொண்டுவரப்பட்டு அல்லாஹ்வின் நிஃமத்துகள் நினைவூட்டப்படும். அதை ஒப்புக் கொள்வான். அல்லாஹ் "அதன்மூலம் என்ன அமல்களைச் செய்தாய்?" என்று கேட்பான். அவன் "நான் கல்வியை கற்று பிறருக்குக் கற்றுக் கொடுத்தேன். உன் திருப்திக்காகவே குர்ஆனை ஓதினேன்" என்று கூறுவான். அதற்கு அல்லாஹ் "நீ பொய் சொல்கிறாய். நீ ஆலிம் என்று புகழப்படுவதற்காக கல்வி கற்றாய், காரி என்று புகழப்படுவதற்காக குர்ஆனை ஓதினாய், அவ்வாறு சொல்லப்பட்டு விட்டது" என்று சொல்வான். பிறகு அவனை முகம்குப்புற நரகில் வீசி எறியுமாறு உத்தரவிடப்படும்.

இன்னொரு மனிதன், அல்லாஹ் அவனுக்கு உலகில் பல்வேறு அருட்கொடைகளை வழங்கி செல்வச் செழிப்பை ஏற்படுத்தியிருந்தான். அவனைக் கொண்டு வரப்படும். அவனுக்கு அல்லாஹ்வின் நிஃமத்துகள் நினைவூட்டப்படும். அவன் ஒப்புக் கொள்வான். அவனிடம் "அதைக்கொண்டு என்ன அமல்களைச் செய்தாய்?" என்று கேட்கப்படும். அவன் "எந்த வழிகளில் செலவு செய்வது உனக்குப் பிரியமானதோ அந்த அனைத்து வழிகளிலும் நான் செலவு செய்தேன்" என்று கூறுவான். "அல்லாஹ் நீ பொய் சொல்கிறாய், நீ கொடைவள்ளல் என புகழப்படுவதற்காக செய்தாய், அவ்வாறு உலகில் சொல்லப்பட்டுவிட்டது" என்று கூறுவான். பிறகு அவனை முகம்குப்புற இழுத்துச்சென்று நரகில் வீசுமாறு உத்தரவிடப்படும்." (ஸஹீஹ் முஸ்லிம்)

எந்த வணக்கமும் அல்லாஹ்வின் திருப்தியை நாடி செய்யப்பட்டால் மட்டுமே அங்கீகரிக்கப்படும்.

தங்களது பொருளை ஏழைகளுக்கு செலவு செய்யும்போது அதை சொல்லிக் காண்பித்து ஏழைகளின் கண்ணியத்தை காயப்படுத்துபவர்களை அல்லாஹ் வன்மையாகக் கண்டிக்கிறான். முகஸ்துதி கலந்துவிட்டால் அவ்வணக்கம் வீணாகிவிடும்.

" விசுவாசிகளே! நீங்கள் உங்களுடைய தர்மத்தை (ப்பெற்றவனுக்கு) இகழ்ச்சியையும், துன்பத்தையும் (செய்வது) கொண்டு (அதன் பலனை) வீணாக்கிவிடாதீர்கள். அவ்வாறு (செய்பவன்) அல்லாஹ்வையும் கடைசி நாளையும் விசுவாசம் கொள்ளாது (தான் தர்மவான் என்பதைப் பிற) மனிதர்களுக்கு அறிவிக்கும் பொருட்டு தன் பொருளை செலவு செய்து (வீணாக்கி) விட்டவனுக்கு ஒப்பாவான்.

அவனுடைய உதாரணம்; ஒரு வழுக்கைப் பாறையை ஒத்திருக்கின்றது. அதன்மீது மண் படிந்தது. எனினும் ஒரு பெரும் மழை பொழிந்து அதை (க் கழுவி) வெறும் பாறையாக்கிவிட்டது. (இவ்வாறே அவன் செய்த தானத்தை அவனுடைய பெருமை அழித்துவிடும்). ஆகவே, அவர்கள் (தானம்) செய்ததிலிருந்து யாதொரு பலனையும் (மறுமையில்) அடைய மாட்டார்கள்" . (குர்ஆன் 2:264)

ஏழைகளுக்கு தான் செய்த உபகாரத்தை சொல்லிக் காட்டுவது, அந்த தர்மத்தின் நற்பலன்களை வழுக்குப் பாறையில் ஒட்டியிருந்த மணலை பெரும் மழை அடித்துச் சென்று விடுவதுபோல அழித்து விடுகிறது. புகழுக்காக தர்மம் செய்பவர் அல்லாஹ்வின் நேர்வழிக்குத் தகுதியற்றவர், அவர் நிராகரிப்பாளர்களுடன் இணைக்கப்பட்டு விடுவார் என்பதை இந்த வசனத்தின் பிற்பகுதி சுட்டிக் காட்டுகிறது.

"மேலும் அல்லாஹ் (தன்னை) நிராகரிக்கும் ஜனங்களை (அவர்களின் தீய செயல்களின் காரணமாக) நேரான வழியில் செலுத்தமாட்டான்."

முகஸ்துதிக்காரர்கள், மனிதர்கள் தங்களைப் புகழவேண்டும் என்பதற்காக நல் அமல்களைச் செய்வார்கள். மகத்தான இரட்சகனின் திருப்பொருத்தத்தை நாடமாட்டார்கள். இவர்களைப் பற்றி அல்லாஹ் இப்படி குறிப்பிடுகிறான்...

அவர்கள் தொழுகையில் நின்றாலோ சோம்பேறிகளாக நின்று மனிதர்களுக்குக் காண்பிக்(க விரும்பு)கின்றார்கள். அவர்கள் வெகு சொற்பமாகவே அன்றி அல்லாஹ்வை தியானிப்பதில்லை. (அல்குர்ஆன் 4:142)

அவர்கள் அல்லாஹ்வுடன் மற்றவர்களை இணையாக்கிதன் காரணமாக அவர்களது அமல்கள் மறுக்கப்படும். தனது திருப்தியை நாடி, தூயமனதுடன் செய்யப்படும் அமல்களை மட்டுமே அல்லாஹ் ஒப்புக் கொள்கிறான்.

அபூ ஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள், நான் நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டிருக்கிறேன்: அல்லாஹ் கூறுகிறான், "நான் இணைவைப்பவர்களின் இணையை விட்டும் தேவையற்றவன். ஒருவன் ஏதேனும் அமல் செய்து என்னுடன் மற்றெவரையும் கூட்டாக்கினால் நான் அவனை அவனது இணைவைக்கும் செயலுடன் விட்டு விடுகிறேன்." (ஸஹீஹ் முஸ்லிம்)

தூய இதயத்துடன் வருவது தவிர வேறெந்த செல்வமும் மக்களும் பலனளிக்காத அந்நாளில் முகஸ்துதிக்காரர்கள் சந்திக்கும் இழிவையும் வேதனையையும் நபி (ஸல்) அவர்கள் விவரித்துக் கூறினார்கள்:

மார்க்கச் சட்டங்களை அறிந்த பேணுதலுள்ள முஸ்லிம் தனது அனைத்து செயலிலும் முகஸ்துதியிலிருந்து விலகி, அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தை மட்டுமே இலட்சியமாகக் கொள்ள வேண்டும்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "எவர் பெருமைக்காக அமல் செய்கிறாரோ அல்லாஹ் அவரை மறுமையில் இழிவுபடுத்துவான். எவர் முகஸ்துதிக்காக அமல் செய்வாரோ மறுமை நாளில் அல்லாஹ் அவரது குற்றங்களை பகிரங்கப்படுத்துவான். (ஸஹீஹுல் புகாரி)

ர. ரா

நயவஞ்சகம்

(மனித குணநலன்கள் 8 ) 12-04-2020



உலக வரலாற்றில் மிகப்பெரிய நயவஞ்சகங்கள் அத்தனையுமே நண்பர்களின் உதவியுடனே நிகழ்த்தப் பட்டிருக்கின்றன. எதிரிகள் பின்னும் சதிவலைக்குள் விழுந்த நண்பர்களால் முதுகில் குத்துப்பட்டவர்களின் வரலாறுகள் பல உண்டு.

இயேசுவுக்கு ஒரு யூதாஸ், வீரபாண்டிய கட்டபொம்மனுக்கு ஒரு எட்டப்பன், ஜூலியஸ் சீசருக்கு ஒரு புரூட்டஸ் என இப்பட்டியல் மிக நீளமானது.

இதில் ஜூலியஸ் சீசர் ( **The Great Roman Empire)** துரோகத்தால் வீழ்ந்த வரலாறு மிக சுவாரஸ்யமானது.

"திடீரென்று வரும் மரணமே சிறந்தது..." என்று பேச்சுவழக்கில் நண்பனிடம் கூறிவிட்டு சீசர் இரவில் அரண்மனைக்கு திரும்புகிறார். தூங்குகிறார். அருகில் படுத்திருந்த அவருடைய மனைவி கல்பூர்ணியா கெட்ட கனவு கண்டு துடித்து விழிக்கிறாள். கிட்டத்தட்ட அந்த நேரத்தில்தான் சீசரை எப்படி கொல்வது என்று அவருடைய எதிரிகள் காஷியஸ் என்பவன் தலைமையில் கொலைத் திட்டம் தீட்டி முடிக்கிறார்கள்.

மறுநாள் காலையில் சீசர் செனட் கூட்டத்தில் கலந்துகொள்ள கிளம்புகிறார். மனைவி ஓடோடி வந்து, 'நான் கெட்ட கனவு கண்டேன். நீங்கள் இன்று செனட் கூட்டத்திற்கு போகவேண்டாம்' என்கிறாள். அதை ஏற்றுக்கொள்ளாத சீசர் 'நடப்பது நடக்கட்டும்' என்றபடி கூட்டத்திற்கு செல்கிறார்.

மரணம் அவரை பின்தொடர்கிறது! சீசரை நெருங்கும் மரணத்தை தடுக்கும் முயற்சியாக செயல்படுகிறார், அவரது நண்பர் ஆர்ட்டிமிடோரஸ், தத்துவஞானியான இவருக்கு கொலை சதி பற்றி தெரிந்துவிட்டது அவர் சீசரை எச்சரிக்கை செய்ய விரும்பி ஓடோடி வருகிறார்.

ஆனால் அதற்குள் சீசர், செனட்டிற்கு வந்துவிட்டார். அவரைச் சுற்றி பெருங்கூட்டம். ஆர்ட்டிமிடோரஸ் நெருங்கிப் போக நினைக்கிறார். ஆனால் சுற்றி நின்ற சதிகாரர்களோ சீசரை அவர் நெருங்கிவிடாமல் பார்த்துக்கொண்டனர். (சீசரை நெருங்கும் மரணத்திற்கும்) அவரைக் காப்பாற்ற நினைக்கும் ஆர்ட்டிமிடோரஸ்க்கும் இடையே திக்... திக்... போராட்டம் நடக்கிறது.

அடுத்து என்ன செய்வது என்று யோசித்த தத்துவ சிந்தனையாளர், தனது எச்சரிக்கையை உடனடியாக எழுதி, கூட்டத்திற்குள் முண்டியடித்து முன்னேறிச் சென்று சீசரின் கையில் கொண்டுபோய் திணித்தார். அதை என்ன ஏதென்று படிக்க சீசருக்கு மரணம் வாய்ப்புத் தரவில்லை.

அடுத்த முயற்சியாக சீசரின் நெருங்கிய நண்பரான மார்க் எண்டனி, சீசரை நோக்கிச் செல்கிறார். அவரை அருகில் விட்டால் தம் கொலைத் திட்டம் நிறைவேறாது என்பதை அறிந்து அவரை புரூட்டஸ் வசமாக மடக்கி பேச்சுக் கொடுத்து நெருங்கிப் போகாத அளவிற்கு பார்த்துக் கொள்கிறான். மரணம் சீசரின் கைக்கெட்டும் தூரத்தில்!

சீசர் வந்து தன் அரியணையில் அமர்கிறார். பின்னால் இருந்து அவருடைய அங்கியை டிலியஸ் என்பவன் இழுக்கிறான். அதுதான் சதி திட்டத்தை தொடங்கும் சிக்னல். அடுத்து காஸ்கா என்பவன் கத்தியோடு பாய்கிறான். குத்து விழுகிறது சீசர் எதிர்கொண்டு தடுக்க முயற்சிக்கிறார். அதற்குள் சதிகாரர்கள் அனைவரும் ஆளுக்கொன்று என்ற அடிப்படையில் சுற்றி வளைத்து காட்டுமிராண்டித்தனமாக குத்துகிறார்கள்.

அதை எல்லாம் தாங்கிக்கொள்ளும் சீசர், தன் நண்பனாக இருந்த புரூட்டசும் குத்தும் போது மனதளவிலும் தளர்ந்துபோய் அதை பார்க்க சகிக்காமல், தடுக்கவும் விரும்பாமல் கைகளால் முகத்தை மூடிக்கொள்கிறார். ஷேக்ஸ்பியரால் புகழ் அடைந்த, 'நீயுமா புரூட்டஸ்...!' என்ற வார்த்தை இந்த நேரத்தில்தான் சீசரிடம் இருந்து வெளிப்படுகிறது! ரத்தம் பீறிட்டு வெளியேற மரணம் நிச்சயம் என்று உணரும் சீசர், அருகில் இருந்த பம்ப்பேயின் சிலையின் காலடியில் போய் விழுந்து இறக்கிறார்.

நயவஞ்சகம் பற்றி இஸ்லாம்...

நான்கு பண்புகள் எவனிடம் உள்ளனவோ அவன் வடிகட்டிய முனாஃபிக் ஆவான். அவற்றில் ஏதேனும் ஒன்று யாரிடமேனும் இருந்தால் அதை விட்டொழிக்கும் வரை நயவஞ்சகத்தின் ஒரு பண்பு அவனிடம் இருந்து கொண்டே இருக்கும். நம்பினால் துரோகம் செய்வான்;. பேசினால் பொய் பேசுவான்;. ஒப்பந்தம் செய்தால்

அதை மீறுவான்;. விவாதம் புரிந்தால் நேர்மை தவறிப் பேசுவான்' என்று இறைத் தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பவர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர் (ரலி) நூல்: புகாரி)

அன்ஸார்களாகிய மதீனவாசிகளின் கிளைக் கோத்திரங்களாகிய அவுஸ், கஸ்ரஜ் கோத்திரங்களுக்கு மத்தியில் நடந்துவந்த போர்ச் சூழலை இஸ்லாம் மாற்றியது. மதீனாவில் சகோதரத்துவம் நிலவியது.

உத்தமத் திருநபி (ஸல்) அவர்கள் மதீனாவில் இஸ்லாமிய பேரரசின் தலைவராக நிகழ்தார்கள். எனவே தனக்கு கிடைக்கும் என எதிர்பார்த்திருந்த தலைமைத்துவம் பறிபோய் விட்டதை ஜீரணிக்க இயலாத அப்துல்லாஹ் பின் உபை பின் ஸலூல் என்ற நயவஞ்சகன், தன் நயவஞ்சக கூட்டத்திற்கு தலைவனாக செயலாற்றத் துவங்கினான்.

இவனும் இக்கூட்டத்தாரும் போரில் புறமுதுகு காட்டி ஓடினர். முஸ்லீம்கள் என்ற போர்வையிலேயே ஊடுறுவிய இந்நயவஞ்சகர்கள், ஒன்றுபட்டிருந்த முஸ்லிம் சமூகத்தை இரண்டாக உடைப்பதற்காக தனிப் பள்ளிவாயில் கட்டினர். நபி (ஸல்) அவர்களையும் அவர்களின் குடும்பத்தினரின் கண்ணியத்தை கொச்சைப் படுத்தும் நோக்கத்தில் நபி (ஸல்) அவர்களின் மனைவி மீது அவதூறைப் பரப்பினர்.

நபி (ஸல்) அவர்களையும் , முஸ்லிம்களையும் பூண்டோடு அழிக்கத் திட்டமிட்டு, இஸ்லாமிய எதிரிகளுடன் இரகசியமாகக் கைகோர்த்திருந்தனர். இவ்வாறு அவர்களின் ஈனச் செயல்களின் பட்டியல் நீள்கிறது.

அப்துல்லாஹ் இப்னு உபை இறந்து விட்டான். அப்போது அவனுடைய (முஸ்லிமான) மகன், நபி(ஸல்) அவர்களிடம் வந்து, 'இறைத்தூதர் அவர்களே! அவரை கஃபனிடுவதற்காக உங்கள் சட்டையைத் தாருங்கள்! மேலும் நீங்கள் அவருக்கு ஜனாஸாத் தொழுது. அவருக்காகப் பாவமன்னிப்பும் கேட்கவேண்டும்' என்று கோரினார்கள்.

உடனே நபி(ஸல்) அவர்கள் தமது சட்டையை அவருக்குக் கொடுத்துவிட்டு, '(கஃபனிட்டு ஆயத்தமானதும்) எனக்குத் தெரிவியுங்கள்;! நான் ஜனாஸாத் தொழுகை நடத்துவேன்' என்றார்கள். பிறகு அறிவிக்கப்பட்டதும் நபி (ஸல்) அவர்கள் அவனுக்கு ஜனாஸாத் தொழ நாடியபோது,

உமர்(ரலி) நபி(ஸல்) அவர்களை இழுத்து, 'நயவஞ்சகர்களுக்கு ஜனாஸாத் தொழக் கூடாது! என அல்லாஹ் உங்களைத் தடுக்கவில்லையா?' எனக் கேட்டார்கள்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள் '(ஜனாஸாத் தொழுவது, தொழமலிருப்பது என) இரண்டில் எதையும் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் உரிமை எனக்கு உள்ளது' எனக் கூறிவிட்டு, 'நீர் நயவஞ்சகர்களுக்குப் பாவமன்னிப்புத் தேடினாலும் அல்லது தேடாமலிருந்தாலும் சமமே! நீர் அவர்களுக்காக எழுபது முறை பாவமன்னிப்புத் தேடினாலும் அல்லாஹ் அவர்களை மன்னிக்கப் போவதே இல்லை' என்ற (அல்குர்ஆன் 09:80) வசனத்தை ஓதிக்காட்டி விட்டு ஜனாஸாத் தொழுதார்கள்.

உடனே 'அ(ந்நய)வ(ஞ்சக)ர்களில் யாரேனும் இறந்தால் அவர்களுக்காக ஒருபோதும் (ஜனாஸாத்) தொழ வேண்டாம்' என்ற (அல்குர்ஆன் 09:84) வசனம் அருளப்பட்டது. (அறிவிப்பவர்: இப்னு உமர் -ரலி, நூல்: புகாரி 1269)

நயவஞ்சகர்களுக்காக ஜனாஸா தொழுவதை தடைசெய்த அல்லாஹ், மறுமையில் அவர்கள் நரகவேதனையில் இருப்பார்கள் என்பதை அருள்மறையில் சுட்டிக்காட்டுவதைப் பாருங்கள்:-

"நிச்சயமாக இந்நயவஞ்சகர்கள் நரகத்தின் மிகவும் கீழான அடித் தளத்தில்தான் இருப்பார்கள்;. அவர்களுக்கு உதவியாளராக எவரையும் நீர் காண மாட்டீர் " (குர்ஆன் 4:145)

ர.ரா

## களவு

(மனித குணநலன்கள் 7 ) 12-04-2020



இஸ்லாத்தின் பார்வையில் திருட்டைப் பற்றி மாறுபட்ட கோணத்தில் உங்கள் பார்வைக்கு தருகிறேன் .

3485. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது: "மக்ஸூமி" குலத்தைச் சேர்ந்த ஒரு பெண் திருடிவிட்டாள் என்ற செய்தி குறைஷியருக்குக் கவலையளித்தது.

அப்போது அவர்கள், "அந்தப் பெண் தொடர்பாக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (பேசி, தண்டனையிலிருந்து விலக்கு அளிக்கச்) சொல்வது யார்?" என்று கேட்டுக்கொண்டார்கள். பிறகு "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் செல்லப் பிள்ளையான உசாமா பின் ஸைதைத் தவிர வேறு யார் துணிந்து பேச முடியும்?" என்று சொன்னார்கள்.

அவ்வாறே உசாமா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் (பரிந்து) பேசினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ் விதித்த தண்டனைகளில் ஒன்றின் விஷயத்திலா (அதை நிறைவேற்றாமல் விட்டுவிடுமாறு) நீ பரிந்துரைக்கிறாய்?" என்று கேட்டுவிட்டுப் பிறகு எழுந்து நின்று உரையாற்றினார்கள்:

"மக்களே! உங்களுக்கு முன்னால் வாழ்ந்த (பனூ இஸ்ராயீல்) மக்கள் அழிந்துபோனதற்குக் காரணமே, (அவர்களிடையே உள்ள) உயர் குலத்தார் திருடிவிட்டால், அவர்கள் அவரை (தண்டிக்காமல்) விட்டுவிடுவார்கள். அவர்களிலுள்ள பலவீனர்கள் திருடிவிட்டால் அவர்கள்மீது தண்டனையை நடைமுறைப்படுத்துவார்கள்.
அல்லாஹ்வின் மீதாணையாக! (இந்த) முஹம்மதின் மகள் ஃபாத்திமா திருடியிருந்தாலும், நான் அவரது கையைத் துண்டித்தே இருப்பேன்.

" ஒருவன் திருடினால்
அவன் கை வெட்டப்பட வேண்டும். ஆனால் ஒருவன் பசிக்காக திருடினால் ஆட்சியாளாரின் கை வெட்டப்பட வேண்டுமென்பது உமர் (ரலி) அவர்களின் நீதி

3444. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
மர்யமின் மகன் ஈசா(அலை) அவர்கள், ஒருவர் திருடிக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். அவனிடம், 'நீ திருடினாயா' என்று கேட்டார்கள். அதற்கு அவன், 'இல்லை; எவனைத் தவிர வணக்கத்திற்குரியவர் வேறெவருமில்லையோ அவன் மீதாணையாக!' என்று பதிலளித்தான்.

உடனே ஈசா(அலை) அவர்கள், 'அல்லாஹ்வின் மீது நான் நம்பிக்கை கொண்டு, என் கண்ணை நம்ப மறுத்து விட்டேன்' என்று கூறினார்கள்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.
ஸஹீஹ் புகாரி

மிகச் சிறந்த சூஃபி ஞானிகளில் ஒருவரான ஹாசன் (ரஹ்) அவர்கள் இறக்கும் சமயத்தில் உங்களது குரு யார் என்று யாரோ ஒருவர் கேட்டார்.

அதற்கு ஹாசன் (ரஹ்) அவர்கள் எனக்கு ஆயிரக்கணக்கான குருமார்கள் இருக்கிறார்கள். அதில் ஒருவர் திருடர்.

ஒருமுறை நான் பாலைவனத்தில் தொலைந்து போய் வழி கண்டுபிடித்து கிராமத்தை போய் சேரும்போது பாதி இரவாகி விட்டது.ரோட்டில் மனித நடமாட்டமே இல்லை. நான் விசாரிப்பதற்காக யாராவது இருக்கிறார்களா என்று தேடினேன். இறுதியில் சுவற்றில் துளை போட்டு உள்ளே நுழைவதற்காக கன்னம் வைத்துக் கொண்டிருந்த ஒரு திருடனை பார்த்தேன்.

நான் அவரிடம், நான் தங்க இங்கே ஏதாவது இடம் இருக்குமா என்று கேட்டேன். அவர், நான் ஒரு திருடன், நீங்களோ ஒரு சூஃபி ஞானி போல தோன்றுகிறீர்கள். இப்போது தங்க இடம் கண்டு பிடிப்பது மிகவும் கடினம். ஆனால் நீங்கள் விருப்பப்பட்டால், என் வீட்டிற்கு வரலாம், திருடனுடன் தங்க உங்களுக்கு எந்த ஆட்சேபணையும் இல்லையென்றால் என்னுடன் வாருங்கள் என்று அழைத்தார்.

நான் அஞ்சினேன். ஒரு திருடர் சூஃபியை பார்த்து பயப்படாத போது ஏன் சூஃபி திருடரைக் கண்டு அஞ்ச வேண்டும் உண்மையில் அவர்தான் என்னைக் கண்டு அஞ்ச வேண்டும். அதனால் நான் அவரிடம் , "சரி நான் உங்கள் வீட்டிற்கு வருகிறேன் "என்று கூறினேன்.

நான் அவருடன் சென்று அவர் வீட்டில் தங்கினேன். அந்த மனிதர் மிகவும் அன்பானவர் . மிகவும் அருமையான மனிதர். நான் அவருடைய வீட்டில் ஒரு மாதம் தங்கினேன். ஒவ்வொரு இரவும் அவர் திருடுவதற்கு கிளம்பும்போதும்...

"சரி, நீங்கள் உங்கள் வேலையை பாருங்கள், தியானம் செய்யுங்கள், ஓய்வெடுங்கள், நான் என் வேலையை பார்க்கப் போகிறேன் " என்பார். அவர் திரும்பி வரும்போது, ஏதாவது கிடைத்ததா என்று நான் கேட்பேன். இன்று எதுவும் கிடைக்கவில்லை. ஆனால் நாளை திரும்பவும் முயற்சிப்பேன் என்று கூறுவார். ஒருநாளும் அவர் நம்பிக்கையிழந்ததை நான் பார்க்கவேயில்லை.

ஒரு மாதம் முழுவதும் அவர் வெறும் கையுடன்தான் திரும்பி வந்தார். ஆனாலும் அவர் மகிழ்ச்சியாகத்தான் இருந்தார். அவர் நாளை முயற்சி செய்வேன். இறைவன் விருப்பபட்டால் நாளை ஏதாவது கிடைக்கும். நீங்களும் எனக்காக பிரார்த்தனை செய்யுங்கள். இந்த ஏழைக்கு உதவி செய்யுங்கள் என்று நீங்கள் இறைவனிடம் சொல்லுங்கள் என்று கூறுவார்.

மேலும் தொடர்ந்து ஹாசன் (ரஹ்) அவர்கள் : " நான் பல வருடங்கள் தொடர்ந்து தியானம் செய்து கொண்டிருக்கையில் எதுவும் நிகழவில்லை. நான் மிகவும் மனமுடைந்து நம்பிக்கையிழந்து இது எல்லாவற்றையும் நிறுத்திவிடலாமா என்று பல சமயங்களில் நினைத்ததுண்டு. அப்போது திடீரென அந்த திருடரின் நினைவு வரும். அவர் ஒவ்வொரு நாள் இரவும் இறைவன் விருப்பபட்டால் நாளை ஏதாவது கிடைக்கும் என்று கூறியதை நினைத்துக் கொள்வேன்.

அதனால் மேலும் ஒருநாள் முயற்சி செய்து பார்க்கலாம் என்று நினைத்துக் கொள்வேன். திருடர் கூட அந்த அளவு நம்பிக்கையுடன் இருக்கும்போது நான் ஏன் இன்னும் ஒருநாள் முயற்சி செய்து பார்க்கக் கூடாது என்று தோன்றும். பலமுறை இப்படி நிகழ்ந்திருக்கிறது. அந்த திருடரைப் பற்றிய நினைவும் நான் இன்னும் ஒருநாள் என்று முயல உதவி செய்திருக்கிறது.

ஒருநாள் அது நிகழ்ந்து விட்டது. அது நிகழ்ந்தே விட்டது. நான் அந்த திருடரின் வீட்டை விட்டும் அவரை விட்டும் பலஆயிரம் மைல் தூரம் அப்பால் இருந்தேன். ஆயினும் நான் அந்த திசையை நோக்கி நன்றி செலுத்தினேன் . ஞானம் கிடைக்கச் செய்த அவர்தான் எனது முதல் குரு.

அடுத்து ..அடர்ந்த காட்டின் நடுவே ஒரு கூடாரம் அதில் அழுக்கடைந்த முரட்டு கம்பளியை சுற்றிக் கொண்டு கழுத்தில் பெரிய ஜபமாலை, கையில் மற்றொரு ஜபமாலை விரல்களுக்கு இடையே நகர்ந்து கொண்டு உதடு முணுமுணுக்க அரை கண்ணறக்கத்தில் பெரிய தவஞானி கோலம்

"அடடே , கள்வர்கள் நிறைந்த காடாமே.. தெரியாம இந்த வியாபாரிகள் கூட்டத்தில் வந்து மாட்டிக் கொண்டேமே அதோ வழிப்பறி கொள்ளையர்கள் வந்து விட்டார்களே" என்று பெரும் பொருளுடைய வியாபாரி ஒருவர் பெரும் பொருளை எடுத்துக் கொண்டு கொள்யையர் கூட்டத்திற்கு தெரியாமல் தப்பி ஓடி மேற்கண்ட கூடாரத்திறகுள் நுழைகிறார்.

"பெரியவரே - நான் ஒரு வியாபாரி இந்த காட்டில் கொள்ளையர்கள் எங்கள் வியாபாரி கூட்டத்தினரை குழ்ந்து கொண்டனர் அவர்களுக்குத் தெரியாமல் தப்பி வந்திருக்கிறேன் என் பெரும் பொருளை தாங்கள்தான் அவர்களிடமிருந்து காப்பாற்றி தரணும். "

"அதே அந்த மூலையில் போட்டுப் போ" என்ற சப்தம்

"சரி, இந்த தவஞானி பார்த்துக் கொள்வார்"

கூடாரத்தை விட்டு வெளியேறியதும் , அதே கொள்ளையர் கூட்டம் கூடாரத்தை நோக்கி வந்ததும் பதறி அடித்து கூடாரத்தின் பின் பக்கம் வியாபாரி மறைந்து கொள்ள கொள்ளையர்கள் தாங்கள் கொள்ளையடித்த பொருட்களை அதே தவஞானியின் முன்னே குவிக்கிறார்கள்

அவர் தரம் பார்த்து பிரிக்கிறார் இதைக் கண்ட வியாபாரி 'அடடா ..,கொள்ளையர் கூட்டத்திலிருந்து தப்பி அதன் தலைவனிடம் அல்லவா மாட்டிக் கொண்டோம்; பொருள் போனால் போகுது உயிர் பிழைத்தால் போதும் என்று தப்பியோட நினைக்கையில் - ...

"வியாபாரியே ! உள்ளே வா "என்றதும் நெஞ்சம் படப் படக்க வியாபாரி உள்ளே செல்ல "அதோ இருக்கிற உன் பொருளை சரி பார்த்து விட்டு கொண்டு செல் , இனி இந்தக் காட்டில் எங்களைத் தவிர வேறு எந்த கொள்ளை கூட்டமும் இல்லை தாங்கள் தாராளமாக பயமில்லாமல் போகலாம் " என்றார் கொள்ளைக் கூட்டத்தின் தலைவரான அந்த தவவேடம் தறித்த தவஞானி

இந்த தவஞானி வேடம் தறித்து இவர் ஒரு நாள் , தன் காதலியைப் பார்ப்பதற்காக மதிலின் மீது ஏறிய பொழுது அவ்வழியே சென்ற வியாபாரி கூட்டத்தில் உள்ள காரி ஒருவர் குர்ஆனை எப்போதுமே சப்தமாக ஓதிக் கொண்டு பயணம் செய்பவர்.

பொய் தவவேடம் அணிந்த கொள்ளையர் தலைவரின் காதில் காரி
அவர் ஓதிய குர்ஆன் வசனமான

"நம்பிக்கை கொண்டவர்களின் உள்ளங்கள் அல்லாஹ்வை நினைத்தும், அவன் இறக்கி வைத்த சத்திய (வசன)ங்களைக் கவனித்தும் பயப்படக் கூடிய நேரம் (இன்னும்) வரவில்லையா ? " குர்ஆன் ( 57 : 16 )...

என்றதும் கொள்ளையர் தலைவரின் உச்சியைப் பிடித்து ஒரு குலுக்குக் குலுக்கியது .

"யா அல்லாஹ் அந்த நேரம் இதோ இப்போதே வந்துவிட்டது" என்று அலறினார்

அந்த நிமிடமே மிகப் பெரிய உண்மையான சூஃபி ஞானி இந்த உலகத்திற்குக் கிடைத்தார் அவர் பெயர்தான்.
" புலைல் இப்னு இயால் (ரஹ்) அவர்கள் "

திருட்டிலிருந்து கூட ஞானம் கிடைத்திருக்கிறது !

ர.ரா

## பொய்
(மனித குணநலன்கள் 6)



பொய் ஒரு விதையில்லாத தாவரம். காற்றைப் போல எல்லா இடங்களிலும் பரவி வளரக்கூடியது . நாம் பொய்யின் உச்சத்தை 'பச்சைப் பொய்' என்கிறோம். ஆங்கிலேயர்கள் 'வெள்ளைப் பொய் ' என்கிறார்கள் . பொய்க்கும் நிறம் இருக்கிறது போலும். பொய்யின் சரித்திரம் , உலகச் சரித்திரத்தை விடவும் சுவாரஸ்யமானது.

பொய்யைக் குழந்தைகள் விளையாட்டுப் பொருளைப் போல் பயன் படுத்துகிறார்கள். பெரியவர்களோ, உணவுப் பொருள் போலப் பயன்படுத்துகிறார்கள். அரசியல்வாதிகள் சுவாசக் காற்றாய் பயன்படுத்துகிறார்கள் .

பொய் ஒரு கள்ளச்சாவியைப் போல எதையும் திறக்கக் கூடியதாக இருக்கிறது .கோழி ரோமத்தைப்போல எடையற்றதாக இருக்கிறது .

கோபத்திலும், சந்தோஷத்திலும், இயலாமையிலும் பொய்கள் வாரியிறைக்கப்படுகிறது.

மெய் சொல்லிக் கெட்டவனும் இல்லை; பொய் சொல்லி வாழ்ந்தவனும் இல்லை!
இது உண்மையா என்றால் குர்ஆன்
وَقُلْ جَاءَ الْحَقُّ وَزَهَقَ الْبَاطِلُ ۚ إِنَّ الْبَاطِلَ كَانَ زَهُوقًا
சத்தியம் வந்தது . அசத்தியம் அழிந்தது- நிச்சயமாக அசத்தியம் அழிந்தே போகும்.(17:81) என்கிறது .

முதலில் மெய் என்றால் என்ன என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். ஒரு தகவலை மாற்றாமல் சொல்வது மெய்யாக இருக்கலாம். உண்மை என்பது அதைவிட ஆழமானது. அது வாழ்வின் அடித்தளம். ஆணிவேர். உண்மை என்பதை இங்கே சத்தியம் என்ற உணர்வுப்பூர்வமான அர்த்தத்தில் எடுத்துக் கொள்ள வேண்டும்.

எதெல்லாம் வாழ்வை வளம் பெறச் செய்கிறதோ, அதெல்லாம் உண்மைதான். எதெல்லாம் வாழும் தன்மையை குறைபாடுள்ளதாக ஆக்குகிறதோ, அதெல்லாம் பொய்தான். வார்த்தைகளில் உள்ள மெய் மற்றும் பொய்யை மட்டும் உத்தேசித்து இப்படிச் சொல்லப்பட்டிருக்காது.

ஒரு குறிப்பிட்ட கட்டத்தில், சூழ்நிலையை சமாளிப்பதற்காக பொய் சொல்வது வேறு. பொய் சொல்வதையே வாழ்வின் ஆதாரவிதியாக மாற்றிக் கொள்வது வேறு. வாழ்வா, மரணமா என்ற இக்கட்டான நிலை வரும்போது, ஒரு பொய் அனுமதிக்கப்பட்டிருக்கலாம்.

மூன்று பொய்களை இஸ்லாமிய மார்க்கம் அனுமதி அளித்துள்ளது ;

1. போர் தந்திரத்திற்காகச் சொல்லப்படும் பொய்

2. மக்களிடையே சமாதானத்தை உருவாக்குவதற்காகச் சொல்லப்படும் பொய்.

3. (குடும்ப ஒற்றுமைக்காக) கணவன் மனைவியிடமும், மனைவி கணவனிடமும் சொல்லும் பொய். (முஸ்லிம் 5079)

ஒரு பொய் உங்களுக்கு தகுதிக்கு மீறிய ஓர் அனுகூலம் பெற்றுத் தரக்கூடும். ஆனால் நாளடைவில் அதற்கான விலையை நீங்கள் தந்தாக வேண்டியிருக்கும். ஒற்றைப் பொய்யாக இருந்தாலும், அதற்கான பின்விளைவுகளைத் தவிர்க்க முடியாது. பொய்யையே வாழ்க்கையாக அமைத்துக் கொண்டவர்கள், அதற்கானப் பெரும் பின்விளைவுகளை சந்தித்துதான் ஆக வேண்டும். பொய் வெகு காலத்துக்கு வேலை செய்யாது.

எவ்வளவு பெரிய உண்மையைச் சொல்வதற்கும் பெரிய சாமர்த்தியம் தேவையில்லை. ஆனால், எளிதான ஒரு பொய்யைச் சொல்வதானால்கூட அதற்கு சாமர்த்தியம் வேண்டும். சொன்ன பொய்யை மனதில் நிலை நிறுத்த பெரு முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும்.

உண்மைகளை மறந்து போவது பெரிய ஆபத்தில்லை. ஆனால், அவ்வப்போது சொன்ன பொய்களை நினைவில் வைத்துக் கொள்வது வெகு ஆபத்தானது. ஏனெனில், சேகரிக்கப்படும் பொய்கள் உங்கள் மனநிலையை ஒழுங்கற்றதாக ஆக்கி, சிதைத்துவிடக்கூடியவை.

ஒரு குறிப்பிட்ட கட்டத்தில் பொய் வேலை செய்யும் அளவுக்கு மெய் வேலை செய்யாமல் போகலாம். ஆனால், அதை வாழ்வின் விதிமுறையாக மாற்றிக் கொள்பவர்களுக்குச் செய்யப்பட்டிருக்கும் எச்சரிக்கை இது.

ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் ஒரு வீட்டிற்கு விருந்துக்குச் சென்றிருந்தார்கள். அந்த வீட்டு அம்மையார் வெளியில் உள்ள தனது குழந்தையை வா உனக்கு ஒன்று தருகிறேன் என்று அழைத்தார்கள்.

அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் அவரிடம் உமது குழந்தைக்கு என்ன கொடுக்கப் போகின்றீர் என்று வினவ, அவர் பேரித்தம் பழம் கொடுக்கப் போகிறேன் என்றார்.

அதற்கு நபி (ஸல்) அவர்கள் அப்படி செய்யாவிட்டால் உம்மீது ஒரு பொய் பதிவு செய்யப்படும் என்றார்கள். (அப்துல்லாஹ் பின் ஆமிர் ( ரலி )அபூதாவூத், பைஹகீ)

முஹ்யித்தீன் அப்துல் காதர் ஜிலானி (ரஹ்) அவர்கள் ஆரம்ப கல்வியை தம் சொந்த ஊரான ஜீலான் நகரிலேயே கற்றார்கள். பதினெட்டு வயதை அடைந்த பொழுது உயர்கல்வி கற்பதற்காக பகுதாது நகர் செல்ல முடிவு செய்தார்கள். அதற்காக தம் அன்னையிடம் அனுமதி கோரினார்கள்.

அவரின் இந்த முடிவைக் கேட்டு மனம் மகிழ்ந்து, உடனே அனுமதி அளித்தார்கள் அன்னாரின் தாயார் அவர்கள். தந்தையார் அபூசாலிஹ் (ரலி) அவர்கள் தம் குடும்பத்தினருக்காக விட்டுச் சென்ற 80 பொற்காசுகளில் 40 பொற்காசுகளை நாயகம் அவர்களின் சட்டைப் பையில் வைத்து தைத்து கல்வி கற்க அனுப்பி வைத்தார்கள் தாயார் அவர்கள்.

அச்சமயம் தம் மைந்தரை நோக்கி, எப்போதும் உண்மையே பேச வேண்டும் என்று உபதேசித்து அனுப்பி வைத்தார்கள். பகுதாதிற்காக பயணமாகிச் செல்லும் வியாபாரிகளுடன் சேர்ந்து கொண்டார்கள் .

இவ்வியாபாரிகள் ஹமதான் எனும் நகரைக் கடந்து செல்லும்போது வழிப்பறித் திருடர்கள் அறுபது பேர் இவர்களை வளைத்துக் கொண்டார்கள். அன்னவர்களை கொள்ளையர்கள் சோதித்து கேட்டபோது, தம்மிடம் நாற்பது பொற்காசுகள் இருப்பதாக உண்மையை சொன்னார்கள். ஆனால் திருடர்கள் நம்பவில்லை.

இறுதியாக திருடர்கள் தலைவரிடம் கொண்டு சென்றனர். அங்கும் அவர்கள் உண்மையே பேசினார்கள். அன்னவர்களை சோதித்துப் பார்த்த போது, அவர்கள் சொன்னது உண்மை என்று தெரியவந்தது.

வியப்புற்ற கள்வர்கள், காரணம் கேட்டபோது, தாயாரிடம் கொடுத்த வாக்குறுதிப்படி நான் உண்மையையே பேசினேன் என்றுரைத்தார்கள். இதைக் கேட்டு கள்வர்கள் திருந்தி, இனிமேல் பாவச் செயல்களில் ஈடுபட போவதில்லை என்று அன்னவர்களிடம் சத்தியம் செய்து கொடுத்தனர். இறைவனிடமும் பாவமன்னிப்புத் தேடினர். பிற்காலத்தில் இவர்கள் அனைவரும் வலிமார்களாக திகழ்ந்தனர் என சரித்திரம் கூறுகிறது.

" நிச்சயமாக அல்லாஹ் (அவனைப்) பார்க்கிறான் என்பதை அவன் அறியவில்லையா?

அப்படியல்ல: அவன் விலகிக் கொள்ளவில்லையானால், நிச்சயமாக நாம் (அவனுடைய) முன்னெற்றி ரோமத்தைப் பிடித்து அவனை இழுப்போம்.

தவறிழைத்து பொய்யுரைக்கும் முன்னெற்றி ரோமத்தை "
குர்ஆன் ( 96:14-16)

குர்ஆன் இங்கு பொய் சொல்பவர்கள், தவறான நடத்தையில் ஈடுபடுபவர்கள் போன்றோரின் முன் நெற்றியைப் பிடிப்போம் என்று கூறுகிறது. பொய் சொல்வதற்கும் தவறான நடத்தை நடப்பவருக்கும் அந்த நபரின் முன் நெற்றிக்கும் என்ன சம்பந்தம் ?

ஒரு மனிதனின் மூளையின் அமைப்பையும் அதன் முன் பக்கத்தையும் ஆராய்ந்து பாருங்கள். அங்கு நமது தலையின் முன் பகுதியில் பெரு மூளை அமைந்துள்ளதைக் காணலாம். இதைப் பற்றி உயிரியல் நிபுணர்கள் என்ன சொல்கிறார்கள்?

Essential of Anatomy & Physiology என்ற புத்தகம் மூளையின் செயல்பாடுகளை விரிவாக விவரிக்கிறது.மனிதன் அதிகம் உணர்ச்சி வசப்படுதல், பொய்,கோபம்,
முதலான உணர்வு சம்பந்தப் பட்டவைகள் அதிகம் நிகழ்வது மூளையின் முன் பக்கத்தில். இந்த முன் பக்கம் என்பது காதுகளின் ஓரத்துக்கும், தலையின் முன் பக்கத்திற்கும் அதாவது நெற்றியில் அமைந்துள்ள நரம்புகளால் இந்த செயல்கள் செயல் படுத்தப்படுவதாக விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

இந்த நெற்றிப் பகுதியின் நரம்புகள் மனிதனின் அநேக செயல்களுக்கு காரணமாக அமைகிறது. இந்த இடமே ஒரு மனிதன் பொய் பேசுவதற்கும் உண்மை பேசுவதற்கும் தூண்டுகோலாய் இருக்கிறது.

இந்த உண்மை கண்டறியப்பட்டது சுமார் எழுபது வருடங்களுக்கு முன்புதான். ஆனால் குர்ஆன் 1400 ஆண்டுகளுக்கு முன்பே உண்மைப் படுத்துகிறது. எனவே தான் 'பொய் பேசிய அந்த முன் நெற்றியை நாம் பிடிப்போம்'என்று இறைவன் கூறுகிறான். இந்த குர்ஆன் நம்மைப் படைத்த இறைவனின் வார்த்தைகள் தான் என்பதற்கு இதுவும் ஓர் எடுத்துக் காட்டு.

## பேராசை

(மனித குணநலன்கள் 5) 10-04-2020



நபி ஈஸா (அலை) அவர்கள் வெகுதூரம் பயணப்பட்டு போய்க் கொண்டிருக்கும் போது ஒரு வழிப்போக்கன் ஒருவன் தானும் ஈஸா நபிகளாருடன் பயணப்படுவதாக வற்புறுத்தினான் . நபி ஈஸா (அலை) அவர்கள் சேர்த்துக் கொண்டார்கள்

வெகு தூரம் சென்ற பின் காலை உணவு சாப்பிடுவதற்கு நபியவர்கள் தான் கொண்டு வந்திருந்த 3 ரொட்டிகளை வைத்து விட்டு ஒலுஹ் செய்து விட்டு வந்துப் பார்த்த போது மூன்று ரொட்டில் இரண்டு ரொட்டியை வழிப்போக்கன் தின்று விட்டான்." தாங்கள் கொண்டு வந்த இரண்டு ரொட்டில் ஒன்றை மட்டும் நான் தின்றேன் , மீதி ஒன்று இதோ உங்களுக்கு " என்றான்

நபியவர்கள் மூன்றாவது ரொட்டியைப் பற்றி விசாரித்தார்கள் .தனக்குத் தெரியாது என்பதாக வழிப்போக்கன் கூறினான்.

பயணம் தொடர்ந்தது .

வழிப்போக்கன் " நபியே .. தாங்கள் எனக்கு இவ்வுலக வாழ்க்கையின் ரகசியம் பற்றி ஓர் அற்புதத்தோடு சொல்லுங்களேன்" என்றான்

நபியவர்கள் மூன்று கூழாங்கற்களை ஜொலிக்கும் மூன்று தங்கக் கட்டிகளாக மாற்றினார்கள் . வழிப் போனுக்கு ஒன்றை கொடுத்து மீதி இரண்டில் ஒன்றை தான் எடுத்து கொண்டு மீதி ஒன்றை தனியே வெளியே வைத்தார்கள்.

வழிப்போக்கன் "இது யாருக்கு ?" என்று நபிகளாரிடம் கேட்டான். அதற்கு அவர்கள் "மூன்றாவது ரொட்டியை எவன் சாப்பிட்டானோ அவனுக்கு " என்றார்கள்

உடனே வழிப்போக்கன் 3-வது ரொட்டியையும் தான்தான் சாப்பிட்டதாக ஒப்புக் கொண்டான். நபியவர்கள் மூன்று தங்க கட்டிகளையும் அவனிடமே கொடுத்து விட்டு, " இந்த 3 தங்க கட்டிகள் இவ்வுலக வாழ்வின் ரகசியத்தைச் சொல்லும் " என்று சொல்லி விட்டு வழிப்போக்கனை அங்கேயே விட்டு விட்டு தனியே பயணப்பட்டார்கள் .

வழிப்போக்கனிடம் இருந்த 3 தங்க கட்டிகளை இரண்டு திருடர்கள் பார்த்து விட்டு வழிப்போக்கனிடம் "உன்னை கொலை செய்து விட்டு இந்த தங்க கட்டிகளை கொண்டு செல்ல எங்களால் முடியும் இருந்தாலும் , ஆளுக்கு ஒன்றாகப் பிரித்துக் கொள்வோம் என்றனர்.

வழிப்போக்கனும் வேறு வழி இல்லாமல் இதற்கு ஒத்துக்கொண்டான். "எனக்கு பசிக்கிறது உணவு உடனே வாங்கிக் கொண்டு வாருங்கள் " என்றான் வழிப்போக்கன்

திருடர்கள் இருவரில் ஒருவன் வழிப்போக்கனோடு இருந்து கொண்டான். இன்னொரு திருடனை உணவு வாங்க அனுப்பி வைத்தான்.

உணவு வாங்க வந்த திருடன் இரண்டு உணவுப் பொட்டலத்தில் விஷத்தை கலந்து, "அந்த இருவர் இந்த உணவுகளை உண்டு செத்ததும் 3 தங்க கட்டிகளும் தனக்கு மட்டுமே சொந்தம் என்று சூழ்ச்சியுடன் நடந்து கொண்டான்

இங்கிருந்த வழிப்போக்கனும் இன்னொரு திருடனும் ஒன்று சேர்ந்து ,
" உணவு வாங்கி கொண்டு வரும் அந்த திருடனை இருவரும் சேர்ந்து கொன்று விட்டால், 3 தங்க கட்டிகளை நாம் இருவரும் பங்கிட்டுக் கொள்வோம" என்று இவர்கள் சூழ்ச்சி செய்தனர்.

உணவு வாங்கி வந்த திருடனை இருவரும் கொலை செய்தனர்.
பின் ஆற அமர உட்கார்ந்து அவன் கொண்டு வந்த உணவை இருவரும் சாப்பிட்டனர் . விஷம் தலைக்கேறி இந்த இருவரும் செத்தனர். மூன்று தங்கக் கட்டியும் அதனைச் சுற்றி மூன்று பிணங்களும் கிடந்தன.அவ்வழியே மீண்டும் ஈஸா (அலை) அவர்கள் திரும்பி வந்தனர். நபிகளாருடன் சேர்ந்து வந்தவர்களிடம் , வழிப்போக்கனின் பேராசைக் கதையையும் தங்க கட்டி பறிப்போனதையும் சொல்லி, "இது தான் உலக வாழ்வின் ரகசியம் " என்றார்கள்.ஆதமின் மகனுக்கு (மனிதனுக்கு)த் தங்கத்தாலான ஒரு நீரோடை இருந்தால் தனக்கு இரண்டு நீரோடைகள் இருக்க வேண்டுமென்று அவன் ஆசைப்படுவான் அவனுடைய வாயை மண்ணை (மரணத்தை)த் தவிர வேறேதுவும் நிரப்பாது. மேலும், (இது போன்ற பேராசையிலிருந்து) திருந்தி பாவமன்னிப்புக் கோரி மீண்டு விட்டவரின் கோரிக்கையை அல்லாஹ் ஏற்றுக் கொள்கிறான் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அனஸ் இப்னு மாலிக் (ரலி)புஹாரி: 6439

அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்கள் :
நபி (ஸல்) அவர்கள் '(மறுமை நாள் நெருங்கும்போது) காலம் சுருங்கிவிடும்; செயல்பாடு (அமல்) குறைந்து போய்விடும்; மக்களின் உள்ளங்களில் (பேராசையின் விளைவாக) கஞ்சத்தனம் உருவாக்கப்பட்டு விடும். குழப்பங்கள் தோன்றும். 'ஹர்ஜ்' பெருகி விடும்' என்று கூறினார்கள்.

மக்கள், 'இறைத்தூதர் அவர்களே!
அது என்ன (ஹர்ஜ்)?' என்று கேட்டார்கள்.நபி (ஸல்) அவர்கள், 'கொலை, கொலை' என்று பதிலளித்தார்கள்.

கோபம்.

( மனித குணநலன்கள் 3 ) 10-04-2020



கோபம் ஏற்படும்போது மூளையை ஆராய்ச்சி செய்த விஞ்ஞானிகள், 'அமிக்டாலா' என்ற பகுதியில் இருந்து கோப உணர்வுகள் வெளிப்படுவதை கண்டுபிடித்தனர். உற்சாகம் தரும் விஷயங்களில் மனதை ஈடுபடுத்தினால் இந்த அமிக்டாலா பகுதியின் செயல்பாட்டை குறைத்து கோபத்தை கட்டுப்படுத்திவிடலாம் என்றும் அவர்கள் கண்டுபிடித்தனர்.

உடலில் செரொடானின் ரசாயனப் பொருள் அதிகமானால் தீவிர மனப்போக்கு தூண்டப்படும். இதுவே கோபம், எரிச்சல், வெறுப்பு போன்ற எதிர்மறை உணர்வுகளை தூண்டுகின்றன. செரோடானின் திரவத்தை கட்டுப்படுத்தினால் அமிக்டாலா பகுதியின் செயல்பாட்டை தடுத்து கோபத்தையும் இல்லாமல் செய்துவிடலாம்.

கோபமானது அட்ரினலின், கார்டிசோல் போன்ற ஹார்மோன்களை அதிகமாக தூண்டுகின்றன. இவை ஒருவகையில் உடலுக்கு சில நிமிடங்களுக்கு தீவிர ஆற்றலை வழங்குகின்றன. அதனால் கோபம் அளவாக வருவது நல்லதுதான் என்று சொல்லப்படுகிறது

சில மனிதர்கள் இருக்கிறார்கள். அவர்கள் எப்போதும் கோபமாகவே இருப்பார்கள். பேச ஆரம்பித்தால் அவர்களின் வாயில் இருந்து சுடுசொல் தான் வெளிவரும். இது அவர்களுக்கு சாதகத்தை ஏற்படுத்துவதை விட பாதகத்தையே ஏற்படுத்தும். இது குறைந்த பட்சம் சிடுமூஞ்சி என்ற கெட்ட பெயரையாவது அவருக்குப் பெற்றுத் தரும். அதனால் கோபத்தை விட்டொழிக்க வேண்டும் என்று இஸ்லாம் போதிக்கிறது.

ஆண்களைவிட பெண்கள் கோபக்காரர்கள் என்று ஒரு புள்ளிவிவரம் கூறுகிறது. அவர்கள், ஆண்களைவிட 12 சதவீதம் அதிகமாக கோபத்தை வெளிப்படுத்துகிறார்களாம். ஆனால் கோபத்தின் விளைவாக ஆண்களே அதிகமாக வன்முறையில் ஈடுபடுகிறார்கள் என்றும் அதே ஆய்வு கூறுகிறது.

யூதர்களில் சிலர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அபுல்காசிமே! அஸ்ஸாமு அலைக்க (உமக்கு மரணம் உண்டாகட்டும்!) என்று சற்றே மாற்றி ஸலாம் கூறினர்.

நபி (ஸல்) அவர்கள், வ அலைக்கும் (நீங்கள் சொன்னது உங்களுக்கும் உண்டாகட்டும் !) என்று (பதில்) சொன்னார்கள்.

அப்போது அருகில் இருந்த ஆயிஷா (ரலி) அவர்கள், அவர்களை கோபப்பட்டு சபிக்கும் விதமாக, "அலைக்குமுஸ்ஸாமு வத்தாமு (உங்களுக்கு மரணமும், இழியும் உண்டாகட்டும்!) " என்று (பதில்) சொன்னார்கள்.

இதைக் கேட்ட நபி (ஸல்) அவர்கள், "ஆயிஷாவே! அருவருப்பாகப் பேசுபவளாக இருக்காதே! " என்று கண்டித்தார்கள். அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள், அவர்கள் சொன்னதை நீங்கள் செவியுறவில்லையா? என்று கேட்டார்.

அதற்கு நபி (ஸல்) அவர்கள், நான்தான் அவர்கள் சொன்னதற்கு, வ அலைக்கும் (நீங்கள் சொன்னது உங்களுக்கும் உண்டாகட்டும்!) என்று பதில் சொல்லிவிட்டேனே! (அதை நீ கவனிக்கவில்லையா?) என்று திருப்பிக் கேட்டார்கள். (ஆயிஷா (ரலி) – புகாரி, முஸ்லிம்).

ஒரு மனிதர் இறைத்தூதர் நபி நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து, 'எனக்கு உபதேசம் செய்யுங்கள்' என்றார். அதற்கு நபிகளார், 'நீங்கள் கோபப்படாதீர்கள்' என்று நபி (ஸல்) கூறினார்கள். மீண்டும் அந்த மனிதர் நபிகளாரிடம், 'எனக்கு உபதேசம் செய்யுங்கள்' என்றார். அதற்கு அவர்கள், 'நீங்கள் கோபப்படாதீர்கள்' என்றார்கள். இப்படி பலமுறை நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா( ரலி) நூல்: புகாரி–6116)

கோபம் கொள்வது மிகவும் தீய பண்பாகும். இதனால் மோசமான விளைவுகள் ஏற்படும். உடல் நலம் பெரிதும் பாதிக்கப்படும். தேவையற்ற முறையில் ஒரு மனிதர் கோபப்பட்டால் அவருக்கு ரத்தக் கொதிப்பு அதிகரிக்கும். ரத்தக் கொதிப்பு மாரடைப்புக்கு வழி வகுக்கும். அதனால் ஒரு மனிதனின் கோபம் மற்றவர்களை பாதிக்கிறதோ இல்லையோ, நிச்சயம் கோபம் கொண்ட மனிதனின் உயிரையும் போக்கும் வல்லமை படைத்தது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். அதனால் தேவையற்ற கோபத்தை தவிர்க்க வேண்டும்.

கோபத்தை அடக்கும் மனிதனை இறைவன் நேசிக்கிறான். ''(இறைவனையே முற்றிலும் நம்பியிருப்போர் எத்தகையோர் எனில்) அவர்கள் பெரும் பாவங்களையும், மானக்கேடான செயல்களையும் தவிர்த்து விடுவார்கள். தாம் கோபத்திற்கு உள்ளாகும்போது மன்னித்து விடுவார்கள்'' (42:37) என்றும், "அவர்கள் வசதியுள்ள நிலையிலும், வசதியற்ற நிலையிலும் செலவழிப்பார்கள். கோபத்தை அடக்கிக் கொள்வார்கள்.

மேலும் மக்களை மன்னித்து விடுவார்கள். இத்தகைய உயர்ந்த பண் பினரை அல்லாஹ் நேசிக்கிறான்.'' (3:134) என்றும் திருமறையில் இறைவன் கூறுகின்றான்.

ஒருமுறை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் "மல்யுத்தம் செய்பவர் உண்மையான வீரர் அல்ல. கோபத்தின் போது தன்னை அடக்கிக் கொள்பவரே உண்மையான வீரர்" என்றார்கள். (அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா (ரலி) நூல்: புகாரி–6114)

ஒரு மனிதருக்கு கோபம் வந்தால் அதைத் தணித்துக் கொள்ள நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒரு அழகிய வழி சொல்கிறார்கள். ''கோபம் ஷைத்தானின் பாதிப்பின் விளைவாகும். ஷைத்தான் நெருப்பால் படைக்கப்பட்டிருக்கின்றான். எனவே உங்களில் ஒருவருக்கு கோபம் வந்து விட்டால், அவர் 'ஒளு' (தொழுகையின் போது செய்யப்படும் அங்கசுத்தி) செய்து கொள்ளட்டும்'' என்று நபிகளார் நவின்றார்கள்.

மேலும் நபிகளார், ''உங்களில் ஒருவருக்கு நின்று கொண்டிருக்கும் போது கோபம் வந்தால் அவர் உட்கார்ந்து கொள்ளட்டும். இப்படிச் செய்து கோபம் மறைந்து விட்டால் சரி, இல்லாவிட்டால் அவர் படுத்துக் கொள்ளட்டும்'' என்று ஆலோசனை கூறினார்கள்.

கோபத்தில் மனைவியை தலாக் சொல்லிவிட்டேன் என்ற வார்த்தையே அபத்தமானது,காரணம் கோபத்தில் தான் தலாக் சொல்வான். நல்லா இருக்கும்போது யாராவது தலாக் சொல்வானா? அதனால் தான் நீ கோபத்தில் சொன்னாலும் கேலிக்கு சொன்னாலும் தலாக் ஏற்பட்டுவிடும் என்று நபி ஸல் அவர்கள் கூறுகிறார்கள்

சிறை தண்டனையை அனுபவித்துக் கொண்டிருக்கும் ஒவ்வொரு குற்றவாளியிடமும் கேட்டுப்பாருங்கள் ,நீ ஏன் இந்த குற்றத்தை செய்தாய்? எனக்கு கோபம் வந்து விட்டது அதனால் நான் அவனை கொலைசெய்தேன் என்பான்.

மென்மையை இழப்பவன் நன்மையை இழப்பான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (ஜரீர் பின் அப்துல்லாஹ் (ரலி) – முஸ்லிம், அபூதாவூத், இப்னுமாஜா, அஹ்மத்). பொதுவாக கோபம் கொள்பவர் தன் நிலையை இழந்துவிடுவார். அதனால்தான் அரபியில் ஒரு பழமொழி சொல்வார்கள்: கோபத்தின் ஆரம்பம் பைத்தியம், முடிவு வருத்தம் என்று சொல்வார்கள்.

இதேப் போல் ஆங்கிலத்தில் ஒரு பழமொழி சொல்வார்கள்: **Anger is a short madness** (கோபம் என்பது ஒரு அரைப்பைத்தியம்). உண்மையில் பைத்தியக்காரன் தான் என்ன செய்கிறோம், என்ன பேசுகிறோம் என்பதை அறியமாட்டான். கோபம் கொண்டவரும் அதேபோல் தான் என்ன செய்கிறோம், என்ன பேசுகிறோம் என்பதை அறியாமல் இருப்பார்கள். கோபத்தில் இருப்பவர்கள் கூறுவார்கள், கோபம் வந்தா நான் என்ன செய்வேன் என்று எனக்கே தெரியாது என்று சொல்வார்கள்.

தமிழில் கூட கோபதைப் பற்றி ஒரு பழமொழி சொல்வார்கள்: கோபத்தோடு எழுந்தவன் நஷ்டத்தோடு உட்காருவான் என்று சொல்வார்கள். உண்மையில் கோபம் கொண்டு எழுந்து அதற்கான செயலில் ஈடுபடும் போது அநீதீ, அட்டூழியம், உறவுகள் பிரிவு சில சமயம் கொலைக் கூட செய்வார்கள்
ஒரு முறை பள்ளியில் சிறுநீர் கழித்த கிராமவாசி ஒருவரை நபித்தோழர்கள் கோபம் கொண்டு தாக்க முயன்றபோது, அவர்களைத் தடுத்து நிறுத்தி, சிறுநீர்பட்ட அந்த இடத்தை தம் கைகளால் தண்ணீர் ஊற்றி தூய்மை செய்தது நபியவர்களின் மென்மையின் உச்சக்கட்டம்.

இதேப் போல் ஹுதைபிய்யா உடன்படிக்கையின் போது இறைமறுப்பாளர்கள் கடுமையாக நடந்து கொண்டார்கள். அவர்களிடமும் கோபம் கொள்ளாமல் மென்மையான போக்கைக் கையாண்டு அந்த உடன்படிக்கையில் வெற்றிப் பெற்றது மென்மைக்குக் கிடைத்த வெற்றியேத் தவிர கோபத்தால் கிடைத்த வெற்றியல்ல.

## பொறாமை

( மனித குணநலன்கள் 2 ) 08-04-2020



செல்வம், அழகு, கல்வி, புகழ், அறிவு போன்றவற்றுள் ஏதேனும் ஒன்றோ, அல்லது பலவோ ஒருவருக்கு அதிகமாகக் கொடுக்கப்படுவது இறைவனின் அருளாகும். இது அவரின் மீது மற்றவர்கள் பொறாமை கொள்ளக் காரணமாக அமைகிறது.

இன்னும் யார் மீது பொறாமை ஏற்படுகிறதோ அவர் மீதே முழு கவனமும் செலுத்துவர். அவர் குறித்த ஒவ்வொரு விஷயத்தையும் உற்று நோக்குவர். தங்களுக்கு நல்லது நடந்தால் அடையும் சந்தோஷத்தை விட அவர்களுக்கு துன்பம் நேரும்பொழுது மகிழ்ச்சி கொள்வர்.

இந்த பொறாமையின் காரணமாகத்தான் மனித இனத்தின் ஆரம்ப காலகட்டத்தில் முதல் கொலையே நடந்தது.

இதை பற்றி அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்:

(முஹம்மதே) ஆதமுடைய இரு மகன்களின் உண்மைச் செய்தியை அவர்களுக்கு ஓதிக்காண்பிப்பீராக! அவ்விருவரும் இறைவனுக்கு நேர்ச்சை செய்தனர்.

அவர்களில் ஒருவருடைய நேர்ச்சை மட்டும் ஏற்பட்டுக் கொள்ளப்பட்டது இன்னொருவரின் நேர்ச்சை ஏற்கபடவில்லை.

(ஏற்கப்படாதவர்) நான் உன்னை கொன்று விடுவேன் என்று சொன்னார்.

(ஏற்றுக் கொள்ளபட்டவர்) அல்லாஹ்வை அஞ்சக்கூடியவர்களிடமிருந்து தான் நேர்ச்சையை அவன் ஏற்கிறான். நீ என்னை கொள்வதற்காக உன்கையை என்னிடத்தில் நீட்டினாலும் நான் உன்னை கொள்வதற்காக என் கையை உன்னிடத்தில் நீட்டமாட்டேன்.

அகிலத்தாரின் இறைவனான அல்லாஹ்வை பயப்படுகிறேன். என் பாவத்தையும் உன் பாவத்தையும் நீ சுமந்து நரகவாசியாகுவாய் என்று தான் நினைக்கிறேன்.

அது தான் அநீதி இழைத்தோரின் கூலி. அவரது உள்ளம் அவனது சகோதரரை கொள்வதற்கு அவருக்கு அலங்கரித்துக் காட்டியது. அவர் அவரைக் கொன்று நஷ்டவாளியானார். (குர்ஆன் 5: 27-30)

நபி யாகூப் (அலை) தன் மகன்களில், நபி யூசுப் (அலை) அவர்களை அதிகம் நேசிப்பதாகக் கருதிய மற்ற சகோதரர்கள், பொறாமையின் காரணமாக, யூசுப் (அலை) அவர்களை பாழும் கிணற்றில் தள்ளி விட்டதை திருமறையின் அத்தியாயம் யூசுப் நமக்கு விளக்குகிறது.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
“பொறாமை கொள்வதை விட்டும் உங்களை எச்சரிக்கின்றேன்! நிச்சயமாக நெருப்பு எவ்வாறு விறகை எரிக்குமோ அதே போன்று பொறாமை நல்லமல்களை எரித்துவிடும்”
(ஆதாரம்: அபூதாவூத்)

இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறுகிறார்: “ஷாஸ் இப்னு கைஸ்’ என்ற வயது முதிர்ந்த யூதன் ஒருவன் இருந்தான். அவன் முஸ்லிம்கள் மீது கடினமான பொறாமையும் குரோதமும் கொண்டிருந்தான்.

மதீனா அன்சாரிகளில் அவ்ஸ், கஸ்ரஜ் ஆகிய இரு கிளையினரும் ஒற்றுமையாக ஒன்றுகூடி ஓரிடத்தில் பேசியதைப் பார்த்தான்..இவ்வளவு ஒற்றுமையாகவும் அன்பாகவும் இஸ்லாமின் அடிப்படையில் இவர்கள் ஒன்றுகூடி இருந்ததை அவனால் பொறுக்க முடியவில்லை. “இவ்வூரில் அவ்ஸ் மற்றும் கஸ்ரஜ் கிளையினர் ஒற்றுமையாகி விட்டனர். இவர்கள் ஒற்றுமையுடன் இருந்தால் நம்மால் இங்கு தங்க முடியாது” என்று கூறி தன்னுடன் இருந்த யூத வாலிபனிடம் “நீ சென்று அவர்களுடன் உட்கார்ந்து கொள். பிறகு அதற்கு முன் அந்த இரு கிளைகளுக்கிடையே நிகழ்ந்த புஆஸ்' போரைப் பற்றியும் , போர் சமயத்தில் அவர்கள் தங்களுக்குள் கூறிய கவிதைகளை அவர்களுக்குப் பாடிக்காட்டு” என்று கூறினான்.

ஷாஸ் கூறியவாறே அவனும் செய்தான். நல்ல பலன் கிடைத்தது. அவ்ஸ் மற்றும் கஸ்ரஜ் இரு கூட்டத்தினரும் தத்தம் பெருமையைப் பற்றி பேச ஆரம்பித்தனர். இரு கூட்டத்திலிருந்தும் இருவர் மண்டியிட்டு வாய்ச் சண்டை போட, அதில் ஒருவர் நீங்கள் நாடினால் அந்தப் போரை இப்போதும் நாம் அப்படியே தொடங்கலாம் என்றார்.

மற்றவன் கூட்டத்தினர் “வாருங்கள்! மதீனாவிற்கு வெளியில் ஹர்ராவில் சென்று நாம் சண்டையிடுவோம். ஆயுதங்களை எடுத்துக் கொள்ளுங்கள்” என்று கூறியவாறு ஹர்ராவை நோக்கிக் கிளம்பினர். இரு கூட்டத்தினரும் கோபத்தால் பொங்கி எழுந்தனர். அவர்களுக்குள் கடுமையான சண்டை நடக்க நெருங்கி விட்டது.

இச்செய்தி நபி (ஸல்) அவர்களுக்குக் கிடைத்தவுடன் தங்களுடன் இருந்த முஹாஜிர் தோழர்களை அழைத்துக் கொண்டு அன்சாரிகளிடம் விரைந்தார்கள்.

அவர்களை நோக்கி "முஸ்லிம்களே! அல்லாஹ்வை பயந்து கொள்ளுங்கள்! அல்லாஹ்வை பயந்து கொள்ளுங்கள்! நான் உங்களுக்கு மத்தியில் இருக்கும்போதே அறியாமைக் கால வாதங்களை நீங்கள் செய்து கொள்கிறீர்களா? அல்லாஹ் உங்களுக்கு இஸ்லாமின் பக்கம் நேர்வழி காட்டினான் அதன் மூலம் உங்களைக் கண்ணியப்படுத்தினான் உங்களை விட்டு அறியாமைக்கால விஷயங்களை அகற்றி இருக்கின்றான் இறைநிராகரிப்பிலிருந்து உங்களைப் பாதுகாத்து இருக்கின்றான் உள்ளங்களுக்கு மத்தியில் அன்பை ஏற்படுத்தி இருக்கின்றான். இதற்கு பின்புமா நீங்கள் சண்டை செய்து கொள்கிறீர்கள்?” என்று அறிவுரை கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்களின் உருக்கமான உரையைக் கேட்ட அம்மக்கள் தங்களின் இச்செயலை ஷைத்தானின் ஊசலாட்டமே எனவும் தங்கள் எதிரியின் பொறாமையால் செய்யப்பட்ட சூழ்ச்சியுமே எனவும் புரிந்து கொண்டு அழுதனர். அவ்ஸ், கஸ்ரஜ் கிளையினர் ஒருவர் மற்றவரைக் கட்டித் தழுவினார். பின்பு நபி (ஸல்) அவர்களுடன் தங்கள் இல்லங்களுக்குத் திரும்பிச் சென்றனர். அல்லாஹ்வின் எதிரி ‘ஷாஸ் இப்னு கைஸ்” உடைய சூழ்ச்சியிலிருந்து முஸ்லிம்களை அல்லாஹ் இவ்வாறு பாதுகாத்தான்.

கர்வம்

(மனித குணநலன்கள் 1 ) 08-04-2020



கர்வம் கொண்டவர்கள் இவ்வுலகிலும்

கண்ணியம் குறைக்கப்பட்டு அழிவை தேடிக்கொள்வார்கள். மறுமையிலும் நரகத்தில் புகுத்தப்படுவார்கள் என்றால் அவர்கள் இப்பூமியில் வாழ்ந்து தான் என்ன பயன்?

ஊற்றுக்கண்ணில் இருந்து உபநதிகள் உற்பத்தியாகி ஓடி வருவது போல 'கர்வம்' என்ற ஊற்றுக்கண்ணில் இருந்து தான் ஆணவம், அகம்பாவம், இறுமாப்பு, தலைக்கனம், பெருமை, மமதை என்கின்ற அத்தனை கெட்ட குணங்களும் மனித உள்ளங்களில் உற்பத்தியாகிறது.

அவை சந்தர்ப்ப சூழ்நிலைகளுக்கேற்ப வெளிப்பட்டு மனிதனை தவறான வழியில் நடக்கச்செய்து பாவம் என்ற படுகுழியில் தள்ளுகிறது.

இது இப்போது தோன்றியது அல்ல. எப்போது ஆதிபிதா படைக்கப்பட்டார்களோ, அதற்கு முன்பே கர்வம், பெருமை போன்ற குணாதிசயங்கள் தோன்றிவிட்டன.

சொர்க்கத்தில் சிறந்த அறிவு ஜீவியாக கருதப்பட்டு வந்த இப்லீஸ், அல்லாஹ்வின் கட்டளைக்கு செவிசாய்க்காத காரணத்தால் அவன் மூலம் வெளிப்பட்டது தான் கர்வம் என்ற பண்பு.

"(ஆகவே இறைவன் இப்லீஸை நோக்கி ஆதத்திற்கு சிரம் பணி என்று) 'நான் உனக்குக் கட்டளையிட்ட சமயத்தில், நீ (சிரம்) பணியாதிருக்கும்படி உன்னைத் தடை செய்தது எது?' என்று கேட்க, (அதற்கு இப்லீஸ்) 'நான் அவரைவிட மேலானவன். (ஏனென்றால்,) நீ என்னை நெருப்பால் படைத்தாய். அவரை களிமண்ணால் படைத்திருக்கின்றாய். (களிமண்ணை விட நெருப்பு உயர்ந்தது)' என்று (இறுமாப்புடன்) கூறினான்". (7:12)

காரூனை விவிலியம் " கோராக் " என்றும் வரலாற்று ஆசிரியர்கள் "ட்யூடன் கமென்" என்றும் அழைக்கிறார்கள் .

காரூன் ,நபி மூஸா (அலை) அவர்களின் சிறிய தந்தையும் ,சிறிய தாயும் மகனும் ஆவான். நபி மூஸா (அலை) விசுவாசங் கொண்டு , தவ்ராத் வேதத்தை நன்கு கற்றவனும் அழகனும் நல்ல இனிமை குரல் வளமும் பெற்றவன் . மேலும் மிகச் சிறந்த அறிவாளன் இதனால்தான் கோடி கோடி செல்வத்தைப் தன் அறிவினால் பெற்றதாக பிற்காலத்தில் கூறினான் (குர்ஆன் 28:78 )

அவன் (ஒரு நாள் மிக்க ஆடம்பரமான) தன்னை (தங்க நகை )அலங்காரத்துடன் தன் மக்கள் முன் சென்றான். (அதனைக் கண்ணுற்றவர்களில்) எவர்கள் இவ்வுலக வாழ்க்கையை (பெரிதென) விரும்பியவர்களாக இருந்தார்களோ அவர்கள் "காரூனுக்கு கொடுக்கப்பட்டது போன்று நமக்கும் கொடுக்கப்பட வேண்டாமா? ஏனென்றால், நிச்சயமாக அவன் பெரும் பாக்கியவான்" என்று கூறினார்கள். (குர்ஆன் : 28:79)

அவனின் செல்வங்கள் 4 லட்சம் பொக்கிஷப் பெட்டிகளில் இருந்தன. செல்வத்தின் மதிப்பு சொல்லப் படவில்லை . காரூனுடைய பொக்கிஷங்களது சாவிகளை தூக்குவதற்கு 40 பேர் நியமிக்கப்பட்டிருந்தனர் ஒவ்வொருவரும் 16000 சாவிகளைத் தூக்குவார்கள் அதுவும் அவர்களுக்கு பளுவாக இருந்தனவாம். 60 கோவேறு கழுதையின் சுமையாக அந்த சாவிகள் இருந்தன.

"நிச்சயமாக அதனுடைய சாவிகள் சக்தியுள்ள ஒரு கூட்டத்திற்கு பெரும் பளுவாக இருந்தன " குர்ஆன் ( 28 : 76 )

இப்படித்தான் நபி இப்ராஹீம் (அலை) அவர்களின் எதிரி நம்ரூத் தான் செத்த பிறகும் தனக்கும் தன் மனைவிக்கும் தங்க ஆபரணங்களைக் கொண்டு அழகுப்படுத்தி புதைக்கச் சொன்னான் .
அவற்றின் இன்றைய மதிப்பு ஒவ்வொருக்கும் 35 மில்லியன் அமெரிக்க டாலருக்கும் அதிகம் .

இவ்வளவு செல்வாக்கும் கர்வமும் பிடித்த நம்ரூத்தின் மூக்கின் வழியே அற்ப கொசுவை அனுப்பி அவன் மூளையை அது குதற , மண்டைக்குள் புகுந்த கொசுவை வெளியே விரட்ட செருப்பாலே அவன் தலையில் அடிக்கப்பட்டு அதனால் நம்ரூத் செத்தான் .

பொதுவாக மக்களை ஆளும் வர்க்கத்தினருக்கு ஏனோ ஆணவத்தின் உச்சமாக தங்கள் உடலை தங்கத்தால் புனையவே விரும்புகிறார்கள் !

இப்படி செல்வங்கள் குவிய ஆரம்பிக்கும் போது , வளர்ப்பு மகன் திருமணத்திற்கு தங்கள் உடல் முழுவதும் தங்க நகை கடையை ஆபரணங்களாக சூட்டிக் கொள்வதும் , கோடிக்கணக்கான ரூபாயில் கோர்ட் அணிந்து , தங்க இழையைக் கொண்டு தங்கள் பெயரை அதில் பொறித்துக் கொள்வதும் கர்வத்தின் வெளிபாடுகள் .

கர்வம் கொண்டவரால் உயிர் போகும் நிலையிலும் கூட தன் சுய கவுரவத்தை விட்டு கொடுக்க இயலாது. இதற்கு ஒரு சரித்திர சம்பவம் உதாரணமாக சொல்றேன் .

பத்ர் யுத்த களத்தில் ஆக்ரோஷமான போர் நடக்கிறது. தளபதி அபுஜஹில் கால்கள் துண்டிக்கப்பட்டு குற்றுயிரும் குலையுயிருமாக போர்க்களத்திலே வீழ்த்தப்பட்டு கிடக்கின்றான்.

அப்துல்லா இப்னு மசூத் (ரலி) அவர்கள் தங்கள் வாளால் அவனது தலையை கொய்ய வருகிறார்கள். இன்னும் சில நிமிடங்கள் அவன் கதை முடிந்து போகும்.

அந்த கடைசி நேர சந்தர்ப்பத்திலும் கூட, அப்துல்லா இப்னு மசூத் (ரலி) அவர்களை அபுஜஹில் தடுத்து நிறுத்தி, ‘என் தலையை கொய்ய நீதானா கிடைத்தாய்? குறைஷியர் குலத்தின் தலைவன் என்ற கிரீடத்தை சுமந்த என் தலை உன் துருப்பிடித்த உடைந்த கத்தியாலா வெட்டப்படவேண்டும்? ச்சே .. திரும்பி செல்! நல்ல ஒரு குறைஷிய வீரனை அனுப்பு. நல்ல உடைவாளால் என் தலை மட்டும் சற்று உயரமாக இருக்குமாறு சீவப்படுவதை நான் பெருமையாக கருதுகிறேன். அதன் மூலம் என் குறைஷிய குலத்தின் பெருமை நிலை நிறுத்தப்பட வேண்டும் என்பதுதான் என் பேரவா’ என்றான்.

உயிர் மூச்சு நிற்கும் அந்த இறுதி நிலையிலும் தன் கர்வத்தை விட்டு கொடுக்க மறுத்தவன் அபுஜஹில்.

ர.ரா

## மரணத்திற்குப் பின் தொடரும்
## மனித வாழ்வு ! 07-04-2020

(மரணத்திற்கும் அப்பால் உள்ள மாயம் 12)

ஹஜ்ரத் கிலுரு (அலை) அவர்கள் , இமாமுல் அஃலம் அபூஹனீபா (ரஹ்) அவர்களது வஃளு மஜ்லிசுக்குத் தினந்தோறும் காலை வேளையில் ஆஜராகி ஷரீஅத்துடைய இல்முகளைக் கற்று வந்தார்கள் .

இமாம் அபூஹனீபா (ரஹ்) அவர்கள் வபாத்தானப் பிறகு அந்த கற்றுக் கொடுக்கும் வஃளு மஜ்லிசு நடைபெறவில்லை.

ஹஜ்ரத் கிலுரு (அலை) அவர்கள் , இறைவனது உத்தரவு பெற்று , இமாம் அவர்களின் ஹயாத்தில் நடந்தது போலவே மவுத்துக்குப் பின்பும் இமாமுல்
அஃலம் அபூஹனீபா (ரஹ்) அவர்களது கபுரு ஷரீபுக்கு ஒவ்வொரு காலையிலும் சென்று , ஷரீஅத்துடைய இல்முகளைக்
ஹஜ்ரத் கிலுரு (அலை) அவர்கள் கேட்டு வந்ததாக ....

இமாம் இபுனு ஜவ்ஸீ (ரஹ்) அவர்களைக் கொண்டு 'பதாயிஉ ' எனும் பிக்ஹுக் கிதாபில் குறிப்பிட்டிருப்பதாக ஷைகு ஹஸனுல் அத்வீ மிஸ்ரி (ரஹ்) அவர்கள் மஷாரிக்குல் அன்வார் 69 -வது பக்கத்தில் குறிப்பிட்டுள்ளார்கள் .

அடுத்து , நான்கு மதஹபுடைய இமாம்களுள் ஒருவராகிய அஹ்மது இபுனு ஹம்பலி (ரஹ்) அவர்களது ஸியாரத்திற்குச் சென்ற குத்பு ரப்பானீ கௌதுஸ்ஸமதானீ ,முஹிய்யித்தீன் அப்துல் காதிரு ஜீலானி (ரஹ்) அவர்கள் அன்னாருடைய கபுறு ஷரீபுக் கெதிரே , அதபுடன் நின்று, "அஸ்ஸலாமு அலைக்கும் யா இமாமல் கிராம் " (சங்கைக்குரிய இமாம் அவர்களே) என்று அழைத்து ஸலாம் சொன்னார்கள்.

உடனே கபுரு ஷரீபு திறந்து , இமாம் அவர்கள் ஜோதிப் பிரகாசத்தோடு வெளியே பிரசன்னமாகி , கௌதுல் அஃலம் அவர்களைக் கட்டித் தழுவி ஆலிங்கனஞ் செய்தார்கள் .நூரானீயான பரிவட்டத்தைப் போர்த்தி, " செய்யிது அப்துல் காதிரே ..., ஷரீஅத்துடைய இல்முகளும், ஹகீகத்துடைய இல்முகளும் தங்கள்பால் ஹாஜத்தாகின்றன " என்று பகர்ந்து விடைபெற்று மறைந்தார்கள் .

இச்சம்பவம் 'பஹ்ஜத்துல் - அஸ்றாரு ' என்ற கிரந்தத்தில் எழுதப்பட்டிருப்பதாக 'தப்ரீஜுல்காத்திர் ' 40 -வது பக்கத்திலும் , 'பஸ்லுல் கிதாபு ' 129 -வது பக்கத்திலும் ஷெய்கு அப்துல்ஹக் முஹத்திதுத் திஹ்லவி (ரஹ்) அவர்களின் 'ஜுப்ததுல் அஸ்றார் ' நூலிலும் காணப்படுகிறது .

இவ்வாறு மரணத்திற்குப் பின்னரும் தொடரும் இறைநேசர்களின் வாழ்வு

ர.ரா

'மரணத்திற்கும் அப்பால் உள்ள மாயம்' தொடர் இத்துடன் நிறைவு பெறுகிறது .

மரணத்திற்குப் பின் அழியாத தேகம்

(மரணத்திற்கும் அப்பால் உள்ள மாயம் 11) 06-04-2020

இமாம் கஸ்ஸாலீ (ரஹ்) அவர்கள் கீமியாயே - ஸஆதத்தில் " மனுஷன் அனாதியல்லனாயினும் முடிவற்ற நித்தியன் . மரணத்தோடு மனிதனின் வாழ்க்கை முடிவடைந்து விடவில்லை !

நிர்யாணத்தினின்று ஒரு புதிய வாழ்க்கை உதயமாகி அது என்றும் அழியா நித்தியமாய் நின்று நிலவத் தொடங்குகிறது !

ஜடவுலகத்தைப் பற்றி நிற்கும் பூத தேகத்தின் சுகபோக இன்பங்களின் வாசல் அடைபட , சகல நுகர்ச்சிகளையும் அந்தரங்கத்திலிருந்து அனுபவித்து வந்த அந்த மனுஷ்யன் என்ற சுயம்பொருள் சூட்சமமாய்க் கிரியை புரிய சக்தி பெறுகின்றது.

பிணி , மூப்பு , தளர்ச்சி , இயலாமை முதலிய தங்கட ,சங்கடமின்றி மறதியற்ற முழுமனிதப் பண்பும் அவனில் மிகைத்து அமைந்து காணப்படுகின்றது .

இவ்வுலகில் சஞ்சரித்து வந்தது போலவே எல்லாவிதமான புலன்களும் அமையப்பெற்று யோக்கியதையுடையவனாய் ஆகும் போது தேகமும் அவற்றைத் தொடர்ந்தே நிற்கும் என்பதில் உங்களுக்கு சந்தேகமுண்டா ?

இம்மையில் பூத குணத்தின் மிகைப்பால் ரூஹு உடலுக்குள் மறைந்து காணப்படுவது போல , மறுமையில் ரூஹானிய்யத்தின் மிகைப்பால் மொத்த முழுத்தேகமும் அந்த ரூஹுக்குள் மறைந்து காணப்படும்.

ஹிஸாபு என்ற கேள்வி கணக்கிற்கும் , பாவ புண்ணியத்திற்கேற்ற பலா பலன்களுக்கும் இத்தேகமே பொறுப்பாக விளங்கும்.

எனவே , ஒளிவாகிய நூர் என்னும் ஒரே அஸ்திவாரத்திலான உயிர் _ உடல் என்ற இவ்விரு வஸ்துக்களும் ஒன்றோடொன்று ஐக்கியப்பட்டு மறைவதும், வெளிப்படுவதும் ஆன்ம சக்தி மிக்கப்பெரியாரிடத்து இது ஒன்றும் அதிசயிக்கத்தக்க கருமமன்று .

இறை நேசர்களாகிய அவுலியாக்களிடத்தில் ஸ்தூலத்திற்கும், சூட்சுமத்திற்கும் மத்தியில் பிரமாதமான வித்தியாசம் ஒன்றுமில்லை. சூட்சுமத்துள் ஸ்தூலம் அடங்குவது அன்னாரிடத்தில் ஒரு பெரிய கருமமன்று .

அல்லாஹ்வின் மெய்யடியாரான அவுலியாக்கள் , தாங்கள் சிருஷ்டிகளின் பார்வையிலிருந்து மறைய நாடும் போது 'மரணம்' என்ற போர்வைக்குள் புகுந்து கொள்வதும், அடக்கம் செய்யப்பட்ட பின் ஸ்தூலத்தை சூட்சுமத்துள்ளடக்கி கபுரு களிலிருந்து வெளியே புறப்படுவதும் அன்னவர்களுக்கு மிக எளிதான கருமமாகும் . இறைவன் அவர்களுக்கு அத்தகைய தத்துவத்தைக் கொடுத்துள்ளான்.

இத்தியாதி காரணங்களைக் கொண்டு மரணத்திற்குப் பின்னும் அவுலியாக்கள் ஜீவனுள்ளவர்கள் , அழியாத தேகத்தை உடையவர்கள் , கிரியைகள் புரியும் சக்தியுடையவர்கள் . உதவி கேட்போரின் ஹலான ஹாஜ்ஜாத்துக்களை நிறைவேற்ற இறைவனால் சக்திக் கொடுக்கப்பட்டவர்கள் என்பதிலும் உங்களுக்கு சந்தேகம் உண்டா ?



மரணத்திற்குப் பிறகும் மாநபித் தோழர்களின் உயிர்வாழ்வு.

(மரணத்திற்கும் அப்பால் உள்ள மாயம் 10)

وَلَا تَقُوْلُوْا لِمَنْ يُّقْتَلُ فِىْ سَبِيْلِ اللّٰهِ اَمْوَاتٌ بَلْ اَحْيَآءٌ وَّلٰـكِنْ لَّا تَشْعُرُوْنَ

அன்றி, அல்லாஹ்வுடைய பாதையில் போர் புரிந்து (எதிரி களால்) வெட்டப்பட்டவர்களை இறந்தவர்கள் எனக் கூறாதீர்கள். மாறாக, (அவர்கள்) உயிரோடு இருக்கிறார்கள். ஆனால் (அதை) நீங்கள் உணர்ந்துகொள்ள மாட்டீர்கள். (குர்ஆன் : 2:154)

ஹிஜ்ரி 1350 துல் ஹஜ் மாதம் 1932 ஏப்ரல் மாதம் ஈராக் நகரில் நபித்தோழர்களான ஹுதைபா (ரலி) , ஜாபிர் (ரலி) அவர்களின் புனித உடல்கள் தோண்டி எடுக்கப்படுகிறது .

காரணம் மண்ணறையில் தஜ்லா நதி வெள்ளம் உட்புகுவதாக முதலாம் பைசல் மன்னர் கனவிலும் தலைமை முஃப்தீ கனவிலும் நபித்தோழர்கள் சொன்னதாக இருவரும் கூற 1400 வருடத்திற்கு முந்தைய கபர்களை தோண்டிய பொழுது அவ்வுடல்கள் சற்று முன் அடக்கப்பட்டதாக இருந்தது .

அவ்விருவரையும் பாக்தாத்திலிருந்து 40 மைல் தொலைவில் ஸல்மான் ஃபார்ஸி (ரலி) அவர்களின் அடக்கஸ்தலத்திற்கு பக்கத்தில் மீண்டும் நல்லடக்கம் செய்யப்பட்டது .இந்த நிகழ்ச்சியை 5 லட்சம் பேர் பார்த்தாக மஆரிஃப் மாத இதழ் ஜன 79 - ஆஜம்கட் , உ . பி வெளியாகி உள்ளது.

அடுத்து சிரியாவில் இப்போது யூதர்களின் கைக்கூலியாக சில நவீனத்துவக் கொள்கைக்காரர்களால் நபித் தோழர்களான ஸஹாபிகளின் கபறுகளை தரைமட்டமாக்க துணிந்தனர் . அப்படி நபித்தோழர்களின் மண்ணறை உடைத்தபோது , அந்த கபுறுகளில் நபித்தோழர்கள் துயில் கொண்டிருப்பதை காணமுடிந்தது

1) sahabi e Rasool a.s - Hajr bin Adi (R.a) grave and body distry by Yazzdi Fores
(ஹஜ்ரத் ஹஜ்ர் பின் அதீத் (ரலி) அவர்கள்

2) Hazarat Zubair bin Qais (RA) சுபைர் பின் கைஸ் (ரலி) அவர்கள்

1400 வருடங்களுக்கு முன்னால் புதைக்கப்பட்டவர்கள் .

இவ்விருவர்களின் மக்ஃபூராவையும் உடைத்து அவர்களின் உடலை சேதப்படுத்தியதை மேற்கண்ட வலைதளத்தில் பார்க்கவும் .

குறிப்பாக கவனிக்கவும் நபித்தோழர்கள் மிக அழகாக தாடி வைத்துள்ளார் .
மக்பூராவை உடைக்க வருபவனின் நீண்ட தாடியைப் போல் அல்ல .

இது பற்றி குர்ஆனில் அல்லாஹ் ,
"அல்லாஹ்வின் பாதையில் போரிட்டு கொல்லப்பட்டவர்களை இறந்தவர்கள் என நீங்கள் ஒரு போதும் எண்ண வேண்டாம் .அவர்தம் இறைவனிடத்தில் நிச்சயமாக உயிரோடு இருக்கின்றார்கள் .அன்றி அவர்களுக்கு உணவும் அளிக்கப்படுகிறது. தன் அருள் கொடையிலிருந்து அல்லாஹ் அவர்களுக்கு அளித்ததைக் கொண்டு அவர்கள் ஆனந்தத்துடன் இருக்கிறார்கள்" குர்ஆன் ( 3:169, 170 )

ர.ரா




மண்ணறைவாசிகள் கேட்கிறார்கள் பார்க்கிறார்கள், பதில் சொல்கிறார்கள்

(மரணத்திற்கும் அப்பால் உள்ள மாயம் 9) 04-04-2020



இறைநேசர்களுடைய மண்ணறை ஒருவர் ஸியாரத்துச் செய்தால் அவரை அந்த இறைநேசர் நன்கு அறிவார். அவர் ஸலாம் சொன்னால் அந்த மண்ணறை இறைநேசர் அதற்குப் பதில் சொல்வார் . இறைநேசரின் மண்ணறைக்கு அருகாமையில் ஒருவர் சம்மனங் கொட்டி உட்கார்ந்து திக்ரு செய்தால் , அந்த இறைநேசரும் சம்மனங் கொட்டி உட்கார்ந்து சேர்ந்து திக்ரும் செய்கிறார் .

ஓர் இறைநேசர் இறந்ததும் அன்னார் பேரில் அன்பியா , அவுலியாக்களுடைய அர்வாஹுகள் மைய்யத் தொழுகை தொழும் என்பதாக இமாம் அப்துல் வஹ்ஹாபு ஷஃறானீ எழுதிய தபகாத்துல் குப்தா பாகம் 2 -ல் 65 பக்கம்

பொதுவாக எல்லா மையித்துகளும் தன்னை குளிப்பாட்டுபவர்களையும் , சுமந்து செல்பவர்களையும் , மண்ணறைக்கு அருகில் நிற்பவர்களையும் பார்க்கிறது , அவர்களது பேச்சுக்களை கேட்கிறது என்பதாக பதாவா குப்ராவில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

"மையித்து உனது பாதரட்சையின் சப்தத்தையும் கூட கேட்கின்றது " என்பதாக புகாரி , முஸ்லீம் , அபூதாவூது , நஸயீ ஆகிய கிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறது .

உடனே நவீனத்துவவாதிகள் கீழ்க்கண்ட குர்ஆன் வசனங்களை காட்டி ஹதீஸ் உண்மையா ? குர்ஆன் உண்மையா? என்று விபரம் கேட்கிறார்கள் .

اِنَّكَ لَا تُسْمِعُ الْمَوْتٰى وَلَا تُسْمِعُ الصُّمَّ الدُّعَآءَ اِذَا وَلَّوْا مُدْبِرِيْنَ

(நபியே!) மரணித்தவர்களுக்குக் கேட்கும்படிச் செய்ய நிச்சயமாக உங்களால் முடியாது. (அவ்வாறே உங்களுக்குப்) புறங்காட்டிச் செல்லும் செவிடர்களுக்கு நீங்கள் அழைக்கும் (உங்களுடைய) சப்தத்தைக் கேட்கும்படிச் செய்யவும் முடியாது. (குர்ஆன் : 27:80)

செத்த மையத்துக்கள் செவி ஏற்பதாக நவீன விஞ்ஞானத்தால் தக்க ஏற்பாடு செய்வதாக வைத்துக் கொண்டாலும், நீங்கள் மையத்துக்களிடம் பேசினால் அவற்றைக் கேட்டு மையத்துகள் பதில் சொன்னால், செத்த மையம் சாகவில்லை என்ற ஒரு நிலை வரும் அல்லவா ? இதனால் மரணம் பொய்ப்பித்துப் போகும்.

இறைவன் செத்துப் போன மையத்துக்களை அவன் நாடினால் செவியேற்க செய்ய முடியும் .

உதாரணமாக சூர் ஊதப்படும் போது சமாதிகளிலிருந்து வெளிப்பாடுவார்கள் என்று குர்ஆன் (20 : 102 ) (27 : 87) கூறுகிறது என்றால் மையத்துகளுக்கு காது நன்கு கேட்கிறதல்லவா ...?

அடுத்து இறைவன் நாடினால் ....

وَمَا يَسْتَوِى الْاَحْيَآءُ وَلَا الْاَمْوَاتُ اِنَّ اللّٰهَ يُسْمِعُ مَنْ يَّشَآءُ وَمَآ اَنْتَ بِمُسْمِعٍ مَّنْ فِى الْقُبُوْرِ

உயிருள்ளவர்களும் மரணித்தவர்களும் சமமாக மாட்டார்கள். நிச்சயமாக அல்லாஹ் தான் விரும்பியவர்களைச் செவியுறும்படிச் செய்கின்றான். (நபியே!) சமாதிகளில் உள்ளவர்களை செவியுறும்படிச் செய்ய உங்களால் முடியாது. (அல்குர்ஆன் : 35:22)

நீங்கள் நன்கு கவனிக்க வேண்டும்

அல்குர்ஆன் 😦:( 27:80) , (35:22) ஆகிய இரு வசனங்களிலும் மரணித்தவர்களை செவியேற்க செய்யும்படி' உங்களால் ' முடியாது. ஆனால் இறைவனால் முடியும்

இந்த வசனத்தின்படி பத்ரு யுத்தத்தில் இறந்த இறை மறுப்பார்களின் பிணங்களிடம் நபிகளார் பேசினார்கள் என்பதாக முந்தைய பதிவுகளில் சொல்லி இருக்கிறேன் . கவனிக்கவும் .

இதற்கும் ஒரு படி மேலாக ஷைகுல் அக்பர் முஹ்யித்தீன் இப்னு அரபி (ரஹ்)
அவர்கள் வபாத்தான பிறகு அவர்களே தங்களது வீட்டிற்கு வந்தார்கள். தங்களது வெள்ளாட்டியைக் கண்டு அவளது சுக செய்திகளையும் , நிலைமைகளையும் விசாரித்தார்கள். எல்லா விஷயங்களையும் அவள் விஸ்தாரமாக எடுத்துக் கூறினாள். அவர்கள் அவளிடமிருந்து விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து சென்றார்கள் என்பதாக புஸூஸுல் ஹிக்கம் உடைய ஷரஹில் இமாம் ஷைகு ஜுந்தி (ரஹ்) அவர்கள் கூறுவதாக ஸஆத்துத் தாரைன் 402 பக்கத்தில் எழுதப்பட்டுள்ளது .

நபி (ஸல்) அவர்களை, மவுத்தாகிப் போன தத்தம் சஹாபாக்களின் அர்வாஹுகள் சகிதம் சந்தித்து ,எல்லா உலகங்களையும் சுயேச்சையாகச் சுற்றி வருவதை இறை நேசர்கள் கண்கூடாகக் கண்டிருக்கிறார்கள் என்பதாக இமாம் கஸ்ஸாலி (ரஹ்) ஆதாரத்துடன் தப்ஸீர் ரூஹுல் பயான் பாகம் 10 ,பக்கம் 99 .

அபூபக்கர் (ரலி) அவர்கள் வபாத்தாகும் போது , " என்னுடைய ஜனாஸாவை நாயகம் (ஸல்) அவர்களுடைய முபாரக்கான அறையின் முன்னால் வையுங்கள் . கதவு திறக்கப்பட்டு , அபூபக்கரை உள்ளே கொண்டு வாருங்கள் என்று உத்தரவு வந்தால் மட்டுமே அவ்வறையினுள் என்னை அடக்கம் செய்யுங்கள். இன்றேல் பொதுக் கபுருஸ்தானத்தில் அடக்கி விடுங்கள்" .
- என்று வஸிய்யத்துச் செய்திருந்தார்கள்

அவ்வாறே செய்யப்பட்டது . பூட்டப்பட்ட அறை வாயிலின் முன்பு ஜனாஸா வைக்கப்பட்டபோது, வாயில் கதவு தானாகவே திறந்து கொண்டது மட்டுமல்லாமல் , " தோழரைத் தோழரிடம் அனுப்பி வையுங்கள் " என்ற உத்தரவும் நபி (ஸல்) அவர்களின் ரவுளா ஷரீபிலிருந்து வெளிவந்தது.

- இவ்வரலாற்றை இமாம் பகருத்தீன் ராஜீ (ரஹ்) அவர்கள் தப்ஸீீர் கபீர் , 5-வது பாகம் ,685 வது பக்கம் , தப்ரீஹுல் அத்கியா பீ - அஹ்வாலில் அன்பியா பாகம் 2 - பக்கம் 376 எழுதப்பட்டுள்ளது.

ர.ரா

மரணத்திற்கு பின்னும் ஜீவன் உள்ளவர்கள்.

(மரணத்திற்கும் அப்பால் உள்ள மாயம் 8) 03-04-2020



"நபிமார்கள் , இறை நேசர்கள் மரணத்திற்குப் பின்னும் ஜீவனுள்ளவர்களாக இருக்கின்றார்கள். அவர்கள் மண்ணறையில் (பர்ஜக் உலகில்) தொழுது கொண்டும்,குர்ஆன் ஓதிக் கொண்டும் இருக்கிறார்கள் .
அனஸ் (ரலி) - ஹதீது பைஹகீ

(உ-ம்) நபி மூஸா (அலை) அவர்கள் செம்மை நிறமான மேட்டின் மீதுள்ள மண்ணறையில் நின்று தொழுது கொண்டிருந்ததை மிஃராஜ் உடைய இரவில் நபி (ஸல்) அவர்கள் கண்டார்கள்
(முஸ்லிம்)

மக்கா, மதீனாவுக்கிடையே நபி (ஸல்) அவர்கள் மிஃராஜ் செல்லும் போது நபி மூஸா (அலை) அவர்கள் காதில் கையை வைத்து தப்பியாச் சொல்லிக் கொண்டு அர்ஜுக் ஓடையை கடந்து கொண்டிருந்தை தான் பார்த்ததாக கூறுகிறார்கள்.

மேலும் யூனுஸ் (அலை) அவர்கள் கம்பளி உடையுடன் சென்னிற ஒட்டகையில் ஷாஷாலுப்த் என்னுமிடத்தில் ஓடையைக் கடந்து கொண்டிருப்பதையும் ஒட்டகையின் மூக்கணாங்கயிறு பேரீத்த மரத்தின் நாரினால் செய்யப்பட்டிருந்தது என்றும் நபி (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள் .

அப்பயணத்தில்) மர்யமின் மைந்தர் ஈசா (அலை) அவர்களையும் கண்டேன். அவர்கள் நடுத்தர உயரமும் சிவப்பும் வெண்மையும் கலந்த, மிதமான சரும அமைப்புக் கொண்டவர்களாகவும் படிந்த, தொங்கலான தலைமுடி உடையவர்களாகவும் இருந்தார்கள்

அல்லாஹ்வுடைய இறைநேசர்கள் நிச்சயமாக மரிப்பதில்லை .ஆனால் ஓர் இல்லத்தில் இருந்து மறு இல்லத்திற்குச் செல்கிறார்கள் - இமாம் கஸ்ஸாலீ (ரஹ்) அர்பயீன் ஹதீது நூல்

அபூஸயீது கர்ராஜ் (ரலி) அவர்கள் மக்காவிலிருந்த காலத்தில் ஒரு வாலிபரின் மையித்து பனூ ஷைபா வாசலில் இருந்தது . அதை அவர்கள் உற்று நோக்கினார்கள் ." அபூஸயீதே ! இறைவனுடைய நேசர்கள் ஜீவனுள்ளவர்கள் .அவர்கள் ஒரு இல்லத்தில் இருந்து மறு இல்லத்திற்கு செல்வதே மரணமாகும் என்பதை நீர் அறியவில்லையா ? "என்பதாய் அந்த மையித்து சிரிப்புடன் சொல்லிற்று.
-இமாம் ஜலாலுத்தீன் ஸுயூத்தி (ரஹ்) , ஷரஹுஸ்ஸுதூர் 86 வது பக்கம்

இறை நேசர்கள் மரணித்திற்கு பின் ஹயாத் , ரூஹு , ஜிஸ்மு இம்மூன்றுடனும் இறுதிநாள் வரையிலும் இருப்பார்கள் . இதனால் மண் , புழு , பூச்சி , ஜவா மிருகங்கள் எதுவுமே அண்டாது . தின்னாது .

உமர் (ரலி) அவர்கள் காலத்தில் துஸ்தர் கோட்டை பிடிபட்டது. அங்கு ஹுர்முஜானுடைய இல்லத்தில் ஹஜ்ரத் நபி தானியால் (அலை) அவர்களது திரேகம் அழியாமல் வைக்கப் பெற்றிருந்த பெட்டகம் கண்டுபிடிக்கப்பட்டது. அந்தத் திரேகத்தில் உள்ள நரம்புகள் அனைத்தும் இரத்த ஓட்டமுள்ளதாக அந்தச் சங்கையான உடல் பல நூற்றாண்டுகளாக அப்படியே இருந்தது
_ வன்னிஹாயா பாகம் 2 - 41 , இம்ரானுல் குலூபு 115 பக்கம்

"'எப்படி அவர்களால் இப்படி இருக்க முடிகிறது ? " - கவனமாக கேளுங்கள் .

பூமியில் இருக்கும் போது உந்தியின் கீழிருந்து மூச்சு எழும்பி , மூளைக்கேறி வெளிப்படுவது இயற்கை. இப்படித்தான் உங்களுக்கும் எனக்கும் நடந்து கொண்டிருக்கிறது .

ஆனால் மண்ணறையில் வாழ்பவர்கள் , தாயின் வயிற்றிலிருக்கும் சிசுக்கள், சொர்க்கவாதிகள் இவர்களுக்கு பூமியின் இயற்கைக்கு மாற்றமாக, மூச்சு மேலிருந்து கீழ்நோக்கிச் செல்லும் . இதனால் யாக்கை அழியாமல் மண்ணறையில் ஜீவனை பெற்றவர்களாக என்றும் இருக்கிறார்கள் . மேலும் மனிதர்களுக்கிடையே நடமாடவும் செய்கிறார்கள் .

اَوَمَنْ كَانَ مَيْتًا فَاَحْيَيْنٰهُ وَجَعَلْنَا لَهٗ نُوْرًا يَّمْشِىْ بِهٖ فِى النَّاسِ كَمَنْ مَّثَلُهٗ فِى الظُّلُمٰتِ لَـيْسَ بِخَارِجٍ مِّنْهَا كَذٰلِكَ زُيِّنَ لِلْكٰفِرِيْنَ مَا كَانُوْا يَعْمَلُوْنَ

(வீழ்ச்சி அடைந்து) மரணித்தவர்களாக இருந்தவர்களில் எவரை நாம் உயிர்ப்பித்து மனிதர்களுக்கிடையில் நடமாடுவதற்குரிய ஒளியையும் கொடுத்திருக்கின்றோமோ அவர், இருளில் சிக்கி அதிலிருந்து வெளியேற முடியாமலிருப்பவனுக்குச் சமமாவானா? இவ்வாறே நிராகரிப்பவர்களுக்கு அவர்களுடைய (தீய) செயல்கள் அழகாக்கப்பட்டு விட்டன.
(அல்குர்ஆன் : 6:122)

வாழ்க்கைக்குப் பின்னும் ஒரு வாழ்க்கை
(Life after Life)

(மரணத்திற்கும் அப்பால் உள்ள மாயம் 7) 03-04-2020



மரணத்துக்கு அப்பால்..? மரணத்துக்குப் பின் வாழ்க்கை..? என்பதெல்லாம் நமக்குப் புரிபடாமல் இருப்பதால்தான் மனித வாழ்க்கை சுவாரஸ்யமாக உள்ளது. 'ஆன்மா என்றும் அழியவே அழியாது. அழிவு என்பது நம் உடலுக்கு மட்டும்தான். மரணம் சம்பவித்து வினைப் பயன் முடிந்ததும் ஆத்மாவானது தான் கொண்டிருக்கும் உடலைத் துறந்துவிடுகிறது. . . ஆன்மிகம் மட்டுமே இதுவரை அலசி ஆராய்ந்து வந்த மரணத்துக்குப் பிந்தைய வாழ்க்கையைப் பற்றிய ஆய்வை, இப்போது அறிவியலும் மேற்கொண்டு அலசி ஆராய்ந்து சில முடிவுகளை எடுக்கத் தொடங்கி இருக்கிறது.

மரணத்துக்குப் பிறகு ஆன்மா என்ற வாதத்தில் ஆன்மிகத்துக்கு எதிரான நிலையைத்தான் இதுவரை அறிவியல் எடுத்தது வந்துள்ளது. மரணம் மனிதருக்கு இறுதியானது. வினைகளுக்கு ஏற்ற சொர்க்கம் நரகம் என்பதோ கிடையாது. மூளை செயலுடன் இருக்கும் வரைதான் நினைவுகள் மற்றும் செயல்கள் யாவுமே. மூளை செயல் இழந்தால் உடலும் அழியும் அதோடு நினைவுகளும் செத்துப் போகின்றன. எனவே, மரணத்துக்குப் பின் வாழ்க்கை இல்லை. அதுபற்றி சொல்லப்படும் எல்லா மதக் கருத்துகளும் கட்டுக்கதையே என்றுதான் இதுவரை அறிவியலும், அறிவியல் அறிஞர்களும் சொல்லி வந்தனர்.

ஆனால், சென்ற ஆண்டு ஜூலை மாதத்தில் மரணத்துக்குப் பிந்தைய மனிதர்களின் வாழ்க்கையைப் பற்றி ஜெர்மானிய மருத்துவர்கள் குழு ஒன்று ஆய்வு செய்தனர். ஜெர்மன் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த மனநிலை ஆய்வாளர்கள் மற்றும் மருத்துவர்கள் இணைந்த குழு ஒன்று மருத்துவ பரிசோதனை மூலம் மரணத்துக்குப் பின் வாழ்க்கை உள்ளது என நிரூபித்துள்ளனர். மூளை தனது செயலை இழந்தாலும் வாழ்க்கை வேறு வடிவில் உள்ளது என்பதைக் கண்டறிந்து நிரூபித்தனர்.

இந்த மரணத்துக்குப் பிந்தைய வாழ்க்கை என்பது பற்றிய ஆய்வை, பல்வேறு வகைகளில் மரணம் அடைந்தவர்களின் மரணத் தறுவாயில் அவர்களுக்கு அருகில் இருந்தபடி அவர்களுடைய மரணம் சம்பவிக்கும் நேரத்தில் அவர்களுக்கு நேரிட்ட அனுபவங்களை நவீன ரக அறிவியல் சாதனங்களின் உதவியுடன் கண்டறிந்திருக்கின்றனர்.

கடந்த நான்கு ஆண்டுகளாக சுமார் 1000 பேரிடம் இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. சிறப்பான மருந்துகளின் துணையோடு, மரணமடைந்த உடலினைச் சிதைக்காமல் இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. மரணம் நேரிட்ட பதினெட்டு நிமிடங்களுக்குப் பிறகு உடல் நினைவு இழந்த நிலையில் பரிசோதனை மேற்கொள்ளப்பட்டது.

அப்போது நவீன முயற்சிகளினால் இறந்துபோன உடலின் வாக்குமூலங்களையும் தொகுத்து வைத்துள்ளனர். அவை பொதுவாக, உடலிலிருந்து உயிர் பிரிவது போன்ற நினைவுகள், தெய்வீக ஆற்றலால் ஆட்கொள்ளப்பட்டு மிதத்தல் போன்ற உணர்வு, ஒளியில் ஜொலிக்கும் ஆற்றல், அமைதி நிலை, சூடான பாதுகாப்பு, மரண வேளையின் அனுபவம் எனப் பல்வேறு உணர்வுகள் பகிரப்பட்டுள்ளன. பல்வேறு வாக்குமூலங்களில், மத நம்பிக்கைகள் பற்றிய விஷயங்கள் எதுவும் இல்லை. கிறிஸ்தவர்கள், இஸ்லாமியர்கள், யூதர்கள், இந்துக்கள் மற்றும் மதநம்பிக்கை அற்றவர்கள் என எல்லோரின் அனுபவமும் இங்கே பதியப்பட்டதாம். பெரும்பாலும் எல்லோரின் நிலையும் ஒரே மாதிரியாக இருந்தது ஆச்சர்யம் என ஜெர்மன் மருத்துவக்குழு கூறியது.

1944-ம் ஆண்டில் உலகப் புகழ் பெற்ற உளவியல் நிபுணர் கார்ல் ஜங் (Carl Jung) என்பவர் சுவிட்சர்லாந்து நாட்டில் தனக்கு உண்டான மாரடைப்பும் அப்போது உருவான அசாதாரண சூழல் பற்றியும் எழுதியுள்ளார். அதில் உடலை விட்டு அவரின் உயிர் பிரிந்து சென்றதாகவும், இந்த பூமியை சில மைல்கள் தொலைவில் மேலே இருந்து கண்டதாகவும் கூறி வியந்துள்ளார். அண்டசராசரத்தில் பார்த்த விண்வெளிக் காட்சிகள் யாவும் பின்னர் விண்வெளி ஆய்வில் உறுதிப்படுத்தப்பட்டது என்பது உண்மை.

இதைப் போலவே கனக்டிகட் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த கென்னத் ரிங் என்பவர் 1980-ம் ஆண்டில் மரணத்தின் இறுதிவரை சென்று வந்த சுமார் 100 பேரிடம் மரணத்துக்குப் பிந்தைய நிலையினைக் கேட்டு அறிந்தார். அவற்றில் பாதிக்கும் மேலானோர் பெற்ற அனுபவத்தில் ஒற்றுமை இருந்தது.

அவை உயிர் நின்று போன ஒரு சூழலில் ஆழ்ந்த அமைதி, ஒளிவெள்ளம், உடலை விட்டு உயிர் சிறிய வலியோடு பிரிவது, இருட்டு சுரங்கப் பாதையை உயிர் அடைவது, வெளிச்சத்தைக் காண்பது, அங்கு வண்ணமயமான ஒளியினை அடைவது' என ஒரேமாதிரியான பதில்கள் இருந்தன. மேலும், அதிசயமாக பிறவியிலேயே பார்வை அற்றவர்கள் கூட தங்கள் உடலை விட்டுப் பிரிந்த பின் பூமியையும், விண்ணையும் தெளிவாகக் கண்டதை சொல்லியிருக்கிறார்கள்.

மருத்துவர் ரேமண்ட் மூடி (Dr. Raymond Moody) என்பவர் 1975-ம் ஆண்டு எழுதிய வாழ்க்கைக்குப் பின் வாழ்க்கை

**(Life after Life)** என்ற நூல்தான் உலக அளவில் மரணத்துக்குப் பிந்தைய வாழ்க்கை குறித்து பல ஆய்வுகளை மேற்கொள்ள செய்தது. 150 பேரிடம் இவர் மேற்கொண்ட ஆய்வுகள் 9 விதமான உணர்வுகளை அவர்கள் அனுபவித்ததை கூறியது.

டாக்டர் ப்ரூஸ் க்ரேசன், டாக்டர் பிம் வான் லோம்மெல், டாக்டர் மைக்கேல் சாபொம் போன்ற மேதைகளும் பின்னாளில் ஆய்வுகள் செய்து டாக்டர் ரேமண்ட் மூடி கூறியவை உண்மை என அறிவித்தனர். ஆச்சர்யமாக அந்த 9 வகை உணர்வுகளும் ஏறக்குறைய நமது புராணங்கள் வேதங்கள் கூறியவை போலத்தான். ரீங்கார ஒளியைக் கண்டு பரவசம், உடலை விட்டு உயிர் பிரிதல், விண்வெளியில் ஆன்மா தங்குதல், சுரங்கவழிப்பயணம், ஒளிமிக்க சிலரை தரிசித்தல், பிரமாண்ட ஜோதியைக் காணல், கடந்த வாழ்க்கையை பரிசீலித்தல், வாழ்க்கை முடிவடைந்து போகவில்லை என்று உணர்தல் என அப்படியே ரேமண்ட் மூடி அவர்களின் ஆய்வுகள் நமது புராணங்களையும், வேதங்களையும் பிரதிபலித்தது.

" பத்ரு யுத்தத்தில் மரணித்த இறை நிராகரிப்பாளர்களான குப்பர் களுடைய பிரேதங்கள் குவிக்கப்பட்டிருந்த இடத்திற்கு , போர் ஓய்ந்த பின்பு நபி (ஸல்) அவர்கள் சென்று , அப்பிரேதங்களை நோக்கி , " எங்கள் இறைவன் கூறிய வாக்குறுதியை நாங்கள் உண்மையாகப் பெற்றுக் கொண்டோம். உங்கள் இறைவன் கூறிய வாக்குறுதியை நீங்கள் உண்மையாகப் பெற்றுக் கொண்டீர்களா ? என்று கேட்டபோது ,

உமர் பாரூக் (ரலி) அவர்கள்,
யா ரசுல்லாஹ் ..! மரணமடைந்தோர் எங்ஙனம் தாங்கள் கூறுவதைக் கேட்பார்கள் ?

அதற்கு நபி (ஸல்) அவர்கள், "உங்களை விட அவர்கள் நன்றாகக் கேட்பார்கள் .உங்களுக்கு வெளிக்காது உண்டு . அவர்களுக்கு ஆன்மார்த்தச் செவியுண்டு, அதனால் எல்லாவற்றையும் கேட்கிறார்கள் "
(முஸ்லிம்)

" மையித்து (பிரதேம் ) உனது பாதரட்சையின் (செருப்பின்) சப்தத்தையும் கூட கேட்கின்றது "
(புகாரி, முஸ்லிம் , அபூதாவூது , நஸயீ)

மேற்கண்ட இரு சேதிகளுக்கு உதாரணமாக , நபி (ஸல்) அவர்கள் ஒருவரை இஸ்லாத்தின்பால் அழைத்தபோது , அவர் குழந்தை பருவத்தில் இறந்து போன தனது மகளை உயிர் பெறச் செய்தால் , ஈமான் கொள்வதாகக் கூறினார்.

அக்குழந்தையின் மண்ணறைக்குச் சென்று, நபி (ஸல்) அவர்கள் , அக்குழந்தையை கூப்பிட்டு அழைத்தார்கள் .

உடனே அக்குழந்தை ' அடிபணிந்தேன் ' என்று மறுமொழி கூறியது .

" திரும்பி உலகுக்கு வரக்கூடிய எண்ணமுண்டா ? "

" அல்லாஹ்வுடைய ரசூலே ! இறைவன் மீது சத்தியமாக எனக்கு அத்தகைய எண்ணம் இல்லை .இம்மையை விட மறுமையையே மேலாகக் காண்கிறேன் "
( ஹுஜ்ஜதுல்லாஹி அலல் ஆலமீன் 422-வது பக்கத்தில் அல்லாமா ஷெய்கு யூசுபுன்னபஹானீ (ரஹ்)

தூங்குவதும், விழிப்பதும் போலானது வாழ்வும், மரணமும் என்று சொல்லியது வள்ளுவம். விழிப்பு உணர்வு கொண்ட ஞானியர்கள் மரணத்தை மிக எளிதாகக் கண்டுகொள்வார்கள். அவர்களுக்கு மரணத்துக்குப் பிந்தைய வாழ்க்கை முறை முன்னரே தெரியும் என்றும் நமது கதைகள் கூறுகின்றன. மரணம் என்பது உணர்வு. அதை மற்றவர்களுக்கு உணர்த்தவே முடியாது. கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர். எனினும் இன்று வரை உலகில், மரணம் என்பதும் மரணத்துக்குப் பிந்தைய வாழ்வு என்பதும் புதிர் மட்டுமல்ல, சுவாரஸ்யமான நிலையும் கூட. மரணத்தை வெல்லும் காலம் கூட வரலாம். அப்போது மனித வாழ்க்கை அலுப்பாகி விடும். உரிய வயதில் விடை பெறுவதுதான் உயர்வான விஷயம். அப்போதுதான் சொர்க்கம் நரகம் என்பவையும் சுவாரஸ்யமாக இருக்கும். அறிவியல் ஆராய்ச்சிகள் உடலை விட்டு ஆன்மா நீங்கும்போது பார்க்க, பேச, கேட்க, உணர முடிகிறது என்பதை உறுதிப்படுத்துகின்றன என்றால் நமது புராணங்களும் வேதங்களும் சொன்னவை யாவும் உண்மை என்றுதானே எண்ணத் தோன்றுகிறது?! மரணம் மனிதருக்கு இறுதியானதா? இல்லவே இல்லை என்றுதான் தோன்றுகிறது என்கிறார்கள் .

ர.ரா

நல்லடியார்களின்அடிச்சுவடுகள்

(மரணத்திற்கும் அப்பால் உள்ள மாயம் 6)

இது உண்மையான வரலாற்று நிகழ்வு 01-04-2020.
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

நீங்கள் இங்கே படத்தில் காண்பது ஸையுதுனா ஷைக் முஹம்மத் ஐய்யூப் தாஹிர் குர்தி رحمه الله அவர்களின் திருப்பாதம். தமாஸ்கஸ்ஸில் அவர்களது புனித கபுர் ஷரீபில் இருந்து அது வெளியாகி, அந்த அமைப்பிலேயே நல்லடக்கமாகி இன்றுவரை பாதுகாக்கப்பட்டுள்ளது.

இவர்கள் உயிரோடு இருக்கும் போது தமாஸ்கஸ்ஸில் இரண்டு குழுக்களுக்கிடையே வலிமார்கள் குறித்து வாய்த்தர்க்கம் ஏற்பட்டது. இரண்டு குழுக்களும் முஹம்மத் ஐய்யூப் தாஹிர் குர்தி رحمه الله அவர்களிடம் சென்றார்கள், இரு குழுக்களும் தங்கள் கருத்துக்களில் எது சரி எது பிழை என்று கூறும்படி கேட்டார்கள். ஷைகவர்கள், "நாளை வாருங்கள் கூறுகிறேன்" என்றுக்கூறி அவர்களைத் திருப்பி அனுப்பிவைத்தார்கள்.

அடுத்த நாள் அவர்கள் சென்றப்போது ஷைகவர்கள் மரணித்து விட்டதை அறிந்தார்கள். நேராக அவர்களது மண்ணறைக்கு அவர்கள் சென்று, " ஷைகவர்களே, நீங்கள் எங்கள் பிரச்சினையைத் தீர்ப்பதாகப் பொருந்திக் கொண்டீர்களே" என்றுக் கூறினார்கள்.

இவர்கள் இதை சொன்னவுடனேயே ஷைக் முஹம்மத் ஐய்யூப் தாஹிர் குர்தி رحمه الله அவர்களுடைய திருப்பாதம் அவர்களின் மண்ணறையிலிருந்து வெளியாகியது.

அப்போது யாரோ ஒருவர் இவ்வாறு கூறினார், "நாங்கள் அறிந்தவரை குர்துகளில் அல்லாஹ்வின் வலிமார்கள் இல்லை"

இதை இவர் சொன்னவுடன் அந்த மண்ணறையிலிருந்து ஒரு குரல் ஒலித்தது, "நான் ஒரு குர்தி, அல்லாஹவின் வலியுல்லாஹ். நான் இப்போது என் பாதத்தை என் மண்ணறையிலிருந்து வெளியே எடுத்து வைத்துள்ளேன். இது ஒன்றே நான் ஒரு வலியுல்லாஹ் என்பதற்குத் தக்க சான்றாகும்."

ஆயிரம் ஆயிரம் மக்கள் இந்த அற்புதத்தைக் கண்கூடாகக் கண்டார்கள்.

இப்போது இவர்கள் மரணித்து 800 வருடங்கள் ஆகின்றன. இப்போது வேண்டுமானாலும் தமாஸ்கஸ் சென்று பாருங்கள். அவர்களுடைய பாதம், அவர்களின் மண்ணறையிலிருந்து வெளிப்பட்ட நிலையில் அப்படியே பாதுகாக்கப்பட்டுள்ளது. ஸுப்ஹானல்லாஹ்!

مُحَمَّد صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ
#நல்லடியார்களின்அடிச்சுவடுகள்
தமிழில்:அப்துர் ரஹீம் முஹம்மத் ஜஃபர்

நன்றி: Guidance Hub

The true story and picture of Shaykh Muhammad Ayub Tahir Kurdi رحمه الله who is buried in Damascus, with his foot, out of his grave and preserved.

There was a dispute between two groups in Damascus regarding the Awliya, the groups went to Shaykh Tahir al Kurdi رحمه الله to ask which group is right and which group is wrong, the Shaykh told them to come back tomorrow.

When they went back the next day they found that the Shaykh had passed away. They went to the Shaykh's grave and said, "Ya Shaykh you said you would sort out this issue!"

As soon as they said this Shaykh Tahir al Kurdi's رحمه الله foot came out of his grave.

Someone said, "We don't know if there has ever been a Wali of Allah, from the kurds."

When he said this a voice came from the grave, "I am Kurdi, I am a Wali of Allāh, I have taken my foot out of my grave, this must be enough proof that I am a Wali of Allah."

Thousands of people witnessed this miracle. It has been 800 years since he passed away, if you visit his grave in Damascus today, you can still see his foot is out of his grave and preserved. Sūbhan'Allah!

مُحَمَّد صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ
#FootstepsOfTheRighteous

நண்பர் Abdur Raheem Muhammed Jaufer பதிவில் இருந்து ...

ர.ரா

மண்ணறையை மாற்றி வைக்கச் சொன்ன மூதாட்டி

(மரணத்திற்கும் அப்பால் உள்ள மாயம் 5) 31-03-2020

நபிமார்களுக்கு "நுபுவத் " எப்படியோ அதைப் போன்றே வலிமார்களுக்கு " விலாயத் " என்னும் பட்டத்தை இறைவன்வழங்குகிறான்.

இந்த விலாயத் இறையச்சத்துடன் மிகச் சாதாரணமாக வாழ்ந்த மனிதர்களுக்கும் இறைவன் வழங்கி இருக்கின்றான் என்பதற்கு அத்தாட்சியாக ஒரு சம்பவம்

வங்கதேசம் ரங்க்பூர் மாவட்டம் கஷ்மார்கா என்ற கிராமத்தைச் சேர்ந்த 105 வயது மூதாட்டி ஆயிஷா காத்தூன் அவர்கள் மிகச் சாதாரண எளிய வாழ்க்கை வாழ்ந்தவர்கள் 1997 ஆம் ஆண்டு இறந்து போனார்கள்

6 வருடம் கழித்து அதாவது 2003 ஆம் ஆண்டு மீண்டும் உடல் தோண்டியெடுக்கப்பட்டு மீண்டும் இறுதிச் சடங்குகள் செய்து ஊர்வலமாய் கொண்டு போய் வேறொரு இடத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டது
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

காரணம் ? சொல்றேன் .

அந்த மூதாட்டியின் மூத்த மகனுக்கு 6 வருடங்கள் கழித்து (2003-ல்) ஓர் இரவில் கனவு வந்தது. கனவில் அம்மா . "மகனே நான் அடங்கப் பெற்றிருக்கும் இடத்தில் ஆறு உடைப்பெடுத்து ஓடப் போகிறது அதனால் என்னை உடனே மாற்று என்று உத்தரவு போட்டுவிட்டு மறைந்தார்கள் .

தன் இரண்டு தம்பிகளிடம் கனவு பற்றிச் சொல்ல ஓடோடி போனார் அண்ணன். தம்பி களுக்கு ஒரே ஆச்சரியம் "அண்ணே ...... சொன்னால் நம்ப மாட்டீர்கள் எங்கள் கனவிலும் அம்மா வந்து இதையேச் சொன்னார்கள் நாங்கள் இருவரும் இது பற்றி உங்களிடம் சொல்வதற்காக வந்து கொண்டிருக்கிறோம் " என்றனர்

மூவருமே ஆச்சரியப்பட்டு போனார்கள் அந்த உடனே அம்மா அடங்கப்பட்ட மசூதிக்குச் சென்று அங்கிருந்த தலைவர்களிடமும் மற்றும் ஊர்த் தலைவர்களிடமும் விஷயத்தைக் கூறினார்கள் விஷயம் ஊரெங்கும் பரவியது தலைவர்களும் அவர்களது விருப்பத்திற்கு ஒப்புக் கொண்டனர்

நாள் குறிக்கப்பட்டது

ஆற்றோரமாக இருந்த மூதாட்டியின் மண்ணறையை

மதச் சம்பிரதாய சடங்கு களுடன் 30.08.2003 சனிக்கிழமை தோண்டப்பட்டது மொத்த கூட்டமும் அந்தக் சின்னக் கிராமத்தைச் சுற்றி வளைத்தது

கபரைத் தோண்டிப் பார்த்த போது மிகப்பெரும் ஆச்சரியம் மூதாட்டியின் உடலில் எந்த மாற்றமும் இல்லை 6 ஆண்டுகளுக்கு முன்பு எப்படி புதைக்கப்பட்ட போது இருந்ததோ, அதைப் போலவே இருந்தது

அவரது மகன்கள், மதத்தலைவர்கள் , மக்கள் முன்னிலையில் உடல் வெளியே எடுக்கப்பட்டது. மீண்டும் இறுதிச் சடங்கு நடைபெற்றது இரண்டாவது முறையாக இறுதி ஊர்வலம் (மெதுவாக அட ,மெதுவாக போங்கப்பா ) நடந்தது.
பாதுகாப்பான இடத்தில் உள்ள கல்லறையில் அவரது உடல் இரண்டாவது முறையாக புதைக்கப்பட்டது

ஆதாரம் 04 -09-2003 தினமலர் நகர்வலம் என்ற பதிவில் இச்செய்தி வெளியாகி உள்ளது.

"முஷ்ரிக்குடன் போர் செய்து வெட்டப்பட்டு ஷஹீதானாலும் சரி , தம்முடைய நப்ஸுடன் ஆத்மார்த்தமாகப் போர் செய்து அதை வெட்டி வீழ்த்தினாலும் சரி இரண்டுமே பீஸபீல்தான்"

......என்று முஹ்யித்தீன் இப்னு அரபி (ரஹ்) அவர்கள் எழுதிய மெய்ஞ்ஞான சொரூபர் பாகம் 1 ல் பக்கம் 137-ல் பதிவு செய்யப்பட்டுள்ளது.

## செத்தும் கொடை கொடுத்த சீதக்காதி
(1650 - 1720)

(மரணத்திற்கும் அப்பால் உள்ள மாயம் 4)






சீதக்காதி அவர்களின் இயற்பெயர் "ஷெய்க் அப்துல் காதர் மரைக்காயர் " பிறந்த ஊர் காயல்பட்டினமா.. கீழக்கரையா.. என்ற கருத்து வேறுபாடுகள் உண்டு . இவருடைய ஆன்மீக குரு சதகத்துல்லா அப்பா வலியுல்லா ஆவார்கள் .

இராமநாதபுரத்தை ஆண்ட சேதுபதி மகாராஜா இவரின் நண்பர். சேதுபதிக்கு மதியுரை அமைச்சர் போன்று சீதக்காதி இருந்தார்.

1792 -ல் சேதுபதி மகாராஜா மதுரையின் கீழ் உள்ள தொடர்பை துண்டித்து தனி ஆட்சி செய்ய , பாதுகாப்பிற்காக இராமநாதபுரக் கோட்டையையும், அரண்மனையையும் புதிதாக விரிவாக்க

பொன்னும் , பொருளும் அள்ளி அள்ளிக் கொடுத்து உதவியரும் , ராமேஸ்வரம் உத்திரகோர மங்கை கோவில்களையும் கட்டிக் கொடுத்தவர் சீதக்காதி .

சேதுபதி, சீதக்காதியை உரிமை பாராட்டி அவருக்கு "விஜயரகுநாதப் பெரிய தம்பி" எனத் தன் பெயரைச் சூட்டி மகிழ்ந்தார் .

அக்காலத்தில் டில்லியை ஆண்ட முகலாயப் பேரரசர் அவுரங்கசீப் அவர்கள் சீதக்காதியின் மீது பெரு மதிப்புக் கொண்டவர் . எனவே வங்க தேசத்தின் கலீபாக சீதக்காதியை நியமித்தார். சீதக்காதியும் அப்பதவியை ஏற்றுக் கொண்டார் . சிறிது காலத்திற்கு பின் தாய்நாடு திரும்பினார் .

காயல் நகருக்கு சீதக்காதி அவர்கள் சென்ற போது , வறியவர் ஒருவர் தமது மகளின் திருமணத்திற்காக வள்ளல் பெருமானாரிடம் உதவி கேட்டார். உடன் தர விழைந்த வள்ளலிடம் தற்போது வேண்டாம் என மறுத்த வறியவர் , தன் மகளின் திருமணம் முடிவு செய்த பின் தந்தால் போதும் எனச் சொல்ல...

சில காலம் கழித்து வள்ளல் சீதக்காதி நோய் வயப்பட்டு இயற்கை எய்தினார். ஊர் மக்கள் அவரை பள்ளிவாடியில் அடக்கம் செய்து திரும்புகையில் , தன் மகளின் திருமணத்திற்காக உதவி கேட்ட அந்த வறியவர் சீதக்காதியை நாடி கீழக்கரை வந்து சேர்த்தார் .

சேதி அறிந்த அந்த வறியவரின் மனம் மிக வருந்தியது. குறைந்தபட்சம் வள்ளல் அடக்கம் செய்த இடம் சென்று அவருக்கு இறுதி அஞ்சலி செலுத்துவோம் எனப் பள்ளிவாடி விரைந்தார் .

அடக்கம் செய்த இடம் கண்டு கண்ணீரோடு துஆ செய்யும்போது , அடக்கம் செய்த மண்ணிலிருந்து வள்ளல் பெருமானாரின் வலதுகரம் வெளிவந்தது . அதில் முத்து பதிக்கப்பட்ட மோதிரம் ஒன்று இருக்கக் கண்ட பெரியோர்கள் , தாம் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற , செத்தும் கொடை கொடுத்த சீதக்காதி புகழ் வாழ்க எனக் கூறி , அந்த மோதிரத்தை எடுத்து வறியவருக்குக் கொடுத்தனர் எனச் சீதக்காதி வள்ளல் பெருமானார் வரலாறு கூறுகிறது .

மரணத்திற்கும் அப்பால் இதுவும் மாயம்தான் .

" மரணத்திலும் அங்கே மரணம் இருப்பதில்லை " - மார்பா

(மரணத்திற்கும் அப்பால் உள்ள மாயம் 3) 30-032020







ஞானி திலோபா (988 - 1069) சிட்டாங் அல்லது வங்காளத்தில் ஜாகோராவில் பிறந்தவர் . இவர் அரச பரம்பரியம் கொண்டவர் . மஹா சித்தர். அனந்தரா யோக தந்திரத்தை பெற்றவர் . நேபாளத்தில் பசுபதிநாத கோவில் வளாகத்தில் இரண்டு குகைகள் உள்ளன. அங்கு ஞானி திலோபா சித்தி அடைந்தார் .

அவருக்கு பல குருமார்கள் , குரு சரபாவிடமிருந்து உள் வெப்பத்தை பற்றியும் , குரு நாகார்ஜுனிடமிருந்து கதிரியக்க ஒளி மற்றும் மாயையான உடல் போதனைகள் , குரு லாவாபாவிடம் இருந்து கனவு யோகாவானத்தையும் , குரு இந்திரபூபதியிடமிருந்து பிரஜா என்னும் ஞானத்தையும் , குரு மாதாங்கியிடமிருந்து இறந்த உடலின் உயிர்த்தெழுதல் (மஹாமுத்திரா) ஆகியவற்றையும் கற்று மஹா குருவானார் .

திலோபா அவர்களுக்கு நரேபா சீடரானார் .நரேபாவிற்கு மார்பா சீடரானார் . மார்பாவிற்கு மிலரேபா சீடரானார் .மிலரேபாவிற்கு சீடர் இல்லாததனால் மஹாமுத்திரா ஞானமும் மற்ற ஞானங்களும் அவருடன் நின்று விட்டது . திபெத்தியர்கள் இவர்களை 'தந்திரா ' ஞானிகள் என்றழைக்கின்றனர் .

தந்திரா ஞானிகள் தங்கள் சீடர்களை மரணத்திற்கு அப்பால் அழைத்துச் சென்று மரண அனுபவத்தை முன் கூட்டியே அனுபவிக்கச் செய்திருக்கிறார்கள். அந்த ஞானிகள் மரணத்தை ஒரு கலையாக கையாண்டனர்.

நாம இப்போ பார்க்கப் போவது குரு மார்பா இவரும் தன்னுணர்வுடன் இறப்பை அனுபவித்து அப்பால் செல்லும் தியானத்தை " பார்தோ"
( Bardo - Meditation ) தியானம் என்றழைக்கிறார் .இந்த தியானமானது தன்னுணர்வுடன் மரண நிலையை அனுபவித்து, பின் அதனையும் கடந்து அப்பாலுள்ள நிலையையும் அனுபவரீதியாக உணர்தலாகும் .

மார்பாவிடம் ஒரு சாதகர் வந்து தனக்கு 'அது' பற்றி விளக்குங்கள் .

அதற்கு மார்பா, 'அதை வார்த்தை இல்லாமல் நீங்கள் கேளுங்கள் .நான் வார்த்தை இல்லாமல் பதில் சொல்கிறேன் " .

" வார்த்தை இல்லாமல் எப்படி கேள்வி கேட்பது ? "

" அது உங்கள் பிரச்சனை .நல்ல யோசித்து வார்த்தை இல்லாத கேள்வியைக் கண்டறிந்து வாருங்கள் " என்றார் மார்பா

அந்த சாதகர் சிந்திக்கத் தொடங்கி ஆண்டுகள் பலவாயின. தன் கேள்வியை தனக்கு கேள்வியாக்கி விட்டாரே ..என்று சிந்தனையை சிதறவிடாமல் , எதைப் பற்றி கேட்ட கேள்வியை (பார்தோவை) ஒருமுகப்படுத்தினார் . ஆழ்ந்து போய்க் கொண்டேயிருந்தார் . சிந்தனை குறைந்து , எண்ணங்கள் வீழ்ச்சியுற்றன. அந்த சாதகர் வெறுமையானார் .

ஒரு நாள் மார்பா திடீரென்று சாதகர் வீட்டு வாசலில் வந்து நின்றார்.
சாதகர் வீட்டுக்கு வெளியில் வந்தார் .மார்பா சிரிக்கத் தொடங்கினார்.
சாதகரும் சிரிக்கத் தொடங்கினார். சொற்கள் இல்லாத 'அது ' பற்றிய விளக்கமும் கிடைத்துவிட்டது .

எண்ணங்கள் வீழ்ச்சியுற்ற அந்த வெறுமைக்குள் இருவரும் பிரவேசித்தனர் .சாதகர் மார்பா பின்னால் சீடனாகச் சிரித்தபடி சென்றார். எதிர் கொண்டவர்கள் கேட்டார்கள் . 'இவர் ஏன் சிரிக்கிறார் ? '
மார்பா கூறினார் : 'சொற்கள் இல்லாமல் கேள்வி கேட்டார் . சொற்கள் இல்லாமல் பதிலளித்தேன். சொற்கள் இல்லாமல் ஏற்றுக் கொண்டார் '.

தன்னுணர்வுடன் இறப்பை அனுபவித்து அப்பால் செல்லும் தியானத்தை "பார்தோ" - ஆமாம் மரணத்திற்கு சொற்கள் ஏது ?

ஞானி மார்பா மரணத்தை தன் கட்டுப்பாட்டில் வைத்திருந்தார் .தன் உடல் இறக்கப் போவதாக தன் சீடர்களுக்குக் கூறினார். சீடர்கள் கூடி விட்டனர் .அவரது உடல் இறந்து கொண்டிருக்கையில் ஓ... என்று கதறி சீடர்கள் அழுதனர். அதைக் கண்டதும் தன் மரணத்தை மார்பா உடனே நிறுத்தினார் .

மார்பா எழுந்து உரக்கக் கூறினார் 'அழுகையை உடனே நிறுத்துங்கள் !' கொண்டாட்டத்துக்குரிய இந்தத் தருணத்தில் ஏன் அழுது புலம்புகிறீர்கள் ?

மார்பா கட கட வென சிரிக்கத் தொடங்கினார் .மகிழ்ச்சிக்குரிய நேரம் 'மரணத்திலும் அங்கே மரணம் இருப்பதில்லை' எனக் கூறி கை தட்டி , குதூகலித்து , மகிழ்ந்து தன் மரணத்தைத் தானே வரவேற்று முழு சாந்தி அடைந்தார் .

தன்னுணர்வுடனே (Self- Conscious) மரணத்தை வரவேற்று தழுவி உபசரித்தவர் ஞானி மார்பா .அவர் இறக்கவில்லை , தங்களுக்குள்ளே வாழ்வதாகவே திபெத்திய மக்கள் இன்னும் நம்புகிறார்கள். மார்பாவை நம்பிக்கையின் அடையாளமாகவே பார்க்கிறார்கள் .

'மார்பா 'என்ற பெயர் காலப்போக்கில் 'பாபா ' என்று திரிபடைந்து விட்டது .

தன்னுணர்வுடன் இறப்பை அனுபவித்து அப்பால் செல்லும் தியானத்தை " பார்தோ" ( Bardo - Meditation ) தியானத்தை சற்குரு செய்யதினா கண்ணூர் புகாரி தங்கள் வாப்பா செய்ததாக எங்க மௌலூது கிதாபின் ஒரு பைத்தில் ..

" மரணம் கொச்சி நகர்தனிலே
தங்கள் மக்கள் இருவர் வழக்குரைக்க
'மவுத்தில்லை ' என்று எழுந்துவிட்டீர்
தங்கள் மக்கள் மனங்கள் குளிரச் செய்தீர் "

சற்குரு புகாரி தங்கள் வாப்பா அவர்கள் தங்கள் முரீதுகளிடம் 'தான் கண்ணூரில் இறந்து அடக்கப் பெறுவேன் ' என்பதாக முன்னறிப்பு செய்திருந்தார்கள் . ஆனால் கொச்சிக்கு வந்த இடத்தில் மரணம் வரவே , தங்கள் வாப்பா முரீதுகள் ஒரு சாரார் கண்ணூருக்கு வாப்பா உடலை கொண்டு செல்ல வேண்டும் என்றும், மற்றொரு சாரார் கொச்சியிலே அடக்கப்பட வேண்டும் என்றும் அதுதான் சுன்னத் என்றும் கூற மனச் சங்கடத்தில் கருத்துகள் வேறுபட ஆரம்பித்தது .

அதிக காலதாமதத்திற்குப் பிறகும் இரு சாரரும் சமாதானம் ஆகவே இல்லை . அத்தருணத்தில் புகாரி தங்கள் வாப்பா அவர்கள் திடீரென உயிர்த்தெழுந்து , "இன்று எனக்கு மரணமில்லை "என்று கூறி , பல காலத்திற்குப் பிறகு கண்ணூரிலே மரணித்து அங்கேயே அடங்கப் பெற்றார்கள் .

புகாரி தங்கள் வாப்பா வழித் தோன்றல் செய்யதினா ஷாஆலம் தங்கள் வாப்பா அவர்கள் சுமார் 7 தடவை மரணித்து மீண்டும் உயிர்த்தெழுந்திருப்பதாகவும் இறுதியாக மேலப்பாளைய முஹம்மது இலப்பை தெருவில் அடங்கப் பெற்றுள்ளார்கள் .

இறந்த உடலின் உயிர்த்தெழுதல் (மஹாமுத்திரா) தியானத்தையும் , தன்னுணர்வுடன் இறப்பை அனுபவித்து அப்பால் செல்லும் " பார்தோ" ( Bardo - Meditation ) தியானத்தையும் இஸ்லாமிய ஞானிகளும் செய்திருக்கிறார்கள் .

ர.ரா

மரணத்திற்கும் அப்பால் உள்ள மாயம் 2

(மரணத்திற்கு அப்பாலும் உதவி செய்யும் ஆத்மாக்கள் ) 29-03-2020










ஆலிஸ் பெய்லி ( Alice Bailey ) என்ற பெண்மணி இங்கிலாந்து மான்செஸ்டரில் பிறந்தவர் தியோசோபிகல் பாடங்களில் 24 க்கும் மேற்பட்ட ஆய்வுப் புத்தகங்களை எழுதியவர்.

சூரிய குடும்பத்துடன் ஆன்மீகம் எவ்வாறு தொடர்புடையது என்பதை பல மத வேதங்களிலிருந்தும் , ஞானிகளின் கூற்றிலிருந்தும் ஆய்வு செய்தவர்
தியானம் , சிகிச்சைமுறை , ஆன்மீக உளவியல் , நாடுகளின் விதி , சமுதாயத்திற்கான பரிந்துரைகள் போன்றவற்றை உள்ளடக்கிய ஒரு பரந்த அளவிலான ஆழ்ந்த சிந்தனை முறைகளை அவர் கூறுகிறார்.

" எனது பெரும்பாலான பணிகளை ஒரு "மாஸ்டர் ஆப் விஸ்டம் " மிக உயர்ந்த நிலையிலுள்ள ஆன்மீக வளர்ச்சி பெற்றிருந்த ஆத்மாக்கள் இவ்வுலக மேல்நிலையிலுள்ள ஆட்களை ஊடகங்களாக கொண்டு பல விஷயங்களை சொல்கின்றன என்றும் , தனக்கு திபெத்திய மலைகளிலிருந்து இறந்த ஆத்மா "டி.கே " தனக்குச் செய்திகளை கூறுகிறது " என்றார். டி.கே என்பது டிஜ்வால் குல் என்ற மறைந்த மாபெரும் திபெத்திய ஞானி என்று பின்னர் அடையாளம் காணப்பட்டது.

தத்துவமேதை ஜே. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் " ஆசானின் காலடியில் " என்ற நூலை எழுதியபோது , அவருக்கு நிறைய திபெத்திய ஆத்மாக்கனின் தொடர்பு இருந்திருக்கிறது . அதனால்தான் அந்த நூலின் ஆசிரியர் 'தான் இல்லை ' என்று அவர் மறுத்தார் என ஒஸோ குறிப்பிடுகிறார்.

மஹாவீரர் அடிக்கடி மனவழி மூலம் ஆகாயத்தைப் பார்த்தபடி அவர் ஞானம் பெற்ற ஆத்மாக்களோடு உரையாடியதாக சமண நூல்கள் குறிப்பிடுகின்றன.

புத்தர் ஞானம் பெற்றதும் மௌன நிலையிலேயே இருந்தார் . ஞானம் பெற்ற ஆத்மாக்கள் புத்தர் அடைந்த ஞானத்தை உலகிற்குத் தெரிவிப்பதற்காகவும் , உலகம் பயன் பெறும் பொருட்டும் அவரது மௌனத்தைக் கலைத்தன. இன்றேல் அவர் மௌனமாகவே அந்திம காலம் வரை இருந்திருப்பார் .

"Life on the Other Side " என்ற நூலின் ஆசிரியரும் , அமெரிக்காவில் உள்ள அமானுஷ்ய சக்தி பெற்றவர்களில் மிகவும் பிரபலமான Psychic சில்வியா பிரொவுன் ( sylvia Browne ) என்ற பெண்மணி அவர்கள் , தன் நூலில் "நல்ல உள்ளத்துடன் வாழ்ந்தவர்கள் - இறந்த பின் நல்ல ஆத்மாக்களாக உதவி செய்யும் நல்லெண்ணத்துடன் கூடியவர்களாக இருப்பார்கள் " என குறிப்பிடுகின்றார் .

சுவாமி விவேகானந்தரும் ஆத்மாக்கள் , ஆவிகள் பற்றி இதுமாதிரி குறிப்பிட்டுள்ளார்.

சுவாமி இராமகிருஷ்ணரது சீடர்களில் ஒருவர் , " தான் விரின்டாபனில் (Virindaban ) சாதனா செய்து கொண்டிருக்கும்போது , தன்னுடன் ஓர் ஆத்மாவும் சேர்ந்து சாதனா செய்யும். தான் காலையில் தூக்கத்திலிருந்து விழிக்கத் தாமதமானால் தன்னை தட்டி எழுப்பிவிடும் எனவும் ,இவ்வாறாகத் தனக்கு அந்த ஆத்மாவின் ஆவி பல உதவிகள் செய்ததாக குறிப்பிட்டுள்ளார்.

கீழக்கரை கல்வத் ஆண்டகை அவர்களின் இயற்பெயர் செய்யது அப்துல் காதர் .இவர்கள் தனித்திருந்து இறைவனை வணங்கி முக்தி பெற தவம் இருந்தார்கள் .இந்த தவத்திறகு கல்வத் என்று பெயர் . இதனால் கல்வத் ஆண்டகை என்ற பெயர் உண்டாகியது .

கல்வத் ஆண்டகை அவர்கள் பல நாட்கள் தனித்திருந்து இறையை வணங்கி வந்தார்கள். அவர்கள் முக்தி பெறும் ஒரு நாள் இரவில் அவர்களின் வலது புறம் 500 புலிகளும் , இடதுபுறம் 500 கொடிய பாம்புகளும் நின்று பயமுறுத்துவதைப் போன்றும் , பூமியிலிருந்து ஆகாயம் வரை நெருப்பு ஜுவாலைகள் பற்றி எரிவதாகவும் கண்டு அச்சமுற்றார்கள்.

அந்நேரத்தில் எங்களூர் மேலப்பாளையத்தில் அடங்கப் பெற்றிருக்கும் மஹான் பஷீர் அப்பா வலியுல்லாஹ் அவர்கள் (சிறு வயதிலேயே கண் பார்வையை இழந்தவர்கள். அவர்களின் செய்கு முதுகினில் திருகுர்ஆன் எழுத மனப்பாடம் செய்தவர்கள் .பல ஞானப் பாடல்களை எழுதி 'ஷாஇர் ' என்ற பட்டத்தைப் பெற்றவர்கள் )

மஹான் பஷீர் அப்பா வலியுல்லாஹ் கல்வத் ஆண்டகை முன் தோன்றி , "எனது மகனே....! நீர் ஒன்றும் பயப்பட வேண்டாம். நான் அனுபவித்த துயரங்களுக்கு இது எம்மாத்திரம் ? பயப்படாமல் தொடர்ந்து இருந்து வாரும். இத்தொல்லைகள் எல்லாம் விரைவில் தொலைந்து விடும் என்று கூறி மறைந்தார்கள் .

மரணத்திற்கு அப்பாலும் உதவி செய்யும் ஆத்மாக்கள் இன்னும் இருந்து கொண்டுதான் இருக்கின்றன .

ர.ரா

## மரணத்திற்கும் அப்பால் உள்ள மாயம் 1

( “வெறுங்கையோடு வந்தேன், வெறுங்கையோடு போகிறேன் " ) 29-04-2020



அலக்ஸாண்டர் இந்தியா மீது படையெடுக்கச் செல்வதற்கு முன் தியோஜினிஸ் என்னும் கிரேக்க ஞானியைச் சந்திக்க விரும்பினார். தியோஜினிஸ் கிரேக்க நாட்டின் நதிக்கரை ஒன்றில் ஒரு பரதேசியைப் போல் அமர்ந்திருந்தார்.

காலை பொழுது... இளம் சூரியன், குளிர்ந்த மணல். இளம் காற்று வீசுகிறது. மிகவும் உற்சாகத்துடன் தியோஜினிஸ் இருந்தார். இந்தியாவை நோக்கிய பயணத்தில், தான் சந்திக்கச் சென்றவருடைய தோற்றத்தைப் பார்த்த அலக்ஸாண்டர் திகைத்தார். அலக்ஸாண்டர் ஆடை அலங்காரங்களை பூட்டிக்கொண்டும் எல்லா ஆபரணங்களையும் அணிந்தவராக இருந்தார். பதட்டத்துடன் இருந்தார். ஆனால், தியோஜினிஸ் முன்னால் யாசகம் பெற வந்தவர் போல் நின்றார் அலக்ஸாண்டர்.

'உங்களோடு ஒப்பிடும்போது நான் ஏழையாக உள்ளேன். உங்களிடமோ ஒன்றுமேயில்லை. எது உங்களைச் செல்வந்தனாக்கி வைத்திருக்கிறது?' என்றார், அலக்ஸாண்டர். 'எனக்கு எந்த ஆசையும் இல்லை, என்னிடம் எதுவுமில்லை. எதுவும் என்னுடையது என்று இல்லாமல் இருப்பதே என் பலம். நான் என்னை வென்றுவிட்டதால் உலகை வென்றுவிட்டேன். என்னுடைய வெற்றி என்னோடு வரப்போகிறது. உன்னுடைய வெற்றி நீ இறக்கும்போது உன்னிடமிருந்து எடுத்துக் கொள்ளப்படப் போகிறது' என்றார்.

அலக்ஸாண்டர் சற்று திகைப்படைந்தார். அவர் இப்படி ஒரு பதிலை எதிர்பார்க்கவில்லை.

தியோஜினிஸ்: நீ எங்கே, எதற்காகப் போகிறாய்?

அலக்ஸாண்டர்: இந்தியாவை வெல்லப் போகிறேன்.

தியோஜினிஸ்: இந்தியாவை வென்றபின் என்ன செய்வாய்?

அலக்ஸாண்டர்: உலகத்தை வெல்வேன்.

தியோஜினிஸ்: உலகம் முழுவதையும் வென்றபின் என்ன செய்வாய்?

அலக்ஸாண்டர்: அதற்குப்பின் நிம்மதியாக ஓய்வெடுப்பேன்.

தியோஜினிஸ் சிரித்தார், தன் நாயைக் கூப்பிட்டார். நாயைப் பார்த்துக் கூறினார். 'இவர் சொல்வதைக் கேட்டாயா? உலகத்தை வென்றபின் இந்த மனிதர் ஓய்வெடுக்கப் போகிறாராம்! இங்கே நீ ஒரு சிறு இடத்தைக்கூட வெல்லாமல் நிம்மதியாக ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறாய்!' என்று நாயிடம் கூறிவிட்டு, அலக்ஸாண்டரிடம் தொடர்ந்தார். 'ஓய்வுதான் உன்னுடைய கடைசி லட்சியம் என்றால், இந்த அழகான ஆற்றங்கரையில் என்னுடனும், என் நாயுடனும் இங்கே இப்போதே நீ சேர்ந்துகொள்ளலாமே! இங்கே நம் எல்லோருக்கும் தேவையான இடம் இருக்கிறது. நான் இங்கே ஓய்வெடுத்துக் கொண்டுதான் இருக்கிறேன். இறுதியில் ஓய்வெடுப்பதற்காக ஏன் உலகம் முழுவதும் துன்பம் துயரங்களை உருவாக்க வேண்டும்? இப்போதே இங்கேயே நீ எங்களுடன் சேர்ந்து ஓய்வெடுக்கலாமே!' என்றார்.

அலக்ஸாண்டர் (சற்று வெட்கப்பட்டார்.) 'நீங்கள் சொல்வது அறிவுப்பூர்வமாகத்தான் இருக்கிறது. ஆனால், நான் இப்போது ஓய்வெடுக்க முடியாது. உலகத்தை முதலில் வென்றுவிட்டு வருகிறேன்' என்று கூறிக் கிளம்பினார்.

தியோஜினிஸ்: உலகத்தை வெல்வதற்கும், ஓய்வெடுப்பதற்கும் சம்பந்தம் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. உலகத்தை வெல்லாமல் இங்கேயே நான் நிம்மதியாக ஓய்வெடுக்கவில்லையா?

அலக்ஸாண்டர்: நீங்கள் சொல்வது நியாயம்தான், ஆனால், நான் இந்தியாவைக் கைப்பற்றுவதற்காகப் புறப்பட்டுவிட்டேன். இடையில் நிறுத்த விருப்பமில்லை.

தியோஜினிஸ்: நீ பாதி வழியைத் தாண்டமாட்டாய்.

(இந்தியாவை முழுமையாகக் கைப்பற்ற முடியாமல் தோல்வியடைந்த, அலக்ஸாண்டர் கீரிசை அடையவேயில்லை. பாதி வழியிலேயே இறந்து போனார். இவ்வாறே சேர்க்கும் செல்வங்களை அனுபவிக்காமலேயே எல்லா அலெக்ஸாண்டர்களும் இறந்தே போகிறார்கள்).

இந்தியாவுக்குச் செல்லும்போது அலக்ஸாண்டரின் ஆசிரியர் அரிஸ்டாட்டில் அவரிடம் சொல்லியிருந்தார் 'நீ திரும்பும்போது உன்னுடன் ஒரு இந்தியத் துறவியை அழைத்துவா! நான் பார்க்கவேண்டும். இறப்புக்குப் பின் என்ன? ஆன்மா என்றால் என்ன? தியானம் என்றால் என்ன? சந்நியாசம் என்றால் என்ன? என்று தெரிந்து கொள்ள வேண்டும்' என்றார்.

இந்தியாவிலிருந்து திரும்பும்போது அலக்ஸாண்டர் இந்தியாவிலிருந்தவர்களிடம் விசாரித்து, அவர்கள் கூறிய ஞானியை சென்று சந்தித்தார். அவரது பெயர் தந்தமெஷ் தந்தமெஷின் அருகாமையில் சென்றதும், தியோஜினிஸ்தான் அலக்ஸாண்டருடைய நினைவுக்கு வந்தார். அதே அழகு, அதே பார்வை, அதே தோற்றம்

அலக்ஸாண்டர்: நான் உங்களை கிரேக்கத்துக்கு அழைத்துப் போக வந்திருக்கிறேன். என்னோடு வந்துவிடுங்கள். அரச விருந்தினராக இருக்கலாம். எல்லா சௌகரியங்களும் செய்து தருகிறேன். என்னோடு ஏதென்ஸுக்கு வாருங்கள்' என்றார்.

தந்தமெஷ் : வருவது போவது எல்லாமும் கழித்துவிட்டவன் நான். வந்தது யாருமில்லை... சென்றது யாருமில்லை. வந்தவர் யாரோ அவர் யாருமில்லை, சென்றவர் யாரோ அவர் யாருமாகவும் இல்லாதவர்

அலெக்ஸாண்டருக்குப் புரியவில்லை. (துறவி சொன்ன கருத்து: இனி உலகுக்கு வருவதும் இல்லை, உலகத்திலிருந்து போவதுமில்லை. வருவதையும் போவதையும் கடந்துவிட்டவன் நான். கருவறைக்குள் வருவதையும், மரணத்துக்குள் போய்விடுவதையும் கடந்துவிட்டேன் என்பதுதான்).

அலக்ஸாண்டர்: இது என் ஆணை வாருங்கள்.

தந்தமெஷ்: கடகடவென்று சிரித்தார். யாரும் எனக்கு ஆணையிட முடியாது. மரணம்கூட எனக்கு ஆணையிட முடியாது.

துறவியின் பேச்சு தியோஜினிஸை இவருக்கு ஞாபகமூட்டியது.

அலக்ஸாண்டர்: (வாளைப் பார்த்தவாறே) என்னோடு வந்து விடுங்கள்.

தந்தமெஷ்: நீ என்ன செய்வேன் என்று சொல்கிறாயோ அதை நான் என்றோ செய்து விட்டேன். தலை உருண்டு விழும்போதுஉன்னோடு சேர்ந்து நானும் வேடிக்கை பார்ப்பேன்.

அலக்ஸாண்டர்: எப்படிப் பார்க்க முடியும்? நீங்கள் இறந்து விடுவீர்களே!

தந்தமெஷ்: நான் இனிமேல் இறக்க முடியாது. என்னுடைய மரணத்தை நீ வேடிக்கை பார்ப்பது போல் நானும் வேடிக்கை பார்ப்பேன், நீயும் பார்ப்பாய். இந்த உடலின் பயனும் நிறைவேறிவிடும். நான் ஏற்கெனவே போய்ச் சேர்ந்துவிட்டவன். அந்த உடல் இனியும் இருக்க வேண்டியதில்லை. தலையை வெட்டிச் சாய்த்துவிடு.

அவரது கண்கள் அகன்று விரிந்ததன.

அலக்ஸாண்டர் தன் வாளை உறையில் போட்டார். அவரை உற்றுநோக்கினார். உள்மாற்றம் உணர்ந்தார். மரியாதையுடன் பின் நகர்ந்தார். அலக்ஸாண்டர் இறக்கும்போது தியோஜினிஸ், தந்தமெஷ் இருவரையும் நினைவுகூர்ந்தார். மரணத்தை தாண்டிய ஒன்று அவர்களிடம் இருந்தது. மரணத்துக்கு அப்பால் இருப்பதை, அவர்களிடம் கண்டேன். அவர்களிடம் இருந்தது என்னிடம் இருக்கவில்லை, என்னிடமோ ஒன்றுமில்லை" என்று அழுதார்.

தனது சேவர்களை அழைத்தார். 'தான் இறந்த பின்பு தன்னுடைய உடலை கல்லறைக்குத் தூக்கிக் கொண்டு போகும்போது தன் கைகளை வெளியே தொங்குமாறு போடுங்கள்' என்று ஆணையிட்டார். மந்திரிகள், சேவகர்கள் எதற்காக? என்று பவ்வியமாகக் கேட்டனர்.

அலக்ஸாண்டர்: "வெறுங்கையோடு வந்தேன், வெறுங்கை யோடு போகிறேன் என்பதை மக்கள் தெரிந்துகொள்ள வேண்டும். என் வாழ்க்கை முழுக்க வீணாகிப் போய்விட்டது. எல்லோரும் பார்க்கும்படியாக என் கைகள் வெளியே தொங்கட்டும். மாவீரன் அலக்ஸாண்டர் எதையும் எடுத்துச் செல்லவில்லை. வெறுங்கையோடுதான் போகிறான்" என்பதை உலகம் அறியட்டும் என்றார்.

மரியானா அகழி ( Mariana Trench )

(மர்மம் 20 )   29-02-2020




வடக்குப் பசிபிக் பெருங் கடலில் மரியானா தீவுகளுக்குத் தெற்கிலும், குவாமுக்கு கிழக்கிலும் அதன் அருகில் அமைந்துள்ளது இந்த மரியானா அகழி .

உலகின் கடற்பகுதிகளில் உள்ள மிகவும் ஆழமான இடமாகும் இந்த மரியானா அகழி . இது 2550 கி.மீ நீளமும், 69 கி.மீ அகலமும் புவிமேலோட்டில் உள்ள மிகத் தாழ்வான பகுதியும் இதுவே .

1957 ஆம் ஆண்டில் வித்தியாசு (Vityaz) எனப்படும் சோவியத் கடற்கலம் இதன் ஆழம் 11,034 மீட்டர்கள் (11 கி.மீ ) (36,200 அடிகள்) என அளவிட்டது. உலகில் உயரமான இமயமலை எவரெஸ்ட் இப்பள்ளத்தில் வைப்பதாக இருந்தால் , மலைக்கு மேலே 3 கி.மீ உயரத்திற்கு கடல் தண்ணீர் இருக்கும்.

180 மில்லியன் வருடங்கள் முன் பசிபிக் புவித் தட்டும், சிறிய மரியானா புவித் தட்டும் சந்தித்து மோதும் போது ஏற்பட்ட விளைவு இந்த மாபெரும் அகழி உருவானது. இது 36 200 அடி பள்ளமானது .

இந்த அகழியின் அடிப் பகுதியில், அதற்கு மேலுள்ள நீரினால் ஏற்படும் அழுத்தம் (அமுக்கம்) 108.6 மெகாபாசுக்கல் ஆகும்.

அதாவது இது கடல் மட்டத்தில் உள்ள பொது வளிமண்டல அமுக்கத்திலும் 1100 மடங்குக்கும் மேலானது. உதாரணமாக ஒரு மனிதன் மீது 3 டன் மணலை 100 வது மாடியிலிருந்து கொட்டும் அழுத்தத்திற்கு சமமானது . இந்த ஆழத்தில் வாழக்கூடிய உயிரினங்கள் மிகக் குறைவே. சில வகை ஆழ்கடல் மீன்கள் இப்பகுதியில் இருப்பது தெரிய வந்துள்ளது.

சுவிட்சர்லாந்தில் வடிவமைக்கப்பட்டு இத்தாலியில் நிர்மாணிக்கப்பட்ட ஐக்கிய அமெரிக்கக் கடற்படைக்குச் சொந்தமான டிரைஸ்டி என்ற கப்பலில் 1960, ஜனவரி 23 ஆம் நாள் பிற்பகல் 1:06 மணிக்கு அமெரிக்கக் கடற்படை வீரர டொன் வால்ஷ் என்பவரும், சுவிட்சர்லாந்தைச் சேர்ந்த பெருங்கடல் குறிப்பு வல்லுநர் சாக் பிக்கார்ட் என்பவரும் மரியானா அகழியின் அடிப்பகுதிக்குச் சென்றனர்.

இவர்களுக்குப் பின்னர் 2012 ஆம் ஆண்டில் தனியொரு ஆளாக கனேடிய திரைப்பட இயக்குனர் ஜேம்ஸ் கேமரன் அகழியின் அடிப்பகுதிக்குச் சென்று திரும்பினார். இவர் 2012 மார்ச்சு 26 ஆம் நாள்ஆத்திரேலியாவில் தயாரிக்கப்பட்ட டீப்சீ சாலஞ்சர் என்ற நீர்மூழ்கியில் உள்ளூர் நேரம் 07:52 மணிக்கு அகழியின் ஆழத்தை அடைந்தார் . 6 மணி நேரம் இருக்கலாம் என்று கணக்கிட்டு வெறும் 20 நிமிடம் மட்டுமே இருந்தார் .

நீர் முழ்கி கப்பலின் கண்ணாடி துளை வழியாக ஒளியைப் பாய்ச்சி பார்த்த போது மனிதர்களால் கற்பனை செய்ய முடியாத ராட்சச உயிரினம் ஒன்று ஒரு சில விநாடிக்குள் வந்து போனது .அது என்ன உயிரினம் என்று தெரியவில்லை

அது வந்த போது விசித்திரமான சப்தத்தை எழுப்பியதையும் பதிவு செய்தார் .

அந்த உயிரினம் நீர் முழ்கி கப்பலின் வெளிக் கூண்டை தன் பற்களால் தாக்கிய போது அதன் பல்லு உடைந்து சிக்குண்டது , அந்த பல்லை வைத்து அந்த உயிரினம் 15 லட்ச வருடத்திற்கு முன் வாழ்ந்த அசாத்திய பலமும் திறமையும் வாய்ந்த மெக்லோடன் என்னும் ஐம்பது ஆயிரம் கிலோ எடையுள்ள ராட்சச சுறாவின்

வழித்தோன்றலாக இருக்கலாம் என்றும் காரணம் 3 டன் எடையுள்ள எந்த உயிரினமும் 36 200 அடி (11 கி.மீ ) ஆழத்தில் வாழ முடியாது என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர் .

இந்த பெரிய உயிரினம் தவிர வேற்று கிரக உயிரினம் மாதிரி மஞ்சள் மற்றும் சிகப்பு நிறத்தில் ஒளிரும் ஜெல்லி மீன் போன்ற உயிரினமும் உள்ளது .

பல நவீன கருவிகளுடன் ஹைக்கோ என்ற ஆளில்லாத நீர் மூழ்கியும் , நீர்மூழ்கி ரோபோ இந்த அகழியைச் சுற்றிச் சுற்றி வருகின்றன. மரியானா அகழியைப் பற்றி மர்மங்கள் தொடர்ந்து வந்து கொண்டே இருக்கிறது .

ர.ரா

(இத்துடன் மர்மங்களின் தொடர் நிறைவு பெறுகிறது )

Rahmath Rajakumaran சுவிட்சர்லாந்து நாட்டைச் சேர்ந்த ஜீன் பெலிக்ஸ் பிக்கார்டு, பலூன்களின் உதவியோடு விண்ணில் உயரமான இடங்களுக்குப் பறப்பதில் பல சாதனைகளை நிகழ்த்திக் கொண்டு இருந்தார். ஒட்டுமொத்தமாக அவர் 23 முறை பலூனில் பறந்தார், ஒவ்வொருமுறையும் முன்பைவிட அதிக உயரம் என, 75,459 (23000 மீட்டர்கள்) அடிகள் உயரம் வரையிலும் பறந்து காட்டினார்.

1931 ஆம் ஆண்டுக்குப் பிறகு அவரது கவனம், ஆழ்கடலை நோக்கித் திரும்பியது. பலூனில் பறப்பதற்காகத் தாம் வடிவமைத்த ஒரு கருவியில் சிறிய மாற்றங்களைச் செய்தால், அதன் உதவியோடு ஆழ்கடலுக்கு உள்ளே புகுந்து ஆய்வுகளை மேற்கொள்ள முடியும் என்பதை உணர்ந்தார். அதற்காக, பேத்திஸ்கேப் (Bathyscaphs) என்ற ஒரு நீர்மூழ்கியை வடிவமைத்தார்.

ஐரோப்பிய, ஆப்பிரிக்கக் கண்டங்களை இரண்டாகப் பிரிக்கின்ற நடுத்தரைக் கடலுக்குள் (Mediterraneon Sea) ஆழமான பல இடங்களில் இறங்கி ஆய்வுகளை மேற்கொண்டார். இரண்டாம் உலகப் போரின்போது, அவருடைய ஆய்வுகள் தடைப்பட்டன. அதற்குப் பின்னர் ஆய்வுகளைத் தொடர்ந்த அவர், தமது கண்டுபிடிப்பை மேம்படுத்தினார்.

நீர்க்குமிழியின் தத்துவத்தைப் பயன்படுத்தி, கடல் நீரின் அழுத்தத்தைத் தாங்கக்கூடிய ஒரு கருவியை வடிவமைத்தார். அந்தக் கருவி, 46 MPa; 6,700 psi அளவுக்கு அழுத்தத்தைத் தாங்கக்கூடியதாக இருந்தது. கேப்ஸ்யூல் வடிவிலான ஒரு இரும்பு உருளைக்கு மேலே, வெளிப்புறத்தில், நீர்மத்துள் அழுத்தும்போது எடை குறைவாகக் காணும் இயல்புடைய திரவத்தை அடைத்து வைத்து ஒரு டேங்கை இணைத்தார். இதனால், உள்ளே இருக்கின்ற மனிதரின் உடலில், கடல் நீரின் அழுத்தம் இறங்காது. அத்துடன், மிதப்பதற்கு வசதியாக கேசோலின் டேங்க் ஒன்றையும் இணைத்தார்.

இந்தக் கோளகை, கடலுக்கு உள்ளே அமிழ்ந்து, ஆழத்துக்குச் செல்ல வேண்டும் அல்லவா? அதற்காக, டன் கணக்கில் இரும்புப் பட்டைகளை இணைத்தார். மேலும், அவை ஆழத்துக்கு உள்ளே சென்று அங்கேயே அமிழ்ந்து விடாமல், மீண்டும் மேலே எழும்பி வருகின்ற வகையில், மின்மோட்டார்களைப் பொருத்தினார். இதற்கு FNRS 2 என்று பெயரிட்டார்.

1948 ஆம் ஆண்டு இந்தக் கோளகையை, ஆள் இல்லாமல் கடலுக்கு அடியில் அனுப்பி, திரும்பி வரச் செய்தார். பலமுறை இத்தகைய ஆய்வுகளை மேற்கொண்டார். 1950 ஆம் ஆண்டு, ஃபிரெஞ்சுக் கடற்படை இந்தக் கருவியை விலைக்கு வாங்கிக் கொண்டது. அவர்களுடைய பொறியாளர்கள் இந்தக் கருவியை மேம்படுத்தினர். 1954 ஆம் ஆண்டு, முதன்முறையாக ஒரு மனிதனை ஏற்றிக்கொண்டு, 4,176 மீட்டர்கள் (13,701) அடிகள் ஆழம் வரையிலும் சென்று திரும்பியது

அதிசயங்கள் நிறைந்த சாக்கடலின் மர்மம் ( மர்மம் 19 ) 28-02-2020






அதை ஏன் சாக்கடல் (Dead Sea) என்று அழைக்கப்படுகிறது?

இங்கு 8.6 மடங்கு உப்புச்செறிவு அதிகமானதால் உயிரினங்களின் குடி நீராகவோ வாழ்விடமாகவோ இது இருப்பதில்லை. அதனால் சாக்கடல் எனப்படுகிறது.பல ஆறுகளில் இருந்து வரும் நீர் இங்கு தேங்கி நிற்கின்றது. ஆனால், இங்கிருந்து வேறு எங்கும் நீர் விரையமாவதில்லை. ஆறுகளின் நீர் இறுதியாக வந்தடையும் இடம் என்பதால் டெட் சீ/ சாக்கடல் எனப்படுகிறது.

சாக்கடல் என்ற பெயரைக் கேட்கும்போது எந்த ஒரு உயிரினமும் இல்லாத கடல் என்றுதானே நாம் நினைப்போம்? அது தவறு. உப்பை உணவாகக் கொள்கின்ற பலவித நுண் உயிரிகள் சாக்கடலில் நல்லபடியாக வாழ்கின்றன.

ஹாலோ பாக்டீரியம், ஹாலோபியம்,ட்யூனாலைலா எனும் நுண் உயிரிகளை உதாரணமாகச் சொல்லலாம். இவை சூரிய ஒளியைப் பயன்படுத்தி உணவை உருவாக்கிக்கொள்ளும் திறன் பெற்றவை. இவை, தாவரங்களில் உள்ள குளோரோபிலுக்குச் சமமான ஒரு இயற்கைப் பொருளை தாமாகவே உற்பத்தி செய்து, அதன் உதவியுடன் உணவை உற்பத்தி செய்துகொள்கின்றன. அது மட்டுமன்றி சாக்கடலுக்கு அடியில் நீரூற்றுகள் உள்ளன.

நீரில் மிதக்க வேண்டுமானால் நீச்சல் தெரிந்திருக்க வேண்டும். அல்லது உபகரணங்களைப் பயன்படுத்த வேண்டும். அதுவும் இல்லையென்றால் ஏதாவது அதிசயங்களை நிகழ்த்த வேண்டும். இவை எதுவும் இல்லாமல் நீரில் மிதப்பதைப் பற்றி இப்போது தெரிந்து கொள்வோம். பார்ப்பதற்கு கடல் போல காட்சி அளிக்கும், ஆனால் உண்மையில் கடல் இல்லை… தண்ணீர் தான் ஆனால் குதிப்பவர்கள் நீருக்குள் மூழ்கமாட்டார்கள்.. இதுதான் Dead Sea என்று அழைக்கப்படும் சாக்கடலின் சிறப்பம்சம்.

உலகிலேயே பள்ளமான பகுதி இதுவாகும். கடல் மட்டத்தில் 378 மீட்டர் (1340 அடி) ஆழமானது. இஸ்ரேல் மற்றும் ஜோர்டன் எல்லையில் மத்திய தரைக்கடலோடு சேர்ந்திருக்கும் நீர்ப்பரப்புதான் சாக்கடல். உண்மையில் இது ஒரு கடல் கிடையாது, உப்பு நீர் நிறைந்த பெரிய ஏரி. சுமார் 67 கிலோமீட்டர் நீளமும், 18 கிலோமீட்டர் அகலமும் கொண்ட இந்த சாக்கடலில் உப்பின் அளவு மிகுதியாக காணப்படுகிறது.

சாதாரண கடல் நீரை விட 8.6 மடங்கு அதிகமாக இருப்பதால் இந்தக் கடலில் நாம் நீச்சல் அடிகாமலேயே மிதக்க முடியும். பெரும்பாலான சுற்றுலா பயணிகள் சாக்கடலில் மிதந்து கொண்டே புத்தகங்களும், செய்தித்தாள்களும் படிக்கும் காட்சியை அடிக்கடி காணலாம்.

இந்த சாக்கடலில் பொட்டாசியம், மக்னீசியம், புரோமைடுகள் உள்ளிட்ட பொருட்கள் பெருமளவில் கிடைக்கின்றன.இவை ரசாயன மற்றும் ரசாயன உரத் தொழிற்சாலைகளுக்கு பயன்படுத்தப்படுகின்றன. எகிப்தில் ஆயிரம் ஆண்டுகளாக மம்மிக்கள் கெட்டுப் போகாமல் இருக்க காரணம் சாக்கடலில் இருந்து எடுக்கப்பட்ட ஒரு வகைப் பொருள்கள்தான். சாக்கடல் நீரை இரண்டு முழுங்கு குடிக்க நேர்ந்தால் குரல் வளைப் பகுதி வீக்கம் கண்டுவிடும். அதனால் மூச்சு விட முடியாமல் போகலாம். சாக்கடல் நீர் கண்களில் பட்டால் பார்வை பறி போகின்ற ஆபத்து உண்டு.

சாக்கடல் நீரிலும் சேற்றிலும் கலந்துள்ள மருத்துவகுணங்கள் தோல் நோய்களுக்குச் சிகிச்சையளிக்கப் பயன்படுத்தப்படுகிறது. இச்சேறு சொரியாசிஸ் உட்பட சில தோல் கோளாறுகளைக் குணப்படுத்துவதாகக் கருதப்படுகிறது. இதற்காகவே ஏராளமான பேர் இங்கு வந்து சாக்கடல் சேற்றை உடலில் பூசிக் கொள்கின்றனர். இதனாலேயே சாக்கடலுக்கு the lowest health spa மற்றும் நேச்சுரல் ஸ்பா (natural spa) என்ற பெயரும் உண்டு. உலகிலேயே மிக தாழ்வான பகுதி என்ற மற்றொரு சிறப்பும் சாக்கடலுக்கு உண்டு.

லூத் நபியவர்கள் (Prophet Luth) வாழ்ந்ததும் இந்த சாக்கடல் பிராந்தியத்தில்தான் என அல்-குர்ஆன் கூறும் வரலாற்றிலிருந்து நாம் அறிய முடிகின்றது.

இங்கு பாலைகளிலும், பட்டணங்களிலும் வாழ்ந்த மக்களை துஷ்டர்களாக – பாவிகளாக – துன்மார்க்க குணமுள்ளவர்களாக – உலகம் அன்று அறிந்து கொண்டது. கொலை, கொள்ளை, ஓரினச் சேர்க்கை முதலான இறைவன் வெறுத்த, மிகவும் பயங்கரப் பாவச் செயல்களில் இப்பிரதேச மக்கள் ஈடுபட்டு வந்தனர். அவர்கள்

புரிந்த பாவ கருமங்களுக்காக இறைவன் இம்மக்களுக்குப் பெரும் தண்டனை வழங்கினான். தண்டனை வழங்கிய விதத்தையும் அல்-குர்ஆன் விவரித்துக் கூறுகின்றது.

فَلَمَّا جَاءَ أَمْرُنَا جَعَلْنَا عَالِيَهَا سَافِلَهَا وَأَمْطَرْنَا عَلَيْهَا حِجَارَةً مِنْ سِجِّيلٍ مَنْضُودٍ

நம்முடைய கட்டளை(யின் நேரம்) வந்ததும் அவர்களுடைய ஊரை மேல் கீழாக கவிழ்த்து விட்டோம். அன்றி, (அதற்கு முன்னர்) அவர்கள் மீது சுடப்பட்ட செங்கற்களை (மழையைப் போல்) பொழியச் செய்தோம். (குர்ஆன் : 11:82)

தாம் பிறந்த சமூகத்திற்கு அன்றி வேறு ஒரு சமூகத்திற்கு நபியாக வைக்கப்பட்டவர்கள் லூத் அலை ஸதூம் என்ற நகரமும் அதைச் சுற்றி நான்கு நகரங்கள் கொண்ட பூமிக்கு நபியாக அனுப்பப்பட்டார்கள்

அங்குள்ள ஆண்கள் ஆண் புணர்ச்சியாளர்களாக இருந்தனர் மொத்தம் நான்கு லட்ச குடும்பத்தில் ஒவ்வொரு குடும்பத்திலும் பதின்மர் இந்த கேடு கெட்ட செய்கைகளில் ஈடுபட்டனர் என்று முஜாஹிது ரஹ் அவர்கள் கூறுகின்றார்கள் இப்போது அது ஜோர்டான் என்றழைக்கப்படுகிறது

கடற்கரை ஓரங்களில் மிக அழகாக இருந்த அந்த நகரங்களை இறைவன் மலக்குமார்களை கொண்டு தலைகூழாக புரட்டினான் அதில் எந்த ஜீவராசிகளும் வாழமுடியாத சாக்கடலாக மாற்றினான் .

ஏன் இத்தனை இவ்வளவு உப்பு ?

லூத் நபியின் மனைவி அம்மக்களுக்கு சாதமாக இருந்து தன் வீட்டிற்கு அழகான இளைஞர்கள் வந்திருப்பதை வெளியே போய் சொல்வதற்கு விருந்து சமைக்க உப்பு இல்லாததால் உப்பு வாங்கி வருவதாக பொய் சொல்லி வெளியே வந்து உப்பு சாக்கில் துப்புக் கொடுத்தாள் அதனால் சாக்கடலில் அத்தனை உப்பு

அந்த நகரங்களை ஏன் புரட்டி போட்டு அழித்தான் ?

ஆண் புணர்ச்சியாளர்கள் புணரும் போது புரட்டி போட்டு எப்படி நடந்து கொள்வார்களோ அப்படி அந்நகரங்களும் புரட்டப்பட்டது

விநோதமான கடல் பரப்பு ஆதியில் இக்கடல் பரப்பு 1400 அடி உயரத்தில் இருந்ததாம் அப்போது நிறையவே ஜீவராசிகள் இருந்தனவாம்

சாக்கடல் குதித்தால் நீங்கள் முழ்கமாட்டீர்கள் மற்ற கடல்களில் உப்பு 4 லிருந்து 6 % சாக்கடலில் உப்பு 23 லிருந்து 25 %

ஜோர்டன் நதி இன்னும் இக்கடலில் பாய்கிறது இருந்தாலும் உப்பு அளவுதான் குறைந்தபாடில்லை

அல்லாஹ்வின் அம்புட்டு கோபம் பின்னே இருக்காதா என்னே இயற்கைக்கு மாற்றமாக உடலுறவின் போது செலுத்த வேண்டிய இடத்தில் செலுத்தாமல் வேறு எங்கேயோ கொண்டு விந்து விதைத்தால்... அங்கு உயிர் உருவாகுவதில்லை . அதனால் சாக்கடலிலும் எந்த உயிரும் உருவாவதில்லை .

லூத் நபி அவர்களிடம் இரண்டு விருந்தாளிகளை அல்லாஹ் அனுப்பி வைத்தான். இவர்கள் மனித உருவில் வந்து இரண்டு மலக்குகள் (தேவதூதர்கள்).இவர்கள் இருவரும் மிகவும் வசீகரத் தோற்றமுடையவர்களாக இருந்தனர். இவர்களுடைய வரவைப் பற்றிக் கேள்வியுற்ற அவ்வூர் மக்கள் லூத் நபியுடைய வசிப்பிடம் விரைந்து சென்று தம் தீய எண்ணங்களைப் பூர்த்தி செய்து கொள்வதற்காக அவ்விருவரையும் தம்மிடம் விட்டுவிடுமாறு வேண்டினர். முடிவாக அவர்களுக்கு அழிவு வந்தது

இந்தப் பரிதாபமான நிலையை உலகோருக்குப் பறைசாற்றும் வண்ணம், சாக்கடல் பிரதேசத்தை இப்பூமியில் மிகவும் தாழ்ந்த பிரதேசமாகக் குறிப்பிடுகின்றது. நிலம் தாழ்ந்திருந்தது போல, அங்கு வாழ்ந்த மக்களின் வாழ்க்கையும், நடைமுறைகளும், அவர் தம் ஒழுக்கமும் பண்பாடுகளும் தாழ்ந்திருந்த பாங்கினை வரலாற்றினூடே நாம் நன்கு புரிந்து கொள்ள முடியும்.

இத்தனை பெருமை கொண்ட சாக்கடலின் முக்கிய நீர் ஆதாரமான ஜார்டன் நதி நீரின் அளவு தற்போது குறைந்து கொண்டே வருவதால் இந்தக் கடலின் பரப்பு குறைந்து கொண்டு வருகிறது என்பதுதான் கவலையளிக்கும் செய்தி.

ஜோர்டானிலும், யார்மோக் ஆறுகளின் மூலமாகவும் மனித பயன்பாட்டிற்காக அதிக அளவில் நீர் எடுத்தது ஒரு காரணமாக கூறப்படுகிறது. மேலும் இஸ்ரேலும் ஜோர்டானும் தங்களுடைய பொட்டாஷ் தொழிற்சாலைகளுக்கு தேவையான நீரை சாக்கடலில் இருந்து எடுத்துள்ளன.

கடந்த முப்பது வருடங்களில் சாக்கடலின் நீர்மட்டம் ஆண்டிற்கு 0.7 மீட்டர் குறைந்து வருகிறது. நீரின் கன அளவு ஆண்டிற்கு 0.47 கன கிமீ குறைந்து வருகிறது. நீர்ப்பரப்பின் அளவும் ஆண்டிற்கு 4 சதுர கிமீ அளவில் குறைந்து வருகிறது என்று இந்தக்குழுவின் ஆய்வுகள் தெரிவிக்கின்றன.

பெர்முடா முக்கோணம். 27-02-2020
(மர்மம் 17 )

அமெரிக்காவின் புளோரிடா, பெர்முடா,ப்ர்ட்டோ ரிக்கோ ஆகிய 3 பகுதிகளை கற்பனை கோட்டால் இணைத்தால் ஒரு பெரிய முக்கோணம் 25 லட்ச சதுர கி.மீ கொண்டதாக அட்லாண்டிக் பெருங்கடலின் அமையும் . இப்பகுதியைத்தான் பெர்முடா முக்கோண பகுதியாகச் சொல்கிறார்கள். இந்த பகுதியில் பல ஆண்டுகளாக விமானங்கள் மற்றும் கப்பல்கள் சிறு துரும்புக் கூட கிடைக்காமல் மாயமாக காணாமல் போகிறது !

....இதுவரை பெர்முடா முக்கோணம் 100 ஆண்டுகளில் 1000 உயிர்களுக்கும் மேல் பலி கொண்டுள்ளது, அது மட்டுமல்ல அங்கே ஆண்டொன்றுக்குச் சராசரியாக 4 விமானங்கள் முதல் 25 க்கும் மேற்பட்ட கப்பல் வரை காணாமல் போகின்றன. ஆனால் அவை ஏன் காணாமல் போகின்றன? எங்கே போகிறது ? எங்கே அவற்றை மீட்டெடுப்பது என்பது குறித்து இதுவரையிலும் கண்டறியப்படாமலே இருந்து வந்தது.

அமெரிக்காவின் பார்போடாஸ் தீவுகளிலிருந்து கடந்த 1918ம் ஆண்டு மார்ச் மாதம் 4ம் தேதி காந்த தாதுகளை ஏற்றிக்கொண்டு சுமார் 309 கப்பல் பணியாட்களுடன் ஒரு கப்பல் சென்றது. இந்த கப்பலும் தொடர்பு துண்டிக்கப்பட்டுக் காணாமல் போனது. உண்மையான காரணம் இன்று வரை கிடைக்கவில்லை.

பிளைட் 19 என்பது ஒரு பயிற்சி விமானமாகும் இந்த விமானம் கடந்த 1945ம் ஆண்டு டிசம்பர் 5ம் தேதி இந்த விமானம் சுமார் 230 கி.மீ பயணித்து மீண்டும் கிளம்பிய இடத்திற்கே வரவேண்டும் என்பது திட்டம் ஆனால் இந்த விமானம் கிளம்பிய இடத்திற்குத் திரும்பவில்லை. இந்த விமானம் குறித்து விசாரணை நடத்திய அதிகாரிகள் இந்த விமானம் போதுமான எரிபொருள் இல்லாமல் விபத்தில் சிக்கியிருக்கலாம் என்ற முடிவிற்கு வந்தனர். ஆனால் அதற்கான எந்த வித ஆதாரமும் இல்லை. இந்த விமானமும் காணாமல் போனது மர்மாகவே உள்ளது. இந்த விமானத்தில் 13 பேர் பயணித்தது குறிப்பிடத்தக்கது.

1921ம் ஆண்டு ஜனவரி 31ம் தேதி டைமண்ட் சோஹல் என்ற நடுக்கடலில் உள்ள லைட் ஹவுஸ் அருகே டீரின் என்ற பாய்மரக் கப்பல் காணாமல் போது. இந்த கப்பலில் சென்றவர்கள் என்ன ஆனார்கள் என்ற தகவல் இன்றுவரை கிடைக்கவில்லை.

1948ம் ஆண்டு ஜனவரி 30ம் தேதி ஸ்டார் டைகர் என்ற விமானம் அரோஸசில் இருந்து பெர்முடா செல்லும்போதும்,

1949ம் ஆண்டு ஜனவரி 17ம் தேதி ஸ்டார் ஏரியல் என்ற விமானம் பெர்முடாவிலிருந்து ஜமைக்கா செல்லும் போதும் காணாமல் போனது.

கடல்தான் பிரச்சனை என்றால் அக்கடலின் வான் பரப்பிலும் பிரச்சனையா ?.

ஜெர்மன் விஞ்ஞானி ..கடல் ஆய்வு ஒன்றில் பெர்முடா முக்கோணத்தின் கடல் பகுதியின் அடியில், அசாதரணமான ஒரு தொழில்நுட்பம் கடலுக்கடியில் இருக்க வேண்டும் . ஆனால் பூமியில் உருவாகாத அந்த ஒரு தொழில்நுட்பமாக அது இருக்க வேண்டும் என்கிறார் .

தற்போது டாக்டர் மேயர் , ஜெர்மானிய கடல் ஆய்வாளர் - பெர்முடா முக்கோணத்தின் மையப் பகுதியில் இரண்டு மாபெரும் பிரமிட்கள் உள்ளன என்ற தனது சதியாலோசனை கோட்பாட்டை முன் வைத்துள்ளார்.

அங்கு இருக்கும் இரண்டு பிரமிட்களும் தடிமனான கண்ணாடிகளால் உருவாக்கம் பெற்றுள்ளன என்றும் அவைகள் மிகவும் வசீகரமான ஒன்றாக உள்ளன என்றும், பரந்த கடல் அடியில் காணப்படும் இந்த தொழில்நுட்பமானது நவீன அறிவியலின் மாபெரும் மர்மம் என்றும், டாக்டர் மேயர் கூறுகிறார்.

அந்த பிரமிட்கள் 2,000 மீட்டர் ஆழத்தில் அமைந்துள்ள முரண்பாடான கட்டமைப்பு என்றும் அவைகள் சோனார் கருவிகளின் உதவியுடன் கண்டுப் பிடிக்கப் பட்டுள்ளன என்றும் டாக்டர் மேயர் தெரிவித்துள்ளார்.

தொடர்ச்சியான முறையில் அங்கு கப்பல்களும் விமானங்களும் காணமல் போனதிற்கு பெர்முடா முக்கோணத்தின் மையப்பகுதியில் அமைந்திருக்கும் இந்த பிரமிட்கள்தான் காரணம் என்று ஆணித்தனமாக டாக்டர் மேயர் நம்புகிறார். பெர்முடா முக்கோணத்திற்குள் இருக்கும் பிரமிட்களின் எண்ணிக்கை அதிகம் என்ற கருத்தும் நிலவுகிறது.

சுமார் 2 கிலோமீட்டர்கள் கடல் ஆழத்தில் அமைந்துள்ள பிரமிட்கள், கிரிஸ்டல்கள் (Sort of Crystals) மூலம் உருவக்கப்பட்டுள்ளதால் தான் அங்கு கப்பல் மற்றும் விமானங்கள் மாயமாகும் சம்பவங்கள் நிகழ்கின்றனவாம்.

ظَهَرَ الْفَسَادُ فِى الْبَرِّ وَالْبَحْرِ بِمَا كَسَبَتْ اَيْدِى النَّاسِ لِيُذِيْقَهُمْ بَعْضَ الَّذِىْ عَمِلُوْا لَعَلَّهُمْ يَرْجِعُوْنَ
மனிதர்களின் கைகள் தேடிக் கொண்டதன் காரணமாகக் கடலிலும் தரையிலும் அழிவு வேலைகள் (அதிகமாகப்) பரவி விட்டன. அதிலிருந்து அவர்கள் விலகிக் கொள்வதற்காக, அவர்களின் தீய செயல்களில் சிலவற்றின் தண்டனையை அவர்கள் (இம்மையிலும்) சுவைக்கும்படி அவன் செய்ய வேண்டியதாகிறது. (அல்குர்ஆன் : 30:41)

ர.ரா






✎Author

Rahmath Rajakumaran பெர்முடா பற்றிய அத்தனை செயல்களுக்கும் வேற்றுகிரக வாசிகளான ஏலியன்களுக்கு நிறைய தொடர்பு இருப்பதாகவும் , அவர்கள்தான் எகிப்து பிரமிடு முதல் கடலடி பிரமிடுகள் வரையுள்ள தொழில் நுட்பத்தையும் மம்மி டெக்னாஜியையும் அக்கால மனிதர்களுக்கு சொல்லிக் கொடுத்ததாகவும் ,1840 -ல் Rosalie என்ற ஃபிரெஞ்ச் நாட்டு சரக்கு கப்பலையும் பிப் 26 , 1855 ஜேம்ஸ் பி . செஸ்டர் என்ற கப்பலையும் பெர்மிடா .முக்கோணப் பகுதியில் வைத்து , கப்பலையோ , சரக்குகளை கைப்பற்றாமல் , அதில் பயணம் செய்த கப்பல் ஊழியர்கள் அத்தனை பேரையும் விண்வெளிக்கு கடத்தி சென்றதாக ஒரு தகவலை நிரூபித்திருக்கிறார் ஹரால்டு வில்கின்ஸ் (Harold wilkins ) எழுதிய Time and Space என்னும் நூலில் குறிப்பிடுகிறார்

பெர்மிடா பற்றி தனியாகவே 20 பதிவுகள் போடுமளவுக்கு நிறைய நிரூபணங்கள் மர்மங்களாக இருக்கிறது

கதையும் அதன் நிகழ்வும் .
(மர்மம் 16 )

1898 ஆம் ஆண்டு ஆங்கில எழுத்தாளர் Morgan Robertson என்பவர் "futility "
என்ற தலைப்பில் ஒரு நாவலை எழுதினார் அதில் கதையில் 70000 டன் எடையுள்ள மிகப்பெரிய கப்பல் ஒன்று அட்லாண்டிக் கடலின் வடக்கே ஐஸ் பாறையில் மோதி முழ்கிறது அந்த கப்பலில் 2500 பயணிகள் உயிரிழக்கிறார்கள் இந்த கதை 1898 இறுதியில் எழுதினார்

1912 ஏப்ரல் 14 தேதி 66000 டன் எடையுள்ள டைட்டானிக் என்கிற கப்பல் அதே அட்லாண்டிக் கடலில் ஐஸ் கட்டி மீது மோதி 1513 பயணிகள் உயிரிழக்கிறார்கள்

வடக்கு அடலாண்டிக்கில் உலகின் மிக பெரிய கப்பல் ஐஸ் பாறையில் இடித்து மூழ்கியது. கதையில் அந்த கப்பலை மூழ்காத கப்பல் என்று வர்ணித்து இருந்தார் .நிஜத்திலும் அந்த கப்பல் அப்படித்தான் வர்ணிக்கப்பட்டது.

கதையில் அது நடந்தது ஏப்ரல் மாதம் நிஜத்திலும் அது ஏப்ரல் மாதம் தான் மூழ்கியது. கதையில் நியூ பவுண்ட்லேண்ட் எனும் இடத்தில இருந்து 400 மைல் தள்ளி விபத்து நடந்ததாக எழுதி இருந்தார். நிஜத்திலும் விபத்து அங்கு தான் நடந்தது. எல்லாவற்றிற்கும் மேலாக கதையில் அந்த கப்பலின் பெயர் "டைட்டானிக்"நிஜத்தில் அந்த கப்பலின் பெயர் "டைட்டானிக் ".

மார்கன் ராபர்ட்ஸன் என்னும் எழுத்தாளர் வியப்பான இந்த நாவல் கற்பனையில் உதித்த கரு என்று சொல்வதை விட உள்ளுணர்வு சொல்லிய கதை

நூற்றுக்கணக்கான ஒற்றுமைகள் இருந்தன . இது எப்படி சாத்தியமாயிற்று ?
ஆதாரத்துடன் இருக்கும் இந்த நிகழ்ச்சியைப் பற்றி மனோ தத்துவ விஞ்ஞானிகளால் விளக்கமளிக்க முடியவில்லை.

ர.ரா

பலதரப்பட்ட மம்மிகள் .

(மர்மம் 13 ) 25-02-2020



எகிப்தில் கி.மு. 305ம் ஆண்டுக்கும் கி.மு. 330-ம் ஆண்டுக்கும் இடைப்பட்ட காலத்தை சேர்ந்த சுமார் 50 பதப்படுத்தப்பட்ட உடல்களை தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்துள்ளனர்.

எகிப்து தலைநகர் கெய்ரோவுக்கு தெற்கே உள்ள மின்யா நகரில் 30 அடி ஆழத்தில் கண்டெடுக்கப்பட்ட இந்த மம்மிகளில், 12 உடல்கள் குழந்தைகளின் உடல்கள் என்பது கண்டறியப்பட்டுள்ளது. கல் மற்றும் மரங்களால் ஆன சவப்பெட்டிகளில் துணிகளால் இந்த உடல்கள் மூடப்பட்டுள்ளன. இந்த உடல்கள் குறித்து, தொடர்ந்து ஆய்வு நடத்தப்பட்டு வருகிறது.

எகிப்தில் மட்டும் நூறு கோடி விலங்குகளின் மம்மிகள் இதுவரை கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அவற்றில் அதிக அளவில் கண்டுபிடிக்கப்பட்ட மிருகம் பூனை ஆகும். அதற்கு அடுத்தபடியாக அதிக அளவில் கண்டுபிடிக்கப்பட்டவை புனித இபிஸ் எனப்படும் கொக்கைப் போன்ற ஆப்ரிக்க கண்டத்தின் பறவை ஆகும். இதன் காலம் கதிரியக்கக்கரிமக் காலக்கணிப்புப்படி ஏறத்தாழ கி.மு 450 முதல் கி.மு 250 ஆகும்.

இதன் காலம் கதிரியக்கக்கரிமக் காலக்கணிப்புப்படி ஏறத்தாழ கி.மு 450 முதல் கி.மு 250 ஆகும். இதுவரை கண்டுபிடிக்கப்பட்ட மம்மிகளிலேயே மிகவும் பழையது 1940 இல் வட அமெரிக்காவில் கண்டுபிடுக்கப்பட்ட மம்மிக்கலாகும். அவை 9400 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த மனிதர்கள் என கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

'மம்மி' என்ற சொல் ஆங்கிலத்தின் மம்மி என்ற சொல்லிருந்தும், அச்சொல் இலத்தீன் மொழியின் மம்மியா என்ற பதத்திலிருந்தும், இலத்தீன் மொழிச் சொல், பாரசீக மற்றும் அராபிய மொழிகளில் உள்ள மும்மியா (مومیه) என்ற பதத்திலிருந்தும் தோன்றியதாக அறியப்படுகிறது. பாரசீக மொழியில் இப்பதம் நிலக்கீல் எனப் பொருள்படும். மம்மிகளின் நிறம் கருநிற நிலக்கீலின் நிறத்தை ஒத்திருப்பதாலும், எகிப்திய சடலப்பதனிடல் இப்பொருள் உபபோகப்படுத்தப்பட்டதாக கூறப்படுவதாலும் இப்பெயர் சூட்டப்பட்டதாக அறிய முடிகிறது.

மம்மிக்களில் இருவகைகள் உள்ளன. ஒன்று மனித இனத்தால் உருவாக்கப்பட்டவை மற்றோன்று தானக உருவானவை. மனித இனத்தால் வழிபாடு போன்ற ஏதாவது ஒரு காரணத்துக்காக உருவாக்கப்படும், அல்லது இயற்கையாக தட்பவெட்பங்களின் மூலம் உடலானது பதப்படுத்தப்பட்டு மம்மியாகிவிடும். உதாரணமாக ஏட்சி பனிமனிதன் இவ்வாறு உருவான ஒரு மம்மியாகும். எகிப்திய கலாச்சாரங்களில் இவ்விரு வகை மம்மிக்களும் காணப்படுகின்றன.

பண்டைய எகிப்து நாகரிகத்தில் அரசர்கள் இறந்தவுடன் மறுஉலகிற்கு செல்வதாகவும், அவ்வுலகில் வாழ அவர்களுக்கு இப்பூவுலக உடல் தேவைபடுவதால், இறந்த அரசர்களின் சடலங்களை பாதுகாப்பது அவசியம் என்ற நம்பிக்கை இருந்தமையால், அரசர்களின் சடலங்கள் பதனிடப் பட்டன. மனிதர்களின் சடலங்கள் மட்டுமல்லாது முதலை, பூனை ஆகியவற்றின் சடலங்களும் சடலப்பதனிடல் பட்டன. பண்டைய கிரேக்க வரலாற்றாசிரியர்களின் குறிப்பிலிருந்து பாரசீகத்தில் சில அரசர்களின் சடலங்களும் மெழுகை பயன்படுத்தி பதனிடலாக்கப் பட்டதாக அறிய முடிகிறது.

எகிப்திய மம்மிகளே பொதுவாக அறியப்பட்டாலும், சடலப்பதனிடல் தொன்மையானவர்களாக கருதப்படுவோர், தென் அமெரிக்காவில் உள்ள சிலி மற்றும் பெரு நாட்டில் வாழ்ந்த சின்சொரோ மக்களே. சின்சொரோ மம்மிகள், எகிப்திய மம்மிகளை விட பல ஆயிரம் ஆண்டு தொன்மையானவை. இதுவரை கண்டுபிடிக்கப்பட்ட எகிப்திய மம்மிகளில் மிகவும் பழைய மம்மியின் வருடம் கி.மு 3000 ஆகும். ஆனால் இதுவரை கண்டுபிடிக்கப்பட்ட சின்சொரோ மம்மிகளில் மிகவும் பழைய மம்மியின் வருடம் கி.மு 5050 ஆகும்.

சின்சொரோ மம்மிகள் ஏறத்தாழ 2000 வருடங்கள் பழமையானது. மற்றொரு பழமையான மம்மி நடு சகாராவில் உள்ள உன் முகக்கியாக் என்ற இடத்தில் கண்டெடுக்கப்பட்ட சிறுவனின் மம்மியாகும்.

இம்மம்மியின் அகவை சுமார் 5500 வருடங்களாகும். இயற்கையாக பதப்படுத்தப்பட்ட சின்சிரோ மம்மிகளில் மிகவும் பழையது அட்டகாமா பாலைவனத்தில் கண்டெடுக்கப்பட்ட கி.மு 7020ஐச் சேர்ந்த மம்மியாகும்.

எகிப்தில் வரலாற்றுக்கு முந்தைய காலகட்டத்தைச் சேர்ந்த 50 மம்மிக்களை விஞ்ஞானிகள் கண்டறிந்துள்ளனர்.

கெய்ரோவின் தெற்குப் பகுதியில் நடத்தப்பட்ட அகழ்வாய்வின் போது இந்த மம்மிக்கள் கண்டுபிடிக்கப்பட்டன. இவற்றில் 12 மம்மிக்கள் குழந்தைகள் என்பது தெரியவந்துள்ளது.

லினென் துணியால் சுற்றப்பட்டும், மரப்பெட்டிகளில் வைக்கப்பட்டும் உள்ள மம்மிக்கள் கி.மு. 30 முதல் கி.மு. 320ம் ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தைச் சேர்ந்தவையாக இருக்கலாம் என்று ஆய்வாளர்கள் தெரிவித்துள்ளனர்.

இந்த ஆண்டின் மிகப் பெரிய வரலாற்று ஆவணமாக இந்த மம்மிக்கள் இருக்கும் என்றும், தொடர்ந்து ஆய்வு நடந்து வருவதாகவும் தொல்லியல் ஆய்வாளர்கள் கூறி உள்ளனர்.

ஒரே இடத்தில் புதைந்து கிடக்கும் மம்மிகளின் குவியல்களை ஆய்வு செய்த போது, ஆய்வாளர்களும் மிரண்டு உள்ளனர்.

மம்மிகளில் ஏராளமான வகைகள் இருப்பதால், ஒரு சிலவற்றை எவ்வாறு அவற்றின் ஆண்டுகளை கணக்கிடுவது என்று யோசித்தனர்.

ர.ரா

ஸ்டோன் ஹென்ஜ்

( மர்மம் 12 )





உலகின் மர்மங்களில் ஸ்டோன் ஹென்ஜ் மிக பழமையான முக்கியமான ஒன்றாகவே கருதப்படுகிறது. தோராயமாக இதன் வயதை 5000 ஆண்டுகளுக்கு முற்பட்டதாக கணித்திருக்கிறார்கள். இன்றைய பிரிட்டனின் மிகப்பழமையான புராதனச்சின்னங்களில் இதுதான் முதலிடம் என்பது கூடுதல் சிறப்பு.

ஸ்டோன் ஹென்ஜ் பார்க்க எண்ணி பயணித்தீர்களேயானால், ஒரு சில மலைகளைத் தாண்டிச் செல்லும் பயணத்தில் திடீரென இந்த அமானுஷ்ய இடத்துக்குள் நுழைவீர்கள். இந்த இடத்தின் மயான அமைதியும், வீசும் வித்தியாசமான காற்றும் உங்களுக்குள் ஒரு மர்மத் தாக்கத்தையும் ஒரு வித அமானுஷ்யத்தையும் நிச்சயம் உண்டாக்கும்.

இது உருவாக்கப்பட்ட விதமாக ஆராய்ச்சியாளர்களால் கணிக்கப்பட்ட தகவல்கள் இதுதான்...

1) முதலில் கி.மு.3100ம் ஆண்டில் மதச்சடங்குகளுக்காக தொடர் பள்ளங்கள் தோண்டப்பட்டிருக்கின்றன.

2) அதன் பின்னர் ஆயிரம் ஆண்டுகள் கழித்துதான் இந்த கல் அமைப்பு உருவாக்கப்பட்டிருக்கிறது. வேல்ஸ் மலையிலிருந்து பெரிய பெரிய கருங்கற்கள் கிட்டத்தட்ட 240மைல் தொலைவுக்கு எடுத்து வரப்பட்டிருக்கிறது. சக்கரம் கண்டுபிடிக்கப்படாத காலகட்டத்தில் எதற்காக, யாரால், எப்படி இந்தக் கற்கள் இவ்வளவு தூரம் எடுத்து வரப்பட்டிருக்கும் என்பது மர்மமே. இவ்வாறு எடுத்து வரப்பட்ட கற்கள் முற்றுபெறாத ஒரு இரட்டை வட்ட வடிவில் மிட் சம்மர் சூரிய உதயத்திற்கு அலைன்மெண்ட் செய்யப்பட்டு நிறுத்தப்பட்டிருக்கிறது.

3) இதன் முன்னர் மூன்றாவது நிலையாக கி.மு.2000 - வது ஆண்டில் மேலும் சில கற்கள் 25 மைல்களுக்கு அப்பால் உள்ள இடத்திலிருந்து எடுத்துவரப்பட்டிருக்கிறது.

4) இதன் பின்னர் மேலும் 500 ஆண்டுகளுக்குப் பிறகு யாரோ ஒரு சிலரால் இன்றைய குதிரைக் குளம்பு போன்ற வட்ட வடிவத்தில் இந்தக்கற்கள் மறுஒழுங்கு செய்யப்பட்டு அடுக்கப்பட்டிருக்கிறது.

இன்று வரையிலும் இந்தக்கற்கள் அடுக்கப்பட்டிருப்பதன் அர்த்தம் எந்தவொரு முடிவையும் எட்டவில்லை. இது ஒரு வழிபாட்டுத்தலமோ வானவெளி சம்பந்தப்பட்ட காலண்டர் மாதிரியோ , சுடுகாட்டு மயானமோ என்று விதவிதமான கதைகள் திரிந்தாலும் இது இன்னமும் தீர்க்கப்படாத ஒரு மர்மம்தான்!

பிரமிடுகளின் 4400 வருட ரகசியம் 25-02-2020
(மர்மம் 11)



எப்கிப் தலைநகர் கெய்ரோவில் 4400 ஆண்டு பழமையான பிரமீடு தற்போது திறக்கப்பட்டுள்ளது. அங்கு புதையல், பொங்கிஷங்கள், மன்னர்கள் பயன்படுத்திய உபகரணங்கள், பதப்படுத்தப்பட்ட மனித உடல்கள் என்பன இருக்கின்றன.

இந்த அதிசய பிரமீடு கெய்ரோ நகரத்தின் மேற்கு பகுதியில் பத்து மைல் தொலைவில் உள்ளது.

இதை கட்டுவதற்காக ஒரு மைல் நீளம், ஒரு மைல் அகலம் உடைய சதுர பூமியை சதுரப்படுத்தி இருக்கிறார்கள்.

அதன் பிறகுதான் இதன் கட்டுமான பணிகள் துவக்கப்பட்டிருப்பதாக சரித்திரம் கூறுகிறது.

இதன் நான்கு மூலைகளும் மிகவும் சரியாக பூமிமட்டம் பார்த்தே கட்டப்பட்டிருக்கிறது. இதற்காக ஒரு சதுர மைலுக்கு பிரமீடை சுற்றிலும் குறுகிய அகலமுள்ள பள்ளம் தோண்டி, அந்த பள்ளத்தில் தண்ணீரை நிறைத்து நிலமட்டம் பார்த்து, ஒரு அங்குலம் கூட ஏற்றத்தாழ்வு இல்லாத வகையில் சமப்படுத்திய பின்புதான், அங்கு அஸ்திவாரமே தோண்டி இருப்பதாக கூறுகிறார்கள்.

கி மு 4000 ஆண்டுகளுக்கு முன்பே எகிப்தியர்கள் நாகரிகத்தின் உச்சகட்டத்தில் இருந்திருக்க வேண்டும். கட்டட கலை நுட்பம் வடிவமைத்தல் முதலியவற்றில் இவர்கள் வல்லவர்களாக இருந்திருக்க வேண்டும்.

இல்லையெனில் இவர்கள் எப்படி இவ்வளவு அற்புதமான கிஸா பிரமீடை உருவாக்கி இருக்க முடியும். இந்த கட்டுமானத்திற்கு மட்டும் 26 லட்சம் கருங்கல் பாறை கற்கள் உபயோகபடுத்தபட்டுருப்பதாக கூறப்படுகிறது.

இதில் ஒவ்வொரு கல்லும் இரண்டு முதல் எழுபது டன் வரையுள்ள கற்களை சதுரமாகவோ அல்லது நீண்ட சதுரமாகவோ வெட்டி எடுத்து, அவற்றை ஒழுங்காக செதுக்கி சீர்படுத்தி ஒன்றின் மேல் ஒன்றாக பிரமீடு வடிவத்தில் 450 அடி உயரத்தில் கட்டி இருக்கிறார்கள்.

இதை பார்த்து உலகமே பிரமிக்கிறது.கற்கள் எல்லாம் நன்றாக செதுக்கப்பட்டு ஒரு அங்குலத்தில் நூறில் ஒரு பங்கு கூட இடைவெளி இல்லாது சேர்த்து வைத்திருக்கிறார்கள்.

இதன் உயரம் 450 அடி. அதாவது 45 மாடி கட்டிடத்தின் உயரம் இதன் உயரம் உள்ளதாக அமெரிக்க நிபுணர்கள் கூறுகிறார்கள்.

செங்குத்தாக நான்கு முக்கோணங்களை சேர்த்து வைத்தால் எப்படி இருக்குமோ அது மாதிரியே, இந்த பிரமீடின் தோற்றமும் அளவுகளும் இருக்கும்.

ஒரு சதுர மைல் பரப்பளவில் 450 அடி உயரத்தில் இவ்வளவு பிரம்மாண்டமான பிரமீடை கட்டினது மட்டும் அல்லாமல், அதற்கு மேல் வெள்ளை சுண்ணாம்பு பாறை கற்களை கொண்டு வந்து இந்த பிரமீடு முழுவதும் போர்வை போல் போர்த்தியும் இருக்கிறார்கள் என்றால் இவர்களது திறமையை என்னவென்று சொல்வது என்றே தெரியவில்லை.

இந்த பிரமீடை கட்டுவதற்கு வானசாஸ்திரம், புவியியல் சாஸ்திரம் மற்றும் கட்டிடக்கலை, தொழில்நுட்பம் மற்றும் அமானுஷ்ய சக்திகள் பற்றிய அறிவு, பஞ்சபூதங்களின் தன்மை முதலியவற்றில் வல்லவர்களுடைய உதவி இல்லாமல் இதை கட்டி இருக்க முடியாது என்பது ஐரோப்பிய ஆராச்சியாளர்களின் கருத்தாகும்.

மேலும் பிரமீடின் உள்ளே இருந்து வான மண்டலத்தில் உள்ள நச்சத்திரங்கள், கிரக நிலைகளை கூட பார்க்கக் கூடிய வசதிகளை அனுசரித்து கட்டிருப்பதாக கூறப்படுகிறது.

பிரமீடின் சக்திக்கும் மேலே சொல்லப்பட்ட விஷயங்களுக்கும் என்ன சம்மந்தம் உள்ளது என்பதில் ஆராய்ச்சியாளர்களுக்கு இடையில் இதுவரை ஒருமித்த கருத்து வரவில்லை.

ஆனால் பிரமீடின் உள்ளே ஒரு மாபெரும் சக்தி இயங்குவதாக மட்டும் அனைத்து ஆராச்சியாளர்களும் ஒப்புக் கொள்ளகிறார்கள்.

இங்கு கட்டப்பட்ட பிரமிடுகளிலேயே மிகவும் வியப்பிற்குரிய ஒன்று கய்சா ப்லாடீவ் ( GIZA PLATEAW ) . இதில் என்ன அப்படி சிறப்பு என்றால்.இவை உலகின் கண்டங்களையும் கடல்களையும் சரிபாதியாகப் பிரிக்கும் மெரிடியன் என்ற கோட்டின் மேல் அமைக்கப்பட்டுள்ளன.

26,00,000 பாறைகள் இதனை கட்டுவதற்கு உபயோகப் படுத்தப்பட்டுள்ளன. இதன் ஆரங்கள் மென்மையாகத் தேய்த்து துளியும் சந்து பொந்தில்லாமல் பொருத்தி இருக்கிறார்கள்.

இறுதிக் கணக்கின் படி இந்த பிரமீடு 890 ஆண்டிற்கு முன்பு இந்த இடம் ஒரு போர்க்களமாக இருந்ததாக கூறப்படுகின்றது. .அங்கு இருந்து பிணங்களை நீக்குவதற்கே பல மாதங்கள் ஆகியதாகவும் குறிப்பிட்டு இருக்கிறார்கள் .

எகிப்து நாட்டில் பிரமிடுகளுக்கு அருகில் ஸ்பிங்க்ஸ் என்ற ஒரு பெண் தேவதையின் உருவச்சிலை உண்டு.அந்த உருவச்சிலை பெண்ணின் தலையையும், சிங்கத்தின் உடலையும் கொண்டதாக இருக்கின்றது.

இதே போன்ற ஓர் உருவச்சிலை செவ்வாய்க் கிரக பிரமிடுகளுக்கு அருகே காணப்படுவதாக சோவியத்விஞ்ஞானிகள் கூறுகிறார்கள்.இந்நிலையில் எகிப்தில் உள்ள 4400 ஆண்டு பழமையான திறக்கப்பட்டுள்ளது.

பல்வேறு மர்மங்கள் நிறைந்து இருந்தாலும், தற்போது வெற்றிகரமாக வெளிப்படுத்தியுள்ளனர்.அங்கு, 5 சுரங்க வாயிற்குழி கதவுகளில் ஒன்று கூட இதுவரை திறக்கப்பட்டு களவாடப்படவில்லை எனவும் அவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

சீலிடப்படாத ஒன்றை மட்டும் திறந்தபோது குப்பைகள் மட்டுமே இருந்ததாகவும், எஞ்சியுள்ளவற்றில் பதப்படுத்தப்பட்ட உடல், இறந்தவர் பயன்படுத்திய ஆடை, அணிகலன், அறைகலன் உள்ளிட்ட பொக்கிஷங்களும் இருக்கலாம் என தெரிவித்துள்ளனர்.

மன்னர்கள் பயன்படுத்திய நகை, வைரம், வைடூரியம், தங்கம், செம்பு உள்ளிட்ட, ஆடை ஆபரணங்கள் உள்ளிட்ட பல்வேறு பொக்கிஷங்கள் இருக்கும் என்று நம்படுகின்றது. இவைகள் கிடைத்தால், பிரமீடுகளின் மீது உள்ள மர்மம் விலகும் என்று எதிர்பார்க்கப்படுகின்றது.

ர.ரா

## பெருவயிறு மலை அல்லது பானைவயிறு மலை – ( மர்மம் 10 )

இது துருக்கி நாட்டின் சான்லியூர்பா மாகாணத்தில் அமைந்துள்ளது. இதனை துருக்கி மொழியில் “Potbelly Hill” அதாவது பானைவயிறு மலை என்று அழைகின்றனர். இது சுமார் கி.மு. 8000 என்ற காலகட்டமாக இருக்கலாம் என்று ஆய்வாளர்களால் கருதப்படுகிறது.

தொழிநுட்பம் என்ற வார்த்தை கூட உருவாகாத அந்த காலக் கடத்தில் இப்படி ஒரு படைப்பு எப்படி சாத்தியம் என பல விஞ்ஞான ஆய்வாளர்கள் கூறுகின்றனர். ஏராளமான கோட்டுச் சிற்பங்களாக வேட்டையாடும் வழிமுறைகள் இங்குள்ள தூண்களில் வடிக்கப்பட்டுள்ளமை இதன் சிறப்பம்சங்களில் ஒன்றாகும்.

பல ஆய்வுகளின் பின்னரும் இந்த வழிபாட்டுத்தலம் உருவாக்கப்பட்ட தொழிநுட்ப மர்மம் இன்றளவும் அறியப்படாதவைகளில் ஒன்றாகவே பார்க்கப்படுகின்றது.

இப்பகுதியில் அகழ்வின் போது கிடைத்த கல்லொன்றில் வரையப்பட்டுள்ள ஓவியங்கள் உலகில் இதுவரை கட்டுபிடிக்கப்பட்ட வழிபாட்டுத் தளங்களில் மிகப் பழமையானதாக கருதப்படுவது தான் இந்த Gobekli Tepe எனப்படும் பெருவயிறு மலை.

ர.ரா

## அட்சய பாத்திரங்கள் (மீள் பதிவு ) 25-02-2020

அகழ் யுத்தத்தின் போது.....
நான்கு பேருக்கு மட்டும் உணவு
வந்ததோ ஆயிரம் பேர்களுக்கும் மேல்
எப்படி பங்கிடுவது ?
சட்டியை அடுப்பிலிருந்தவாறே
ஆயிரம் பேருக்கும் அதிகமானோர்
உண்ட பிறகும்அதே நாலு பேர் சாப்பிட
உணவு இன்னும் மீதி இருந்ததது.
அட்சய பாத்திரம் சட்டியில் இருந்தது.
..............................................................
உலக உயிரினங்களின்
உயிரை காப்பாற்ற
ஜோடி ஜோடியாக கப்பலில் ஏற்றி
கரை சேர்த்த நூஹ்யின் அட்சய பாத்திரம்
அந்த கப்பலாக இருந்தது ..............................................................
ஆறுலட்சம் மக்கள்

தீஹ் பாலைவனத்தில்
உணவு கேட்டபோது
மன்னும் - ஸல்வாவும்
மழையாய் பொழிந்தது
அட்சய பாத்திரம் வானில் இருந்தது .
...................................................................

ஐயாயிரம் பேர் பசித்திருக்க
உணவு வேண்டிய போது
அல்-மாயிதா உணவு தட்டு மேலிருந்து
இறங்கியது
அட்சய பாத்திரம் வானுக்கும் பூமியிக்கும்
நடுவில் இருந்தது .
...... ......................................................

நபி இஸ்மாயிலுக்குப்
பகரமாய் செம்மறியாடு
பலி கொடுக்கப்பட்டது .
ஹாஜிகளின் குர்பானி இறைச்சி
உலகெங்கும் அனுப்பி வைக்கப்படுகிறது
அட்சய பாத்திரம் - அந்த
ஒரு செம்மறியாட்டில் இருந்தது
... ...........................................................

பூட்டிய அறையில்
பூந்தளிர் கன்னியின் பசியாற
பருவ காலத்தில் கிடைக்காத
பழமுதிர் கனிகள் வந்து குவிந்தன
அட்சய பாத்திரம் - அந்த
அறையில் இருந்தது.
.. .. .......................................................

நபித் தோழர் அபூஹுரைராவுக்கு
நபியவர்கள் கொடுத்த துணிப்பை
கவிழ்க்காதிருக்கும் போதெல்லாம்
ஈத்தங்கனிகள் சுரக்கும்
அட்சய பாத்திரம் பையில் இருந்தது.
.............................................................

மக்கா மக்களுக்கு
பசியை தீர்க்க
நபி இப்ராஹீம் வேண்டிய
பிரார்த்தனையில்
பாலையிலும் பழங்கள் செழிக்க
அட்சய பாத்திரம் தாயிப்பிலிருந்தது.
...........................................................................

எகிப்தின் ஏழு வருட பஞ்சம்
நபி யூஸுப் அவர்களின்
மதி நுட்பத்தில் தீர்ந்தது
எகிப்தின் அட்சய பாத்திரம்
யூஸுபின் அழகில் இருந்தது
...........................................................

பாலைவன தாகம் தீர்க்க
பாலகன் இஸ்மாயிலின்
பாதம் பட்டு பெருக்கெடுத்த ஜம்ஜம் நீர்
அட்சய பாத்திரம் பாதத்தில் இருந்தது

இந்த பிரபஞ்சத்தின்
முதல் நீர் நபியவர்களின்
கரங்களில் பெருக்கெடுத்தோடியது
பிரபஞ்சத்தின் அட்சயப் பாத்திரம்
அண்ணல் நபியின் கரத்தில் இருந்தது.
...........................................................................







எஸ்டர் தீவு மர்மம் .

(மர்மம் 9)

தென் அமெரிக்காவின் சிலி நாட்டுக்கும் பசிபிக் கடலின் டாகிட்டித் தீவுக் கூட்டத்திற்கும் நடுவில் ஈஸ்டர் தீவு உள்ளது .இத் தீவின் பழங்காலப் பெயர் "டிபிட்டோ ஒ ஹென்வா" அதாவது "உலகின் தொப்பூழ்" என்று பெயர்

தெற்கு பசிபிக் கடலில் மிகவும் தன்னித்து ஒதுக்கப்பட்டு நடு கடலில் இருக்கும் ஒரு தீவு தான் ஈஸ்டர் தீவு. அநேகமாக வேறு எந்த தீவும் இவ்வளவு தனிமையில் நில பகுதியை விட்டு இவ்வளவு தொலைவில் இல்லை. Chile யிலிருந்து செல்ல வேண்டும் என்றால் அந்த தீவுக்கு 3700 கிலோமீட்டர் கடலில் பிரயாணிக்க வேண்டும். அல்லது tahiti யிலிருந்து செல்ல வேண்டும் என்றால் 4000 கிலோமீட்டர் கடலில் செல்ல வேண்டும்.
அவ்வளவு ஏன் அந்த தீவுக்கு அடுத்த அருகாமை தீவுக்கு செல்ல வேண்டும் என்றால் அந்த தீவில் இருந்து நாம் 2250
கிலோ மீட்டர் கடலில் செல்ல வேண்டும் அந்தளவு ஒதுக்க பட்ட ஒரு பூகோள அமைப்பில் இருக்கிறது ஈஸ்டர் தீவு.
அந்த தீவு மொத்தமே 24 கிலோமீட்டர் நீளமும் 16 கிலோமீட்டர் அகலமும் கொண்டதுதான்.

பசிபிக் கடலில் இருக்கும் இந்த தீவு 1722 ஆண்டு ஈஸ்டர் தினத்தன்று கப்பல் கேப்டன் ஜேக்கப் ராகோவீன் என்ற டச்சுக்காரர் கண்டு பிடித்தார்

இந்த தீவு முழுவதும் மொத்தம் 887 சிலைகள். ஒரே கல்லில் மோவாய் என்ற எரிமலையிலிருந்து செய்யப்பட்டதால் இச்சிலைக்கும் "மோவாய் "என்று பெயர்

தூக்கி நிறுத்தப்படாத நிலையில் இன்னும் ஏராளமான சிலைகள் மலையிலேயே குப்புறக் கிடக்கின்றன சிலைகளின் எடை 14 முதல் 20 டன் உயரம் 12 முதல் 14 அடி வரை .மிகப் பெரிய சிலை ஒன்றின் உயரம் 32 அடி எடை 90 டன் எல்லாமே ஆண் சிலைகள் முற்றுப் பெறாத நிலையில் நிறைய சிலைகள் கிடக்கின்றன .

இங்கே எப்படி நிறுவினார்களா ? க்ரைன் பயன்படுத்தப்படவில்லை மலையில் இருந்து எப்படி கடத்தி வந்தார்கள் என்று ஆர்க்கியாலஜிஸ்டுகள் ஆராய்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் ஆராயட்டும் .

விண்வெளிக்கு அப்பால் இருந்தவர்கள் இங்கே வந்து செய்து இருக்கலாமா ?

சிலைகள் எல்லாம் கடலை நோக்கி நிற்கின்றன "சொர்க்கத்தை நோக்கும் விழிகள் " என்று அழைக்கின்றனர்

எல்லோருடைய கருத்து இது மனித சக்தியோடு அமானுஷ்ய சக்தியும் சேர்ந்து இருக்கிறது என்கிறார்கள்

எப்படி நிறுவியிருப்பார்கள் என்று நீங்கள் கூட யோசனை சொல்ல அதற்கான வலைதளம் உள்ளது ஐடியா இருக்கா?

இது பற்றிய தார் ஹயர்தாவின் புத்தகம் ரொம்பவும் சுவாரசியமானது .

இத் தீவு 64 சதுர மைல் முக்கோண வடிவில் ஆப்பு மாதிரியான அமைப்பில் உள்ளது மரங்கள் எதுவும் இல்லை இரவு நேரத்தில் அமானுஷ்யமான சூழல் நிலவுகிறதாம் . . .

முற்றுப் பெறாத ஒரு பிரமாண்டமான சிலையும் அங்கு கிடக்கிறது உயரம் 69 அடி அதைத் தூக்கி நிறுத்தியிருந்தால அது 7 மாடி கட்டிடத்துக்கு சவால் விடும்
அமானுஷ்ய வேலைபாடுகள் இந்த சிலைச் சுற்றியே நடைபெறுகிறது

அநேகமாக நீங்கள் அங்கே போய் பார்க்கும் போது இந்த சிலை ஒரு சமயம் தூக்கி நிறுத்தப்பட்டிருக்கலாம் .

"ஜின்கள் சுலைமான் விரும்பிய மிஹ்ராபுகளையும் சிற்பங்களையும் தடாகங்கள் போன்ற பெருங் கொப்பரைகளையும் நகர்த்த முடியாத பெரும் பாத்திரங்களையும் செய்து கொண்டு இருந்தன " (குர்ஆன் 34 : 12 )

ர.ரா

## நாஸ்கா பாலைவனக் கோடுகள்
## ( மர்மம் 8 )

நேர் கோட்டில் ஏதாவது இருந்தால் அதனை பார்த்து பிரம்மிப்பு அடையாதவர்கள் இருக்கமாட்டார்கள். நடுவானில் பறந்து கொண்டிருக்கும் பொழுது மரங்களோ, கட்டடங்களோ ஒரே சீராக இருப்பதை பார்த்தாலே நம் மனதிற்குள் ஒரு சிறு மகிழ்ச்சி உருவாகிவிடும்.

வலுவான தொழில்நுட்பங்கள் கொண்ட தற்பொழுதைய காலகட்டத்தில் இது போல் நேர் கோட்டில் கட்டடங்களோ சாலைகளோ கட்டுவது என்பது மிகவும் எளிது. ஆனால், எந்தவித தொழில்நுட்ப வளர்ச்சியும் இல்லாத காலத்தில் இதுபோல் நேர்கோட்டில் மிகப்பிரம்மாண்டமான கோடுகளை வடிவமைத்திருப்பது ஆராய்ச்சியாளர்களிடையே மிகவும் ஆச்சரியத்தை ஏற்படுத்தியது.

பெருவின் தலைநகர் லிமாவின் தெற்கே 400 கி.மீ தொலைவிலுள்ள நாஸ்கா பாலைவனத்தில் சுமார் 450 கி.மீ சுற்றளவில் வடிவமைக்கப்பட்டுள்ளது தான் இந்த நாஸ்கா கோடுகள். சுமார் ஒரு அடி ஆழக் கோடுகள் அருகில் இருந்து பார்த்தால், நீண்ட பாதை போல மட்டுமே காட்சியளிக்கும் இந்த கோடுகளை வானத்தில் இருந்து பார்த்தால் மிக பிரம்மாண்டமான பறவைகள் போலவோ, குரங்கு போலவோ சிலந்தி போலவோ, தேன் சிட்டு போலவோ காட்சியளிக்கும். இப்படியே சுமார் 15, 000 மேற்பட்ட உருவங்கள் .

எதனால் இதுபோன்ற கோடுகள் உருவாக்கப்பட்டன? அந்த காலத்திலேயே எப்படி இதுபோன்ற நேர் கோடுகளை வடிவமைப்பது சாத்தியம் என்பது போன்ற பல்வேறு மர்மங்களும் தேடுதல்களும் இந்த நாஸ்கா கோடுகளின் பின்னால் இருந்த வண்ணம் இருக்கிறது. பெரு நாட்டை சேர்ந்த தொல்பொருள் வல்லுநர் ஒருவரால் 1926ம் ஆண்டு இதுபோன்ற பிரம்மாண்ட கோடுகள் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. ஆனால், 1930ம் ஆண்டில் விமானத்தில் பயணித்துக்கொண்டிருந்த சில மக்களே இந்த நாஸ்கா கோடுகளை வெளிச்சத்திற்கு கொண்டுவந்தனர்.

நாஸ்கா கோடுகள், கி.மு. 700களில் நாஸ்கா மக்களால் கட்டப்பட்டது என அறிவியலாளர்கள் தெரிவிக்கின்றனர். நாஸ்கா பகுதியில் உள்ள பாறைகள் ஒருவிதமான இரும்புத்துருவின் வண்ணத்தில் இருப்பதால், அதன் மேற்பரப்பை அகற்றினால், பழுப்பு நிறத்தில் இருக்கும் மண் தெரியும். அப்படி உருவாக்கப்பட்டவை தான் இந்த நாஸ்கா கோடுகள். வெள்ளம், சூறாவளி என பல இயற்கை பேரிடர்கள் வந்தபொழுதும், சுமார் 2000 ஆண்டுகள் இந்த கோடுகள் நிலைத்திருப்பது மிக ஆச்சரியமான ஒன்று.

வேற்றுகிரக விண்கலங்கள் தரையிரங்க வரையப்பட்ட விமான ஓடுதளங்கள் , பாலைவனத்தில் நீர் இருக்கும் இடங்களை சுட்டிக் காட்டுவதற்காக குறிக்கப்பட்ட வரைபடங்கள் , மிகப் பெரிய வானவியல் நாள்காட்டி மற்றும் நட்சத்திர மண்டலங்களின் ஒட்டு மொத்த வடிவங்கள் .... என்று பல யுகங்கள் உங்களின் யுகங்களையும் தெரிவித்தால் நாஸ்கா ஆய்வாளர்களுக்கு பிரயோஜனப்படும் .

என்ன வரைய வேண்டும் எங்கே வரைய வேண்டும் அவை சூரியனை மையப்படுத்தி வரைய வேண்டும் என்தெல்லாம் குறித்து தெளிவான திட்டமிடல் இருந்திருக்கிறது
திட்ட வரைபடமோ திட்ட மாதிரியோ கொண்டு கொஞ்சம் கொஞ்சமாக தாங்கள் நினைத்தை சாதித்திருக்கிறார்கள் என்பது மேரி ரெய்சேவின் விளக்கம்

இந்த பெண்மணியின் பெரு முயற்சியால் நாஸ்கா பாலைவனத்தைப் பற்றி உலகம் அறிந்து கொள்ள முடிந்தது
1995 ல் யுனெஸ்கோ அறித்தத்தது

குரங்கு உருவத்திற்கும் தனக்கும்
ஓர் ஒற்றுமை இருப்பதைக் கண்டு அதிசயித்தார்

மேரி ரெய்சே ஒரு விபததில் தன் கைவிரல் ஒன்றை இழந்தவர்

குரங்குக்கும் ஒன்பது கைவிரல்களே இருந்தன

தளர்ந்த வயதில் கூட எந்நேரமும் துடப்பத்தோடு அலைந்தார் கோடுகளை சுத்தப்படுத்திக் கொண்டே இருப்பார்

அவர் அடிக்கடி வானத்தைப் பார்த்தும் காற்று வெளிதனிலும் விநோத மொழியில் பேசிக்கொண்டே இருப்பார் அதே நேரத்தில் நாஸ்கா மக்களிடம் நாஸ்கா மொழியில் பேசிக்கொள்வார்

சிலர் இவரை சூனியக்காரி என்றும் வேற்றுகிரகவாசிகளின் தோழி என்றும் அழைக்அழைக்கிறார்கள் .

இந்த கோடுகளில் நிறைந்துள்ள ஆச்சரியங்களும் மர்மங்களும் தொடர்ந்துகொண்டே இருக்கின்றன. பெர்முடா முக்கோணம் போன்ற மர்மங்கள் நிறைந்த இந்த உலகத்தில், இந்த நாஸ்கா கோடுகளும் விடை தெரியாத மர்மமாகவே இருக்கிறது.

ர.ரா





மர்ம புத்தகங்கள் ( மர்மம் 4)

















THE BOOK OF SOYGA :

இது நம்ம தி மம்மி படத்தில் வருகிறது போன்ற அமானுஷ்யம் ,ஆவி , மாந்திரீகம் ,பிளாக் மேஜிக் கொண்ட மர்ம புத்தகம்.15 ஆம் நூற்றாண்டை சார்ந்த இந்த ஆவி சார்ந்த மர்ம புத்தகத்தை முதல் முதலில் john dee எனும் கனிதவியலாளர் 1551 இல் கண்டெடுத்தார் ஆனால் அதன் பின் பல நூற்றாண்டுக்கு இது மர்மமாய் காணாமல் போய் 1994 ஆம் ஆண்டு திடீரென்று பிரிட்டிஷ் லைப்ரரியில் கண்டெடுக்க பட்டது.

இந்த 200 பக்கம் கொண்ட மர்ம புத்தகத்தில் முழுக்க முழுக்க ஆவிகளை வர வழிப்பதற்கான வழிமுறைகளும் ,மாந்திரீகம் செய்வதற்கான வழிமுறைகளும், வான சாஸ்திர குறிப்புகளும், மேலும் அதற்க்கு மேல் பலது நம்மால் புரிந்து கொள்ள முடியாத மர்மமான பல விஷயங்களையும் உள்ளடக்கி உள்ளது.

1551 ஆண்டு இதை கண்டெடுத்த ஜான் டீ ஒரு ஆவியுடன் பேசும் மீடியம் ஒருவரை உதவிக்கு அழைத்து இதில் என்ன இருக்கு என அறிய முற்பட்டார். புத்தகத்தில் சில இடங்கள் 'லேட்டின் ' மொழியில் ஏதோ ஓரளவு புரிந்து கொள்ளும்படி இருந்ததை படிக்க முடிந்தது ஆனால் அதில் 40000 வார்த்தைகள் மிக விசித்திரமான வகையில் 36 கட்டங்களில் அடுக்க பட்டிருந்தது எதை குறிக்கிறது என்பதை கண்டு கொள்ள முடியவில்லை. அதையும் மீறி இதில் ஒளிந்துள்ளதை புரிந்து கொள்ள முயன்றவர்கள் அடுத்த இரண்டரை ஆண்டுகளில் மர்மமான முறையில் இறந்து போனதாக சொல்லப்படுகிறது. அந்த ஆவி புத்தகம் இன்றளவும் அமானுஷ்யமாகவே உள்ளது நமக்கேன் வம்பு என்று பெரும்பாலும் இப்போதெல்லாம் பலர் அதை படிக்க முயலுவதே இல்லை.

ROHONC CODEX :

448 பக்கங்கள் கொண்ட இந்த புத்தகம்
19 ஆம் நூற்றாண்டை சார்ந்தது. ஹங்கேரி நாட்டுக்கு சொந்தமானது.
இதில் ராணுவ சண்டை களம் முதல் மத குறியீடுகள் வரை பல வற்றை பற்றியும் வரைய பட்டு எழுத பட்டு

இருக்கிறது. கிறிஸ்து... முஸ்லீம்...ஹிந்து என அனைத்து மத குறியீடுகளும் இதில் பயன்படுத்த பட்டிருகிறது ஆனால் என்ன எழுத பட்டு இருக்கிறது என்று தான் யாராலயும் படிக்க முடியவில்லை.. அப்படி ஒரு ரகசிய குறிஈடுகளை கொண்ட 200 எழுத்துக்களால் இது எழுத பட்டுள்ளது இதை எழுதியது யார் எதற்கு இதை எழுதினார்கள் என்ற எந்த தகவலும் யாரிடமும் இல்லை.

CODEX SERAPHINIAUS :

இந்த புத்தகத்தை... அதில் உள்ள படத்தை பார்க்கும் நபர்கள் தாங்கள் ஒரு வித்தியாசமான கற்பனை உலகிற்கு செல்வதை தவிர்க்க முடியாது. அந்தளவு வித்யாசமான பல படங்களை கொண்டது பலது பார்க்க ரொம்ப விபரீத கற்பனை போலவும் தெரிகிறது.. யாரோ கிறுக்கு விஞ்ஞானி தனது விபரீத உயிரியல் ஆய்வை பதிவு செய்தது போலவும் இருக்கிறது. (உதாரணம் ஒரு படுத்திருக்கும் பெண் அவள் மேல் ஒன்றிணைந்து இருக்கும் ஆன் பார்க்க ஒரு முதலை போன்ற வடிவத்தில் இருக்கிறார்கள்...பின் அடுத்தடுத்த படத்தில் அவர்கள் முதலையாகவே மாறிவிடுகிறார்கள். ) ஆனால் பலர் இதை ஒரு மருத்துவ நூலாக இருக்கலாம் என்கிறார்கள்.
படங்கள் பார்க்க ஏதோ உயிரற்றதையும் உயிருள்ளதையும் ஒன்றாக கலந்து ஆய்வு செய்தது போலவும்... விலங்குகளையும் தாவரங்களையும் ஒன்று கலந்து ஆய்வு செய்தது போலவும் பல விசித்திரங்கள் நிரம்பி உள்ளது இந்த புத்தகத்தில்.

360 பக்கம் கொண்ட 1981 இல் பதிவிட பட்ட இந்த புத்தகம் நல்ல வேலை இதை எழுதியவர் யார் என்று நமக்கு தெரியும்.
இது இத்தாலிய ஆர்ட்டிஸ்ட் மற்றும் வடிவமைப்பாளர் உருவாக்கிய கற்பனை உலகம் இது. அவர் இதை பற்றி கூறுகையில் தனக்கு சின்ன வயதில் வந்த பல விச்சித்திர கற்பனைகளுக்கு விடை தெரியவில்லை அதை தான் இந்த வித்யாசமான என்சைக்ளோபீடியாவில் பதித்து இருக்கிறேன் என்றார். அந்த படங்களை பார்க்கும் போது ஒரு சிறுவனுக்கு இந்தளவு வித்யாசமான கற்பனைகள் எப்படி வந்தது என்ற கேள்வி உண்டாகிறது.

VOYNICH MANUSCRIPT :

மேலே நாம் பார்த்த புத்தகங்களிலேயே மிக விசித்திரமான.. உள்ளத்தை கொள்ளை கொள்ள கூடிய ...அழகிய மற்றும் அறிவை குழப்ப கூடிய மர்மத்தை உள்ளடக்கிய புத்தகம் தான் voynich manuskript.
ஏதோ ஒரு வேற்றுகிரக விஞ்ஞானியின் ஆராய்ச்சி கையேடை திருடி வந்ததை போல அப்படி ஒரு வித்யாசமான படங்களை கொண்ட புத்தகம் (அதிலும் குறிப்பாக அந்த விஞ்ஞானி தாவரவியளில் அதிக ஆர்வம் போல தெரிகிறது ) புத்தகம் முழுக்க முழுக்க கைகளால் வரைய பட்ட அழகிய வண்ண வண்ண சித்திரம் மற்றும் கைகளால் எழுத பட்ட எழுத்துக்களை கொண்டது.

அந்த படங்கள் ..அதன் வண்ண கலவைகள் அவ்வளவு துல்லியமாக அழகாக இருக்கின்றன ..ஒவொரு படங்களும் விளக்க முடியாத விசித்திரங்களை கொண்டுள்ளன. ஒவொன்றும் மிக ஆழமாக எதையோ சொல்ல வருவது தெளிவாக தெரிகிறது. சில பக்கங்கள் இடம் பற்றாமல் பெரிய சைஸ் பக்கங்களில் வரைய பட்டு அந்த பக்கங்கள் மட்டும் மடித்து வைத்து இணைக்க பட்டுள்ளது. அதை எழுதியவன் அறிவியலில் உயிரியலில் ஆழ்ந்த அறிவு கொண்டவனாக தெரிகிறது. அந்த எழுத்துக்கள் இந்த கால அச்சு களுக்கு சவால் விடும் வகையில் அவ்வளவு நேர்த்தியாக செதுக்க பட்ட எழுத்துக்களை போல மிக அழகிய கையெழுத்தை கொண்டது. வானவியல் உயிரியல் தாவரவியல் ,மருத்துவம், என்று பல தலைப்புகளில் அந்த ஓவியங்கள் வரைய பட்டுள்ளன. ஓவியங்களின் தரமும் பார்க்க இன்றைய கிராபிக்ஸ் ஓவியங்களை ஒத்த அளவில் அவ்வளவு தரமாக வரைய பட்டுள்ளது. ஆனால் அந்த புத்தகம் என்ன சொல்ல வருகிறது என்று யாருக்கும் தெரியவில்லை அதில் எழுத பட்ட எழுத்துக்கள் ஒன்று கூட உலகில் எந்த வகை எழுத்துகளுடனும் ஒத்து போக வில்லை மிக மர்மமான வேற்றுகிரக எழுத்துக்கள் போல அவை தோற்றம் அளிக்கின்றன.

இந்த புத்தகத்தை டீகோட் செய்ய FBI முதல் பெரிய பெரிய ப்ரொபெசர்கள் வரை... டீகோட் நிபுணர்கள் வரை.. இரண்டு உலக யுத்தங்களில் வேலை செய்த டீ கோடர்கள் வரை முயன்று தோற்று இருக்கிறார்கள். பலர் இது ஏலியன்களால் எழுத பட்டது என்று நம்புகிறார்கள்.

15 ஆம் நூற்றாண்டை சார்ந்த இந்த புத்தகத்தை 1912 இல் வாங்கிய பழம் புத்தக விற்பனையாளர் Wilfrid M. Voynich, அவர்களின் பெயரால் இது வழங்க படுகிறது. இதன் நிஜ பிரதி இன்று yale இல் உள்ள Beinecke Library இல் உள்ளது. இதில் பல பக்கங்கள் தொலைந்தது போக இப்போது 240 பக்கங்கள் உள்ளது.

இந்த மர்ம புத்தகத்தை யார் எழுதியது ஏன் இப்படி யாருக்கும் புரியாத மொழியில் எழுத பட்டது ? அதில் பயன்படுத்த பட்டுள்ள மொழி என்ன ? அந்த புத்தகதம் சொல்ல வரும் மகா அறிவியல் என்ன என்பது இன்று வரை தீர்க்க முடியாத மர்மமாக இருக்கிறது.

இந்த வரிசையில் இது போன்று உலகில் பல மர்ம புத்தகங்கள் உண்டு இதோ மேலும் சில மர்ம புத்தகங்களின் பெயர்கள் :

- The Dead Sea Scrolls
- The Oera Linda Book
- Prodigiorum ac Ostentorum Chronicon
- The Smithfield Decretals
- The Ripley Scrolls
- The Story Of The Vivian Girls
- Codex Mendoza
- The Popol Vuh

மற்றும் விற்பனையில் செக்க போடு போடும் நாஸ்டர்டாமின்...
Prophecies of Nostradamus

(நண்பர்களே இந்த மர்ம புத்தகங்களை படிக்க உங்களுக்கு ஆர்வம் உண்டாகுமாயின் ஒன்றும் பிரச்னை இல்லை இவைகளின் காபி பிரதிகள் இன்று சாதாரணமாக ஆன் லைன் விற்பனையில் கிடைக்கிறது. வாங்கி எதையாவது டீகோட் செய்ய முடிகிறதா என்று முயன்று பாருங்களேன். ஏதேனும் பாதிப்புகள் ஏற்பட்டால் கம்பெனி பொறுப்பல்ல ) - ரா.பிரபு

ர.ரா .

மைனஸ் 20 டிகிரி ( மர்மம் 3 ) 23/07/2020





அந்த மலைமேல் தட்பவெப்பநிலை பெரும்பாலும் மைனஸில்தான் இருக்கும் . செங்குத்தான பாறைகளும் உண்டு. அடர்ந்த காடுகளும் உண்டு. உலகில் மோசமான மலைப்பகுதியில் ஒன்றாக அதனைச் சொல்வார்கள். ரஷ்யாவின் ஓடோர்டென் சிகரம் என்றால் மிக மிக ஆபத்தான மலைப்பகுதி.

அந்த மலைமேல் ஏறுவதற்காகத்தான் அந்த மாணவர் குழுவினர் திட்டம் போட்டுக் கொண்டிருந்தார்கள். குழுவின் தலைவர் இகோர் டயட்லோவ்.குழுவில் அவர் தவிர இருந்த ஆண்கள்- கோல்மோகோரோவா, அலெக்ஸாண்டர் கோலெவாடோவ் ,ஸ்லோபோடின், கிரிவோனிஸென்கோ,டோரோஸென்கோ, பிரிக்நோலே.இரண்டு பெண்கள் துபினினா,யூரி யூடின். எல்லோருக்கும் வயது 21லிருந்து 24க்குள்தான்.

ரஷ்யாவின் தென்பகுதி வடபகுதியின் ஊடாக மேற்கு வரை பரந்திருக்கும் யூரல் மலைத்தொடரிலுள்ள ஒரு சிகரம்தான் ஓடோர்டென். உயிரை தின்னும் குளிர் நிறைந்த பகுதி. அதன் உச்சியில் பாதம் பதிப்பதே டயட்லோவின் நோக்கம். இதுபோன்ற இடங்களுக்குச் சென்று வந்தால் பிற்காலத்தில் துருவப் பகுதிகளான ஆர்டிக் அண்டார்டிக் செல்வதற்கு உபயோகமாக இருக்கும் என்று நினைத்து இந்த பயணத்துக்கு ஏற்பாடு செய்திருந்தார்

அலெக்ஸாண்டர் ஸோலோடரவ் என்ற 37 வயதுக்காரரும் குழுவில் பத்தாவது ஆளாக சேர்ந்து கொண்டார்.

டயட்லோவும் குழுவினரும் இவ்டெல் என்ற நகரத்துக்கு ரயில் வந்து இறங்கிய தேதி ஜனவரி 25, 1959, யூரல் மலையடிவாரத்திலுள்ள சிறு நகரமான vizhai- க்கு செல்ல ஒரு வாகனத்தை பிடித்தார்கள். வடக்கின் எல்லையில் அமைந்துள்ள கடைசி ஊர் அதுவே. அதற்கு பிறகு மனித நடமாட்டமே கிடையாது.

மறுநாள் விடிந்ததிலிருந்தே யூரி யூடினுக்கு உடல்நிலை மக்கர் செய்தது. மேற்கொண்டு பயணத்தைத் தொடர முடியாது என்று யூரி மனத்தளவில் முடிவு செய்திருந்தாள். தன் நண்பர்களுடன் புகைப்படம் எடுத்துக் கொண்டாள். அவர்களுக்கு ஆல் தி பெஸ்ட் சொல்லிவிட்டு பிரியாவிடை பெற்றாள். நீங்கள் பத்திரமாக சாதித்துவிட்டுத் திரும்புங்கள்.

அடுத்த நாள் பிப்ரவரி 1 குழுவின் பயணம் கணவாய் ஒன்றின் வழியே தொடர்ந்தது. அதன் வழியே சென்று சிகரத்தின் மறுபக்கத்தை அடைய வேண்டுமென்பது அன்றைய திட்டம். ஆனால் மிக மிக மோசமான பருவநிலை. ஆபத்தான காற்று. பனிப்பொழிவும் ஆரம்பித்திருந்தது. அருகில் நிற்கும் நபர்கூட பார்வைக்குத் தெரியவில்லை. காட்டுவழியில் சென்று கொண்டிருந்ததால் ஏதோ மரங்களின் உதவியால் கொஞ்சம் கொஞ்சமாக முன்னேறினார்கள். இருந்தும் திசை மாறியிருந்தார்கள்.

மேற்கு திசையில் kholat syakhl என்ற சிகரத்துக்கு செல்லும் பாதைக்கு வந்திருந்தார்கள். அவர்கள் செல்ல வேண்டிய ஓடோர்டென் சிகரம் அங்கிருந்து 10 மைல்கள் தள்ளியிருந்தது. தற்போது இருக்குமிடம் அவ்வளவு பாதுகாப்பானதாகத் தோன்றவில்லை. வேறு வழியில்லை. கூடாரமடிக்க ஆரம்பித்தாரகள். குழுவில் ஒருவர் கேமராவை கையில் எடுத்தார். இருள் முழுமையாக ஆட்சிக்கு வருவதற்குள் சில புகைப்படங்களை எடுத்துக் கொண்டார்.குளிர் மைனஸ் பத்து டிகிரியை நெருங்கிக் கொண்டிருந்தது.

இனி கூடாரத்தின் கயிறுகளை உள்பக்கமாக இழுத்துக் கட்டிக் கொண்டு பதுங்கிக் கொள்ள வேண்டியதுதான். நாளைக்காவது வானிலை கருனை காட்ட வேண்டும். ஓடோர்டென்னை நோக்கி சரியான திசையில் செல்ல வேண்டும். சிலர் பேசிக் கொண்டிருந்தார்கள் குளிர் மைனஸ் இருபதை நோக்கி வெகுவேகமாக முன்னேறிக் கொண்டிருந்தது.

மறுநாள் உலகத்துக்கு விடிந்தது.

குழுவினருந்து எந்த தகவல் வராததால் குடும்பத்தார்கள் பதறினர் .கடுமையான பனிப்பொழிவு. நடந்தும் மலையேறியும் தேடுதல் என்பது சாத்தியமில்லாத சூழல். பறந்துதான் தேட வேண்டும். அதற்கு ராணுவம்தான் சரிபடும். அரசின் உதவியை நாடினார்கள். ஓடோர்டென் மலைப்பகுதிமேல் ராணுவத்தின் ஹெலிகாப்டர்களும், சிறு விமானங்களும் ஒன்பது பேரைத் தேடி பறக்க ஆரம்பித்தன. பிப்ரவரி 25 வரை சின்ன துப்புகூட கிடைக்கவில்லை. டயட்லோவ் குழுவினரிடமிருந்தும் எந்தத் தகவலும் இல்லை.

பிப்ரவரி 26 kholat syakhl சிகரத்துக்கு செல்லும் பாதையில் ராணுவம் விமானம் ஒன்று, டயட்லோவ் குழுவினரின் கூடாரத்தைக் கண்டுபிடித்தது. அதுவே அவர்கள் பிப்ரவரி 1 அன்று இறுதியாக அமைத்த கூடாரம். சிதைந்து கிடந்தது. கூடாரத் துணி கிழிந்து கிடந்தது. கயிறுகள் அறுபட்டிருந்தன. வேகவேகமாகத் துணியை விலக்கி தேடினார்கள். உள்ளே யாருமில்லை. ஆனால் குழுவினரின் பல பொருள்கள் அங்கேயே கிடந்தன.

கூடாரத் துணி கிழிந்திருப்பதைப் பார்த்தால் அவர்கள் அதனுள்ளிருந்து ஏதோ அவசரமாக வெளியே தப்பி சென்றிருப்பார்கள் எனத் தோன்றியது. நள்ளிரவில் மைனஸ் இருபது டிகிரி குளிரில் கூடாரத்தை விட்டு வெளியேற வேண்டிய அவசியம் என்ன? என்ன ஆபத்து நேர்ந்திருக்கும் ? ஒருவேளை விளையாட்டு போக்கில் ஏதோ சேட்டை செய்ய அது விபரீதத்தில் முடிந்திருக்குமா?

பைன் மரக் காட்டை நெருங்கிய ராணுவ வீரர் ஒருவர், பழைய மரத்தின் கிளை ஒன்று ஒடிந்திருப்பதைக் கண்டு அதன் அருகில் சென்றார். ஒருவேளை யாரவது அதில் ஏற முயற்சி செய்திருப்பார்களோ? குளிருக்காக எரியூட்டப்பட்ட கட்டைகள் அங்கே தென்பட்டன. அந்த பழைய பைன் மரத்தடியில் தீவிரமாகத் தேடினார்கள. பனிப்பரப்பினுள் ஏதோ தட்டுபட்டது. வேகமாக பனியை விலக்கினார்கள்.

குழுவைச் சேர்ந்த இருவரான கிரிவோனிஸென்கோவும் டோரோஸென்கோவும் பிணமாக கிடைத்தார்கள். அதுவும் முக்கால் நிர்வாணமாக வெறும் உள்ளாடைகளுடன் வெற்றுக் கால்களுடன்.

மற்ற ஏழுபேரின் கதி என்ன? இவர்கள் இருவரும் செத்துக் கிடக்கிறார்களா அல்லது கொலை செய்யப்பட்டா? மைனஸ் இருபது டிகிரி குளிரில் ஆடைகளின்றி கிடக்கிறார்கள் எனில் என்ன நேர்ந்திருக்கும்? இந்த இருவரின் சாவுக்கு மற்றவர்கள் காரணமாக இருக்குமோ?

சந்தேகம் கிளம்பிய நொடியில் அடுத்த பிணம் கிடைத்தது. பைன் மரத்திலிருந்து சுமார் 300 மீட்டர் தொலைவில். பிணமாகக் கிடந்தவர். டயட்லோவ். குழுவின் தலைவர். அவரது கைப்பிடியில் உடைந்த மரக்கிளையின் சிறு பகுதி. பனியில் புதைந்துகிடந்த உடலை முழுதாக மீட்பதற்குள் அங்கிருந்து 180 மீட்டர் தொலைவில் இன்னொரு உடல் கிடைத்தது. அது கோல்மொகோரோவா. அடுத்த ஆணின் உடல் அங்கிருந்து சுமார் 150 மீட்டர் தொலைவில் இன்னொரு உடல் கிடைத்தது. அது ஸ்லோபோடின். மூவரும் பைன் மரக்காட்டிலிருந்து தப்பி, மீண்டும் கூடாரத்தை நோக்கி ஒடும்போது கொலை செய்யப்பட்டிருக்கலாம் அல்லது இறந்து போயிருக்கலாம் என்பதை உடல்கள் கிடந்த விதம் உணர்த்தின.

நாள்கள் நகர்ந்தன வாரங்கள் வளர்ந்தன. நம்பிக்கையை முற்றிலும் இழந்து பனிப்பரப்பைத் தோண்ட ஆரம்பித்தார்கள், உடல்களைத் தேடி.

பிப்ரவரி 1 நள்ளிரவில் தொலைந்து போனவர்கள் மே 4 அன்றுதான் கண்டெடுக்கப்பட்டார்கள். அந்த பைன் மரக் காட்டுக்குள் பனியில் நான்கு மீட்டருக்கு கீழ். நான்கு உடல்களுமே ஒன்றாகப் புதைந்திருந்தன அல்லது புதைக்கப்பட்டிருந்தன. நால்வருமே முழுக்க உடையணிந்தார்கள். ஆனால் ஒருவர் உடை இன்னொருவருக்கு இடம் மாறியிருந்தது.

பிரேதப் பரிசோதனையில் அந்த ஐந்து உடல்களை ஆராய்ந்து பார்த்ததில் வெளிப்புறத்தில் பெரிய காயங்கள் எதுவும் இல்லை. ஆனால் ஸ்லோபோடினின் உடலின் மண்டை ஓட்டில் கீறல் விழுந்திருப்பது தெரிய வந்தது. மே மாதத்தில் கிடைத்த நான்கு உடல்களை ஆராய்ந்தபோது பதைபதைப்பு அதிகமனது. பிரிக்நோலேவின் தலையில் யாரும் பலமாகத் தாக்கிய காயமோ, ரத்தக்கறையோ இல்லை. ஆனால் மண்டை ஓடு சிதைந்திருந்தது. ஸோலோடாரவின் நெஞ்செலும்புகள் நொருங்கியிருந்தன. குழுவில் இருந்த பெண்ணான துபினினாவின் கோட்டும் தொப்பியும் இவர் உடலில் அணிவிக்கப்பட்டிருந்தன. பைன் மரத்தடியில் முக்கால் நிர்வாணமாக கிடந்த கிரிவோனிஸென்கோவின் உடைகள் துபினினாவின் உடலில் அணிவிக்கப்பட்டிருந்தன. உறைந்த ரத்தத்துடன் அவளது வாய் திறந்து கிடந்தது. நாக்கைக் காணவில்லை.

உடல்களையெல்லாம் ஆராய்ந்துவிட்டு மருத்துவர் குழுவினர் பொதுவான ஒரு காரணத்தைச் சொன்னார்கள். இந்த மரணங்கள் ஹைபோதெர்மியா என்ற பாதிப்பால் நிகழ்ந்தவை அதாவது மனிதன் சீராக இயங்கத் தேவையான வெப்பநிலை (35 டிகிரி செல்சியஸ்) குறையும்போது ஏற்படும் பாதிப்பு இது. அதிலும் ஒருவகை paradoxical undressing. உடல் வெப்பநிலையைக் கட்டுப்படுத்தும் மூளையின் ஒரு பகுதி செயலிழக்கும்போது மனிதன் தன்னிலை இழக்கிறான். அதீதக் குழப்பத்தில் பதட்டத்தில் மைனஸ் குளிரிலும் உடைகளை காலணிகளை எல்லாம் கழற்றி எறிகிறான். உடல் மேலும் வெப்பத்தை இழக்க தாங்க முடியாமல் அங்குமிங்கும் பைத்தியக்காரனாக ஓடுகிறான். கோமா நிலையை அடைகிறான் உறைபனியில் உயிரை விடுகிறான். ஹைபோதெர்மியாவால் ஏற்படும் மரணங்களில் பாதி இவ்விதத்தில் நேர்பவைதான்.

அவர்களில் சிலர் வேண்டுமானால் ஹைபோதெர்மியாவால் பாதிக்கப்பட்டு இறந்திருக்கலாம். ஆனால் ஒன்பது பேரும் ஒரே சமயத்தில் அதனால் தாக்கப்படும் சாத்தியம் குறைவே. தவிர மண்டை ஓடு உடைய, நெஞ்செலும்புகள் நொறுங்க ஹைபோதெர்மியா காரணமாக இருக்க முடியாது. துபினினாவின் நாக்கு பிடுங்கப்பட்டதன் மர்மமும் ஹைபோதெர்மியாவை கேள்விக்குள்ளாக்கியது.

அடுத்ததாக சந்தேகம் மான்ஸி என்ற பழக்குடியினர் மீது படர்ந்தது. அவர்கள் யூரல் மலைவாழ் பழங்குடியினர். கொஞ்சம் கரடு முரடானவர்களே. திடீரெனத் தங்கள் பகுதியில் முளைத்த கூடாரத்தைக்

கண்டு, தாங்கள் அந்நியர்களால் ஆக்கிரமிக்கப்படுவதாக நினைத்து, டயட்லோவ் குழுவினரைத் தாக்கிக் கொன்றிருக்கலாம் என்றொரு கோணம் முன்வைக்கப்பட்டது. ஆனால் மான்ஸி மக்கள் அப்பகுதிக்கு வந்து சென்றதற்கான ஒரு துப்புகூட கிடைக்கவில்லை.தாக்குதலோ மோதலோ நடந்த அடையாளங்களும் கிடைக்கவில்லை.

மனித சக்திக்கு அப்பாற்பட்ட ஓர் அதீத சக்தி இவர்களைக் கொன்றிருக்கிறது என்ற அடுத்த பரிமாணத்தில் யோசிக்க ஆரம்பித்தார்கள். அந்த மர்ம சக்தி எதுவாக இருக்கும்?

நாங்கள் அன்றிரவு வானத்தில் ஒரு விநோத ஒளியைப் பார்த்தோம். ஆரஞ்சு நிறத்தில் பறக்கும் கோலம் ஒன்று. யூரல் மலைப்பகுதியின் இன்னொரு பக்கம் மலையேற்றத்தில் ஈடுபட்டிருந்த வேறோரு குழவினர் சொன்ன தகவல் இது.மலைப்பகுதியில் முகாம் அமைத்திருந்த ராணுவத்தினர் ஒரு சிலரும் ஆமோதித்தார்கள்.

விண்வெளியிலிருந்து பறந்து வந்த பறக்கும் தட்டிலிருந்து இறங்கிய வேற்றுக்கிரகவாசிகள் ஒன்பது பேரைக் கொன்றிருக்கிறார்கள் என்ற கோணத்தில் விதவிதமான கற்பனைகளுடன் செய்திகள் வெளிவந்தன.

இறந்தவர்களின் உடைகளை கதிரியக்கத்தை அளவிடும் டோஸிமீட்டர் உபகரணம் கொண்டு சோதனை செய்தபோது, சிலரது உடைகளில் கதிர்வீச்சு இருப்பது கண்டறியப்பட்டது. இந்த விஷயம் டயட்லோவ் குழுவினரின் மர்ம மரணத்துக்கு புதிய கோணத்தைக் கொடுத்தது. ஒருவேளை இவையெல்லாம் ராணுவத்தினரின் சதியாக இருக்குமோ?

ராணுவத்தினர் அங்கே ரகசிய ஆயதச் சோதனை நடத்தியிருக்கலாம். அதனால் பாதிக்கப்பட்டு ஒன்பது பேரும் இறந்திருக்கலாம். அல்லது ஒன்பது பேரும் அந்த ஆயுதச் சோதனைக்கு 'எலி' யாகப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம் என்ற கோணத்திலும் செய்திகள் வெளிவந்தன. ஒன்பது உடல்களும் கண்டுபிடிக்கப்பட்ட அந்த இடம் விசாரணைக்காக பாதுகாக்கப்பட்ட பகுதியாக அறிவிக்கப்பட்டது. மற்றவர்கள் மலையேறுவதற்கான தடை சுமார் மூன்று ஆண்டுகள் வரை நீடித்தது. மரணங்கள் குறித்த மர்மம் மட்டும் விதவிதமான பரிமாணங்களில் வளர்ந்துகொண்டே சென்றது.

இன்றைக்கும் ஓடோர்டென் சிகரத்தை நோக்கிச் செல்லும் அந்த பகுதி DYATLOV Pass என்ற பெயரில்தான் அழைக்கப்படுகிறது. உடல்நிலை ஒத்துழைக்காத காரணத்தினால் ஊர் திரும்பியதால் உயிர் பிழைத்த யூரி யூடின் ஒருமுறை பேட்டி கொடுத்தார்.

கடவுளிடம் ஒரே ஒரு கேள்வி கேட்கும் வாய்ப்பு கிடைத்தால் நான் இதைத்தான் கேட்பேன். அந்த இரவில் என் நண்பர்ளுக்கு என்ன நடந்தது?

நன்றி-முகில்

ர.ரா

## புதையல் காக்கும் யானை ! (மர்மம் - 2 )

மன்னர் லோபெங்குலா கிபி 1868 முதல் 1894 வரை தென் ஆப்பிரிக்கா நாடான மெட்டாபெலிலேண்டை ஆட்சி செய்தவர். கிரிக்கெட்டின் நிரந்தர கத்துக்குட்டி நாடான ஜிம்பாப்வேவின் மன்னர் என்று சொன்னால் புரிந்துகொள்வது சுலபம். ஸுலு என்ற ஆப்பிரிக்க இனக்குழுவைச் சேர்ந்தவர். மாபெரும் வீரரெல்லாம் இல்லை. தனது மக்களை அதட்டி, மிரட்டி கொடுமைப்படுத்தி தன்னைக் கடவுள் போல் வணங்கச் செய்தவர். கையில் நீண்ட கம்புடன் ஓர் உயரமான பாறைமேல் அவ்வப்போது ஏறிநின்று காட்சி கொடுப்பார் மக்கள் மறக்காமல் தமது வழக்கமான கோஷங்களை காடு அதிர எழுப்புவர்.

லோபெங்குலாவின் கொடுரத் தனத்துக்கு ஒரு சாம்பில் சம்பவம் இது. ஒரு முறை மன்னருக்கென தாயாரித்து வைக்கப்பட்டிருந்த பிரத்யோக பீர் மீது சபலப்பட்ட பிரகஸ்பதி ஒருவன். அதை கொஞ்சூண்டு சுவைப் பார்த்துவிட்டான். அதை இன்னொருவன் பார்த்துவிட பிரகஸ்பதி மன்னர் முன் குற்றவாளியாக நிறுத்தப்பட்டான்.

லோபெங்குலா தன் விரலால் அவனது உதட்டோரம் தடவினார் பீரின் பிசுபிசுப்பு, சின்னதாகப் புன்னகை செய்தார். மன்னரது பீரைச் சுவத்த இந்த உதடுகள் இனி இருக்கக்கூடாது.'

பிரகஸ்பதியின் உதடுகள் இழுத்துவைத்து நறுக்! மன்னரது பீரின் நறுமனத்தை உணர்ந்த அந்த மூக்கு...சொல்லி முடிக்கும் முன்பே அந்த மூக்கு துண்டாக்கப்பட்டது. மன்னரது பீரை மிக அருகில் பார்த்து ரசித்த அந்தக் கண்களை...' இமைகள் கண்களோடு சேர்த்து தைக்கப்பட்டன. மேலும் சில சித்தரவதைகளை அனுபவத்த அந்த பிரகஸ்பதி, பின் தேவாம்ருதம் உண்பதற்காகச் சொர்க்கத்தை அடைந்தான்.

இதுதான் லோபெங்குலா ஸ்டைல் . ஆக மக்கள் அவரை வலுக்கட்டாயமாக வணங்கினர். லோபெங்குலா உல்லாசமாக வாழ்ந்தார். வளமான பூமி எதற்கும் பஞ்சமில்லை. இருபதே இருபது பெண்டாட்டிகளுடன் இனிய இல்லறம். எல்லாமே இனிமையாகத்தான் போய்க்கொண்டிருந்தது, பிரிட்டிஷார் தம் இடது காலை அங்கே எடுத்து வைக்கும்வரை.

பிரிட்டிஷ் தென் ஆப்பிரிக்க கம்பெனி ஆரம்பிக்கப்பட்டது. தென் ஆப்பிரிக்காவின் வளங்களை சுரண்ட அங்கே காலனியாதிக்கத்தை நிருவுவதே அதன் இலக்கு. உருவாக்கிய புண்ணியவான் சிசெல் ஜான் ரோட்ஸ். சுரங்கத் தொழிலின் சுறா.டி பீர்ஸ் கம்பெனி நிருவனர்.

ரோட்ஸ் தலைமையில் பிரிட்டிஷார் குழு ஒன்று லோபெங்குலாவுடன் டீல் பேசியது. அய்யா நாங்க உங்க மண்ணுல சின்னதா ஒண்ணு ரெண்டும் சுரங்கம் அமைச்சு, ஏதோ கொஞ்சமா தாதுக்களை எடுத்துக்கிறோம்.

அதுக்கு பதிலா உங்க ஆளுங்களுக்கு வேலை தர்றோம். நிறைய பணம் தர்றோம். டூமில் டூமில்னு சுடற துப்பாக்கி தர்றோம. எங்களுக்கு கருனை காட்டுங்க. லோபெங்குலாவுக்கு அதிலுள்ள அபாயங்கள் புரியவில்லை. அலட்டி கொள்ளாமல் சம்மதித்தார்.பிற ஐரோப்பியர்கள் பேசுவதை இவருக்குப் புரியும்படி எடுத்து சொல்வதற்காக ஜான் ஜேக்கப்ஸ் என்ற ஐரோப்பியரைத் தனது வெளியுறவு காரியதரிசியாகவும் நியமித்துக் கொண்டார்

பிரிட்டிஷ் மலைப்பாம்பு, அந்த தேசத்தை கொஞ்சம் கொஞ்சமாக விழுங்க ஆரம்பித்தது. அட நம்ம பயலுக எல்லாம் சுரங்கத்துக்கு வேலைக்குப் போறாங்களா, சந்தோஷம் என்று கைகட்டி ரசித்துக் கொண்டிருந்த மன்னர், அப்போதும் கூட தம் மக்களுக்கு நிபந்தனைகள் விதித்தார்.அதாவது, சுரங்கத்துக்கு வேலைக்கு சென்று வீடு திரும்பும் ஒருவன், கொஞ்சம் தங்கமோ, சிறு வைரமோ திருடிக் கொண்டு வர வேண்டும். அதை மன்னருக்கு கப்பமாக கட்ட வேண்டும். தவறினால் உயிருக்கு உத்ரவாதம் இல்லை. இப்படியாக பெட்டி பெட்டியாக தங்கமும் வைரமும் சேர்ந்தது.

இந்த வெள்ளகார பயலுவ நம்மை ஏமாத்துறாங்களோ? நம்ம வளத்தையெல்லாம் சுரண்டுறாங்களோ? என்று மன்னருக்கு மிக மெதுவாகத்தான் சந்தேகம் வந்தது. அதற்குல் மலைப்பாம்பு அனகோண்டாவாகியிருந்தது. மன்னர் பொங்கியெழ, மன்னருக்காக மக்களும் பொங்கியெழ அங்கே போருக்கான தேவை ஏற்பட்டது. அது மன்னரது ஸூலு படைக்கும் பிரிட்டிஷ் தென் ஆப்பிரிக்க கம்பெனி படைக்கும் இடையே நடந்த முதல் மெட்டாபெல்லா போர்(1893) சொல்லவே தேவையில்லை பிரிட்டிஷார் எளிதில் வென்றனர்.

மன்னர் லோபெங்குலா மாயமானார். சும்மா அல்ல தாம் சேர்த்து வைத்த செல்வங்களையெல்லாம் வண்டிகளில் அள்ளிக் கொண்டு. பதினான்கு வேலையாள்கள் நான்கு தளபதிகள் உடன் ஜான் ஜேக்கப்ஸும் தப்பி ஓடும் மன்னருடன் இருந்தார். வழியில் பிரிட்டிஷாருடன் ஏதாவது பிரச்சனை என்றால் உதவுவாரே.

இனி, ஜான் ஜேக்கப்பின் குறிப்புகள்படி மன்னரது ரகசியப் பயணத்தை ஒளிந்திருந்து பார்க்கலாம்.

காட்டுக்குள் வடக்கிலும் பின் வேறு திசைகளிலும் பலநாள்கள் பயணம். குறிப்பிட்ட ஒரு இடைத்தை அடைந்தவுடன், புதர்கள் நிரம்பிய ஓரிடத்தில் யாருமே எளிதில் அண்ட முடியாத ஒரு பகுதியில் இரண்டு பெரிய குழிகள் வெட்டப்பட்டன. ஆழமான இரண்டு குழிகளிலும் தங்கமும் வைரமும் பிரிக்கப்பட்டு கனமான மரப்பெட்டிகளில் வைக்கப்பட்டு புதைக்கப்பட்டன. அவற்றின் மேல் கல்சுவர் கட்டப்பட்டது. பின் சுவரும் வெளியே தெரியாதபடி மண்ணால் மூடப்பட்டது. வேறு யாருமே எதையுமே கண்டுபிடிக்க இயலாதவாறு அந்த இடம் இயல்பாக இயற்கையாக மாற்றப்பட்டது.

புதையல் ரகசியம் தெரிந்த யாரும் உயிருடன் இருக்கக் கூடாது என்பது லோபெங்குலாவின் எண்ணம். தூக்கத்திலேயே பலர் கொல்லப்பட்டனர். சத்தம் கேட்டு எழுந்து தப்பி ஓட முயன்ற வேலையாள்களும் கொல்லப்பட்டனர். பயணம் தொடர்ந்தது இருதியில் மன்னரும் நானும் அறுபது வயது தளபதி ஒருவர் மட்டும் ஒரு பாதுகாப்பான இடத்துக்கு வந்து சேர்ந்தோம்.

இது ஜான் ஜேக்கப்ஸ் சொல்லி நாம் தெரிந்துகொள்வது. அவர் சொல்லாததுதான் நிறைய. 1894 லேயே லோபெங்குலா இறந்து போனதாக நம்பப்படுகிறது. ஆனால் எங்கு? எப்படி? ஜேக்கப்ஸ் பல விஷயங்களை வெளியில் விடவில்லை. லோபெங்குலாவின் உடல் எங்கே புதைக்கப்பட்டது என்பதுகூட இதுவரை மர்மமே.

உடலை விடுங்கள் புதையல்?

அந்த ரகசியமறிந்த ஜான் ஜேக்கப்ஸ் அதற்கு பின் பலமுறை அதைத் தேடி காட்டுக்கு பயணம் மேற்கொண்டார். அவராலேயே அதை கண்டடைய முடியவில்லை. அதன் மதிப்பு இருபது லட்சம் ஐரோப்பிய பவுண்ட் இருக்கும். இது 1923ல் ஜான் ஜேக்கப்ஸ் ஏமாற்றத்துடன் கொடுத்த பேட்டி.

இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் லோபெங்குலாவின் புதையலை தேடி அலைவது பேஷன் ஆகிப்போனது.இன்றுவரை எல்லோருக்கும் லோபெங்குலா புதையல் மர்மம் விலகவில்லை. இப்போது ஜிம்பாப்வே சென்று ஸூலு மக்களிடம் புதையல் பற்றி கேட்டால் இந்த பதிலைத்தான் சொல்வார்கள். இங்கே காடுகளில் யானைகள் அதிகம். நாங்கள் லோபெங்குலாவை யானை என்றே அழைப்போம் இப்போதும் அவர் யானையாகத்தான் திரிகிறார் புதையலைக் காத்தபடி. (நன்றி-முகில்)

ர.ரா



கியாமத் நாளின் அடையாளங்கள் . 07-02-2020

(பூகோளப் புதிர்கள் 8 )

வால் நட்சத்திரத்தில் தொடங்கி வாட்ஸ்அப் வரை உலகை அழிக்கப் போகும் விஷயங்கள் என பல நூறு மிரட்டல்களை விஞ்ஞானிகள் சொல்ல சொல்ல , ' அட , போப்பா ' என்று நாமும் கடந்து வந்திருக்கிறோம்.

உண்மையிலே இந்த பூமியை அழிக்க முடியுமா? அப்படி முடியும் என்றால் எவையெல்லாம் பூமிக்கு ஆபத்து உண்டாக்கக் கூடியவை என்ற கேள்வி நம் எல்லோருக்குமே உண்டு.

தோன்றி 4,550,000,000 ஆண்டுகள் பழைய, (நேற்றுதான் பிறந்த நாள் கொண்டாடி , மற்ற கிரகங்களெல்லாம் சுற்றிச் சுற்றி வந்து வாழ்த்துப் பாடி ) 5,973,600,000,000,000,000,000 டன் எடை கொண்ட பூமிக்கு பேராபத்து விளைவிக்கக் கூடிய முக்கிய பிரச்னைகளை ஆராய்ச்சியாளர்கள் பட்டியலிட்டிருக்கிறார்கள்.

1) மாறி வரும் பருவநிலை

பூமியின் சராசரி வெப்பநிலை 2 டிகிரி உயர்ந்திருக்கிறது. அதற்கே துருவப் பகுதிகளில் இருக்கும் பனிக்கட்டிகள் உருகத் தொடங்கிவிட்டன. மனிதர்கள் இதே வேகத்தில் இயங்கிக் கொண்டிருந்தால் இன்னும் சில நூற்றாண்டுகளில் அந்த 2 டிகிரி, 4-6 டிகிரி ஆகிவிடும் என்கிறார்கள் ஆராய்ச்சியாளர்கள். அப்படி ஆனால், அதைப் பூமியால் தாங்க முடியாது. கடல் மட்டம் உயரும். பெங்களூருக்கே கடற்கரை வந்தாலும் ஆச்சர்யப்பட தேவையிருக்காது என பகீர் கூட்டுகிறார்கள் விஞ்ஞானிகள். உலகம் முழுவதுமே காடுகள் வறட்சியால் பாதிக்கப்பட்டு வருகின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

"(அவர்கள் வசித்திருக்கும்) பூமியை அதன் ஓரங்களிலிருந்து நிச்சயமாக நாம் (படிப்படியாகக்) குறைத்து வருவதை அவர்கள் காணவில்லையா? அல்லாஹ்வே தீர்ப்பளிக்கக்கூடியவன். அவனுடைய தீர்ப்பைத் தடை செய்யக் கூடியவன் ஒருவனுமில்லை. அவன் கேள்வி கணக்குக் கேட்பதில் மிக்க சுறுசுறுப்பானவன். (குர்ஆன் : 13:41)

2) அணு ஆயுதப் போர்:

ஹிரோஷிமா, நாகசாகியை மறக்க முடியுமா? ஒரே ஒரு நல்ல விஷயம் என்னவென்றால், ஒட்டு மொத்த உலக மக்கள் தொகையையும் அழிக்க அதிக அளவிலான அணு ஆயுதங்கள் தேவை. அவ்வளவு ஆயுதம் இப்போது உலகில் இல்லை. ஆனாலும், அணு ஆயுதங்கள் உலகை அழிக்க கூடியவை பட்டியலில் இடம் பிடித்திருப்பது ஏன் தெரியுமா? அணு ஆயுதங்களால் பூமியின் வெப்பநிலை சடார் என குறைந்துவிடும். மனிதர்களின் உணவுப்பொருட்களை எதுவும் அந்தக் குளிரில் உற்பத்தி ஆகாது. அதன் விளைவாக மனித இனம் அழியலாம் என்கிறார்கள் விஞ்ஞானிகள்.

" மயிர்களால் ஆன செருப்புகளை அணிந்துள்ள ஒரு சமுதாயத்தவருடன் நீங்கள் போர் செய்யாத வரை மறுமை நாள் வராது. உறுதியாக கேடயம் போன்ற முக அமைப்புள்ள ஒரு கூட்டத்தாருடன் நீங்கள் போர் செய்யாத வரை மறுமை நாள் ஏற்படாது " என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் .
அபூஹுரைரா (ரலி) புகாரி ,திர்மிதீ

3) சூழியல் பேரழிவு

சூழியல் பேரழிவு என்பது உயிரினங்கள் வாழத்தேவையான சூழ்நிலையை கொஞ்சம் கொஞ்சமாக பூமி இழந்து வருவதுதான். குளோபல் வார்மிங்கில் தொடங்கி இதற்கு பல காரணங்கள் இருக்க கூடும்.

உலகம் அழிவதற்கு முதல் அடையாளம் கீழைநாட்டில் தோன்றுகின்ற நெருப்பு மேல்நாடு வரை பரவி பின் உலகம் முழுவதும் பரவி உலகம் அழியும்.

4) உலக பொருளாதார சரிவு:

இதனால் எல்லாம் உலகம் அழியுமா? நியாயமான சந்தேகம்தான். ஆனால், உலகம் போகும் திசையை ஆராய்ந்த ஆராய்ச்சியாளர்கள், எதிர்காலத்தில் இப்போது இருக்கும் பொருளாதாரக் கொள்கைகளால் பல நாடுகள் திவால் ஆகலாம் என்கிறார்கள். அதனால், மக்கள் தொகை குறையும். மக்கள் தொகை பெருகவே பெருகாது எனவும் அஞ்சுகிறார்கள். தப்பிப்பிழைக்கும் நாடுகளும் தங்களுக்கும் போரிட்டு மடியலாம் என்கிறார்கள் கணக்கு வாத்தியார்கள்.

" (மறுமை நாள் நெருங்கும்போது) காலம் சுருங்கும். செயல் குறையும் .மக்களின் உள்ளங்களில் கஞ்சத்தனம் உருவாகும் குழப்பங்கள் தோன்றும் . கொலை பெருகும் " என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் -
அபூஹுரைரா(ரலி)
புகாரி 7061 .

5) சிறுகோள்களின் தாக்குதல்:

asteroid impact என்பார்கள். கோள்கள் மோதிகொள்வதால் ஏற்படும் பாதிப்புகள். டைனோசர் என்ற இனமே அழிந்து போனதுக்கு அப்போது நடந்த மோதல் தான் காரணம் என விஞ்ஞானிகள் சொல்கிறார்கள். (அதை மறுக்கும் ஒரு பிரிவும் உண்டு). எதிர்காலத்தில் அதேபோல் மீண்டும் ஒரு சம்பவம் நடக்க வாய்ப்பு இருப்பதாக கருதப்படுகிறது. அதனாலும் உலகம் அழியலாம்.

"அன்றி (அந்நிராகரிப்பவர்கள்) "எங்கள் அல்லாஹ்வே! இவ்வேதம் உன்னிடமிருந்து வந்தது உண்மையானால் எங்கள்மீது வானத்திலிருந்து கல்மாரியைப் பொழி! அல்லது துன்புறுத்தும் (ஒரு) வேதனையை எங்களுக்குக் கொண்டு வா!" என்று அவர்கள் கூறியதையும் (நபியே!) நீங்கள் நினைத்துப் பாருங்கள்.
(அல்குர்ஆன் : 8:32)

இந்தப்பட்டியலில் எரிமலைகள் தொடங்கி நேனோ டெக்னாலஜி வரை பல விஷயங்களைப் பட்டியிலிடுகிறார்கள் ஆராய்ச்சியாளர்கள். இவை எல்லாமே உலகையோ, மனித இனத்தையோ எதிர்காலத்தில் அழிக்கும் தன்மையுடையவை என்கிறார்கள்.

இவையெல்லாம் மனிதனுக்கு தெரிந்து நடக்கக்கூடியவை. ஆனால், இயற்கை அவ்வளவு சிறியதா? நம்மால் யோசிக்கவே முடியாத, ஆராயவே முடியாத எவ்வளவோ விஷயங்கள் உண்டு. அதில் ஏதேனும் ஒன்று கூட பூமியை அழிக்கலாம் இல்லையா?

அப்போ, கியாமத் நாள் வந்தே தீரும். அது எப்போது வரும் ?

( நபியே ! " மறுமையின் ) நேரத்தைப் பற்றி - அது எப்போது ஏற்படும்? " என்று அவர்கள் உம்மைக் கேட்கிறார்கள்.

அ(ந்நேரத்)தைப் பற்றி நீர் குறிப்பிடுவதற்கு என்ன இருக்கிறது?

அதன் முடிவெல்லாம் உம்முடைய இறைவனிடம் (அல்லவா) இருக்கிறது !

அதை பயப்படுவோருக்கு, நிச்சயமாக நீர் எச்சரிக்கை செய்பவர் தாம்,

நிச்சயமாக அதை அவர்கள் காணும் நாளில், மாலையிலோ, அல்லது காலையிலோ ஒரு சொற்ப நேரமேயன்றி, அவர்கள் (இவ்வுலகில்) தங்கியிருக்கவில்லை என்று தோன்றும்.
(அல்குர்ஆன் 79.42 46

உலக இறுதிநாளின் அடையாளமோ ?

(பூகோளப் புதிர்கள் 6 )







வேகமாக நகர்ந்து வரும் பூமியின் வட துருவ காந்தப் புலம்: பூமி தலைகீழாக மாறலாம் என விஞ்ஞானிகள் கணிப்பு!

உலகத்தின் வட துருவ காந்தப் புலம் (Magnetic North Pole) வேகமாக நகர்ந்து வருவதாக ஆராய்ச்சியாளர்கள் எச்சரித்துள்ளனர். பூமிப் பந்தின் வட புலம் துல்லியமாக குறிக்கப்பட்டது 1881ம் ஆண்டில் இருந்து தான். ஆனால், அப்போதிருந்தே அது ஆண்டுக்கு, 10 கி.மீ., இடம் பெயர்ந்து வருவதை ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்தனர்.

ஆனால், இந்த வேகமானது கடந்த சில ஆண்டுகளாக மிக மிக அதிகரித்துள்ளது. அதாவது, வட காந்தப் புலம் தற்போது ஆண்டுக்கு, 30 முதல் 40 கி.மீ வரை இடம்பெயர ஆரம்பித்து இருப்பதாக ஆராய்ச்சியாளர்கள் தகவல் தெரிவித்துள்ளனர். இதுகுறித்த விவரங்கள், அடுத்த ஒரு வருடத்திற்கான துருவங்கள் பற்றிய புதிய ஆய்வறிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளதாவது, வட காந்த துருவம் கடந்த ஒரு வருடத்தில் 34 மைல் தொலைவில் கனடாவின் ஆர்டிக் பகுதியிலிருந்து சைபீரியாவை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறது.

வட காந்த முனை நோக்கி திசைகாட்டி ஊசி புள்ளிகள் உள்ளன. தற்போது ஏற்பட்டுள்ள இந்த வடபுல மாற்றத்தால், திசைகாட்டிகளில் மாற்றம் ஏற்படத் தொடங்கியுள்ளது. எனவே, கப்பல்கள், விமானங்கள், நீர்மூழ்கிக் கப்பல்கள் போன்றவற்றில் உள்ள திசைகாட்டிகளை மேம்படுத்த வேண்டும்.

வட காந்த துருவம் நகர்வதால், ஸ்மார்ட்போன்கள் மற்றும் மின்னணு சாதனங்களில் நிலையாக இருக்கும் வழிகாட்டிகளுக்குச் சிக்கலை ஏற்படுத்தும் என தெரிவிக்கப்பட்டுள்ளது. மேலும், இந்த புல நகர்வால் வட துருவத்திற்கு அருகே இருப்பவர்களுக்கே லேசான பாதிப்பு ஏற்படும். அதற்குத் தள்ளி இருக்கும் நாடுகள், இப்போதைக்கு இதுபற்றி கவலைப்பட வேண்டியதில்லை.

பூமியின் தற்போதுள்ள இரு காந்தப் புலங்களும், 7.8 லட்சம் ஆண்டுகளுக்கு முன் தலைகீழாக மாறியவைதான் எனக் கூறப்படும் நிலையில், அப்படி ஒரு மாற்றம் வருவதற்கான அறிகுறியே நகர்வு வேகம் அதிகரித்துவருவது என்று விஞ்ஞானிகள் கணித்துள்ளனர்.

பூமி தலைகீழாக மாறும்போது உலகில் நடைபெறும் செயல்கள் என்னென்ன என்பதை குர்ஆன் பட்டியலிட்டு காட்டுகிறது .

اَوَلَمْ يَرَوْا اَنَّا نَاْتِى الْاَرْضَ نَـنْقُصُهَا مِنْ اَطْرَافِهَا  وَاللّٰهُ يَحْكُمُ لَا مُعَقِّبَ لِحُكْمِهٖ وَهُوَ سَرِيْعُ الْحِسَابِ

பூமியை அதன் அருகுகளிலிருந்து நாம் (படிப்படியாகக்) குறைத்து வருகிறோம் என்பதை அவர்கள் பார்க்கவில்லையா, மேலும், அல்லாஹ்வே தீர்ப்பளிப்பவன்; அவன் தீர்ப்பை மாற்றுபவன் எவனுமில்லை! மேலும், அவன் கேள்வி கணக்கு கேட்பதில் மிகவும் தீவிரமானவன். (குர்ஆன் : 13:41)

بَلْ مَتَّعْنَا هٰٓؤُلَاۤءِ وَ اٰبَآءَهُمْ حَتّٰى طَالَ عَلَيْهِمُ الْعُمُرُ  اَفَلَا يَرَوْنَ اَنَّا نَاْتِى الْاَرْضَ نَـنْقُصُهَا مِنْ اَطْرَافِهَا  اَفَهُمُ الْغٰلِبُوْنَ

எனினும், இவர்களையும் இவர்களுடைய மூதாதையரையும், அவர்களுடைய ஆயுட்காலம் வளர்ந்தோங்கும் வரை சுகங்களை அனுபவிக்கச் செய்தோம்; நாம் (இவர்களிடமுள்ள) பூமியை அதன் அருகுகளிலிருந்து குறைத்து கொண்டு வருகிறோம் என்பதை இவர்கள் காணவில்லையா? இவர்களா மிகைத்து வெற்றிக் கொள்பவர்கள்?
(அல்குர்ஆன் : 21:44)

وَتَرَى الْجِبَالَ تَحْسَبُهَا جَامِدَةً وَّهِىَ تَمُرُّ مَرَّ السَّحَابِ صُنْعَ اللّٰهِ الَّذِىْۤ اَتْقَنَ كُلَّ شَىْءٍ اِنَّهٗ خَبِيْرٌ بِمَا تَفْعَلُوْنَ

இன்னும் நீர் மலைகளைப் பார்த்து அவை மிகவும் உறுதியாக இருப்பதாக எண்ணுகிறீர்; (எனினும் அந்நாளில்) அவை மேகங்களைப் போல் பறந்தோடும்; ஒவ்வொரு பொருளையும் உறுதியாக்கிய அல்லாஹ்வின் செயல்திறனாலேயே (அவ்வாறு நிகழும்.) நிச்சயமாக, அவன் நீங்கள் செய்வதை நன்கு அறிபவன்.
(குர்ஆன் : 27:88)

وَيَسْــٴَــلُوْنَكَ عَنِ الْجِبَالِ فَقُلْ يَنْسِفُهَا رَبِّىْ نَسْفًا ۙ

(நபியே!) இன்னும் உம்மிடம் மலைகளைப்பற்றி அவர்கள் கேட்கிறார்கள். “அவைகளை என் இறைவன் தூள் தூளாக்கி (மணல்களைப் போல் பரப்பி)விடுவான்” என்று நீர் கூறுவீராக. (குர்ஆன் : 20:105)

فَيَذَرُهَا قَاعًا صَفْصَفًا ۙ

“பின்பு, அவற்றைச் சமவெளியாக்கி விடுவான். (அல்குர்ஆன் : 20:106)

لَّا تَرٰى فِيْهَا عِوَجًا وَّلَاۤ اَمْتًا

“அதில் நீர் மேடு பள்ளத்தை காணமாட்டீர்.” (அல்குர்ஆன் : 20:107)

يَوْمَ تُبَدَّلُ الْاَرْضُ غَيْرَ الْاَرْضِ وَالسَّمٰوٰتُ وَبَرَزُوْا لِلّٰهِ الْوَاحِدِ الْقَهَّارِ

இந்த பூமி வேறு பூமியாகவும், இன்னும் வானங்களும் மாற்றப்படும் நாளில் (அவர்கள் தண்டிக்கப்படுவார்கள்.) மேலும் அடக்கியாளும் ஏகனாகிய அல்லாஹ்வின் முன்னிலையில் வெளியாகி நிற்பார்கள்.
(அல்குர்ஆன் : 14:48)

ர.ரா

## வான்வெளியில் பூமிக்கு அருகில் மர்ம ஒளிமயமான வெடிப்பு

( பூகோளப் புதிர்கள் 5) 05—2-2020

விண்வெளி என்பது நட்சத்திரங்கள் மற்றும் கிரகங்களுடன் சேர்த்து, கணக்கில் அடங்காத மர்மங்களையும் தன்னுள் கொண்டுள்ளது. அந்த மர்மங்களானது அவ்வப்போது பூமிவாசிகளாகிய நம் கண்களில் சிக்குவதும் உண்டு. அது பெரும்பாலும் விண்கல் அல்லது விண்மீன் அல்லது எரிகல் மோதலாகதான் இருக்கும்.

சமீபத்தில் நடந்த நிகழ்வொன்று மிகவும் விசித்திரமானதாக உள்ளது. இந்த நிகழ்வானது ரஷ்ய ஆய்வாளர்களின் கண்களில் சிக்கி உள்ளது. அதாவது பூமியின் வளிமண்டலத்தில் மர்மமான வெடிப்புகள் நிகழ்வது கண்டு அறியப்பட்டுள்ளது. இந்த வெடிப்புகளின் இயற்பியல் சார்ந்த இயற்கையை விஞ்ஞானிகளால் புரிந்து கொள்ள முடியவில்லை என்பதுதான் பல வகையான கேள்விகளை எழுப்பி உள்ளது, அந்த கேள்விகளில் ஏலியன்ஸ் எனப்படும் வேற்று கிரக வாசிகளும் அடக்கம் என்பது குறிப்பிடத்தக்கது.

இந்த மர்மமான வெடிப்புகளை ரஷ்ய செயற்கைக்கோள் லோமோனோஸ்வில் (Lomonosov) நிறுவப்பட்ட புறஊதா தொலைநோக்கி மூலம் காணப்பட்டு உள்ளது, மற்றும் இந்த வெடிப்புகள் வெளிப்படையாக வளிமண்டலத்தில் பல முறை நடந்ததுள்ளது .

ரஷ்ய நாட்டு செயற்கைக்கோள் லோமோனோஸ்வ் கடந்த 2016 ஆம் ஆண்டு பூமியின் சுற்றுப்பாதைக்குள் செலுத்தப்பட்டது. அதன் முதன்மை நோக்கமானது பூமியின் மேல் வளிமண்டலத்தில் நடக்கும் நிலையற்ற நிகழ்வைக் கவனிக்க வேண்டியதாகும். அத்துடன் சேர்த்து நமது பூமி கிரகத்தின் காந்த மண்டலத்தின் கதிர்வீச்சு தன்மையை ஆராயும் நோக்கத்தையும் இந்த செயற்கைக்கோள் கொண்டு உள்ளது என்பதும் குறிப்பிடத்தக்கது.

"எங்கள் தொலைநோக்கி உதவியுடன், நாங்கள் எதிர்பார்த்ததைவிட மிக முக்கியமான முடிவுகளை பெற்றுள்ளோம். ஆனாலும் இதுதான் எங்களால் அறிந்து கொள்ள முடியவில்லை என்று ரஷ்ய விஞ்ஞானிகள் கூறுகிறார்கள் .

உதாரணமாக, லோமோனோஸ்வின் பயணமானது பல கிலோமீட்டர் உயரத்தில் இருக்கும்போது, ஒளிமயமான 'வெடிப்பு' பலமுறை நிகழ்ந்து, பதிவும் செய்யப்பட்டு உள்ளது. ஆனால் அது அனைத்துமே தெளிவாக உள்ளது. அதில் எந்த புயலும், எந்த மேகங்களும் இல்லை" என்று அவர் கூறி உள்ளார்.

தற்போது புவியின் வளிமண்டலத்தில் இந்த மர்மமான ஒளி வெடிப்பிற்கான சரியான காரணத்தை விஞ்ஞானிகள் விளக்கத்தை வழங்க முடியவில்லை. இருந்தாலும் கூட சதித்திட்டக் கோட்பாட்டாளர்களின்

ஒரு பிரிவினர், இந்த மர்மமான நிகழ்வுகளானது வரவிருக்கும் வேற்றுகிரக ஏலியன்களின் படையெடுப்புக்கு அடையாளமாக இருக்கலாம் என்று வெளிப்படையாக கூறிவருகின்றனர்.

அதாவது, இந்த சதி கோட்பாட்டாளர்களின்படி, ஏலியன்கள் நமது புவியின் வளிமண்டலத்தை அடைந்திருக்கலாம், மேலும் அவர்கள் மனிதர்களையும் பூமியையும் நேரடியாக தாக்கும் முன், தங்களது சக்திவாய்ந்த ஆயுதங்களை பரிசோதனை செய்யலாம், அவைகள் தான் இந்த மர்மமான வெடிப்புகளுக்கு காரணம் என்கிறாரகள்.

வேறு சதித்திட்ட கோட்பாளர்கள், இந்த விளக்கமில்லாத வான்வெளி நிகழ்வுகளானது தவிர்க்க முடியாத அழிவின் அடையாளமாக இருக்கலாம் என்று வாதிடுகின்றனர். இந்த கோட்பாட்டாளர்களின்படி, உலகம் அதன் இறுதி நாட்களை நோக்கி சென்று கொண்டு இருக்கிறது. இது சமீபத்திய சூப்பர் ப்ளட் மூன் நிகழ்வுடன் தொடர்பு கொண்ட ஒரு நிகழ்வாகும் என்றும் உலகின் கடைசி நாள் என்று கூறப்படும் டூம்ஸ்டேவிற்கான ஒரு அறிகுறிதான் இது என்றும் கூறுகின்றனர்.

இது பற்றி குர்ஆனில் தேடியபோது , அல்லாஹ் குறிப்பிடுவது ....

وَلَقَدْ جَعَلْنَا فِى السَّمَآءِ بُرُوْجًا وَّزَيَّنّٰهَا لِلنّٰظِرِيْنَۙ

வானத்தில் கிரகங்களுக்கான பாதைகளை நிச்சயமாக நாம் அமைத்து பார்ப்போருக்கு அவற்றை அலங்காரமாகவும் ஆக்கினோம்.

(அல்குர்ஆன் : 15:16)

وَحَفِظْنٰهَا مِنْ كُلِّ شَيْطٰنٍ رَّجِيْمٍۙ

விரட்டப்பட்ட ஒவ்வொரு ஷைத்தானை விட்டும் நாம் அவற்றைப் பாதுகாத்தோம்.

(அல்குர்ஆன் : 15:17)

اِلَّا مَنِ اسْتَرَقَ السَّمْعَ فَاَتْبَعَهٗ شِهَابٌ مُّبِيْنٌ

திருட்டுத்தனமாக ஒட்டுக் கேட்கும் ஷைத்தானைத்தவிர; (அப்போது) பிரகாசமான தீப்பந்தம் அந்த ஷைத்தானை (விரட்டிப்) பின் பற்றும்.

(அல்குர்ஆன் : 15:18)

இதில் சைத்தான் என்பது ஜின்களில் உள்ள கெட்ட ஜின் வர்க்கங்களாகும்.
இது நம் கண்களுக்குத் தெரிவதில்லை .
ஏலியன்கள் எனப்படும் வேற்று கிரகவாசிகளும் நம் கண்களுக்குத் தெரிவதில்லை .

வான்வெளியில் பூமிக்கு அருகில் ஏற்பட்ட மர்மமான வெடிப்புக்கு என்ன காரணம் என்பதை அல்லாஹ்வே அறிவான் .

ர ரா

## அண்டார்டிகாவின் மர்மமான வானிலை !

( பூகோளப் புதிர்கள் 4 )

அண்டார்டிகாவில் வானிலையில் கடந்த காலத்தின் நிகழ்வுகளின் பதிவுகள் நிகழ்காலத்தில் நிகழ்ந்தது !

இந்தப் பனிகண்டத்தில் உலகின் 46 நாடுகளிலிருந்து வந்த 4000 விஞ்ஞானிகள் 50 ஆண்டுகளுக்கும் மேலாக நினைத்துப் பார்க்க முடியாத பல ஆராய்ச்சிகளை மேற் கொள்கிறார்கள். இந்த இடத்தில் எப்போதும் விசித்திரமான நம்ப முடியாத பல விஞ்ஞான நிகழ்வுகள் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன . அவற்றுள் சிலவற்றிற்கு இன்னும் விளக்கங்கள் இல்லை .

அப்படி ஒரு நம்ப முடியாத நிகழ்வு 2018 மே மாதத்தில் நடைபெற்றது . பிரிட்டிஷ் மற்றும் அமெரிக்க விஞ்ஞானிகள் ஒரு பொதுவான க்ளேமேடாலஜி (கால நிலையியல் ) ஆய்வு நடத்திக் கொண்டிருந்த போது , அந்த இடத்தில் மேகங்களை சுற்றியுள்ள காற்று உயர் ஆற்றலுடன் மேகங்களை நகர்த்தி , ஒரு அசாதாரண சுழலை மிகவும் தாழ்வாக நிகழ்த்தியது. விஞ்ஞானிகள், ' இது துருவ புயல் ' என்றுதான் நினைத்த நிலையில் அதன் அசாதாரண சுழலை வைத்து அது துருவ புயல் அல்ல என்பதை விளங்கிக் கொண்டனர் .

வின்ச் இணைக்கப்பட்ட ஒரு வளிமண்டல பலூன் , வெப்பநிலை, ஈரப்பதம் , காற்றின் அழுத்தம் , வேகம் போன்றவற்றை பதிவு செய்யும் அளவீட்டுப்பதிவுக் கருவியான ஒரு க்ரோனா மீட்டர் உடன் தயார் செய்யப்பட்டது.

பின்னர் அந்தபலூன் சுழல் காற்றிற்குள் இதனை அனுப்பப்பட்டு , அளவீடுகளுக்கு தேவையான நேரம் வரை அதில் வைக்கப்பட்டது. பின் பரிசோதித்த போது ஒரு குழப்பமான முடிவு கிடைத்தது.

க்ரோனோமீட்டரில் ஜனவரி 27, I965 என்ற தேதி குறிக்கப்பட்டிருந்தது . மேலும் கணக்கிடப்பட்ட அளவீடுகள் காற்றின் இயல்பான பண்புகளிலிருந்து முற்றிலும் மாறுபட்டிருந்தது .

இந்த சோதனையை மீண்டும் மீண்டும் செய்யப்பட்டும், கருவிகளை மாற்றியமைத்து ஆய்வு செய்த போதும் முடிவு மாறாமல் க்ரோனோமீட்டரில் அதே ஜனவரி 27, I965 என்ற தேதி குறிக்கப்பட்டிருந்தது. நடக்கும் நிகழ்வு 2018 மே மாதம் !

இந்த ஆய்வு சோதனைகளில் பங்கு பெற்ற விஞ்ஞானிகளில் ஒருவரான அமெரிக்கர் மேரியான் மெக்லீன் இந்த சம்பவத்தை உறுதிப்படுத்தியதுடன் , இராணுவ புலனாய்வு சிஐஏ, என்எஸ்ஏ மற்றும் வெள்ளை மாளிக்கைக்கு தெரிவிக்கப்பட்டது.

சிலர் உறைந்த பனிக் கண்டத்தில் , ஒரு டைமென்ஸனல் போர்டலை திறக்கும் போது முப்பரிமாணங்களை தாண்டி மற்ற பரிமாணங்களுக்குள் பயணிக்கும் ஒரு அறிவியல் புனைவு (Science fiction ) மாதிரி இது இருக்கலாம் .

அல்லது கண்கவர் கோட்பாடான பனிப்பரப்பின் தடுத்த அடுக்கின் கீழ் நீண்ட காலத்திற்கு முன்பு மறைந்த ஒரு பண்டைய நாகரிகத்தின் தடயங்கள் இருக்கலாம் .

அல்லது சில வேற்று கிரக பொருட்கள் கூட நிலத்தடியில் புதைந்து இருக்கலாம் . அவைகள் வெளிப்படுத்தும் சிக்னல் காரணமாக அசாதாரண சூழலை ஏற்படுத்த முடியும் .

ஆனால் காற்று , மேகங்கள் , இடி , மின்னல் போன்ற பொதுவான க்ளேமேடாலஜி பணிகளை இறைவன் வானவர் இஸ்ராபீல் (அலை) அவர்கள் மூலம் நிகழ்த்துகிறான் என்பதை இஸ்லாமியர்களால் அறிந்து கொள்ள முடியும் . இது பற்றி குர்ஆனில் அல்லாஹ் ...

وَاللّٰهُ الَّذِىْۤ اَرْسَلَ الرِّيٰحَ فَتُثِيْرُ سَحَابًا فَسُقْنٰهُ اِلٰى بَلَدٍ مَّيِّتٍ فَاَحْيَيْنَا بِهِ الْاَرْضَ بَعْدَ مَوْتِهَا كَذٰلِكَ النُّشُوْرُ
அல்லாஹ்தான் காற்றை அனுப்புகிறான். அது மேகங்களை ஓட்டுகின்றது. பின்னர், அவைகளை இறந்து (பட்டுப்) போன பூமியளவில் செலுத்தி, இறந்து போன பூமியை உயிர்ப்பிக்கின்றான். (மரணித்தவர்கள் மறுமையில்) உயிர்பெற்று எழுவதும் இவ்வாறே. (குர்ஆன் : 35:9)

وَّالنّٰشِرٰتِ نَشْرًا ۙ

மேகங்களை பல திசைகளில் பரப்பிவிடுபவர்களின் மீதும் சத்தியமாக!
(அல்குர்ஆன் : 77:3)

அண்டார்டிகாவில் வானிலையில் கடந்த காலத்தின் நிகழ்வுகளின் பதிவுகள் நிகழ்காலத்தில் நிகழ்ந்ததை விஞ்ஞானிகள்தான் விளக்க வேண்டும் .

வல்ல ரஹ்மான்தான் அனைத்தும் அறிந்தவன்.

ர.ரா
2

## கனவுலகம் - சுஜாதா

ஞாயிறு, ஆகஸ்ட் 5, 2001

“எதற்கு அமெரிக்கா வருகிறீர்கள்?” கௌன்ட்டர் ஆசாமி கேட்டார்.

“கம்ப்யூட்டர் ப்ரோக்ராம் ப்ராஜக்டுக்காக,” ஜெயேஷ் பதிலளித்தான்.

“பாஸ்போர்ட் ப்ளீஸ்?”

கொடுத்தான்..

“எவ்வளவு நாள் தங்குவீர்கள்?”

“தோராயமாக இரண்டு வருடம்”

“பின்னர்?”

“இந்தியாவிற்குத் திரும்பிவிடுவேன். வேறென்ன?”

அந்த ஆசாமி அவனை அரை வினாடி முறைத்தார்.

“எங்கு தங்குவீர்கள்?”

“எங்கள் கம்பெனி கெஸ்ட் ஹவுஸில். நியூஜெர்ஸியில்...”

டங் ! பாஸ்போர்ட்டில் முத்திரை. “வெல்கம் டு அமெரிக்கா! நெக்ஸ்ட் !”

இருபத்து நான்கு வயதில் தன் அமெரிக்க கனவு நிறைவேறும் அதிர்ஷ்டத்தை எண்ணி மகிழ்ந்தான்.

நியூ ஜெர்ஸி அவனுக்கு சென்னையின் அண்ணாநகரை நினைவூட்டியது. பல இந்திய முகங்கள்.

காலை ஏழு மணிக்கு வரும் பஸ் பிடித்து, ஹட்ஸன் நதியை வேடிக்கை பார்த்து, பலமாடிக் கட்டிடங்களைக் கண்டு வியந்து மான்ஹட்டனில் உள்ள அலுவலகத்தை அடைந்தான். சிலநாட்களிலேயே வேடிக்கை பார்ப்பது போரடித்து, கதைப்புத்தகம் படிக்கும் பழக்கத்தைத் தொடர்ந்தான். இப்படி ஒரு நாளில்தான் அவன் ராதிகாவை சந்தித்தான்.

புதன், ஆகஸ்ட் 8, 2001

ஜெயேஷ் ஜேம்ஸ் பாட்டர்சனின் புத்தகத்தில் மூழ்கியிருந்தான். அவள் பஸ்சில் ஏறி, அவனருகே காலியாக இருந்த சீட்டில் அமர்ந்தாள். அவன் படிப்பதைத் தொடர்ந்தான்.

“நீங்கள் பாட்டர்சன்னின் விசிறியா?” அந்த அழகுக் குரல் அவனுக்கு கேட்டது.

அதிசயமாக அவளை நோக்கினான்.

“ராதிகா,” கையை நீட்டினாள்.

“ஜெயேஷ்.” அவள் கை மிருதுவாக இருந்தது.

“எந்த கதைகள் படித்திருக்கிறீர்கள்?”

“Kiss the Girls அப்பறம் Along Came a Spider.”

“நாலு வருஷத்துக்கு முன் படித்தது.”

“எங்கே வேலை பார்க்கறீங்க?”

“தாம்ப்சன் மக்காலே. நீங்க?”

“இன்ஃபோமாடிக் சர்விஸ்ஸ். மான்ஹட்டன்ல ஆஃபீஸ்.”

“இந்த பஸ்லயா தினம் வர்றீங்க?”

“ஆமா. வேற நல்ல வழி இருக்கா??”

“எனக்கு தெரிஞ்சு இல்லை.”

படிப்பதைத் தொடர்ந்தான். எட்டரை மணிக்கு அவள் எழுந்து “பை” என சென்றுவிட்டாள். அவள் அழகாக இருப்பதாக அவனுக்கு தோன்றியது. ‘இன்னும் கொஞ்சம் பேசியிருக்கலாமோ? இனி சந்திப்பது துர்லபம்’

வியாழன், ஆகஸ்ட் 9

அவன் கணக்கு தவறு!

அவள் அதே ஸ்டாப்பில் 7.20க்கு ஏறி, “ஹாய்” என்று புன்னகைத்து அருகே அமர்ந்தாள்.

“பாட்டர்சன் எவ்வளவு பக்கம்?”

“படு ஸ்லோ. நேத்தி வேலை அதிகம். ராத்திரி படிக்கலை... அப்பறம்... நேத்தி உங்ககூட அதிகம் பேசலை. சாரி.”

அவள் களுக்கென்றாள். அவன் தொடர்ந்தான்.

“இதே பஸ்லதான் தினம் வருவீங்களா?”

“ஆமா. வசதியான டைமிங். இறங்கி ஒரு பர்கர் வாங்கி சாப்பிட்டுண்டே ஆஃபீஸ் போக சரியா இருக்கு.”

“ஹூம்... நானும் அதான் பண்றேன். பர்கர் சாண்ட்விச்செல்லாம் போரடிக்கறது. நாக்கு தோசை சாம்பாருக்கு ஏங்கறது.”

“இந்த வாரக்கடைசில நான் உங்களை இந்தியன் ஹோட்டலுக்கு கூட்டிண்டு போறேன். ஒகே?

“வாவ். லவ்லி.”

பொதுவாக பேசிக்கொண்டிருந்துவிட்டு தன் ஸ்டாப் வந்தவுடன் “பை” என்றுவிட்டு சென்றாள்.

வெள்ளி, ஆகஸ்ட் 10

“இன்னிக்கே இந்தியன் ஹோட்டலுக்கு போலாமே?”

களுக் ! “கடலை போடறியா?” ஒரே நாளில் நீங்கள் நீயானதை கவனித்தான்.

“ஐயய்யோ! இல்லை. வெறும் தோசைதான் கேட்டேன்.”

“சரி. நியூ ஜெர்ஸிலியே ஒரு இடத்துக்கு சாயந்தரம் கூட்டிண்டு போறேன். ஆனா அவா அவா பில்லை அவா அவாதான் குடுக்கணும். சரியா?”

“ரொம்ப சரி.”

“நீ வெஜிடேரியனா?”

“ஆமா. சுத்தமான பாப்பான்.”

“சொந்த ஊர் எது?”

“கும்பகோணம். உனக்கு?”

“நானும் ஐயர்தான். சிதம்பரம். கொள்ளுத்தாத்தா சிதம்பரம் கோயில்ல தீக்ஷிதரா இருந்தார். ஆனா நான் முட்டை சாப்பிடுவேன்.”

“நானும் முட்டை சாப்பிடுவேன்.” அவள் கண்டுக் கொள்ளவில்லை.

“7.45க்கு ஜிம்மி மாக்ஸுக்கு வந்துடு.” இறங்கி சென்றாள்.

இரவு டின்னர் அவர்களை இளக்கியது. கலிஃபோர்னியா ஒயின் அவர்களை சிரிக்கச் செய்தது. ஜெயேஷ் மிகவும் ஜாக்கிரதையாக பேசினான். நடந்துக் கொண்டான்.

“நாளைக்கு நான் நியூ யார்க் சுத்திக்காட்டறேன் வந்துடு,” என்று தோளில் விரலால் குத்திவிட்டுச் சென்றாள். ஜெயேஷ் அன்றிரவு கஷ்டப்பட்டுத் தூங்கினான்.

சனி, ஞாயிறு அவர்கள் ஊரைச்சுற்றினார்கள். லிபர்டி சிலை, சென்ட்ரல் பார்க், ராக்ஃபெல்லர் சென்டர், மியூசியம் இத்தியாதி. செலவுகளை பகிர்ந்துக் கொண்டனர். அவள்மீது தன் கை படாதவாறு ஜாக்கிரதையாக நடந்துக்கொண்டான்.

அடுத்த வாரம் வாஷிங்டன் பார்ப்பது என்று முடிவாயிற்று.

சனி, ஆகஸ்ட் 18

காலை 6 மணி பஸ் அவர்களை 10.30க்கு வாஷிங்டனில் கொண்டு சேர்த்தது. YMCA டார்மிடரியில் இரண்டு தனித்தனி கட்டில்களில் அன்றிரவு உறங்கினர். அவள்மீது அவனுக்கு ஈடுபாடு ஏற்பட்டது. அவளுடைய அறிவாற்றல், புரிந்துக்கொள்ளும் திறமை, நகைச்சுவை இவையனைத்தும் அவனை ஈர்த்தன.

சாலையை கடக்கையில் அவள் அவன் கையை பிடித்துக்கொண்டாள். அவன் விலக்கவில்லை.

இரவு நியூயார்க் திரும்புகையில் கலிஃபோர்னியாவில் தனக்கிருக்கும் டிரெய்னிங் பற்றி கூறினான்.

“என்னிக்கு போறே?”

“நாளைக்கு கார்த்தால.”

அவள் பேசவில்லை. அவள் மௌனம் அவனுக்கு புரியவில்லை.

சிறிது மௌனத்துக்குப்பின் அவள், “சரி. தினம் சாட்ல பேசுவோம்.”

ஒருநாள் ஜெயேஷ் பப்ளிக் பூத்திலிருந்து அவளுக்கு ஃபோன் செய்தான். அதிக வேலை பளுவால் சுருக்கமான பேச்சு. “ஒன்னை ரொம்ப மிஸ் பண்றேண்டா. சீக்கிரம் திரும்பி வா.” பண்றேண்டாவா?

முதல் மாத சம்பளத்தில் அவளுக்காக நாபா பள்ளத்தாக்கின் சுவையான இனிப்பு ஒயின் வாங்கிக்கொண்டான். ஒரு மோதிரம் வாங்கினான். ‘கல்யாணத்துக்கு ஒத்துப்பாளா? வேற யாராவது பாய்ஃப்ரெண்ட் ஊர்ல இருந்தா?’ மனது அவளை சந்திக்கத்துடிப்பது அவனுக்கு புரிந்தது.

செப்டம்பர் 10

பஸ்ஸில் அவனைப் பார்த்ததும் அவன் கரங்களை இறுகக் கோர்த்துக் கொண்டாள் ராதிகா.

"அப்பா, வந்தியா ஒரு வழியா?" என்று பெருமூச்சு விட்டதில், அவனைக் காணாமல் ஏங்கியிருக்கிறாள் என்பது புலனாகியது.

"எங்கெல்லாம் போனே? LA? ஸான் ஃபிரான்ஸிஸ்கோ? ஸான் டியேகோ? தீனியான தீனி தின்னுருப்பியே! உன் தொப்பையைப் பார்த்தாலே தெரியுதே! வீக் எண்ட்டில் என்ன பண்ணினே? ஒண்ணு விடாமல் எல்லாத்தையும் சொல்லு!"

மூச்சு விடாமல் அவள் படபடத்ததை காதலோடு ரசித்தான். 'அடி, பெண்ணே, எப்போ என்னை கல்யாணம் பண்ணிப்பாய்?' என்று மனதில் முனகினான்.

Silicon Valleyஇல் துவங்கி, உத்தியோகம், புதிசாகக் கற்றுக்கொண்ட விஷயங்கள், எதிர்காலத் திட்டங்கள், கனவுகள்.... அவள் மூச்சு வாங்க வசதியாக மெல்ல விவரிக்கும்போது, கைகளை இன்னும் இறுக்கினாள் ராதிகா. அவன் தோளில் தலையை சாய்த்துக்கொண்டாள்.

தோளில் மெல்லச் சாய்ந்து கனாக் காணும் இவளிடம் நம் காதலைச் சொல்ல ஏன் தயக்கம்? ஜெயேஷ் திணறினான்.

ஒரு மாதிரியாக திடப்படுத்திக் கொண்டு, 'ம்ம். ராதிகா, ம்.நான்...ஒரு விஷயம்..' என்று திக்கித் திணறி ஆரம்பித்தபோது அவள் இறங்க வேண்டிய இடம் வந்து தொலைத்தது.

"ஹப்பா..ஒரே ப்ரெஷர்டா இன்னிக்கு. க்ளையன்ட், க்ளையன்ட்டுனு வரீசையா மீட்டிங்.. நாளைக்குப் பார்ப்போம்," என்று பெருமூச்சு விட்டுவிட்டு இறங்கினாள் ராதிகா. "பை!'

'நான் என்னிக்கு சொல்லி, என்னிக்கு கல்யாணம் ஆகி...' தன் மீதே கடுப்பாக இருந்தது அவனுக்கு. 'நாளைக்கு விடறதில்லைடி, உன்னை! ஜெயேஷ், பக் அப் மேன்!'

#மறுநாள்அந்தநாள்!

பஸ்ஸில் தாவியது முதல், வழக்கம் போல அவள் சடசடவென அடித்துத் தள்ள, ஏதானும் காதில் விழுந்தால்தானே? அவளிடம் பேச தொண்டையைத் தேடினான். இதயம் இவ்வளவு வேகமாகத் துடிப்பது நார்மல்தானா என்று பயமாக இருந்தது. ‘வெடித்து விடுமோ?’

அவள் பேசிக்கொண்டேயிருந்தாள்.

'ஜயேஷ், பேசித் தொலைடா! இப்போ இல்லைன்னா எப்பவும் இல்லை' என்ற மனசின் அதட்டலில், சடாரென்று கேட்டான்.

“ராது, என்னைக் கல்யாணம் பண்ணிப்பியா?”

அவள் சட்டென்று திரும்பிப் பார்த்தாள். தீர்க்கமான பார்வை. ஜெயேஷ் ஸஸ்பென்ஸில் வதங்கினான். 'பளார்னு அறைஞ்சுடுவாளோ?'

"ப்ரபோஸ் பண்றியா!" களுக் !

'ஆ..ஆமா(ண்டி அறிவு கெட்டவளே)!'

"சாயந்தரம் வேலை முடிஞ்சு என் ஆஃபீஸ் வா! ரெண்டு பேரும் ஒண்ணா டின்னருக்குப் போகலாம்!" சிரித்தபடி தன் கார்டை நீட்டினாள். உலகம் சுழன்றது ஜெயேஷுக்கு.

"உனக்காகக் காத்திருப்பேண்டா!"

'வேறு என்ன வேலையடி எனக்கு, பெண்ணே!' என்று நெக்குருகியவண்ணம் கையில் இருந்த அவள் ஆஃபீஸ் விலாசத்தைப் படித்தான்.

Radhika M. Iyer
Asst. Manager (Creative)

Thomson McCaulay Advertising Inc
47th Floor, West Tower,
World Trade Center
New York, USA

முற்றிற்று.

கதையின் முடிவு பற்றி பின்னூட்டத்தில் குறிப்பிடவும்

ர.ரா



ஆயிரத்தை அடிப்படையாகக் கொண்டு குர்ஆனின் வசனங்கள் . 01—2-2020
وَاَرْسَلْنٰهُ اِلٰى مِائَةِ اَلْفٍ اَوْ يَزِيْدُوْنَ



பின்னர், நாம் அவரை ஒரு நூறாயிரம் அல்லது அதற்கு அதிகமான மக்களிடம் நம்முடைய தூதராக அனுப்பி வைத்தோம். (குர்ஆன் : 37:147)

யூனுஸ் (அலை) சமூகத்தார்கள் ஒரு லட்சத்து எழுபதாயிரம் பேர் இருந்தனர் - சயீத் பின் ஜுபைர் (ரலி) , மக்ஹூல் (ரஹ்)

ஒரு லட்சத்து முப்பதாயிரம் பேர் இருந்தனர் - இப்னு அப்பாஸ் (ரலி)

அல்லாஹுதஅலா ஒரு லட்சம் என்று குறிப்பிடாமல் ஒரு நூறாயிரம் என்று குறிப்பிட்டிருப்பதால் " ஒரு லட்சத்து முப்பதாயிரம் பேர் இருந்தனர் " என்பதை நாம் விளங்கிக் கொண்டாலும்
' ஒரு நூறாயிரம் அதற்கு மேல் முப்பதாயிரம் பேர் இருந்தனர் ' என்பதாக அல்லாஹுதஆலா பயன்படுத்திய வார்த்தையை அப்படியேதான் நாம் மொழியாக்கம் செய்ய வேண்டும் .
அடுத்து ,
وَلَقَدْ اَرْسَلْنَا نُوْحًا اِلٰى قَوْمِهٖ فَلَبِثَ فِيْهِمْ اَ لْفَ سَنَةٍ اِلَّا خَمْسِيْنَ عَامًا فَاَخَذَهُمُ الطُّوْفَانُ وَهُمْ ظٰلِمُوْنَ
நூஹ் நபியை நம்முடைய தூதராக அவருடைய மக்களிடம் நாம் அனுப்பி வைத்தோம். அவர் ஐம்பது குறைய ஓராயிரம் வருடங்கள் அவர்களிடையே இருந்தார். (இவ்வளவு காலமிருந்தும் அவரை அவருடைய மக்களில் சிலரைத் தவிர பெரும் பாலானவர்கள் நம்பிக்கை கொள்ளவில்லை. இவ்வாறு) அவர்கள் அநியாயக்காரர்களாக இருந்ததனால் வெள்ளப்பிரளயம் அவர்களைப் பிடித்துக்கொண்டது. (குர்ஆன் : 29:14)

'தொள்ளாயிரத்து ஐம்பது வருடம் அவர்களிடையே இருந்தார் ' என்பதை குறிப்பிடாமல் அல்லாஹுதஆலா "அவர் ஐம்பது குறைய ஓராயிரம் வருடங்கள் அவர்களிடையே இருந்தார் " என்பதாக ஆயிரத்தை அடிப்படையாகக் கொண்டு வசனங்களில் கூறி இருப்பது சிந்தனைக்குரிய விஷயம் . மேலும் ...

اِنَّ هٰذَاۤ اَخِىْ لَهٗ تِسْعٌ وَّتِسْعُوْنَ نَعْجَةً وَّلِىَ نَعْجَةٌ وَّاحِدَةٌ فَقَالَ اَكْفِلْنِيْهَا وَعَزَّنِىْ فِى الْخِطَابِ ۝
இவர் என்னுடைய சகோதரர். அவருக்கு தொண்ணூற்றி ஒன்பது ஆடுகள் இருக்கின்றன. என்னிடம் ஒரே ஒரு ஆடுதான் இருக்கின்றது. (அவ்வாறிருந்தும்) அவர் அதனையும் (தனக்குக்) கொடுத்துவிட வேண்டும் என்று கூறித் தர்க்க வாதத்தில் அவர் என்னை ஜெயித்துக் கொண்டார்" என்று கூறினார். (குர்ஆன் : 38:23)

இதில் தொண்ணூற்றி ஒன்பது என்ற வார்த்தைக்கு இடையில் " வாவ் " என்ற எழுத்தை அல்லாஹுதஆலா பயன்படுத்தி இருப்பதால் , தொண்ணாறு அடுத்து ஒன்பது என்பதாக நாம் அர்த்தம் பண்ணிக் கொள்ள வேண்டும் . இந்த "வாவ்" (அடுத்து ) என்ற எழுத்தை அல்லாஹுதஆலா தொண்ணூற்றி ஒன்பது என்ற வார்த்தைக்கு இடையில் எதற்காக பயன்படுத்தி உள்ளான் என்பதை அவனே அறிவான்.

நாம் கூட பாங்க் செக்கில் Rs 9550 /_ (Nine Thousand Five Hundred and Fifty ) என்று எழுவது மாதிரியா ...?

ஆனாலும் இவைகள் அனைத்தும் நம் சிந்தனைக்குரிய விஷயமாக எடுத்துக் கொள்ள வேண்டுமே தவிர விவாதத்திற்குரிய விஷயமாக அல்ல , என்பதாக ஹதீஸ் கலை வல்லுநர்கள் குறிப்பிடுகிறார்களாம் .

இது சரிதானா ? எனக்குத் தெரியவில்லை .

பூகோளப் புதிர்கள் 3

(கண்டங்கள் நகர்வதில்லை ; உயர்கின்றன ) 26-01-2020




70 மில்லியன் ஆண்டுகளுக்கு முன்பு இருந்து , பின் காணாமல் போன ஸீலாண்டியா கண்டம் முதல் 20 கோடி ஆண்டுகளுக்குப் பிறகு வருங்காலத்தில் அமைய இருக்கும் அமாசியா கண்டம் வரை பார்த்து விட்டோம் . மனித குல சரித்திரத்தில் கோடி ஆண்டுகளின் நிகழ்வைப் பற்றியெல்லாம் பேச ஆரம்பித்து விட்டோம். இதை பூமியின் வயதோடும் அதில் வாழும் உயிரினங்களின் வாழ்வோடும் ஒப்பிட்டால் மிஞ்சப் போவது மனித வாழ்வில் ஒன்றுமே இல்லை !

هَلْ اَتٰى عَلَى الْاِنْسَانِ حِيْنٌ مِّنَ الدَّهْرِ لَمْ يَكُنْ شَيْـًٔـــا مَّذْكُوْرًا
ஒவ்வொரு மனிதனுக்கும் (அவன் வெளி வருவதற்கு) முன்னர் ஒரு காலம் செல்லவில்லையா? அதில் அவன், இன்ன பொருள் என்றும் கூறுவதற்கில்லாத நிலைமையிலிருந்தான். (குர்ஆன் : 76:1)

தமிழகத்தில் திருச்சி மாவட்டத்தில் உள்ள கல்லக்குடி என்ற ஊருக்கு அருகே சாரதாமங்கலத்தில் 10 கோடி வருடங்களுக்கு முன்பு கடலில் வாழ்ந்த சிப்பி மீன் , கடல் ஆமைகளின் முட்டைகள் மற்றும் கடல் வாழ் தாவரங்கள் ஆகியவற்றின் புதைபடிவங்கள் கண்டெடுக்கப்பட்டு இருக்கின்றன.

இப்பகுதியில் பெருமழை பெய்தபோது மண்ணுக்குள் இருந்து வெளிவந்த இந்தப் புதைபடிவங்கள் தற்செயலாக கண்டெடுக்கப்பட்டு இருக்கின்றன.
தி இந்து (06 .09 .2005)

அதைப் போலவே திருச்சிக்கு அருகே உள்ள அரியலூரில்
பல இடங்களில் சுண்ணாம்புப் பாறைகள், கடல் வாழ் தாவரங்களின் புதைபடிவங்களும் கண்டெடுக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் இந்த இடங்களிலிருந்து கடல் 100 கி.மீ தொலைவில் உள்ளது. இதன் அடிப்படையில் திருச்சி உட்பட்ட பகுதிகள் 10 கோடி ஆண்டுகளுக்கு முன்பு கடலுக்கு அடியில் இருந்திருக்கின்றன என்று நிரூபணம் ஆகிறது.

ஒரு காலத்தில் நிலத்துக்கு மேலிருந்த கடல் நீர் ஏன் பின்னுக்குத் தள்ளப்பட்டது?
இந்திய கண்டம் கடலின் அடியிலிருந்து கடல் மட்டத்துக்கு மேலாக உயர்ந்து கொண்டிருக்கிறது என்பதே உண்மையான காரணம்.

மேலும் இமயமலையில் 16,400 அடி உயரமுள்ள ,காஷ்மீருக்கு அருகிலுள்ள ஜான்ஸ்கர் மலைப் பகுதியில் 50 கோடி வருடங்களுக்கு முன்பு கடலின் அடியில் வாழ்ந்த ' டிரைலோஃபைட் ' என்ற கடற்பூச்சியின் புதை படிவங்களும் கண்டெடுக்கப்பட்டிருக்கின்றன.

இந்தியாவிற்கு மேற்கே பாகிஸ்தானின் சுலைமான் மலைத்தொடரிலும் , ஆப்கானிஸ்தானிலும் ஏராளமான திமிங்கிலங்களின் எலும்புக்கூடுகள் கண்டெடுக்கப்பட்டிருக்கின்றன.

இந்தியாவுக்கு கிழக்கிலுள்ள திபெத்தில் உள்ள டிங்கிரி என்ற கிராமத்தில் 10 கோடி வருடங்களுக்கு முன்பு வாழ்ந்த இத்தியோசாரஸ் என்கிற டால்பின் போன்ற ராட்சச கடல் மீனின் எலும்பும் கண்டெடுக்கப்பட்டிருக்கின்றன.

எனவே மொத்த இந்தியத் துணை கண்டமே கடலுக்கு அடியிலிருந்து கடல் மட்டத்துக்கு மேலாக உயர்ந்து கொண்டிருப்பது நிரூபணம்.

வட அமெரிக்காவில் கனடா , மத்திய அமெரிக்காவில் மிக்சிகன் டெக்சாஸ் , மெக்ஸிகோவில் உள்ள 3,700 அடி உயர குடாலெப் மலை , ஐரோப்பாவில் உள்ள ஆல்ப்ஸ் மலை ,ரஷ்யாவில் இருக்கும் யூரல் மலை , சைபீரியா , ஆஸ்திரேலியாவில் ஃபிளிண்டர்ஸ் மலை ஆகிய இடங்களில் கடற்பாசி வகைகளும் , பவளப்பாறைத் திட்டுகளும் காணப்படுகின்றன .

கடலின் அடியில் வாழும் பாசிகளும் கடல்வாழ் உயிரினங்களின் உடல் சுரப்பில் உருவான இந்தச் சுண்ணாம்புப் பாறைகளும் மலையில் இருப்பதற்கு , மலையும் மலையைச் சுற்றியுள்ள நிலப்பகுதிகளும் முன்பு கடலின் அடியிலிருந்து கடல் மட்டத்துக்கு மேலாக உயர்ந்திருப்பதே காரணம் ஆகும்.

மேலும் குடாலெப் மலையடிவாரத்தில் மிகப் பெரிய உப்புப் பாலைவனமும் காணப்படுவதால் இந்த நிலப்பகுதி கடலுக்கு அடியிலிருந்து உயர்ந்த பகுதி என்பது தெளிவாக நிரூபணம் ஆகிறது .

தெற்காசியாவையே உலுக்கிய சுனாமியை உருவாக்கிய , சுமத்ரா தீவின் அருகில் ஏற்பட்ட கடலடி நிலநடுக்கத்தின் போது அத்தீவுக்கு அருகில் கடல் அடித்தரை 5 அடி உயரத்துக்கு உயர்ந்ததால் , கடற்பாசி மற்றும் பவளப்பாறை திட்டு வெளியே தெரிகிறது .

எனவே மலைகள் பூமிக்குள் இருந்து உயர்வதால்தான் நில அதிர்ச்சி, சுனாமி மற்றும் நிலச்சரிவு போன்ற இயற்கைப் பேரழிவுகள் ஏற்படுகின்றன.

இது சரியா ? அல்லது நூஹ் (அலை) அவர்கள் காலத்தில் ஏற்பட்ட வெள்ளத்தால் துருக்கி அராரத் மலைத்தொடரே கடலில் முழ்கி இருந்ததாக குர்ஆனில் ....

قِيْلَ يٰنُوْحُ اهْبِطْ بِسَلٰمٍ مِّنَّا وَبَرَكٰتٍ عَلَيْكَ وَعَلٰٓى اُمَمٍ مِّمَّنْ مَّعَكَ وَاُمَمٌ سَنُمَتِّعُهُمْ ثُمَّ يَمَسُّهُمْ مِّنَّا عَذَابٌ اَلِيْمٌ

(வெள்ளப் பிரளயத்தால் ஏற்பட்ட தண்ணீர் வற்றி, நூஹ் நபியின் கப்பல் "ஜூதி" என்னும் மலைமீது தங்கிவிடவே, நாம் நூஹை நோக்கி) "நூஹே! நம்முடைய சாந்தியுடனும் பாக்கியங் களுடனும் (கப்பலிலிருந்து) நீங்கள் இறங்கிவிடுங்கள். உங்களுக்கும் உங்களுடனுள்ள மற்ற மக்களுக்கும் பெரும் பாக்கியங்கள் உண்டாவதாகுக!
என்று கூறப்பட்டது. (குர்ஆன் : 11:48)

துருக்கி மலைச் சிகரத்தில் இருப்பது நோவாவின் கப்பலா?

துருக்கி நாட்டின் மலைச் சிகரத்தில், சமீபத்தில் ஆய்வாளர்கள் கண்டுபிடித்திருப்பது, பைபிளில் கூறப்பட்டுள்ள நோவாவின் கப்பலா என்பது குறித்து, ஆராய்ச்சியாளர் களிடையே குழப்பம் நிலவி வருகிறது.உலகில் பாவச்செயல்கள் பெருகியதால், வெள்ளத்தால் உலகை மூழ் கடிக்க நினைத்த கடவுள், நோவா என்ற தீர்க்கதரிசியிடம், "இன்னும் சில நாட்களில் உலகம் வெள்ளத்தில் மூழ்கி அழியப்போவதால், ஒவ் வொரு மிருகத்திலும் ஒரு ஜோடியைப் பாதுகாத்து, அவற்றை ஒரு கப்பலில் எடுத்துச் செல்' என கூறினார்.

ஊழிக்காலத்துக்கு பின் வெள்ளம் வடிந்த போது, நோவாவின் கப்பல், துருக்கி நாட்டிலுள்ள அராரத் என்ற மலைச்சிகரத்தின் மீது தங்கியது.பின் நோவாவும், உயிரிகளும் மலையிலிருந்து பூமியில் இறங்கி பெருகினர் என்று பைபிளில் கூறப்பட்டுள்ளது. இது 4,800 ஆண்டுகளுக்கு முன்பு நடந்ததாக கூறப்படுகிறது.ஹாங்காங்கைச் சேர்ந்த ஆவணப் பட இயக்குனர் எங்விங்செங் என்பவரின் தலைமையில் "சர்வதேச நோவா கப்பல் மதகுருக் கள்' என்ற அமைப்பை சேர்ந்த 15 பேர் கொண்ட குழுவினர், துருக்கிப் பகுதியில் நோவாவின் கப்பல் குறித்து ஆய்வு மேற் கொண்டனர்.

அராரத் மலைச் சிகரத்தின் ஒரு பகுதியில், அவர்கள் ஒரு கட்டுமானத்தைக் கண்டறிந்தனர். அதில் பல அறைகள் இருக்கின்றன. சில அறைகள் மரத்தால் ஆனவையாக உள்ளன. இந்த மரத்தடுப்புகள், மிருகங்களை வைக்கப் பயன் படுத்திய அறையாக இருக்கும் என்று ஆய் வாளர்கள் கருதுகின்றனர்.

இதுகுறித்து,"இது 100 சதவீதம் நோவாவின் கப்பல் என்று கூறமுடியாவிட்டாலும், 99.9 சதவீதம் அதுதான் என்று கூற முடியும்' என்கிறார் எங் விங் செங்.அராரத் சிகரம் அந்த பகுதியிலேயே மிக உயரமானது. கடல் மட்டத்திலிருந்து 5,515 மீட்டர் உயரத் தில் உள்ளது.துருக்கி அதிகாரிகள், அப் பகுதியை உலக புராதனச் சின்னமாக "யுனெஸ்கோ' அறிவித்தால் தான், அப்பகுதியில் அகழாய்வுகள் நடத்த முடியும் என்கின்றனர்.

இதுதான் சரியா ?

ர.ரா

பூகோளப் புதிர்கள் 2

(வருங்காலத்தில் உருவாக இருக்கும் அமாசியா என்ற சூப்பர் கண்டம் ) 25-01-2020




20 கோடி ஆண்டுகளுக்குப் பிறகு உலகின் கண்டங்கள் எவ்விதமாக அமைய இருக்கிறது ? என்பதை கீழே உள்ள படம் அதைத்தான் காட்டுகிறது என்பதாக விஞ்ஞான கட்டுரையாளர் - என்.ராமதுரை கண்டங்கள் நகர்வு குறித்தும் எழுதுகிறார் .

இடது புறம் தென் அமெரிக்கக் கண்டம் தலை கீழாகத் தொங்குகிற்து. அதை அடுத்து இருப்பது வட அமெரிக்கா. அத்துடன் ஆசியாவும் ஐரோப்பாவும் சேர்ந்து காணப்படுகின்றன. வலது புறத்தில் அடியில் இருப்பது ஆப்பிரிக்கா - உற்றுக் கவனித்தால் அதை அடையாளம் காண முடியும்.

வலது மூலையில் இந்தியா இருப்பதைப் பார்க்கலாம். இப்போது ஆசியாவுடன் ஒட்டிக் கொண்டிருக்கின்ற இந்தியா தனித் தீவு/துணைக் கண்டமாகக் காட்சி அளிக்கிறது. எல்லாமே வட துருவத்தை மையமாகக் கொண்டு அமைந்துள்ளன.

முதல் படத்தில் உள்ளது போலவே உலகின் கண்டங்கள் இப்போது அமைந்துள்ள நிலை .

உலகின் ஐந்து பெரிய கண்டங்கள் இப்படத்தில் ஒன்றோடு ஒன்று ஒட்டியபடி சூப்பர் கண்டமாகத் திகழ்கின்றன. என்றோ ஏற்படப் போகின்ற இந்த சூப்பர் கண்டத்துக்கு சூட்டப்பட்ட பெயர் தான் அமாசியா (Amasia) . இரண்டாவது படத்தில் உள்ளது போல அமைய இருக்கிறது !

உலகின் கண்டங்கள் இப்போது அமைந்துள்ள விதம்எதிர்காலத்தில் இப்படி நிகழுமா? கண்டங்கள் இடம் பெயருமா? கண்டங்கள் ஒன்றோடு ஒன்று சேர முடியுமா என்றெல்லாம் கேட்கலாம். கடந்த காலத்தில் உலகின் கண்டங்கள் இப்படி இடம் பெயர்ந்துள்ளன. இதற்கு அறிவியல் பூர்வமான ஆதாரங்கள் உள்ளன. இப்போதும் சரி, கண்டங்கள் ஓராண்டுக்கு ஒரு செண்டி மீட்டர், இரண்டு செண்டி மீட்டர் எனற வேகத்தில் வெவ்வேறு திசைகளை நோக்கி நகர்ந்து கொண்டு தான் இருக்கின்றன. உதாரணமாக இந்தியத் துணைக் கண்டம் வடகிழக்கு திசை நோக்கி ஓராண்டுக்கு ஐந்து செண்டி மீட்டர் நகர்ந்து கொண்டிருக்கிறது.

வட அமெரிக்கக் கண்டம் மேற்கு நோக்கியும் ஆப்பிரிக்கா கிழக்கு நோக்கியும் இப்போது நகர்ந்து கொண்டிருப்பதால் அட்லாண்டிக் கடலின் அகலம் அதிகரித்து வருகிறது. இதன் விளைவாக லண்டனுக்கும் நியூயார்க் நகருக்கும் இடையிலான தூரம் கொஞ்சங்கொஞ்சமாக அதிகரித்து வருகிறது.

கடந்த காலத்தில் அவ்வப்போது சூப்பர் கண்டங்கள் இருந்தன என்ற காரணத்தால் எதிர்காலத்திலும் சூப்பர் கண்டங்கள் தோன்ற நிச்சயம் வாய்ப்பு உள்ளது.

சுமார் 180 கோடி ஆண்டுகளுக்கு முன்னர் நுனா (Nuna) என்ற சூப்பர் கண்டம் இருந்தது. 110 கோடி ஆண்டுகளுக்கு முன்னர் இருந்த சூப்பர் கண்டத்தின் பெயர் ரோடினியா (Rodiniya). 30 கோடி ஆண்டுகளுக்கு முன்னர் பாஞ்சியா (Pangae) என்ற சூப்பர் கண்டம் இருந்தது.

சூப்பர் கண்டம் தோன்றியது என்றால் அது நிலையாக அப்படியே நீடிப்பதில்லை. சில காலம் கழித்து கண்டங்கள் விலகுகின்றன. கண்டங்கள் ஒன்று சேருவதும் பின்னர் விலகுவதும் அவ்வப்போது நிகழ்ந்து வந்துள்ளது.

கடந்த காலத்தில் சூப்பர் கண்டங்கள் எவ்விதம் உருவாகின, பின்னர் எந்தப் பாணியில் அவை கலைந்தன என்பன பற்றிய தகவல்களை வைத்து அமெரிக்க யேல் பல்கலைக்கழக (Yale) விஞ்ஞானிகள் எதிர்கால் சூப்பர் கண்டம் எவ்விதமாக எப்போது அமையலாம் என்பதை கம்ப்யூட்டர் மாடல்கள் மூலம் கணித்துள்ளனர்.

சூப்பர் கண்டம் உருவாவதற்கு மூன்று வழிகள் உள்ளன. பூமியின் மேற்புறத்தில் ஒரு மையத்திலிருந்து விலகிப் போன கண்டங்கள் மறுபடி அதே மையத்தை நோக்கி வந்து ஒன்று சேருதல்.

இரண்டாவது வழி வேறு விதமானது. விலகிய கணடங்கள் மேலும் மேலும் பின நோக்கிப் போய்க் கொண்டிருக்கும். பூமி உருண்டை என்பதால் இக்கண்டங்கள் அனைத்தும் பூமியின் மறு புறத்தில் ஒன்றாகக் குவிந்து சூப்பர் கண்டம் உருவாகும்.

மூன்றாவது முறையில் விலகிச் செல்லும் கண்டங்கள் வட புறமாக அல்லது தென் புறமாக ஒதுங்கிப் போய் சூப்பர் கண்டம் உருவாகும். கட்டுரையின் தொடக்கத்தில் உள்ள படத்தில் இவ்விதமாக உருவாகின்ற சூப்பர் கண்டம் காட்டப்பட்டுள்ளது.

எதிர்காலத்தில் சூப்பர் கண்டம் உருவாகுமா என்பது பற்றி 1990 களில் அமெரிக்க ஹார்வர்ட் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த பால் ஹாப்மன் (Paul Hoffman) தான் முதன் முதலில் சிந்திக்கத் தொடங்கினார். அவர் தான் எதிர்கால சூப்பர் கண்டத்துக்கு அமாசியா என்று பெயர் வைத்தவர்.

வெவ்வேறு கால கட்டங்களில் கண்டங்களின் இடப்பெயர்ச்சியை விளக்கும் படங்கள் இப்போது அமெரிக்க யேல் பல்கலைக்கழக புவியியல் நிபுணர் டேவிட் இவான் ஆய்வுகளை நடத்திப் புதிய சூப்பர் கண்டம் மேலே குறிப்பிட்ட மூன்றாவது வழியில் தான் உருவாகும் என்று கூறியுள்ளார்.

சூப்பர் கண்டம் ஒரு புறம் இருக்க, கடந்த காலத்தில் மினி சூப்பர் கண்டங்களும் இருந்துள்ளன. சில கண்டங்கள் ஒன்று சேர்ந்து ஒரு மினி சூப்பர் கண்டமாக விளங்குகின்ற அதே நேரத்தில் மீதிக் கண்டங்கள் ஒன்று சேர்ந்து இன்னொரு மினி சூப்பர் கண்டமாக இருந்தன. கோண்டுவானா(Gondwana), லாராசியா(Laurasia) ஆகியவை இவ்விதமான மினி சூப்பர் கண்டங்களாகும். கோண்டுவானாவில் ஆப்பிரிக்கா, தென் அமெரிக்கா, இந்தியா, ஆஸ்திரேலியா, அண்டார்டிகா ஆகிய கண்டங்கள் அடங்கியிருந்தன. லாராசியாவில் மீதிக் கண்டங்கள் அடங்கியிருந்தன.

இந்த இரு மினி சூப்பர் கண்டங்களும் ஒன்று சேர்ந்த போது தான் பாஞ்சியா(Pangea) சூப்பர் கண்டம் தோன்றியது. பின்னர் பாஞ்சியா உடைந்தது. அதைத் தொடர்ந்து மறுபடி கோண்ட்வானா தோன்றியது. கோண்ட்வானா 18 கோடி ஆண்டுகளுக்கு முன்னர் உடைந்தது. அப்போது இந்தியத் துணைக் கண்டம் வடக்கு நோக்கி நகர ஆரம்பித்தது. சுமார் ஒரு கோடி ஆண்டுகளுக்கு முன்னர் இந்தியத் துணைக் கண்டம் ஆசிய கண்டத்தின் தென் பகுதியுடன் வந்து இணைந்து கொண்டது. அந்த சமயத்தில் தான் இமயமலை தோன்றியது.

வடக்கே நகர்ந்த இந்தியா கண்டங்கள் இடம் பெயருவதால் அவற்றின் விளிம்புகள் ஒன்றோடு ஒன்று உரசிக் கொள்கின்றன.அல்லது புடைத்துக் கொள்கின்றன. அல்லது ஒன்றின் விளிம்பு மற்றதன் விளிம்புக்கு அடியில் புதைகிறது. இவற்றின் விளைவாகவே பூகம்பங்கள், எரிமலைகள், சுனாமியும் தோன்றுகின்றன.

கண்டங்கள் நிச்சயம் கடலில் மிதப்பவை அல்ல. கண்டம் நகரும்போது அதைச் சுற்றியுள்ள கடலும் சேர்ந்து நகருகிறது. கண்டங்கள் எப்படி நகருகின்றன, ஏன் நகருகின்றன என்பதைப் புரிந்து கொள்ள மிக நீண்ட காலம் ஆகியது.

قُلْ سِيْرُوْا فِى الْاَرْضِ فَانْظُرُوْا كَيْفَ بَدَاَ الْخَـلْقَ ثُمَّ اللّٰهُ يُنْشِئُ النَّشْاَةَ الْاٰخِرَةَ اِنَّ اللّٰهَ عَلٰى كُلِّ شَىْءٍ قَدِيْرٌ

“பூமியில் நீங்கள் பிரயாணம் செய்து, அல்லாஹ் எவ்வாறு (முந்திய) படைப்பைத் துவங்கிப் பின்னர் பிந்திய படைப்பை எவ்வாறு உண்டு பண்ணுகிறான் என்பதைப் பாருங்கள்; நிச்சயமாக அல்லாஹ் எல்லாப் பொருட்கள் மீதும் பேராற்றலுள்ளவன்” என்று (நபியே!) நீர் கூறுவீராக.
(அல்குர்ஆன் : 29:20)

ர.ரா

## பூகோளத்தின் புதிர்கள் 1

(ஸீலாண்டியா 8-வது கண்டம் ) 25-01-2020



ஆழ்நீல நிறத்தில் கடல்களும் ,பழுப்புப் பாலைவனங்கள் , பசுமைக் காடுகள், அதை ஊடுருவிப் பாயும் அருவிகள் ஆறுகள் என வர்ணஜாலம் காட்டும் கண்டங்களும், பாலடைப் போர்த்திய பனிப் பிரதேசங்களும் , பஞ்சு பொதியாய் வெண்மேகக் கூட்டங்களும் .. அப்பப்பா..! இருண்ட வான்வெளியில் பூமி ஒரு ஜொலிக்கும் வைரம் " - என்று அதன் அழகை வர்ணிக்கிறார் நீல் ஆம்ஸ்ட்ராங் .. நிலவில் காலடித்தடம் பதித்த முதல் மனிதர் !

இத்தனை அழகான பூமியை மனிதன் கோடு போட்டு , ரோடு போட்டு கண்டம் கண்டமாக பிரித்துக் கொண்டு , இது என்னிது , அது உன்னிது .. என்று கூறுபோட்டு பிரித்துக் கொண்டு , அந்த கண்டங்களுக்கு பெயரும் சூட்டிக் கொண்டான் .

ஆசியா, ஐரோப்பா, ஆஸ்திரேலியா, ஆப்பிரிக்கா, வட அமெரிக்கா, தென் அமெரிக்கா, அண்டார்ட்டிக்கா என, உலகில் மொத்தம் ஏழு கண்டங்கள் இருக்கின்றன.

இப்போது ஸீலாண்டியா என்ற எட்டாவது கண்டமும் உலகில் இருப்பதாகச் சொல்கிறார்கள். ' எங்கே என்றால் தென் பசிபிக் கடலின் அடியில் ' என்று நியூஸிலாந்து நாட்டைச் சேர்ந்த ஆராய்ச்சியாளர்கள் சொல்கிறார்கள் .

கிணற்றைதான் காணவில்லை என்று தேடுவார்கள். இங்கே ஒரு கண்டமே காணாமல் போய் இருக்கிறது !

ஸீலாண்டியாவின் ஒரு துளிதான் நியூஸிலாந்து தீவுகள் என்பது அவர்களது வாதம். ஸீலாண்டியா கண்டம் தென் பசிபிக் கடலின் அடியில், ஏறத்தாழ 4.9 மில்லியன் சதுர கிலோமீட்டர் பரப்பளவு கொண்டது. அளவில் ஆஸ்திரேலியாவைவிட மூன்று மடங்கு பெரியது ஸீலாண்டியா. மொத்த அளவில் 94% கடலில் மூழ்கியிருக்கிறது. மீதியிருக்கும் 6% தான் நியூஸிலாந்து தீவுகள் என்பதை தக்க ஆதாரத்துடன் சும்மா புட்டு புட்டு வைக்கிறார்கள் ஆராய்ச்சியாளர்கள். கிட்டத்தட்ட 20 ஆண்டுகள் இது பற்றிய ஆராய்ச்சிகளை மேற்கொண்டுவிட்டுதான் இந்த முடிவுக்கு வந்ததாக ஆராய்ச்சியாளர்கள் அறிவித்திருக்கிறார்கள்.

மார்டிமர் என்ற ஆராய்ச்சியாளரின் தலைமையில் இயங்கும் எட்டு பேர் கொண்ட குழு, இது பற்றிய அறிக்கையை ஜியாலஜிக்கல் சொசைட்டி ஆஃப் அமெரிக்கா(GSA) என்ற அமைப்பு வெளியிடும் இதழில் பதிவிட்டிருக்கிறது.

இவர்களின் ஆராய்ச்சியின்படி ஸீலாண்டியா தான் உலகின் இளமையான கண்டம் போலவே, பேலியோ டயட் இருந்து சிறுத்தது போல குட்டியாகவும் இருக்கிறது. ஆனால் அதே சமயம், ஒரு நிலப்பரப்பை கண்டம் என வகைப்படுத்தத் தேவையான அனைத்து தகுதிகளையும் ஸீலாண்டியா கொண்டிருக்கிறது என்பதுதான் ஹைலைட்.

ஒரு நிலப்பரப்பை கண்டம் எனச் சொல்வதற்கு சில வரையரைகள் இருக்கின்றன. கடல்மட்டம், மண்பரப்பு எனப் பல விஷயங்களை வைத்துதான் கண்டம் என்ற அந்தஸ்து தரப்படுகிறது. ஸீலாண்டியாவையும் ஒரு கண்டம் என அறிவிக்க வேண்டும் எனக் கேட்கிறது நியூஸிலாந்து. இது, தனது நாட்டின் கௌரவம் என்கிற ரீதியில் பார்க்கப்படக் கூடாது. ஸீலாண்டியாவின் ஆரம்பகால மாற்றங்களை, அதன் வரலாற்றை ஆராய்ச்சிசெய்ய இந்த அங்கீகாரம் உதவும் என்கிறார் மார்டிமர்.

இந்தக் குழுவின் முழு அறிக்கையை இங்கே தரவிறக்கிப் படிக்கலாம்.

ஸீலாண்டியா பற்றிய சுவாரஸ்யத் தகவல்கள்:

1) ஸீலாண்டியா கண்டம் 70 மில்லியன் ஆண்டுகளுக்கு முன்பு ஆஸ்திரேயாவின் நிலப்பரப்பில் இருந்து பிரிந்து, கடலில் மூழ்கியிருக்கிறது.

2) 23 மில்லியன் ஆண்டுகளுக்கு முன், முழுவதுமாக கடலில் மூழ்கிவிட்டது ஸீலாண்டியா. அதன் மிச்சங்கள் மட்டுமே பசிபிக் பெருங்கடலில் இப்போது இருக்கின்றன.

3) கடலில் மூழ்கிய பகுதி, கிட்டத்தட்ட இந்தியாவின் அளவுக்கு இருந்திருக்கும்.

4) ஸீலாண்டியாவில் எரிமலைகளுக்குப் பஞ்சமே இல்லாமல் இருந்திருக்கிறது. அதனாலும் நிறைய பாதிப்புகளை அடைந்திருக்கிறது.

5) New Zealand, New Caledonia, Norfolk Island, Lord Howe Island Group, Elizabeth and Middleton Reefs ஆகிய தீவுகள்தான் இப்போது மிஞ்சியிருக்கும் ஸீலாண்டியாவில் உள்ள பகுதிகள்.

اَوَلَمْ يَرَوْا اَنَّا نَاْتِى الْاَرْضَ نَـنْقُصُهَا مِنْ اَطْرَافِهَا ‌ وَاللّٰهُ يَحْكُمُ لَا مُعَقِّبَ لِحُكْمِهٖ وَهُوَ سَرِيْعُ الْحِسَابِ
(அவர்கள் வசித்திருக்கும்) பூமியை அதன் ஓரங்களிலிருந்து நிச்சயமாக நாம் (படிப்படியாகக்) குறைத்து வருவதை அவர்கள் காணவில்லையா? அல்லாஹ்வே தீர்ப்பளிக்கக்கூடியவன். அவனுடைய தீர்ப்பைத் தடை செய்யக் கூடியவன் ஒருவனுமில்லை. அவன் கேள்வி கணக்குக் கேட்பதில் மிக்க சுறுசுறுப்பானவன். (அல்குர்ஆன் : 13:41)

கிரகங்களைத் தாண்டி ஆராய்ச்சிகள் மேற்கொண்டுவருகிறோம். ஆனால், இன்னமும் பூமியையே நாம் முழுமையாக அறிந்திருக்கவில்லை என்பதுதான் உண்மை. எவ்வளவு ஆண்டுகள் ஆனாலும், இயற்கைக்கு முன்னால் மனிதன் சிறியவன்தான்.

ர.ரா

ஆன்மீக மெஞ்ஞானம் .

(முகம் பார்க்கும் கண்ணாடி 08 ) 24-01-2020



هُوَ الَّذِىْ جَعَلَ الشَّمْسَ ضِيَآءً وَّالْقَمَرَ نُوْرًا وَّقَدَّرَهٗ مَنَازِلَ لِتَعْلَمُوْا عَدَدَ السِّنِيْنَ وَالْحِسَابَ مَا خَلَقَ اللّٰهُ ذٰلِكَ اِلَّا بِالْحَـقِّ يُفَصِّلُ الْاٰيٰتِ لِقَوْمٍ يَّعْلَمُوْنَ
அவனே சூரியனை ஒளியாகவும் (பிரகாசமாகவும்), சந்திரனை (அழகிய) வெளிச்சம் தரக்கூடியதாகவும்

ஆக்கி, ஆண்டுகளின் எண்ணிக்கையையும் (மாதங்களின்) கணக்கையும் நீங்கள் அறிந்து கொள்வதற்காக அவைகளுக்கு (மாறிமாறி வரக்கூடிய) தங்கும் இடங்களையும் நிர்ணயம் செய்தான்.

மெய்யான தக்க காரணமின்றி இவைகளை அல்லாஹ் படைக்கவில்லை. அறியக்கூடிய மக்களுக்காக(த் தன் ஆற்றலுக்குரிய) சான்றுகளை இவ்வாறு விவரிக்கிறான்.
(அல்குர்ஆன் : 10:5)

இந்த திருக்குர்ஆனின் திருவசனத்தில் வெளிப்படையாக விஞ்ஞானத்தைப் போதிப்பதாக இருந்தாலும் , இவ்வசனத்தில் இறுதியில் , " மெய்யான தக்க காரணமின்றி இவைகளை அல்லாஹ் படைக்கவில்லை. அறியக்கூடிய மக்களுக்காக(த் தன் ஆற்றலுக்குரிய) சான்றுகளை இவ்வாறு விவரிக்கிறான் " என்கிற வரியில் ஆன்மீக மெஞ்ஞானம் இருப்பதாக எனக்குப்படுகிறது ! ஆய்வோம்

சூரியன் பிரகாசிக்கும் வெட்டவெளியில் ஒரு முகம் பார்க்கும் கண்ணாடித் துண்டுக்கிடக்கிறது.

சூரிய ஒளி அதன்மேல் பட்டுப் பிரதிபலித்து,அருகிலிருக்கும் ஓர் இருட்டறைக்குள் சென்று சுவற்றில் படுகிறது .

கண்ணாடியிலிருந்து கிளம்பிய ஒளி அந்த இருட்டறையின் உட்சுவற்றிற்
படும்மாறு சூரியனது ஒளிக்கதிர் பாய்கிறது . இந்த ஒளிக்கதிரின் உதவியால் அந்த இருட்டறையில் உள்ள பொருளை ஒருவன் காணமுடிகிறது.

இந்த ஒளிக் கதிர்வீச்சு அறையின் சுவற்றில் படும்போது கண்ணாடித் துண்டின் உருவம் எதுவே அவ்வுருவமுடையதாகவேதான் காணப்படுகிறது . ஆனால் வெட்ட வெளியில் பிரகாசித்துக் கொண்டிருக்கும் சூரியனது நேர் ஒளியோ மூல ஒளியோ வெட்ட வெளியில் அகண்டமாய்,எங்குமாய்,
ஏகமாய்,உருவ எல்லை ஏதும்மற்றுப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது !

இதில் கொஞ்சம் கவனம் தேவை .

வெட்டவெளி சூரிய ஒளி போன்றதே நம் இருப்புணர்வான ஆன்மாவுணர்வு கண்ணாடியிலிருந்து அறையின் உட்சுவர் வரையிலும் நீண்டுள்ள
ஒளிக்கிரணம் போன்றதே மன அறிவு அல்லது தேகாத்மபுத்தியாகிய ' நான் ' என்ற அகந்தையுணர்வு.

சூரியனது பரந்த நேர் ஒளிபோல் எல்லை குறிப்பிட முடியாத்தால் ஆன்மா உணர்வுக்கு உருவ உபாதியில்லை .

கண்ணாடியின் அளவையும், வடிவத்தையும் போல தேக அளவாகவும்,வடிவாகவும் 'நான்' என்று உணரப்படுவதால் , அகந்தைக்கு ஓர் எல்லையும்,வடிவமும் உண்டாகி விடுகிறது,

இப் பிரதிபலனான ஒளியே உபயோகித்து அறையினுள் உள்ள பொருள்களை அறிவது போல இம்மன அறிவை உபயோகித்தே உடல் உலகத்தை அறிகிறது .

அந்த இருட்டறையில் இருக்கும் ஒருவன் அறையில் உள்ள ஒளியால் அங்குள்ள இதர பொருள்களை பார்ப்பதைச் சற்று நிறுத்திவிட்டு ,

“இவ் ஒளி எங்கிருந்து வருகிறது....? " என்று அவ்ஒளி மூலத்தை காண விரும்புகிறான் என்று வைத்துக் கொள்வோம். அதைக்காண விரும்பினால் அவ்ஒளி சுவற்றில் எப்பாகத்தில் படுகிறதோ அதில் தன் கண்களை வைத்துபார்க்கவேண்டும். அப்போது அவன் காண்பதென்ன?சூரியன் !

ஆனால் இப்போது அவனால் காணப்படுவது உன்மையான சூரியன் அல்ல..! அது சூரியனது பிரதிபிம்பமே ! அதுமட்டுமன்றி அச்சூரியன் அறைக்கு வெளியில் எங்கோ தரையில் ஓரிடத்தில் கிடப்பதாகவே அவனுக்கு தோன்றும்!ஆனால் உன்மையில் சூரியன் அப்படியா தரையில் கிடக்கிறது ...? இல்லை... இல்லை .

ஆனால் உன்மையான சூரியனை காண்டுணர அவன் விரும்பினால் என்ன செய்யவேண்டும்...? ஒளிவரும் நேர்க்கோட்டிலேயே புறம் போகாமல் தன் கண்களை வைத்து பார்த்துக்கொண்டே தனக்கு உணர்வாகிற பிரதிபிம்ப சூரியனை நோக்கி நகரவோண்டும்,

அறைக்குள் வந்த பிரதி ஒளிக்கிரணத்தால் அறையில் உள்ள இதரப் பொருள்களை கண்டு ஆராய்ந்து கொண்டிருப்பதில் உள்ள ஆசையே விட்டு,இவ்வொளி மூலத்தைப் பார்க்க கிளம்புபவனைப் போலவே , மனஅறிவால் விளங்கும் பற்பல உலகங்களையும் ஐம்புலன்களால் கண்டு,மோகித்து அவைகளை பெற விரும்பியோ அல்லது (நம் விஞ்ஞானிகளைபோல )அவைகளை ஆராய்ந்து கொண்டே இருப்பவன் உண்மை ஒளியே (ஆத்மாவை) உணரமுடியாது . ஆகையால் அதை விட்டுவிட வேண்டும்.

அறைக்குள் தெரியும் ஒளிக் கிரணம் எங்கிருந்து வருகிறது என்று காணவிரும்புவது போலவே,,,இம் மன அறிவாகிய ' நான் ' என்ற அகந்தை எங்கிருந்து வருகிறது என காண விரும்ப வேண்டும் .

ர.ரா

அவன் தன் ரூஹை எனக்குள் ஊதினான் என்றால் அவன் ஊதுவதற்கு முன்னால் அவனுள் ரூஹாக நான் இருந்தேனா ? "

இந்த மாதிரியாக வேதாந்தம் பேசுபவர்களுக்குதான் அல்லாஹ் தெளிவாக " சூரியன் ஒளியை பிரகாசிக்கவும் , சந்திரனை சூரிய ஒளியை பிரதிபலிக்கவும் செய்தான் "

சந்திரன் ஒருகாலும் சூரியனாக முடியாது . சூரியன் ஒளிர எந்த கிரணத்தின் ஒளியும் தேவைப்படாது . அது

தன்னைத்தானே ஒளிரும்.
சூரியனின் ஒளிதான் மற்ற கிரகணத்திற்கு தேவை

நோய்களை முன்பே அறிய உதவும் ஸ்மார்ட் முகம் பார்க்கும் கண்ணாடி!:

(முகம் பார்க்கும் கண்ணாடி 07 )

சர் ஐசக் நியூட்டன் சூரிய ஒளியை முப்பட்டைக் கண்ணாடி வழியாகச் செலுத்தி வயலட், இண்டிகோ, நீலம், பச்சை, மஞ்சள், ஆரஞ்சு, சிவப்பு வண்ணங்களைப் பிரித்து தனித் தனி வண்ணங்களாக ஒளிவிட்டு பிரகாசிப்பதை உலகுக்குக் காட்டினார். நமது சித்தர்களும், மகான்களும் பாதரசத்தை மணியாகக் கட்டி ரசமணியாக தயாரித்து பலவிதமான நோய்களைத் தீர்ப்பதற்கும் பல சித்துக்களை அடைவதற்கும் உபயோகித்து வந்ததாக ரசவாத நூல்கள் கூறுகின்றன.

மேலும் நமது சரீரத்தில் நோய்கள் ஏற்படும் போது முப்பட்டைக் கண்ணாடியில் நமது உருவத்தை புகைப்படத்தில் பார்த்தால் ஒரு வண்ணம் மங்கலாக இருப்பது தெரியவரும். ஆகவே வண்ணப் பற்றாக்குறையே உடலில் நோய்களை வெளிப்படுத்திக் காட்டுகிறது.

இந்நிலையில் நமது உடல்நிலை மற்றும் நோய்களை முன்பே அறிந்துகொள்ளும் வகையில் விரைவில் ஸ்மார்ட் முகம் பார்க்கும் கண்ணாடி வெளியாக உள்ளது.

வைஸ் கண்ணாடி என்ற நிறுவனம் ஸ்மார்ட் முகம் பார்க்கும் கண்ணாடிகளை தயாரிக்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ளது. நமது முகம் மற்றும் மூச்சு காற்று ஆகியவற்றை நவீன சென்சார்கள் மூலம் ஆய்வு செய்வதன் மூலம் உடல்நிலை பற்றி தெரிந்துக்கொள்ள முடியும்.இந்த புதிய தொழில் நுட்பம் மூலம் நீரிழிவு, மாரடைப்பு மற்றும் பிற இதய நோய்களை முன் கூட்டியே தெரிந்துக்கொள்ள முடியும்.

ர.ரா

நம் வளர்ச்சிக்கு இடையூறாக இருந்தவர்   24-01-2020

(முகம் காட்டும் கண்ணாடி 05 )

அந்த அலுவலகத்தில் பணியாற்றும் அனைவரும் ஒருநாள் வேலைக்கு சரியான நேரத்தில் வந்து சேர்ந்தனர். அறிவிப்புப் பல கையில் ஏதோ எழுதி இருக்கிறதே என்று அனைவரும் பார்க்கச் சென்றனர்.

“உங்கள் வளர்ச்சிக்கும் நம் நிறுவன வளச்சிக்கும் இடையூறாக இருந்த நபர் நேற்று காலமானார், அடுத்த கட்டடத்தில் அவர் உடல் வைக்க ப்பட்டுள்ளது. அனைவரும் தவறாமல் சென்று இறுதி வணக்கம் செலுத்தவும்” என்று அதில் எழுதப்பட்டிருந்தது.

இதைப் படித்தவுடன் அவர்கள் எல்லாருக்கும் நம்முடன் வேலை செய்த ஒருவர் இறந்து விட்டாரே என்று வருத்தமாக இருந்தது. பிறகு நம் வளர்ச்சிக்குத் தடையாக இருந்த நபர் யாராக இருக்கும் என்று அறிவதற்கு ஆர்வமும் ஏற்பட்டது. அனைவரும் அடுத்த கட்டட த்திற்குச் சென்றனர். சவப்பெட்டி வைத்திருக்கும் இடத்தை நோக்கி ஒருவர் பின் ஒருவராகச் செல்ல ஆரம்பித்தனர்.

சவப்பெட்டியை நெருங்க நெருங்க நம் வளர்ச்சிக்குத் தடையாக இருந்தவன் யாராக இருக்கும், நல்லவேளை அவன் இறந்துவிட்டான் என்று நினைத்தபடியே முன்னோக்கிச் சென்றனர். சவப்பெட்டியை திறந்து அதனுள் எட்டிப் பார்த்தவர்களுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அதில் ஒரு முகம் பார்க்கும் கண்ணாடி மட்டுமே இருந்தது. சவப்பெட்டிக்குள் யார் எல்லாம்
பார்க்கிறார்களோ அவர்கள் முகமே அதில் தெரிந்தது. அந்தக் கண்ணாடி அருகில் ஒரு வாசகமும் எழுதி இருந்தது.

“உங்கள் வளர்ச்சிக்கு நீங்கள் மட்டுமே காரணம், நீங்கள் வளர வேண்டும் என்றால் அது உங்கள் கையில் மட்டுமே உள்ளது, உங்கள் வளர்ச்சியை உங்களைத் தவிர வேறு யாராலும் தடுத்து நிறுத்த முடியாது” என்று எழுதப்பட்டிருந்தது.

ஆம். ஒருவரின் வாழ்வை அவரின் முதலாளியாலோ, அவரின் நண்பர்களாலோ மாற்ற முடியாது, ஆனால் அந்த நபர் நினைத்தால் மட்டுமே தனது வாழ்வை மாற்ற முடியும்.

உலகம் முகம் பார்க்கும் கண்ணாடி போன்றது. அது ஒவ்வொருவருக்கும் அவரவர் எண்ணங்களையே திருப்பிக் கொடுக்கும்.

ர.ரா

புன்னகை மந்திரம்

(முகம் பார்க்கும் கண்ணாடி 06 )



" ஸ்மைல் பிளீஸ் " _ என சொல்லும்
ஸ்மார்ட் மிரர்!

புன்னகைத்தால் மட்டுமே உயிர் பெற்று முகம் காட்டும் உணர்வுப் பூர்வமான நவீன கண்ணாடியை வடிவமைத்து வியக்க வைத்திருக்கிறார் ஒரு இளம் வடிவமைப்பாளர்!

ஸ்மைல் பிளீஸ் என்பது புகைப்படம் எடுப்பதற்கு முன், காமிரா கலைஞர்கள் தவறாமல் சொல்லும் வார்த்தைகள். இந்த இரண்டு வார்த்தைகளை ஒரு கண்ணாடி சொன்னால் எப்படி இருக்கும்? இப்படி ஒரு புதுமை கண்ணாடியை அமெரிக்க வடிவமைப்பாளர் பெர்க் இல்ஹன் (Berk Ilhan) உருவாக்கியிருக்கிறார்.

அவர் உருவாக்கியிருக்கும் கண்ணாடி பேசும் கண்ணாடி அல்ல: ஆனால் அதன் முன் போய் நிற்கும் ஒவ்வொரு முறையும் அது பேசாமல் பேசுவதை உணரலாம். ஆம், அந்த கண்ணாடி முகம் பார்க்கும் கண்ணாடி என்றாலும், அதில் சாதாரணமாக முகம் பார்த்துவிட முடியாது. அதன் முன் புன்னகைத்தால் மட்டுமே முகம் பார்க்க முடியும். இதுவே அதன் சிறப்பம்சம்.

இணைய உலகில் தற்போது அதிகம் பேசப்படும் தொழில்நுட்பங்களில் முக உணர்வு (facial recognition) தொழில்நுட்பமும் முக்கியமானதாக இருக்கிறது. முக அசைவுகளை காமிரா மூலம் உணர்ந்து மென்பொருள் மூலம் அலசி ஆராய்ந்து செயல்படும் இந்த தொழில்நுட்பம் பலவித பயன்பாட்டிற்காக உருவாக்கப்பட்டு வருகிறது. இவற்றில் பல கண்காணிப்பு சமூகம் பற்றிய அச்சத்தை ஏற்படுத்தக்கூடிய வகையில் திகிலானவையாகவும் இருக்கின்றன.

ஆனால், அமெரிக்காவின் நியூயார்க்கைச் சேர்ந்த இளம் வடிவமைப்பாளரான பெருக் இல்ஹன், அடிப்படையில் தொழில்நுட்பத்தை மனித நேயத்தோடு அணுகுபவராக அறிய முடிகிறது. அதனால் தான் அவர் முக உணர்வு தொழில்நுட்பத்தை உணர்வு பூர்வமாக பயன்படுத்தி புன்னகைக்கும் கண்ணாடியான ஸ்மைல் மிரரை உருவாக்கியிருக்கிறார்.

இந்த கண்ணாடி, வழக்கமான முகம் பார்க்கும் கண்ணாடியோடு, நவீன காமிரா மற்றும் ஒரு பிராசஸரை கொண்டுள்ளது. கண்ணாடிக்கு பின்னணியில் இருக்கும் இந்த காமிரா மற்றும் அதனுடன் இணைக்கப்பட்ட மென்பொருளிலும் தான் விஷயமே இருக்கிறது. ஏனெனில் கண்ணாடியை இயக்குபவையே இவை தான்.

ஏற்கனவே சொன்னது போல், இந்த கண்ணாடியில் முகம் பார்க்க வேண்டும் எனில், இதன் முன் நின்று புன்னகைக்க வேண்டும். இப்படி தன் முன் இருப்பவர்கள் புன்னகைக்கும் போது, காமிரா முக உணர்வு நுட்பம் மூலம் அதை கிரகித்துக்கொண்டு, கண்ணாடியை கண் விழிக்க அனுமதிக்கிறது. உடனே அதில் பார்ப்பவரின் உருவம் தோன்றும். மற்றபடி இந்த கண்ணாடியில் முகம் பார்க்க முடியாது.

சிலருக்கு, கண்ணாடி முன் நின்று புன்னகைத்து பார்க்கும் வழக்கம் உண்டு அல்லவா? இந்த கண்ணாடியோ புன்னகைத்தால் மட்டுமே முகம் காட்டும்.

புன்னகைக்கும் முகத்தை காணும் போது உருவம் காட்டும் உணர்வுள்ள கண்ணாடி இது என்று தனது இணையதளத்தில் குறிப்பிட்டுள்ளார் இல்ஹன். கண்ணாடியை பார்த்து புன்னகைக்கும் போது, ஏற்படக்கூடிய ஆச்சர்ய உணர்வை உண்டாக்கி, உற்சாகமான தனிப்பட்ட இயக்கத்தை அளிப்பதே இதன் நோக்கம் என்கிறார் அவர்.

விளையாட்டுத்தன்மை கொண்டிருந்தாலும் இல்ஹன் இந்த கண்ணாடியை வேடிக்கையாக உருவாக்கிவிடவில்லை. புன்னகைக்கும் பழக்கத்தை பரவலாக்குவதே அவரது நோக்கம். சிரித்த முகத்துடன் இருப்பதால் ஏற்படக்கூடிய சுய நன்மைகள் குறித்து உளவியல்ரீதியாக அறிந்து கொண்டதன் அடிப்படையில் இந்த கண்ணாடியை உருவாக்கி இருக்கிறார்.

சிரித்த முகம் கொண்டிருப்பது பல்வேறு நல்ல விளைவுகளை உண்டாக்குவதாக உளவியல் ஆய்வுகள் தெரிவிப்பதையும் தனது தளத்தில் இவர் மேற்கோள் காட்டியிருக்கிறார். இந்த பழக்கம், மனநிலையை மேம்படுத்தி, மன அழுத்தத்தை குறைப்பதாகவும் கருதப்படுகிறது.

நிஜ வாழ்க்கையில் இந்த சித்தாந்ததை பரப்பும் வகையில் செயல்பட்டு வரும் புதுமை மருத்துவர் பேட்ச் ஆடம்சை ஊக்கமாகக் கொண்டு இதை உருவாக்கி இருப்பதாகவும் இல்ஹன் கூறுகிறார். கடந்த ஆண்டு இந்த கண்ணாடியை புற்றுநோயாளிகளை மனதில் கொண்டு அவர் அறிமுகம் செய்தார். நோயால் அவதிப்பட்டு வரும் மனிதர்களை புன்னகைக்க வைப்பதற்காக இந்த ஸ்மைல் மிரரை உருவாக்கினார்.

தற்போது இந்த கண்ணாடியை அனைவருக்குமான திட்டமாக அறிமுகம் செய்திருக்கிறார். இந்த புதுமை கண்ணாடியை நண்பர்களுக்கு பரிசளிக்கலாம். மருத்துவமனைகள், பூங்க்காகள், நகர்புற இடங்கள் உள்ளிட்ட பொது இடங்களில் காட்சிக்கு வைத்து புன்னகை மந்திரத்தை பரப்பலாம்.

" நீ சிரிச்சா தீபாவளி " என்று மக்களை சிரிக்க வைத்து மன அழுத்தம் முதல் வியாதிகள் வரை குணமாக்க முடியும் .மனம் விட்டு சிரித்தால் , நோய் விட்டு போகும் என்று உளவியல் நிபுணர்கள் கூறுகிறார்கள் .

புன்னகைக்கும் முகத்தைவிட மகிழ்ச்சியானது வேறில்லை எனும் கருத்தை பரவச்செய்து, மகிழ்ச்சியான முகங்களை மலரச்செய்வதை இந்த கண்ணாடி நோக்கமாகக் கொண்டிருக்கிறது. இந்த புதுமை கண்டுபிடிப்பிற்காக சிறந்த வடிவமைப்பிற்கான விருதையும் இல்ஹன் பெற்றிருக்கிறார்.

வடிவமைப்பில் மனிதநேயம், பரிவு, தொழில்நுட்ப உற்சாகம் எல்லாம் கலந்திருக்க வேண்டும் என்று கூறுபவர் வேறு பல புதுமையான வடிவமைப்புகளையும் உருவாக்கியிருக்கிறார். இவற்றில் பல சிறந்த வடிவமைப்பிற்கான விருது பெற்றவை. பயனாளிகளை படி ஏறிச்செல்வது போன்ற உடற்பயிற்சி சார்ந்த செயல்களில் ஈடுபட வைக்கும் விளையாட்டுத்தன்மை கொண்ட ஸ்மார்ட்போன் செயலி உள்ளிட்டவை இதில் அடங்கும். ஸ்மார்ட் ஹோம் சாதனத்தை நவீன விளக்குடன் இணைத்து குளியல் அறையில் செயல்படும் அவசர கால எச்சரிக்கை சேவையையும் இவர் உருவாக்கி இருக்கிறார்.

ர.ரா

முகக் கண்ணாடியும் மனத் தெம்பும் 23-01-2020

( முகக் கண்ணாடி 01 )



இரண்டாவது உலகப் போரின்போது மிகப் பெரிய சோதனைக்களுக்கு உள்ளான பிரிட்டிஷ் மக்களை தனது பேச்சின் மூலம் உற்சாகப்படுத்தி அவர்களிடம் மிகப் பெரிய நம்பிக்கையை ஏற்படுத்தியவர் வின்ஸ்டன் சர்ச்சில் .

அவர் எந்த ஒரு சொற்பொழிவை நிகழ்த்துவதற்கு முன்னதாகவும் தனியாக ஒரு அறையில் நிலைக்கண்ணாடியின் முன் நின்று அதில் தெரியும் தன்னுடைய உருவத்தைப் பார்த்தே பேசிக் கொள்வது அவருக்கு வழக்கம் .

இந்தப் பயிற்சி அவரை மிகச் சிறந்த பேச்சாளாராக்கியது என்பது மட்டுமல்ல , அவர் வெளியிட்ட ஒவ்வொரு சொல்லும் அதில் அடங்கியிருக்கும் ஒவ்வொரு கருத்தும் மக்களை மிகப் பெரிய காந்த சக்தியுடன் கவர்ந்து செயல்பட வைத்தது.

சர்ச்சில் மட்டுமல்ல ;அமெரிக்கா ஜனாதிபதி உட்ரோ வில்சன் , உலகப் பெரும் சக்ரவர்த்தினிகளாக விளங்கிய பெண்கள் கூட கண்ணாடி முன் நின்று தங்களை தாங்களே பெருமையாகச் சொல்லிக்கொண்டு தங்களின் மனத்தெம்பை வளர்த்துக் கொண்டதாக வரலாற்றில் காணக் கிடைக்கிறது.

வில்லி சண்டே என்கிற கிறிஸ்துவ மத போதகர் அமெரிக்காவில் மட்டுமின்றி உலகின் பல நாடுகளிலும் சக்தி வாய்ந்த மத போதகர் என்று கருதப்பட்டார் அவரும் நிலைக் கண்ணாடியின் நின்று உரத்துப் பேசும் வழக்கமுடையவர் .

கண்ணாடியின் முன் நின்று பேசுகின்ற போது நம்முடைய அங்க அசைவுகளையும் , வார்த்தைகள் உருவாகின்ற போது ஏற்படுகின்ற உதட்டின் அசைவுகளையும் நம்மால் பார்க்க முடிகிறது. ஒரு விஷயத்தை உரத்து சொல்கின்றபோது கண்ணாடியில் உள்ள பிம்பமும் அதே விஷயத்தை நம்மிடம் உரத்து சொல்லுவதை நாம் பார்க்க முடிகிறது .இதன் விளைவாக நம்முடைய மன அதிர்வுகள் அதிக பலம் பெறுகின்றன .மேலும் ஆழ் மனதில் பதிகின்ற விஷயமும் உறுதிப்படுகிறது .

அமெரிக்க சிந்தனையாளர் எமர்ஸன் , "ஒவ்வொருவரும் தன்னுடைய தகுதியை தன்னுடைய கண்களின் மூலமாகவே வெளிப்ட்டுத்துகிறார்கள் என்கிறார்
விழிகள் மனதின் ஜன்னல்கள் என்கிறார் ஷேக்ஸ்பியர். இவற்றைக் காண முகக் கண்ணாடி ஒன்று அவசியப்படுகிறது .

உலகப் புகழ் பெற்ற வர்த்தகர் ஒருவர் எந்தப் புதிய பொருளை விற்பனைக்கு அனுப்பும் முன்னும் , அந்தப் பொருளை வைத்துக் கொண்டு கண்ணாடியின் முன் நின்று அதன் சிறப்புகளை ஒரு முறைக்குப் பலமுறை சொல்லுவராம் இந்தப் பழக்கம் அவர் தயாரித்த பொருட்கள் அதிகமாக விற்பனை ஆவதற்கு பேருதவியாக இருந்ததாக அவர் சொல்கிறார்.

ஒரு தேர்வுக்கோ , இண்டர்வியூக்கோ , முக்கிய நபரை சந்திக்கவோ செல்லும் முன் , அந்த உடையில் கண்ணாடியின் முன் நின்று உங்கள் பிம்பத்தின் கண்களை கூர்ந்து நோக்குக்கள் சிறிது நேரம் நேரம் அப்படியே கூர்ந்து நோக்கியபடியே இந்த தேர்வில் நான் நிச்சயம் வெற்றி பெறுவேன் என்று திரும்ப திரும்பச் சொல்லிக் கொள்ளுங்கள் . இதன் மூலம் இதுவரை நீங்கள் அனுபவித்தே அறியாத ஒரு புதிய தன்னம்பிக்கையை உங்களிடம் தோன்றுவதை நீங்கள் உணர்வீர்கள் என்று மனத் தத்துவ அறிஞர்கள் கூறுகிறார்கள்

இந்தப் பயிற்சிக்கு முழு உருவத்தையும் காட்டக் கூடியதாக கண்ணாடி இருக்க வேண்டுமென்ற அவசியமில்லை .

மேலெழுந்த வாரியாகப் பார்த்தால் இது வேடிக்கையான யோசனை போல உங்களுக்கு தோன்றலாம் .ஆனால் உங்கள் ஆழ்மனத்தில் உங்களைப் பற்றி உயர்வாக பதிப்பிக்கப்படும் செயல் என்பதை நீங்கள் மறந்துவிடாதீர்கள் .

ஒரு ஞானியிடம் " நம்முடன் ஒரு சைத்தானையும் சேர்த்து படைக்கப்பட்டதாகவும் , நபி (ஸல்) அவர்கள் இதுபற்றி கூறும்போது , "என்னுடன் சேர்த்து படைக்கப்பட்ட சைத்தான் எனக்குக் கட்டுப்பட்டு விட்டான் " என்கிறார்களே , நம்ம சைத்தானை நாம பார்க்க முடியுமா ? "

" ஏன் முடியாது ... ஒரு முகம் பார்க்கும் கண்ணாடியை உன்னோடு எப்போதும் வைத்துக்கொள் . உனக்கு எப்போதெல்லாம் கோபம் வருகிறதோ, அப்பொழுதெல்லாம் முகக் கண்ணாடியில் உன் முகத்தைப் பார் , சைத்தான் அவன் தெரிவான் "

அடிமனம் வேதாந்தத்தில் " சித்தம் " என்பார்கள் ! இந்த அடி மனதில்தான் லைப்ரரி இருக்கிறது . இதில் பெரும் பகுதியில் மூழ்கி போன ஆனால் மீண்டும் திரும்ப பெற கூடிய ( Recover ) அனுபவங்களும் பின்னுக்கு தள்ளப்பட்ட ஞாபகங்களும் அடங்கி இருக்கின்றன. அத்தோடு உங்களின் துர்குணங்களும் ( நப்ஸ் அம்மாரா ) இங்கேதான் பதுங்கி இருக்கிறது என்கிறார்கள். இதைக் கண்ணால் நீங்க பார்க்க உங்களுக்கு ஒரு முகக் கண்ணாடி தேவையாக இருக்கிறது !

ர.ரா

கண்ணாடி கற்று தரும்
பாடங்கள் .

( முகக் கண்ணாடி 2 ) 22-01-2020



அவர் ஒரு வயதான பெரியவர்
கையிலே ஒரு முகம் பார்க்கும் கண்ணாடியை வைத்துக்கொண்டு அடிக்கடி அதனை பார்த்துக் கொண்டிருப்பார். பின்னர், சிறிதுநேரம் வேறு வேலைகளைச் செய்துவிட்டு மீண்டும் கண்ணாடியை எடுத்து சிறிதுநேரம் முகத்தை பார்ப்பார். பிறகு சிந்தனை செய்வதில் நேரத்தை செலவழிப்பார். இது அவரது வாடிக்கையான செயலாக மாறிவிட்டது.

வயதான பெரியவர் அடிக்கடி முகக் கண்ணாடியில் அழகு பார்க்கிறாரே? அந்த "கண்ணாடி இரகசியம்தான்" என்ன? என்பதை அறிய அவரைக் கவனித்துக்கொண்டே இருந்தான் பக்கத்துவீட்டு இளைஞன். தொடர்ந்து ஒரு வாரத்திற்குமேல் கூர்ந்து கவனித்தபின்பும் வயதான பெரியவர் கண்ணாடி பார்க்கும் மர்மம் அவனுக்குப் புரியவில்லை.

"இந்த கண்ணாடி, மிகப்பெரிய அதிசயங்களை நிகழ்த்தும் வித்தைகள் காட்டும் ஏதோ ஒருமாய கண்ணாடியாக இருக்குமோ?" என்று சிந்தித்தான். அவனால் விடைகாண முடியவில்லை. முடிவில் ஒருநாள் அந்த வயதான பெரியவரிடமே தனது சந்தேகத்தை தீர்க்க வேண்டும் என முடிவு செய்தான். பெரியவரிடம் நேரில் வந்தான்.

"அய்யா நான் கேட்பதை தவறாக நினைக்காதீர்கள். உங்களை பத்து நாட்களாக நான் கவனித்து வருகிறேன். அடிக்கடி நீங்கள் கண்ணாடியில் முகம் பார்க்கிறீர்கள். உங்கள் கையில் இருப்பது மாய கண்ணாடியா? ஏன் இதனை அடிக்கடி பயன்படுத்துகிறீர்கள்?" என்று கேட்டான்.

இளைஞனின் கேள்வியைக் கவனித்த பெரியவர் சிரித்தார்.

"என்னிடம் இருப்பது சாதாரண கண்ணாடிதான். இந்தக் கண்ணாடியில் என்னைப் பார்த்தால் என் முகம் தெரியும். நீ பார்த்தால் உன் முகம்தான் தெரியும். வேண்டுமென்றால் நீயே பார்த்துக்கொள்" என்று கண்ணாடியை அவன் கையில் கொடுத்தார். ஆவலோடு அந்தக் கண்ணாடியை வாங்கிப் பார்த்தான் இளைஞன்.

பெரியவர் தொடர்ந்து பேசினார்.

"தம்பி… நான் இந்த சாதாரண கண்ணாடியை ஏன் அடிக்கடி பார்த்துக்கொண்டே இருக்கிறேன்? என்ற கேள்வி உனக்குள் எழுகிறது அப்படித்தானே?".

"ஆமாம்".

" இந்தக் கண்ணாடி நமக்கு நிறைய வாழ்க்கைப் பாடங்களைக் கற்றுத் தருகிறது. இந்தக் கண்ணாடியை பார்க்கும்போதெல்லாம் உனக்கு சில சிந்தனைகள் மனதிற்குள் வரவேண்டும். நாம் ஒவ்வொருவரும் மற்றவர்களுக்கு இந்த சாதாரண கண்ணாடி போன்றே இருக்க வேண்டும்" என்றார்.

இளைஞனுக்கு ஒன்றும் புரியவில்லை.

"இந்தக் கண்ணாடியில் முகத்தைப் பார்த்தால் நமது முகத்தில் அழுக்கு இருந்தால் அதை அப்படியே காட்டும். குறைகள் இருந்தால் உள்ளதை உள்ளபடி பிரதிபலிக்கும். நம்மிடம் இருப்பதை அப்படியே பிரதிபலிப்பதுதான் கண்ணாடியின் பணி. இதைப்போலத்தான், நாம் நமது மனதை வைத்துக்கொள்ள வேண்டும். நம்மைச் சார்ந்தவர்களிடம் குறிப்பாக உறவினர்கள், நண்பர்கள் போன்றவர்களிடம் ஏதேனும் குறைகள் இருந்தால், இந்தக் கண்ணாடியைப்போலவே உள்ளதை உள்ளபடி சுட்டிக்காட்ட முன்வர வேண்டும்.

மாறாக, சில கற்பனைகளை சேர்த்து, குறைகளை அதிகமாகக் காட்டும் விதத்தில் தெரிவிக்கவும் கூடாது. இல்லாத குறையை இருப்பதுபோல காட்டி மிகைப்படுத்தும் கூடாது . இந்த தவறுகளை செய்யும் போதுதான் நமக்குள் பிரச்சினை வருகிறது. எனவே, கண்ணாடி சொல்லும் முதல் பாடம் 'உள்ளதை உள்ளபடி சொல்ல வேண்டும் ' என்பதுதான் உங்களில் ஒவ்வொருவரும் மற்றவர்க்குக் கண்ணாடி போன்றவர்கள்"என்றார் பெரியவர்.

"கண்ணாடி சொல்லும் இரண்டாவது பாடம் சற்று வித்தியாசமானது. இந்த சாதாரண கண்ணாடியை நீ பார்க்கும்போது மட்டும்தான் அது உனது குறையைச் சுட்டிக்காட்டுகிறது. கண்ணாடியைப் பார்க்கவில்லையென்றால் அந்தக் கண்ணாடி உன் குறையைச் சுட்டிக் காட்டுவதில்லை.

இதைப்போலத்தான் நாமும் ஒருவரை நேரில் சந்திக்கும்போதுதான் அவரது குறையை சுட்டிக்காட்ட வேண்டும். அவர் இல்லாதபோது அவரைப்பற்றி அவதூறு பேசக்கூடாது" – என்பதை இந்தக் கண்ணாடி மிகப்பெரிய தத்துவத்தை நமக்குக் கற்றுத்தருகிறது என்று தொடர்ந்து சொன்னார் பெரியவர்.

பெரியவரின் பேச்சை அமைதியாகக் கேட்டுக்கொண்டிருந்தான் அந்த இளைஞன்.

“கண்ணாடியில் முகத்தைப் பார்க்கும்போது அந்தக் கண்ணாடி நமது முகத்திலுள்ள குறைபாடுகளைக் காட்டினால், அந்தக் கண்ணாடி மீது நாம் கோபப்படுவதில்லை. ஆத்திரப்படுவதில்லை. ஆனால், அதேவேளையில் அந்தக் கண்ணாடியைப் பார்த்து முடிந்தபின்பு பாதுகாப்பாக எடுத்து வைத்துக்கொண்டு நாள்தோறும் கண்ணாடி பார்க்கிறோம்.

இதைப்போலவே, சிலர் நமது குறைகளை சுட்டிக்காட்டி பேசும்போது அவர்கள்மீது வருத்தப்படக்கூடாது. கோபத்தில் அவர்களை திட்டக்கூடாது. மாறாக, அந்தக் குறைகள் உண்மை என அறிந்தால் நமது குறைகளை நீக்குவதுதான் அறிவார்ந்த செயலாகும். இதுவும் கண்ணாடி நமக்குக் கற்றுத்தரும் இன்னொரு பாடமாகும்” – என்றார் பெரியவர்.

ஒரு கண்ணாடி இத்தனை வாழ்க்கைப் பாடங்களைக் கற்றுத்தருகிறதே என்று எண்ணும்போது இளைஞன் ஆச்சரியப்பட்டான். கண்ணாடி ரகசியம் தெரிந்தபின்பு அவன் தன்னை மாற்றிக்கொள்ளவும் முயற்சி செய்தான்.

ஒரு சாதாரண முகம் பார்க்கும் கண்ணாடி வாழ்க்கை யதார்த்தங்களைப் பிரதிபலிக்கின்றது. இதைப்போலத்தான் நாம் பயன்படுத்துகின்ற பொருட்கள் பல வாழ்க்கைத் தத்துவங்களை நமக்கு புரியவைக்க முயற்சி செய்கிறது. அதனைப் புரிந்துகொண்டவர்கள் வாழ்க்கையில் வெற்றிகளைக் காண்கிறார்கள். நாம் பயன்படுத்தும் பொருட்களைத்தவிர பயன்படுத்தாத பொருட்களும் வாழ்வியலை நமக்கு எளிதாகக் கற்றுத் தருகின்றன. நாம்தான் அதனை புரிந்து கொள்ள வேண்டும் .

நபி (ஸல்) அவர்கள் அறிவிக்கிறார்கள் :

ஓர் இறைநம்பிக்கையாளர், இன்னொரு இறைநம்பிக்கையாளருக்குக் கண்ணாடியைப் போன்றவர். கண்ணாடி குறைகளைச் சுட்டிக் காட்டுவது போல, அவரிடம் ஏதேனும் குற்றங் குறைகளைக் கண்டால் அதனை அவரிடம் சுட்டிக்காட்டி அவரிடமிருந்து அதனை அகற்றி விடட்டும் .
அபூஹுரைரா (ரலி) - முஸ்லீம்

ர.ரா

நெஞ்சம் மறப்பதில்லை - அது
நினைவை இழக்கவில்லை .

(அதிநவீன விஞ்ஞானத்தின்
இன்றைய வளர்ச்சி 08 )




"நெஞ்சம் மறப்பதில்லை - அது
நினைவை இழக்கவில்லை " என்ற
இந்த சினிமாப் பாடலின் வரிகள் எந்த தத்துவத்தை சொல்லுதோ என்னவோ ஆனால் விஞ்ஞானத் தத்துவத்தை அப்படியே சொல்கிறது !

மனமும் , சுவையும் நம் ஞாபகங்களுடன் ஒன்றியிருப்பவை . ஒரு மகிழம்பூ வாசனையோ, ஒரு மரிக்கொழுந்து வாசனையோ உங்களை பள்ளிப் பருவத்தில் பக்கத்து சீட்டில் உட்கார்ந்திருந்த பெண்ணின் ஞாபகத்துக்கு கொண்டு போகலாம்.

இதையே மார்ஸெல் ப்ரௌஸ்ட் (Marcel proust ) என்ற நாவலாசிரியர் ஒரு முறை ஒரு விதமான கேக்கை ருசிக்கிறார். அது அவருக்கு சட்டென்று வெள்ளமாக பழைய நினைவுகள் தோன்றினவாம் . அதையெல்லாம் "Remembrance of Things Past " (பழைய நினைவுகளின் ஞாபகங்கள் ) என்கிற நினைவுகளை சம்பந்தப்படுத்தி அதை நாவலாக எழுதினார் . ' ஓர் ஆள் படுக்கையில் புரண்டு புரண்டு படுப்பதை முப்பது பக்கம் எழுதுவது என்ன இலக்கியம் ' - என்று அந்தப் புத்தகம் முதலில் பதிப்பாளர்களால் நிராகரிக்கப்பட்டது.

அதை ஓர் ஏழை பதிப்பாளரால் தூசி தட்டி பதிப்பித்தார் . வியாபாரம் பிச்சிக்கிட்டு போனது. இன்று , உலக இலக்கியத்தில் மிக முக்கியமான புத்தகம் . "மற்றதெல்லாம் அழிந்தபின் , உடல் அழிந்தபின் மணமும் ருசியும்தான் தனிப்பட்ட விசுவாசமான ஞாபக உணர்ச்சிகளாக மிச்சமிருக்கும் " என்றார் மார்ஸெல் ப்ரௌஸ்ட் . அப்படியா ? பார்ப்போம் .

ஞாபகம் என்பது என்ன ? இதுவரை யாரும் அதை சரியாக சொல்லவில்லை. சில விஷயங்கள் ஞாபகத்தில் இருக்கின்றன . சிலது மறந்து போகின்றன. எல்லாம் நம் மூளையிலுள்ள நியுரான்களின் சாகசம்.

நியுரான்கள் என்பது மூளையில் உள்ள ஆதாரமான நரம்பு செல். கோடிக்கணக்கில் இருக்கும் .இந்த செல்களின் இணைப்பில்தான் நம் ஞாபகம் பொதுவாக இருப்பதாக நம்பப்படுகிறது.

உங்கள் பாட்டியை உங்களுக்கு ஞாபகம் இருந்தால் , அவள் முகத்துக்கு ஒரு நியுரான் இருக்கிறது .அவள் குரலுக்கு ஒரு நியுரான் .அவள் வாசனைக்கு ஒரு நியுரான் என்று ஆரம்ப காலத்தில் நம்பினார்கள் .

இப்போது தனிப்பட்ட நியுரான்களில் நம் ஞாபகம் இல்லை என்கிறார்கள். பாட்டியின் ஞாபகங்கள் நியுரான்களில் இணைப்பில் ஏற்படுத்திய மாறுதல்களில்தான் வசிக்கிறது என்கிறார்கள் . பாட்டியின் ஞாபகம் ஒரு குறிப்பிட்ட வாடையில் மணத்தில் இருக்கிறது .

இதையே குர்ஆனில் சிரியாவில் இருக்கும் நபி யாகூப் (அலை ) அவர்கள் தன் மைந்தன் நபி யூசுப் (அலை) அவர்கள் சிறு வயதில் காணாமல் போய் மனம் வருந்துகிறார்கள் . சுமார் 20 வருடம் கழித்து எகிப்தில் இருக்கும் நபி யூசுப் (அலை) அவர்கள் தன் சட்டையை தந்தையாருக்கு அனுப்பி வைக்கிறார்கள் .

وَلَمَّا فَصَلَتِ الْعِيْرُ قَالَ اَبُوْهُمْ اِنِّىْ لَاَجِدُ رِيْحَ يُوْسُفَ لَوْلَاۤ اَنْ تُفَنِّدُوْنِ

அவர்களின் ஒட்டக வாகனங்கள் (எகிப்திலிருந்து) பிரியவே, அவர்களின் தந்தை ("இதோ) யூஸுஃபுடைய வாடையை நிச்சயமாக நான் நுகர்கிறேன்; (இதனால்) என்னை நீங்கள் பைத்தியக் காரனென்று எண்ணாமலிருக்க வேண்டுமே!"
என்றார் (அல்குர்ஆன் : 12:94)

" மற்றதெல்லாம் அழிந்தபின் , உடல் அழிந்தபின் மணமும் ருசியும்தான் தனிப்பட்ட விசுவாசமான ஞாபக உணர்ச்சிகளாக மிச்சமிருக்கும் " என்றார் மார்ஸெல் ப்ரௌஸ்ட் .

உடல் அழிந்தால் தலையிலுள்ள மூளை , மூளையினுள்ள நியுரான்களெல்லாம் அழிந்த பின் ஞாபகங்கள் மட்டும் என்ன ஆன்மாவிலா பதிந்திருக்கும் ?

ஆமாம் . ஞாபகங்கள் எல்லாம் ஆன்மாவில்தான் பதிகிறது .இதையும் குர்ஆனில் , நாம எல்லோரும் உடல் படைக்கப்படாத ஆன்மாவால் படைக்கப்பட்டிருந்த ஆன்மலோகத்தில் இறைவன் ....

وَ اِذْ اَخَذَ رَبُّكَ مِنْۢ بَنِىْۤ اٰدَمَ مِنْ ظُهُوْرِهِمْ ذُرِّيَّتَهُمْ وَ اَشْهَدَهُمْ عَلٰٓى اَنْفُسِهِمْ اَلَسْتُ بِرَبِّكُمْ قَالُوْا بَلٰى ۛ شَهِدْنَا ۛ اَنْ تَقُوْلُوْا يَوْمَ الْقِيٰمَةِ اِنَّا كُنَّا عَنْ هٰذَا غٰفِلِيْنَ ۙ

(நபியே!) உங்களது இறைவன் ஆதமுடைய மக்களை அவர்களுடைய (தந்தைகளின்) முதுகுகளிலிருந்து அவர்களுடைய சந்ததிகளாக வெளியாக்கி, அவர்களையே அவர்களுக்கு சாட்சியமாகவும் வைத்து (அவர்களை நோக்கி) "நான் உங்கள் இறைவனாக இல்லையா ?" என்று கேட்டதற்கு, "ஏன் இல்லை (நீதான் எங்கள் இறைவன்! என்று) நாங்கள் சாட்சியம் கூறுகிறோம்" என்று அவர்கள் கூறியதை (நீங்கள் அவர்களுக்கு) ஞாபகமூட்டுங்கள். ஏனென்றால் இதனை ஒருவரும் எங்களுக்கு ஞாபகமூட்டாததால் நிச்சயமாக நாங்கள் இதனை (மறந்து) விட்டுப் பராமுகமாகி இருந்தோம்" என்று மறுமை நாளில் சொல்லாமல் இருப்பதற்காகவும்,
(அல்குர்ஆன் : 7:172)

يَوْمَ يَتَذَكَّرُ الْاِنْسَانُ مَا سَعٰىۙ

அந்நாளில் மனிதன் தான் முயன்றவற்றையெல்லாம் நினைவுபடுத்திக் கொள்வான்.
(அல்குர்ஆன் : 79:35)

" மற்றதெல்லாம் அழிந்தபின் , உடல் அழிந்தபின் மணமும் ருசியும்தான் தனிப்பட்ட விசுவாசமான ஞாபக உணர்ச்சிகளாக மிச்சமிருக்கும் " என்றார் மார்ஸெல் ப்ரௌஸ்ட் .

சரிதானோ ...?

ர.ரா

## பூமியின் உஷ்ணம்

(அதிநவீன விஞ்ஞானத்தின்
இன்றைய வளர்ச்சி 07 )



1997 டிசம்பர் முதல் வாரத்தில் ஜப்பானில் க்யோட்டோ நகரில் 160 நாடுகள் ஒன்று சேர்ந்து global warming என்னும் பூமியின் உஷ்ணம் பற்றி பெரிய மாநாடு போட்டு பல நாட்கள் விவாதித்தார்கள் .

"கி.பி 2000 க்குள் உலக நாடுகள் நம் தொழிற்சாலைகளிலிருந்து வெளிப்படும் ' Green house gases ' என்னும் கழிவு வாயுக்களை நிறுத்திவிட வேண்டும் " _ அந்த வருஷம் கணக்குப் பார்த்ததில் ப்பே...பே ..நினைத்தது நடக்கவில்லை .

அப்புறமாக 2010 க்கு இலக்கை மாற்றி , தொழிற்சாலை வாயுவை குறை , குறை என்று மொத்த உலகத்தையும் கூப்பாடு போட வைத்தார்கள் .

க்ளோபல் வார்மிங் (global warming) உலக உஷ்ணம் என்றால் என்ன ?
இதற்கு ' க்ரீன் ஹவுஸ் எஃபக்ட் " பற்றித் தெரிய வேண்டும் . சொல்றேன் .

நம் தொழிற்சாலைகளிலிருந்து வெளிப்படும் கழிவு வாயுக்களில் காற்று மண்டலத்துடன் கலக்கும் ஆறு வகையான அபாயகரமானவை , அதிலும் கார்பன்-டை-ஆக்ஸைடு, மீத்தேன் , நைட்ரஸ் ஆக்ஸைடு மூன்றும் எமன்.

இவற்றை கட்டுப்படுத்தாவிட்டால் நம் காற்று மண்டலத்தில் இவை பிடிபட்டு வெளிப்பட இயலாமல், பூமியில் கணகணப்பு அதிகமாகி பூமியின் சராசரி உஷ்ணம் அதிகரிக்கும் என்கிறார்கள் .
இதனால் , துருவப் பிரதேசங்களில் உள்ள ஐஸ் பனி உருகி உருகி சமுத்திரக் கரையில் உள்ள நகரங்களில் எல்லாம் கடல் மட்டம் அதிகமாகி , நகருக்குள் கடல் நுழைந்து அழிந்துபோகும் அபாயம் இருக்கிறது .
எப்போது என்றால் , அடுத்த நூற்றாண்டின் இறுதிக்குள் என்கிறார்கள் .கி.பி 2100 -ல் மும்பை இருக்காது , திருவனந்தபுரம் இருக்காது, சென்னை இருக்காது , பாண்டிச்சேரி தூத்துக்குடி ,கன்யாகுமரி இவையெல்லாம் காணாமல் கடலுக்குள் போய்விடலாம்.

இதனால் , இந்த வாயுக்களின் அளவை இப்போதிலிருந்தே கட்டுப்படுத்த வேண்டியது மிக முக்கியம் என்று குறிப்பாக அமெரிக்காவில் இதைப்பற்றி நிறைய பேர் கவலை தெரிவித்து , உலக நாடுகள் எல்லாம் ஒத்துழைக்க வேண்டும் என்று ஒரே போடாக போட்டிருக்கிறார்கள் .

" சரி. இருக்கட்டும் இந்த க்ளோபல் வார்மிங்கே நிசம்தானா , இல்லை விஞ்ஞானிகளின் ஹைடெக் சதியா ? என்று அவர்களுக்குள்ளேயே கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டன.

காரணம் ஒரு நூற்றாண்டில் பூமியின் உஷ்ணம் எவ்வாறு மாறும் என்பதை கண்டுபிடிக்க கம்ப்யூட்டர் மாடல்கள் செய்து பார்த்திருக்கிறார்கள் . அவர்கள் கணக்குப்படி சென்ற நூற்றாண்டில் உலக உஷ்ணம் அரை டிகிரிதான் ஏறி இருக்கிறது . இது ஒன்னும் பெரிசில்லை.

சாட்டிலைட் விவரங்களின்படி சென்ற 18 ஆண்டுகளாக உலக உஷ்ணம் குறைந்துதான் வந்திருக்கிறது. இவர்கள் எஸ்டிமேட்டுகள் எல்லாம் சந்தேகத்துக்கு உரியவை. கம்ப்யூட்டர் மாடலெல்லாம் தப்பு . கணக்கே தப்பு .அந்த சந்தேக கேசை வைத்து முன்னேற்ற நாடுகள் தங்கள் உற்பத்தியை உலகளவில் சந்தைப்படுத்த வளரும் நாடுகளை
மட்டப்படுத்தி , தாங்கள் மட்டுமே இருக்க வேண்டும் என்பதற்காக உண்டாக்கப்பட்ட சதி என்று வளரும் நாட்டில் உள்ள விஞ்ஞானிகள் கருதுகிறார்கள் .

ஒரு கோஷ்டி எச்சரிக்கிறது ."உலகம் சூடாகி வெள்ளம் சூழ்ந்து சாவோம் ! " என்கிறது .

மற்றொரு கோஷ்டி , "கவலையே படாதே , நான் கேரண்டி ஒன்றும் நிகழாது ! " என்கிறது .

யாரைத்தான் நம்புவதோ ?

குர்ஆனில் இது பற்றி தேடிய போது , இன்றைக்கு 8500 வருடத்திற்கு முன்பாக மக்கள் 950 வருஷம் , 1000 வருஷம் வாழ்ந்திருக்கிறார்கள் என்பதற்கு ஆதாரமாக நபி நூஹ் (அலை) அவர்கள் 950 வருஷம் இப்பூமியில்தான் வாழ்ந்திருக்கிறார்கள் .

அவர்கள் காலத்தில் இந்த பூமியில் எந்த தொழிற்சாலையும் இல்லை.இருந்தாலும்
" தூபான் " என்கிற மிகப் பெரும் வெள்ளம் சூழ்ந்தது . வெள்ளம் வர இந்த உலகம் அப்படி என்னதான் செய்தது ?
அதையும் குர்ஆனிலேயே இறைவன் ....
فَكَذَّبُوْهُ فَنَجَّيْنٰهُ وَمَنْ مَّعَهٗ فِى الْـفُلْكِ وَجَعَلْنٰهُمْ خَلٰٓٮِٕفَ وَاَغْرَقْنَا الَّذِيْنَ كَذَّبُوْا بِاٰيٰتِنَا‌ فَانْظُرْ كَيْفَ كَانَ عَاقِبَةُ الْمُنْذَرِيْنَ
அப்பொழுதும் அவர்கள் அவரைப் ( நூஹை ) பொய்யரெனவே கூறினார்கள்; ஆகவே, நாம் அவரையும் ( நூஹையும் ) அவருடன் இருந்தவர்களையும் கப்பலில் (ஏற்றிக்) காப்பாற்றினோம் - மேலும் அவர்களைப் (பூமிக்கு) அதிபதிகளாகவும் ஆக்கினோம் .

நம்முடைய அத்தாட்சிகளைப் பொய்யெனக் கூறியவர்களை (வெள்ளத்தில்) மூழ்கடித்தோம். அச்சமூட்டி எச்சரிக்கை செய்யப்பட்ட அவர்களின் முடிவு என்ன ஆயிற்று என்பதை (நபியே!) நீர் கவனிப்பீராக. (குர்ஆன் : 10:73)

இந்த உலகில் எங்கேனும் வெள்ளம் வந்தால் அது க்ளோபல் வார்மிங்கால் அல்ல ; அது இறைவனின் வார்னிங்கால் வந்தது !

ர.ரா

இயந்திரக் குரல்கள் .

(அதிநவீன விஞ்ஞானத்தின் 16-01-2020
இன்றைய வளர்ச்சி 06)



" இந்தத் தடத்தில் உள்ள இணைப்புகள் எல்லாம் தற்போது உபயோகத்தில் உள்ளன . சிறிது நேரத்துக்குப் பிறகு டயல் செய்யவும் "

சென்னை டெலிபோனில் இந்தக் குரலை நீங்கள் அடிக்கடி கேட்டிருப்பீர்கள் .இது ஒரு கம்ப்யூட்டர் மூலமாகப் பதிவு செய்யப்பட்டு விநியோகிக்கப்படும் இயந்திரக் குரல் அதைப் போல் செல்போனிலும் நிறைய தடங்கள் குறித்து இயந்திர தனத்தில் பேசப்படுகிறது.

" தங்கள் பயணம் இனிதே அமைவதாக ... இப்போது நேரம் 5 மணி 30 நிமிடங்கள் ! " வாகனங்கள் பேசுகின்றன . பேங்கில் " டோக்கன் நம்பர் ஒன்று ஒன்று ஐந்து " கூப்பிடுகிறது.

இந்த மாதிரி குரல்கள் நம்மை ' இதைச் செய், அதைச் செய்யாதே ' என்று அறிவுரை வழங்குவது நவீன வாழ்வில் அதிகமாகிக்கொண்டு இருக்கின்றன.

ரயில்வே பிளாட்பாரத்தில் வந்து சேரும் வண்டிகளை இயந்திரக் குரலில் வரவேற்கின்றன. புறப்படும் வண்டிகளை இயந்திரக் குரலிலே வழியனுப்புகின்றன. சில கட்டடங்களில் லிப்டுகளில் எத்தனாவது மாடி என்று அறிவிக்கின்றன .

இப்போது வந்திருக்கும் புதுசு புதுசான கார்களில் , ஹெட்லைட் அணைக்க மறந்தாலோ , கதவை சரியாக பூட்ட மறந்தாலோ இயந்திரக் குரல் நினைவு படுத்தும் .கார் ரிவர்சில் செலுத்தும் போது , " அட்டென்ஷன் .... திஸ் கார் இஸ் பாக்கிங் அப் " என்று கொரியா அல்லது ஜப்பான் குரலில் சொல்லும் சாதனங்கள் அல்லது 'ஜிங்கிள் பெல்ஸ் ' போன்ற மெட்டுகள் உள்ளன .ஏன் ஒரு காரில் பீத்தோவனின் மெட்டுக்கூட வைத்திருக்கிறார்கள்.

கலிஃபோர்னியாவில் ஒரு கம்பெனி , கல்லறையில் ஒரு பட்டனை வைத்து , அதை அழுத்தினால் பிறந்தது, இறந்தது அவர் கடைசியாக விட்டுப்போன பொன்மொழி எல்லாம் சொல்லுமாறு எலக்ட்ரானிக் ஏற்பாடு செய்கிறார்கள் .

இதெல்லாம் எலக்ட்ரானிக் சாதனங்களின் அற்புதமான பயன்பாடுகள் . வாய்ஸ் சின்தசைஸர் என்று ஒரு சில்லு இருக்கிறது .அதைப் பொருத்தினால் இந்தச் செய்திகளை அறிவிக்கும் .

அலுவலகத்தில் உள்ள நவீன கணிப்பொறி 'ஆன் ' செய்யும்போது , "வெல்கம் .... தாங்க் யு ஃபார் யூஸிங் க்ரியேட்டிவ் சிடி ராம் டிரைவ் " என்று சொல்கிறது .அணைக்கும் போது , "குட்பை . ஹேவ் எ நைஸ் டே "

இப்போதெல்லாம் வாழ்த்து அட்டைகளைத் திறந்தால் பாட்டுப்பாடும் சில்லுகள் உள்ளன. குருவி மொம்மை வாங்கி, அதை வெளிச்சத்தில் காட்டினால் நிஜக் குருவி போலவே சத்தமிடும் .

......இது பற்றி எழுத்தாளர் சுஜாதா கூறும் போது ,

"இதெல்லாம் முன்னேற்றமா என்று யோசித்துப் பாருங்கள் எனக்கென்னவோ அது என் அந்தரங்கத்தில் குறுக்கீடு .ஒரு முட்டாள் யந்திரம் இதைச் செய்ய வேண்டும் . கூடாது என்று சொல்வதோ , ஏன் என்னை வாழ்த்துவது கூட பிடிக்கவில்லை. அடுத்தமுறை ,
"இந்தத் தடத்தில் உள்ள இணைப்புகள் எல்லாம் தற்போது உபயோகத்தில் உள்ளன . சிறிது நேரத்துக்குப் பிறகு டயல் செய்யவும் " என்கிற பெண்ணிடம் , "சிறிது நேரத்திற்குப் பிறகு டயல் செய்வேன் , இல்லை .அது என் இஷ்டம்.
நீ யார் அதைச் சொல்ல !" என்று அதட்ட விரும்புகிறேன்.

எனக்குத் தேவையெல்லாம் இயந்திரக் குரல் அல்ல . உயிருள்ள மனிதக் குரல்கள் " என்கிறார் சுஜாதா .

இன்றைக்கு கிட்டத்தட்ட 4000 வருடத்திற்கு முன்பாக எகிப்தில் நபி மூஸா (அலை) அவர்களின் மக்களின் ஒருவனாக பொற்கொல்லன் ஸாமிரியும் இருந்தான் . அவனும் அன்றைய காலகட்டத்தில் இயந்திரத்தனமான குரல் எழுப்பும் தங்க காளைக் கன்று சிலை செய்தான் .

இஸ்ரவேலர்கள் எகிப்திலிருந்து வெளியேறிய போது ஃபிர்அவ்னின் மக்களிடத்தில் இரவலாக தங்க நகைகளை வாங்கியிருந்தனர் . ஃபிர்அவ்ன் முழ்கடிக்கும் பொழுது வானவர் ஜிப்ரயீல் (அலை) அவர்களுடைய குதிரையின் காலடி மண்ணை எடுத்து வைத்திருந்தான் .

ஸாமிரி இஸ்ரவேலர்களிடம் இரவலாக பெற்ற நகையை நெருப்பில் இடச் சொன்னான் . அதனைக் கொண்டு காளை கன்று சிலை செய்தான் .தான் சேகரித்து வைத்திருந்த மண்ணை அந்த சிலையின் வாயில் போடவும். அக்காளைக் கன்றின் சிலை சப்தமிட்டது

" ஆனால் அது அவர்களுடைய கூப்பிட்ட குரலுக்கு எந்தப் பதிலும் அளிக்காது என்பதையும் , அவர்களுக்கு எந்தத் தீங்கோ நன்மையோ செய்ய அதற்கு ஆற்றல் கிடையாது என்பதையும் அவர்கள் கவனித்திருக்க வேண்டாமா ?
(குர்ஆன் 20 : 89 )

இதைத்தான் சுஜாதா அவர்கள் சொன்னது " ஒரு முட்டாள் யந்திரம் இதைச் செய்ய வேண்டும் , கூடாது என்று சொல்வதோ , ஏன் என்னை வாழ்த்துகூட பிடிக்கவில்லை " என்கிறார் .

சரிதானே , உதவி செஞ்சவங்கிட்ட "நன்றி " சொல்லும் அவர் முகத்தில் மிளுரும் மகிழ்ச்சி , உதவியை பெற்றவனுக்கு தேவையாக இருக்கிறது .
அது எந்திரமாக இருக்கும் பட்சத்தில் எங்கே சொல்வது ?

டிஜிட்டல் இந்தியாவில் எல்லாமே எந்திர மயமானால் " நன்றி " , " ஸாரி "போன்ற வார்த்தைகளெல்லாம் மறந்து போய் , இதயம் மறுத்து விடும் .

ர.ரா

ஆயிரம் வயது வாழ முடியுமா ?

(அதிநவீன விஞ்ஞானத்தின்
இன்றைய வளர்ச்சி 04 )





1998 ம் ஆண்டு சிறந்த கதைகளின் தொகுதி 24 . அதில் ஒன்று " The Island of the immortals " எழுதியவர் மிகப் பிரபலமான யூத ஆசிரியை பெயர்: Ursula Le Guin . கதையைச் சொல்றேன் . அப்புறமாக மேட்டருக்கு வர்றேன்.

' எண்டியன் ' என்னும் பிரதேசத்தில் சாகாவரம் பெற்றவர்கள் இருக்கிறார்களாமே ...? " என்று ஒருத்தி டிராவல் ஏஜெண்டைக் கேட்டபோது,

"அங்கேயா போகிறீர்கள் ...? அது கொஞ்சம் ஒரு மாதிரியான இடம் " என்று எச்சரிக்கிறார்கள் . ஈக்கள் அதிகம் மொய்க்கும் .கடிக்கக்கூடக் கடிக்கும் ஆனால் நோய் பரவும் ஆபத்து இல்லை. போகலாம் " என்கிறார்கள் .

இவள் அங்கே போக விரும்புகிறாள் . எப்போதோ 'கலிவர்ஸ் டிராவல்ஸ்' படித்த ஞாபகத்தில் அந்த இடத்துக்குப் போயே ஆகவேண்டும் என்கிற பிடிவாதம் அவளுக்கு அதிகமாகிறது. அதைப் பற்றி நூலகத்துக்கு சென்று குறிப்பெடுத்துக் கொள்கிறாள். அந்த தீவில் சிலர் சாவதே இல்லை என்று ஒரு பழங்கதை உண்டு.

கப்பலேறுகிறாள். காப்டனிடம்
தீவைப்பற்றி விசாரிக்கிறாள்.
" உண்மைதான். அந்தத் தீவில் இறவாது சாசுவதமாக வாழ்பவர்கள் சிலர் இருக்கிறார்கள். அந்தத் தீவில் உள்ள ஒரு வகையான ஈ கடித்ததால், அவர்கள் சாகாமல் இருக்கிறார்கள். நீங்கள் எதற்கும் எச்சரிக்கையாக இருங்கள். அந்த ஈ.யில் உள்ள ஏதோ ஒரு வைரஸ் தான் சாகாத்தன்மையை உண்டாக்குகிறது. வலை போட்டுக் கொண்டு அலைவது நல்லது " என்கிறார் காப்டன்.

' இது ஏன் வெளியே அதிகம் தெரியவில்லை ...? தெரிந்தால் உலகத்தில் பலர் சாகாமல் சாசுவதமாக வாழ விரும்ப மாட்டார்களா ..? என்று கேட்கிறாள் .

அதற்குச் சிக்கனமாக , ' போய்ப் பார். தெரியும் ' என்றார் காப்டன் .

இனம் புரியாத பயத்துடன் தனியாக அந்தத் தீவில் இறங்குகிறாள் . தீவில் இருந்த ஒரே ஒரு லாட்ஜில் தங்குகிறாள் . எல்லா அறைகளுமே காலி. ஜன்னல்களில் வலை போடப்பட்டிருக்கிறது . சின்னச் சின்ன, பழுப்பான வித்தியாசமான சன்னமான ஈக்கள் மொய்க்கின்றன. அவை வலையால் தடுக்கப்பட்டிருக்கின்றன .

மறுதினம் ஒரு படகோட்டியிடம் விசாரித்த போது , " வைரம் பொறுக்க வந்திருக்கிறாயா ...? ஒரு காலத்தில் இந்த இடத்தில் நிறைய வைரம் கிடைத்தது ' என்கிறான் .

சாகாதவர்களைப் பற்றிக் கேட்டபோது , "இருக்கிறார்கள்.... ஒன்றிரண்டு பேர் " என்றான் சுவராஸ்யமில்லாமல் .. இவளுக்கு ரொம்ப ஆச்சரியமாக இருக்கிறது .

" இவர்களை நான் பார்க்க முடியுமா ..? "

ஒரு கிராமத்துக்கு அழைத்துச் செல்லப்படுகிறாள் . ஈக்கள் மொய்க்கின்றன . குழந்தைகள் புது ஆளைக் கண்டு பயந்து ஓடி மறைகின்றன. ஒரு பெண் வந்து, "சாகாதவரைப் பார்க்க வந்திருக்கிறாயா... ? இரண்டரை வெள்ளி " பணம் கேட்டு வாங்கிக் கொண்டு , " வா ..." என்று அழைத்துச் செல்கிறாள்.

ஒரு மூளையில் கால் மடக்கி அந்த உருவம் உட்கார்த்திருக்கிறது . முகத்தை பார்க்க மொண்ணையாக இருக்கிறது . கைதான் இவள் கவனத்தை கவர்கிறது .

ஒரு டூரிஸ்ட் கைடு போல , அந்தப் பெண்மணி பேசுகிறாள் " நீங்கள் பார்ப்பது சாகாத மனிதனை .இது எங்களுடன் சில நூற்றாண்டுகளாக இருக்கிறது. ரோயா குடும்பத்தைச் சேர்த்தது .இதற்கு நாங்கள் வேளா வேளை உணவளித்து வளர்க்கிறோம் , காலையிலும் ,மாலையிலும் ஆறு மணிக்கு உணவளிப்போம் .பாலும் பார்லியும் சாப்பிடும் .நல்ல ஆரோக்கியம். வியாதி எதுவும் கிடையாது. #ஆயிரம்வருஷம் முன்னால், இது ஒரு பூகம்பத்தில் கால்கள் ஒடிந்தது. எங்களிடம் வருவதற்கு முன் தீ விபத்தில் கொஞ்சம் தேசப்பட்டு விட்டது .இது பல நூற்றாண்டுகளுக்கு முன் , ஓர் அழகான இளைஞனாக இருந்ததாம். வேட்டையாடி பிழைத்து வந்ததாம் . இப்போது இதற்கு கண் தெரியாது . காதும் கேட்காது . நீங்கள் இதற்காகப் பிரார்த்தனை செய்யலாம் .ஏதாவது நன்கொடை கொடுத்தாலும் மகிழ்ச்சி. இது பற்றி வேறு கேள்விகள் இருந்தால் கேட்கலாம் ... "

" இது சாகவே சாகாதா ....? "

" ஆம் "

" நீங்கள் எல்லாம் ஏன் ஈ வலை அணியவில்லை ...? "

" ரொம்ப தொந்தரவு . மேலும் , அது ஒன்றுதானே ...? "

" அப்படியென்றால் ... இது ஒன்றுதான் சாகாதா ...? "

" இல்லை , இல்லை . மற்றவர்களும் இருக்கிறார்கள். அவர்களைத் தேடிப் போக வேண்டும். அவர்கள் எல்லாம் ரொம்ப வயதானவர்கள். எல்லோருக்கும் இளசு இதுதான் "

" வைரங்கள் சாசுவதமானவை என்கிறார்களே ...? "

" இருக்கலாம் .சில காலத்துக்கு முன் ஒரு விஞ்ஞானி வந்தார். இந்த சாகாதவர்களைப் புதைத்துவிட்டால் , பல்லாயிரம் வருடங்களில் வைரங்களாகி விடலாம் " என்றார் .

" ... ஆனால் , எங்கள் குடும்பத்தில் உயிரோடு ஒருவரைப் புதைப்பது தப்பு என்று நம்புகிறோம் ... "

குழப்பான எண்ணங்களுடன் திரும்புகிறாள் இவள் . ஒருக்கால் அந்தத் தீவில் சாகாத மனிதர்கள்தான் நாளடைவில் வைரங்களாக மாறி விட்டார்களோ... என்று எண்ணுகிறாள் . வீடு திரும்பும் போது யோசிக்கையில் , அந்த கைடு பெண் 'அது ஒன்றுதானே...' என்றபோது , தீவில் இருக்கும் ஈக்களில் ஒன்றே ஒன்றுதான் கடித்தால் சாகாவரம் வரும் என்று சொல்ல வந்தாளோ .. என்று நினைக்கிறாள்.

இவ்வாறு முடியும் இந்த அபாரமான கதையை , ஒரு வாரம் யோசிப்பீர்கள் இதிலிருந்து மீளுவதற்குள் அடுத்த செய்தி ஆயிரம் வருடம் வாழும் மனிதனைப் பற்றி ....

கேரளா நீலம்பூரில் அதிசய உயிரினம்!!!
vettimurasu March 30, 2018 ,world

இது எங்கிருந்து வந்தது என கண்டு பிடிக்க முடியவில்லை. அதன் ஸ்டெம் செல் எடுத்து ஆராய்ந்த போது அவர்களுக்கு அதிர்ச்சி காத்திருந்தது. அது #ஆயிரம்வருடங்களுக்கு முற்பட்டது.

மேலும் பூமியிலுள்ள எந்த ஒரு உயிரின செல்லோடும் ஒத்துப்போகவில்லை. நாம் உண்ணும் எதையும் அது உண்பதில்லை. சூரியனிலிருந்து ஆற்றலை கிரகித்துக்கொள்கிறது. இரவில் பறக்கிறது. இன்னும் ஆய்வுகள் நடந்து வருகிறது. இந்த செய்திகளை வெளியிட்டால் மக்கள் பீதி அடைவார்கள் என மத்திய உள்துறை அமைச்சகம் ரகசியம் காக்கிறது. அடுத்த வாரம் நாசா விலிருந்து குழு ஒன்று வருகிறார்கள்

இதன் செல்லை எடுத்து சாகாவரம் பெற்ற மனிதர்களை உருவாக்க முயல்கிறார்கள். இதை விலைக்கு வாங்க 7500 டிரில்லியன் டாலர்களை இந்தியாவிற்கு கொடுக்க அமெரிக்கா முன்வந்துள்ளது. ஆனால் இந்தியா 18575 டிரில்லியன் கேட்கிறது. இந்த தொகை கிடைத்தால் இந்தியர்கள் அனைவரும் கோடீஸ்வரர்கள் ஆகிவிடுவார்கள்.

وَلَتَجِدَنَّهُمْ اَحْرَصَ النَّاسِ عَلٰى حَيٰوةٍ ۛ وَ مِنَ الَّذِيْنَ اَشْرَكُوْا ۛ يَوَدُّ اَحَدُهُمْ لَوْ يُعَمَّرُ اَ لْفَ سَنَةٍ وَمَا هُوَ بِمُزَحْزِحِهٖ مِنَ الْعَذَابِ اَنْ يُّعَمَّرَ وَاللّٰهُ بَصِيْرٌ بِمَا يَعْمَلُوْنَ

அவர்கள், மற்ற மனிதர்களைவிட, இணை வைக்கும் முஷ்ரிக்குகளையும் விட (இவ்வுலக) வாழ்க்கையில் பேராசை உடையவர்களாக இருப்பதை (நபியே!) நீர் நிச்சயமாகக் காண்பீர்; அவர்களில் ஒவ்வொருவரும் #ஆயிரம்ஆண்டுகள் வாழவேண்டும் என ஆசைப்படுகிறார்கள்; ஆனால் அப்படி அவர்களுக்கு நீண்ட வயது கொடுக்கப்பட்டாலும், அவர்கள் இறைவனின் தண்டனையிலிருந்து தப்ப முடியாது; இன்னும் அல்லாஹ் அவர்கள் செய்வதையெல்லாம் கூர்ந்து பார்ப்பவனாகவே இருக்கிறான்.
(அல்குர்ஆன் : 2:96)

- மனிதனின் ஆயுட்காலம் 1000

  மனிதனின் தோல் செல்லுடன் பெண்ணின் சினைமுட்டையை சேர்த்து ஸ்டெம்செல் கருமுட்டையை உருவாக்கி அமெரிக்க விஞ்ஞானிகள் அபார சாதனை படைத்துள்ளனர். இதன்மூலம் சிக்கலான ஆபரேஷன்களுக்கு தேவையான ஸ்டெம்செல்களை உருவாக்க முடியும் என்று விஞ்ஞானிகள் கூறினர்.

  குளோனிங் முறையில் மனிதனை ஜெராக்ஸ் எடுக்கும் முயற்சியின் முதல்கட்டம் இது என்ற பரபரப்பையும் ஏற்படுத்தியுள்ளது இந்த ஆராய்ச்சி. மனித உடலில் பல லட்சம் கோடி செல்கள் உள்ளன. இவற்றையோ, நுண்ணுயிர்களையோ மணம், நிறம், குணம் மாறாமல் அச்சு அசலாக ஜெராக்ஸ் பிரதி எடுப்பதுதான் ‘குளோனிங்’. முறையில் உறுப்புகளை பெற முடியும் .

  ஒரு ஆணின் தோல் செல்லை எடுத்து, அதனுடன் பெண்ணின் சினை முட்டையை சேர்த்து ஸ்டெம்செல் கருமுட்டையாக மாற்றியிருக்கிறார்கள். இது அச்சு அசலாக ஆண் தோல் செல்லின் ஜெராக்ஸ் போல அமைந்துள்ளது.

  இதுபற்றி ஆய்வுக்குழு உறுப்பினர் டாக்டர் சுக்ரத் மிடாலிபோவ் மேலும் கூறியதாவது: மனிதனின் தோல் செல்லை குளோனிங் முறையில் உருவாக்கும் ஆராய்ச்சி வெற்றிகரமாக முடிந்துள்ளது. இதுபோல குளோனிங் முறையில் உருவாக்கப்படும் கருமுட்டையில் இருந்து ஸ்டெம்செல் உருவாக்கி அதன் மூலம் பல்வேறு வகையான திசு செல்களை உருவாக்க முடியும். உறுப்பு மாற்று ஆபரேஷன்களுக்கு இது முக்கிய பங்களிக்கும். உறுப்பு செல்களை வளர வைத்து, செயற்கை உறுப்புகள் தயாரிப்பது, தேவைப்படுவோருக்கு பொருத்துவதற்கான முயற்சிகளும் வெற்றி பெறும்
  - Like

🖉Author
Rahmath Rajakumaran குளோனிங் முறையில் தயாரிக்கப்பட்டிருக்கும் மனித ஸ்டெம்செல்லுக்கு வேறு செல்கள், திசுக்கள், உறுப்புகளை வளர வைக்கிற திறன் இருப்பது உறுதியாக தெரிகிறது. பார்வை கோளாறுகள், தண்டுவட பாதிப்புகள், பார்கின்சன்ஸ் டிசீஸ் எனப்படும் மூளை முடக்குவாதம், நரம்பு மண்டல பாதிப்புகள் ஆகியவற்றால் பாதிக்கப்பட்டவர்களின் செல்லை எடுத்து அதை கருமுட்டையாக மாற்றி வளர வைத்தால் செல்களின் ஜெராக்ஸ் பிரதிகளை உருவாக்க முடியும். பாதிக்கப்பட்ட செல்களை அகற்றிவிட்டு இந்த புதிய செல்களை பொருத்துவதன்மூலம் அவர்களை குணமாக்க முடியும்.

இப்படியாக பழுதடைந்த மனித உறுப்புகளை மாற்றி மாற்றி சிறுநீரகத்தை மாற்றி, இதயத்தை மாற்றி மண்ணீரல் மாற்றி , கல்லீரல் மாற்றி மனித ஆயுளை 120 லிருந்து 1000 வருடம் வரை நீடிக்க முடியுமா என்று மருத்துவ உலகம் சிந்திக்கிறது

وَلَتَجِدَنَّهُمْ اَحْرَصَ النَّاسِ عَلٰى حَيٰوةٍ ‌ ۛۚ وَ مِنَ الَّذِيْنَ اَشْرَكُوْا ۛۚ يَوَدُّ اَحَدُهُمْ لَوْ يُعَمَّرُ اَ لْفَ سَنَةٍ ۚ وَمَا هُوَ بِمُزَحْزِحِهٖ مِنَ الْعَذَابِ اَنْ يُّعَمَّرَ‌ؕ وَاللّٰهُ بَصِيْرٌ ۢ بِمَا يَعْمَلُوْنَ
அன்றி, (நபியே! அந்த யூதர்கள்) மற்ற மனிதர்களை விடவும் (குறிப்பாக இணைவைத்து வணங்கும்) முஷ்ரிக்குகளை விடவும் (நீண்ட நாள்) உயிர்வாழ மிகவும் பேராசை உடையவர்களாக இருப்பதை நிச்சயமாக நீங்கள் காண்பீர்கள்! அவர்களில் ஒவ்வொருவனும் "நான் ஆயிரம் ஆண்டுகள் உயிர்வாழ வேண்டுமே?" என்று விரும்புவான். (அவ்வாறு நீண்ட நாள்) யிருடன் இருக்க அவனை விட்டு வைத்தாலும் அது வேதனையிலிருந்து ஒரு சிறிதும் அவனைத் தப்பிக்க வைத்துவிட மாட்டாது. அல்லாஹ் அவர்கள் செய்வதை உற்று நோக்குபவனாக இருக்கின்றான்.
(அல்குர்ஆன் : 2:96)

குமாரு உடம்பிலிருந்து பழுதடைந்த ஒவ்வொரு உறுப்பையும் மாற்றி மாற்றி எல்லா உறுப்புகளையும் மாற்றி விட்டால் மீதி இருப்பது குமார் தானா ?

ஆவுட்டே இல்லாத கிரிக்கெட் சுவராசியமாக இருக்குமா ?

சென்ற நூற்றாண்டின் கவிஞர் ஷெல்லியின் மனைவி மேரி ஷெல்லி எழுதிய Frankenstein or the modern prometheus என்னும் நாவலில் டாக்டர் விக்டர் ஃப்ராங் கன்ஸ்டைன் பல புதிய புதிய பிணங்களில் இருந்து உடல்

பாகங்களை எடுத்து எடுத்து ஓர் உடலைத் தயாரித்து , அதற்கு உயிர் ஊட்டுகிறார் . அந்த உடனேயே அதற்கு ஒரு ஜோடியாக பெண் உடலையும் தயாரிக்க எண்ணினார் . சரி இந்த ஒட்டு சேர்த்த ஆண் உடல் என்ன செய்கிறது என்று பார்ப்போம் என்று சோதிக்க .அந்த ஆண் தன் ஜோடியை உடனே உருவாக்க டாக்டரையே மிரட்டுகிறது உடனே அது தப்பி பெண்களைப் பார்த்து பார்த்து கொன்று பெண் பிணங்களை டாக்டருக்கு அனுப்பி வைக்கிறது மற்றவர்களையும் அழிக்க முயலும் அபாயம் ஏற்படுகிறது .இறுதியாக ரொம்ப சிரம்பத்திற்குப் பிறகு அது மருத்துவ ரீதியில் அழிக்கப்படுகிறது .

இதனால்தான் மரணம் அவசியப்படுகிறது . உறுப்புகள் பாதிக்கப்பட்டு மரணத்திற்கு நோய் ஒரு காரணமாகிறது . பழுதடைந்த உறுப்பை மாற்றி மாற்றி உயிர் வாழ்ந்தால் .....

"வந்தவரெல்லாம் தங்கி விட்டால் இந்த மண்ணில் நமக்கு இடம் ஏது ?"

ரஹ்மத் ராஜகுமாரன்

30 படிக்கட்டுகள்  13-01-2020

(அதிநவீன விஞ்ஞானத்தின்
இன்றைய வளர்ச்சி 03 )



டிம் ராபின்சன் எழுதிய " The Fineness of Things " என்கிற விஞ்ஞான கட்டுரையில்
மிகப் பெரியதிலிருந்து மிகச் சிறியது வரை நாம் சிந்திக்க வேண்டியிருக்கிறது

ஒரு பாக்டீரியா , அதைவிட சிறிய வைரஸ் , ஏன் ... அதை விட சிறிய எலக்ட்ரான் , க்வார்க் , இன்னும் அதை விட சிறிதான ப்ளாங் தூரம் ( Planck distance) இதன் மதிப்பு 1.616252 எழுதி புள்ளி 0. 35 ஜீரோக்களால் வகுக்க கிடைக்கும் மீட்டரில் தூரம் . கற்பனை பண்ண முடியாது. இதுவரையிலும் நாம் சிந்திக்க வேண்டியதிருக்கிறது .

மறுபக்கத்தில் பிரபஞ்சத்தையும் பல்லாயிரம் கோடி ஒளிவருஷ தூரத்தின் மிகப் பெரிய பிரமாண்டத்தையும் எண்ணிப் பார்த்து வியக்க வேண்டியிருக்கிறது .இந்த இரண்டின் வீச்சில் நாம் மாட்டிக் கொள்ளாமல் இருக்க ராபின்சன் ஓர் எளிய வழிமுறை சொல்கிறார்.

பத்து மடங்கு ... பத்துப் பத்து மடங்காக பெரிசையோ , சிறிசையோ எண்ணிப் பார்த்தால் சிருஷ்டி அனைத்தும் 30 படிக்கட்டில் மனசுக்குள் அடங்கி விடும் என்கிறார்.

படிப்படியாக யோசிக்கலாம் .

நாம் படிக்கட்டில் நடுவில் இருக்கிறோம்.... படிக்கட்டுகளில் மேலே ஏறலாம் , அல்லது இறங்கலாம்.

ஒவ்வொரு படிக்கட்டும் முந்தின படிக்கட்டை விட பத்து மடங்கு பெரிசு , கீழே இறங்கினால் முந்தின படிக்கட்டை விட பத்து மடங்கு சிறிசு .இப்படியே எண்ணிப் பார்த்தால் சிருஷ்டி அனைத்தும் 30 படிக்கட்டில் மனசுக்குள் அடங்கி விடும் என்கிறார்.

ஒரு படிக்கட்டு மேலே போனால் ஒரு பெரிய வீட்டின் உயரம், அடுத்தபடிக்கட்டு குன்று , அதைவிடப் பத்து மடங்கு மலை, இது மூன்றாவது படிக்கட்டு நான்காவதில் ஒரு நகரத்தின் அகலம் ஆறாவது படிக்கட்டில் ஒரு தேசம் ... ஏழாவது படிக்கட்டில் பூமி ...

எட்டாவது படிக்கட்டில் நாம் சந்திர மண்டலத்தின் பாதிவழி வரை போய்விடுவோம் . பதினொன்றாவதில் நம் கிரகங்களின் சுழற்சி தூரங்கள் அதன் பின் மனிதனைக் காட்டிலும் இருபத்தோராவது படிக்கட்டில் நம் பால்

வீதி , கேலக்ஸி - முப்பது கோடி ஒளிவருஷ அகலம். இருபத்திரண்டாவது படிக்கட்டில் ஆயிரத்து ஐந்நூறு கோடி ஒளிவருஷம் நம்மால் பார்க்க முடியும் .பிரபஞ்சத்தில் அதற்கு மேல் ஏதாவது இருந்தால் , அது நம்மை வந்துசேர மிரபஞ்சத்தின் வயசை விட அதிக சமயம் ஆகுமாம் .

மாறாக நாம் படிக்கட்டுகளின் நடுவில் இருந்து இறங்கிப் பார்த்தால் முதலில் வருவது எலி . இரண்டாவது படிக்கட்டில் விட்டில்பூச்சி , மூன்றாவது அதன் முட்டை .நான்காவது அதன் சிறகின் ஒரு தீற்றல் , ஐந்தாவது படிக்கட்டில் ஓர் ஒற்றை செல் .

இதற்குமேல் சிறிசாக பார்ப்பதற்கு நமக்குக் கருவிகள் தேவைப்படும் . ஒரு மைக்ராஸ்கோப் வழியாக ஒரு குளத்தின் தண்ணீரைப் பார்த்தால் நீச்சலடிக்கும் , உருளும் , புரளும் , மோதும் ஜந்துக்களின் ஒரு மைக்ரோ உலகமே தெரியும் .

எனவே சிருஷ்டி முழுவதும் பற்றிச் சிந்திக்க முப்பது படிக்கட்டுகள் ஏறி இறங்கினால் போதும் என்கிறார் டிம் ராபின்சன் .

ஆமாம் 30 ஜுஸ்வுகள் ( 30 பகுதிகள்) கொண்ட திருக்குர்ஆன் சிருஷ்டிகள் முழுவதையும் பற்றி சொல்லி முடித்து விடுகிறது .இது எவ்வளவு பெரிய பேரற்புதம் !

"பூமியிலோ, வானத்திலோ உள்ளவற்றில் ஓர் அணுவளவும் (நபியே!) உம் இறைவனுக்குத் (தெரியாமல்) மறைந்து விடுவதில்லை. இதை விடச் சிறியதாயினும் அல்லது பெரிதாயினும் விளக்கமான அவன் பதிவு புத்தகத்தில் பதிவு செய்யப்படாமல் இல்லை " (குர்ஆன் : 10:61)

இமாம் ஷாபிஈ (ரஹ்) :
" இறுதிநாள் வரை மக்களுக்குத் தேவையான அனைத்துப் பிரச்சனைகளுக்கும் குர்ஆனில் தீர்வு இருக்கிறது . ஆனால் அதை ஆராய்ந்தறியும் அறிஞர்தாம் தேவை "
اَفَلَا يَتَدَبَّرُوْنَ الْقُرْاٰنَ اَمْ عَلٰى قُلُوْبٍ اَ قْفَالُهَا
மேலும் அவர்கள் இந்தக் குர்ஆனை ஆராய்ந்து பார்க்க வேண்டாமா? அல்லது அவர்கள் இருதயங்கள் அவற்றின் மீது பூட்டுப் போடப்பட்டு விட்டனவா?
(அல்குர்ஆன் : 47:24)

ர.ரா

இறங்குதலும் , ஏறுதலும்
(இண்டர்நெட்) 12-01-2020

(அதிநவீன விஞ்ஞானத்தின்
இன்றைய வளர்ச்சி 02 )

هُوَ الَّذِىْ خَلَقَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ فِىْ سِتَّةِ اَيَّامٍ ثُمَّ اسْتَوٰى عَلَى الْعَرْشِ يَعْلَمُ مَا يَلِجُ فِى الْاَرْضِ وَمَا يَخْرُجُ مِنْهَا وَمَا يَنْزِلُ مِنَ السَّمَآءِ وَمَا يَعْرُجُ فِيْهَا وَهُوَ مَعَكُمْ اَيْنَ مَا كُنْتُمْ وَاللّٰهُ بِمَا تَعْمَلُوْنَ بَصِيْرٌ

அவன் தான் வானங்களையும், பூமியையும் ஆறு நாட்களில் படைத்தான்; பின்னர் அர்ஷின் மீது அமைந்தான். பூமிக்குள் நுழைவதையும், அதிலிருந்து வெளியாவதையும்; வானத்திலிருந்து இறங்குவதையும், அதில் ஏறுவதையும் அவன் நன்கறிகிறான்; நீங்கள் எங்கிருந்து போதிலும் அவன் உங்களுடனே இருக்கிறான் - அன்றியும் அல்லாஹ் நீங்கள் செய்வதை உற்று நோக்கியவனாக இருக்கிறான்.
(அல்குர்ஆன் : 57:4)



மேற்கண்ட வசனத்தில் பூமிக்குள் நுழைவது என்பது மழைத் தண்ணீர், தானிய வித்துக்கள் , மரணித்தவர்கள் அடக்கம் செய்யப்படல் முதலியவற்றை குறிக்கிறது .

அதிலிருந்து வெளியாவது என்பது தாவரங்கள் , விவசாயப் பயிர்கள் , ஊற்றுத் தண்ணீர் , கியாமத் நாளில் சமாதிகளிலிருந்து மரணித்தவர்கள் வெளிப்படல் .

வானத்திலிருந்து இறங்குவது என்பது , மலக்குகள், வேதங்கள், விதி, ரிஜ்கு , மழை, பனிக்கட்டி , பனி, எரிநட்சத்திரங்கள் , இடி , இல்ஹாம்கள் முதலியவற்றை குறிக்கிறது .

அதில் ஏறுவது என்பது மலக்குகள் , பரிசுத்த ஆத்மாக்கள், நீராவி , புகை , பிதார்த்தனைகள் , அடியாரின் அமல்கள் முதலியவற்றைக் குறிக்கிறது என்பதாக தஃப்சீர் இப்னு கஸீர் , தப்ஸீருல் ஹமீத் போன்றவைகளில் விளக்கம் அளிக்கப்பட்டிருக்கிறது !

இவைகள் மிகச் சரியான விளக்கமாக இருந்தாலும் , நவீன கால அதிநவீன விஞ்ஞானமான " இன்டர்நெட் " என்ற உட்புறவலைப்பின்னல் என்கிற தகவல் மையத்தின் செயல்பாடுகள் அத்தனையும் மேற்கூறப்பட்ட வசனத்தில் சொல்லப்பட்ட " பூமிக்குள் நுழைவதையும், அதிலிருந்து வெளியாவதையும்; வானத்திலிருந்து இறங்குவதையும், அதில் ஏறுவதையும் அவன் நன்கறிகிறான் " என்ற விளக்கம் கனகச்சிதமாக பொருந்தி போகிறது என்பதுதான் வியப்பிற்குரிய விஷயம்.

இண்டர்நெட்டின் செயல்பாடுகள் அனைத்தும் வளிமண்டலத்தின் 7 அடுக்குத் தொடரில் 5 - வது அடுக்கான அயனி மண்டலம் என்கிற அய்னோஸ்பியர் (Ionosphere ) - ல் அணுப்பிளவு உண்டாகி எலக்ரான்களும், எலக்ட்ரானை இழந்த உட்கருக்களும் ஏராளமாகக் காணப்படுகின்றன .

இந்த மண்டலத்தில் வானொலி நிலையங்களிலிருந்து ஒலிபரப்படும் ரேடியோ அலைகள் முதல் மின்காந்த அலைகளைப் பயன்படுத்தும் வலைதளங்கள் வரை ...விண்வெளியில் தொடர்ந்து செல்லவிடாமல் தடுத்து , மீண்டும் பூமிக்கே திருப்பித் தருகின்றன. இதைத்தான் இறைவன் வானத்திலிருந்து இறங்குவதையும், அதில் ஏறுவதையும் அவன் நன்கறிகிறான் " என்கிறானா ?

இன்றைய காலகட்டத்தில் உலகை கட்டி ஆக்கிரமித்திருக்கும் 3 மந்திர எழுத்துக்கள் உண்டென்றால் , அவை WWW என்னும் இண்டர்நெட் என்னும் இணையம்.

" வெப்" என்று சொல்லப்படும் இன்டர்நெட் வலைப்பின்னல் எப்படி உலகுக்கு வந்தது ?

1990 களில் வையகம் முழுவதும் விரியத் தொடங்கிய இந்த வலையைப் பற்றிய கனவு 1945ல் தொடங்கியுள்ளது. அமெரிக்க ராணுவ ஆய்வுத் தலைவரான " வான்னவார் புஷ் " "அட்லாண்டிக் மன்த்லி ' என்கிற பத்திரிக்கையில் " நாம் நினைத்தால் " என்ற தலைப்பில் கட்டுரை எழுதினார்.

அதில் " இப்போது நம்மிடம் உள்ள கருவிகளைச் சரியாகப் பயன்படுத்தினால் மனிதனால் உலகம் இதுவரைப் பெற்றுள்ள அத்தனை அறிவையும் ஒன்றாக்கி அவைகளை அணுகவும், கட்டுப்படுத்தவும் முடியும் "

தொடர்ந்து அவர் தகவல் வெள்ளத்தைப் பற்றியும் , தகவல்களை ஆள்வதன் அவசியத்தைப் பற்றியும் இதனால் மனித குலத்தின் மொத்த அனுபவங்களின் கூட்டுத் தொகை அதிவேகமாக அதிகரித்துக் கொண்டு வருகிறது .இந்த அறிவுவலையின் ஊடே உலவ நாம் பயன்படுத்தும் முறைகள் புராதனமான பழமையாக இருக்கின்றன" என்றார்.

மனித குலத்தின் மொத்த அறிவைப் பற்றி கவலைப்பட்ட முதல் விஞ்ஞானி இவராகத்தான் இருப்பார் . இவர் சொல்லும் அறிவைப் பற்றி மனித குலத்தைப் படைப்பதற்கு முன்பே அறிவை (அக்லை) ப்படைத்தாக இறைவன்....

"பெருமானாரின் பேரொளியாகிய நூரெ முஹம்மதிய்யாவைப் படைக்க விரும்பி இறைவன் தன் பேரொளியிலிருந்து ஒரு துளி எடுத்துத் தன் முன் வைத்தான். அது முன் நன்றிப் பெருக்கால் தலைதாழ்த்திக் கிடந்தது .

பின்னர் அவன் அறிவை (அக்லை) ப் படைத்து , "முன்னோக்கிச் செல் ! " என்றான் .அவ்விதமே அது செய்தது . "பின்னோக்கிச் செல் ! " என்றான் . அவ்விதமே அது செய்தது . ஏன் , எதற்காக என்று யாதொரு கேள்வியும் கேட்காது தன் ஆணைக்குக் கீழ்ப்படிந்ததைக் கண்டு " அறிவே ! என் மாண்பின் மீதும், மகத்துவத்தின் மீதும் ஆணையாக , உன்னைவிட மேலானப் படைப்பை நான் படைக்கப்போவதில்லை
ஏவலையும், விலகலையும் ,நடப்பதையும், நடக்க வேண்டியதையும் உன்னாலேயே படைக்கப் போகிறேன் "

வான்னவார் புஷ் இதை எழுதி கவலைப்பட்ட கால கட்டத்தில் கணிப்பொறிகள் , வள்ளுவர் கோட்டம் அளவுக்கு பெரியதாக இருந்தது அவரின் இந்த அறிவுத்தகவல்களை இணைக்க முடியும் என்கிற யோசனை காலத்தை மீறினதாக இருந்தது .அறிவுத் தகவல்களை இணைப்பதற்கு "மெமெக்ஸ் " என்று பெயர் சூட்டினார் .

அடுத்து 'ஹைப்பர் லிங்க்' மனிதமனம் எப்படி இயங்குகிறது என்று யோசித்தால் 'ஹைப்பர் லிங்க்' என்னும் சித்தாந்தம் புரியும். முதலில் 'ஹைப்பர்-ஸ்பேஸ்' முப்பரிமானங்களை மீறிய விண்வெளிக்குப் பயன்படுத்தப்பட்டது. அதுபோல் ஹைப்பர் லிங்க் என்பது அன்றாடப் பரிமாணங்களை மீறிய தொடர்பு .

ஹைப்பர் லிங்க் இதை எப்படி விளக்குவது ...? பொருத்தமான உதாரணத்தைச் சொல்றேன்

கணவனுடன் மனைவி மட்டும் பேசும் பேச்சு . " நம்ம சாரதா இருக்காளே ,
அவகூட டிவோர்ஸ் பண்ணிட்டு, புரொபசர் ஒருத்தனோட போயிட்டாளே. அவா வீட்டுல , அதாங்க அக்ரிகல்ச்சரல் காலேஜ் புரொபசர் , அவா வீட்டுலகூட கறுப்பா ஒரு நாய் இருக்குமே... அது கூட ஒரு தடவை நம்ம சுலோசனாவை மூக்குல கடிச்சுடுத்தே ! "

இந்த அன்றாட உரையாடலில் நிகழும் ஹைப்பர் லிங்க்குகளை கவனியுங்கள் சாரதா - டிவோர்ஸ் - அக்ரிகல்ச்சரல் காலேஜ் -நாய் - கறுப்புநிறம் -சுலோசனா - மூக்கு ....இதில் விசேஷம் என்னவென்றால்

தகவல்கள் அனைத்தும் அந்த மனைவியின் மூளையின் நியூரான் நினைவகங்களில் மட்டுமே ஆங்காங்கே பதிவாகி இருக்கின்றன .இதே கணவனும் மனைவிமான இருவருக்கும் நிகழ்ந்தால் எப்படி இருக்கும் ?

கணவன் : " நம்ம சாரதா இருக்காளே "

மனைவி: " ஆமாங்க அவகூட புரொபசர் ஒருத்தர் கூட ஓடிப்போய்ட்டாளே "

கணவன் : "அக்ரிகல்ச்சரல் காலேஜ் "

மனைவி: "அவா வீட்டுலகூட கறுப்பா ஒரு நாய் இருக்குமே "

கணவன் : "அந்த கறுப்பு நாய் "

மனைவி: " நம்ம சுலோசனாவை கடிச்சுடுச்சே ! "

கணவன் : " முக்குல "

இப்போது கணவன் - மனைவி இரண்டு பேர்களின் மூளைகளிலும் நியூரான்களில் பதிந்த செய்திகள் ஹைப்பர் லிங்க் செய்யப்படுகின்றன . வான்னவார் புஷ் இப்படித்தான் எல்லா கணிப்பொறித் தகவல்களையும் இணைக்க வேண்டும் என்கிறார்.

டிம் பெர்னர் லீ என்ற இயற்பியலாளர் உலகளாவிய ஒரு வலை பின்னல் ஒன்றை ஆரம்பித்து , அதற்கு world Wide web (WWW) என்று பெயரிட்டார் .அந்த உடனே தகவலை அனுவதற்கு "ப்ரொட்டோக்கால் " ஆரம்பித்து ஹைப்பர் டெக்ஸ்ட் டிரான்ஸ்ஃபர் ப்ரொட்டோக்கால் (http) என்று பெயர் வைத்தார். இது செய்தி , இது முடிவு , இது படம் , இது எழுத்து ... என்று முன்பே தீர்மானிக்கப்பட்ட விதிமுறைகள் .

கணிப்பொறிகளில் தகவல் தேடும் போது அவற்றிற்கு முகவரி கொடுக்க
யு ஆர் எல் (**URL - uniform Resource Locator**) என்று பெயர் .அதன் பின்
எச்.டி .எம்.எல் (**HTML - Hypertext markup)** என்னும் கணிப்பொறிக்கான எளிய மொழியையும் வடிவமைத்தார் ,

வந்தது விட்டது அகிலத்தை கட்டி ஆள இண்டர் நெட் வந்துவிட்டது. அது உங்களையும் , என்னையும் சேர்த்து வைத்திருக்கிறது அது போதா ?

1945-ல் ஒருவர் மனதில் ஐடியாவாக இருந்தது . இன்று உலகமெங்கும் பரவியுள்ளது ." Nothing is more powerful than an idea whose time has come " என்று விக்டர் ஹ்யூகோ சொன்னது போல , எல்லாவற்றுக்கும் வேளை வரவேண்டும் .இதனிடையே கனவு காண்பதை நிறுத்தக்கூடாது .

பூமிக்குள் நுழைவதையும், அதிலிருந்து வெளியாவதையும்; வானத்திலிருந்து இறங்குவதையும், அதில் ஏறுவதையும் அவன் நன்கறிகிறான்; நீங்கள் எங்கிருந்து போதிலும் அவன் உங்களுடனே இருக்கிறான் - அன்றியும் அல்லாஹ் நீங்கள் செய்வதை உற்று நோக்கியவனாக இருக்கிறான்.
(அல்குர்ஆன் : 57:4)

நெட்டை நீங்களும் நானும் பயன்படுத்தும் போது இவ்வசனத்தின் கடைசி வரி நம் ஞாபகத்திற்கு வந்தால் நல்லது.

ர.ரா

ஆதார நூல் : சுஜாதா எழுதிய
கற்றதும் பெற்றதும் 1

கணனியில் தவறான தரவுகளைக் கொடுத்தால் தவறான பெறுபேறுகளே கிடைக்கும்.

நல்ல எண்ணத்துடன் அணுகும் போது குர்ஆனும் நேர்வழியை காட்டும் தவறான எண்ணத்துடன் குர்ஆனை அணுகும் போது தவறான வழிகேட்டை ஏற்படுத்தி விடும் .

هُوَ الَّذِىْۤ اَنْزَلَ عَلَيْكَ الْكِتٰبَ مِنْهُ اٰيٰتٌ مُّحْكَمٰتٌ هُنَّ اُمُّ الْكِتٰبِ وَاُخَرُ مُتَشٰبِهٰتٌ فَاَمَّا الَّذِيْنَ فِىْ قُلُوْبِهِمْ زَيْغٌ فَيَتَّبِعُوْنَ مَا تَشَابَهَ مِنْهُ ابْتِغَآءَ الْفِتْنَةِ وَابْتِغَآءَ تَاْوِيْلِهٖ وَمَا يَعْلَمُ تَاْوِيْلَهٗۤ اِلَّا اللّٰهُ ۘ وَ الرّٰسِخُوْنَ فِى الْعِلْمِ يَقُوْلُوْنَ اٰمَنَّا بِهٖ كُلٌّ مِّنْ عِنْدِ رَبِّنَا وَمَا يَذَّكَّرُ اِلَّاۤ اُولُوا الْاَلْبَابِ

அவன்தான் (இவ்) வேதத்தை உம்மீது இறக்கினான். இதில் விளக்கமான வசனங்களும் இருக்கின்றன. இவை தான் இவ்வேதத்தின் அடிப்படையாகும். மற்றவை (பல அந்தரங்கங்களைக் கொண்ட) முதஷாபிஹாத் (என்னும் ஆயத்துகள்) ஆகும்; எனினும் எவர்களுடைய உள்ளங்களில் வழிகேடு இருக்கிறதோ அவர்கள் குழப்பத்தை ஏற்படுத்துவதற்காக முதஷாபிஹ் வசனங்களின் விளக்கத்தைத் தேடி அதனைப் பின்பற்றுகின்றனர். அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் அதன் உண்மையான விளக்கத்தை அறியமாட்டார்கள். கல்வியில் உறுதிப்பாடு உடையவர்கள் அவை அனைத்தும் எங்கள் இறைவனிடமிருந்து வந்தவைதான். நாங்கள் அதை நம்பிக்கை கொள்கிறோம், என்று அவர்கள் கூறுவார்கள். அறிவுடையோரைத் தவிர மற்றவர்கள் இதைக்கொண்டு நல்லுபதேசம் பெறமாட்டார்கள்.
(அல்குர்ஆன் : 3:7)

ரஹ்மத் ராஜகுமாரன்

Rahmath Rajakumaran கட்டுரை O5

திருக்குர்ஆனும் , கணனியும்

1. கணனியின் வேகம் மிக விரைவானது
பல மில்லியன் கணக்கான கணக்குகளை ஒரு செக்கனில் தீர்க்கும் திறன் கொண்டது. இதனது இவ்வேகம் கேட்ஸ் (Hertz – Hz) எனும் அலகில் அளக்கப்படுகிறது. அத்தோடு இவ்வேகம் கணனிக்குக் கணனி மாறுபடுகின்றது.

குர்ஆனின் வசனங்களின் விளக்க வேகம் ஒளியின் வேகம் ஒரு நொடிக்கு
3 லட்சம் கி.மீ அதெப்படி ? சொல்றேன்

اَللّٰهُ الَّذِىْ جَعَلَ لَـكُمُ الْاَرْضَ قَرَارًا وَّالسَّمَآءَ بِنَآءً وَّصَوَّرَكُمْ فَاَحْسَنَ صُوَرَكُمْ وَرَزَقَكُمْ مِّنَ الطَّيِّبٰتِ ذٰ لِكُمُ اللّٰهُ رَبُّكُمْ  فَتَبٰـرَكَ اللّٰهُ رَبُّ الْعٰلَمِيْنَ
அல்லாஹ்தான் உங்களுக்கு பூமியை (நீங்கள்) வசித்திருக்கும் இடமாகவும், வானத்தை ஒரு முகடாகவும் அமைத்து, உங்களைச் சித்தரித்து, அழகான கோலத்திலும் உங்களை அமைத்தான். அன்றி, அவனே உங்களுக்கு மேலான உணவு களையும் அளிக்கின்றான். அதே அல்லாஹ்தான் உங்கள் இறைவன். அகிலத்தார்களின் இறைவனாகிய அல்லாஹ் மிக பாக்கியம் உடையவன்.
(அல்குர்ஆன் : 40:64)

இந்த வசனத்தில் வசிக்கத்தக்க பூமி , முகடாக வானம் , உங்களின் அழகான கோலம் , உங்களுக்கு மேலான உணவு
இப்படி ஒன்றுக்கொன்று வேறுபட்ட துறைகளை கூறும் போது ஒரு துறையிலிருந்து அடுத்த துறைக்கு உங்களின் சிந்தனை வேகம் பிரபஞ்ச வெளியில் மாறாத ஒளியின் வேகம் , புவி ஈர்ப்பு விசையின் வேகம் நொடிக்கு 3 லட்சம் கி.மீ . இந்த வேகத்தில் கம்ப்யூட்டரே இயங்காது .ஆனால் உங்கள் சிந்தனை வேகம் பூமி வானம் உங்கள் கோலம் , உங்கள் உணவு என்று அடுத்தடுத்து சொல்லி பறக்கிறது .

2. கம்ப்யூட்டர் மிகவும் திருத்தமானது.
இலத்திரனியல் சுற்றுக்கள் பொறியியல் பகுதிகளைப்போன்று இலகு வில் பழுதடைவதில்லை. அத்தோடு இவை மிகவும் திருத்தமானவையாகவும் நம்பகமானவையாகவும் இருக்கின்றன.
இவற்றிறுள்ள ஒரு program என்ற ஆணை மற்ற Program முடன் முரண்படாது

குர்ஆனிலும் எத்தகைய கோணலும்.இல்லை என்பதாக...

اَ لْحَمْدُ لِلّٰهِ الَّذِىْۤ اَنْزَلَ عَلٰى عَبْدِهِ الْكِتٰبَ وَلَمْ يَجْعَلْ لَّهٗ عِوَجًا ˇ
புகழ் அனைத்தும் அல்லாஹ்வுக்குரியதே! அவன்தான் தன் அடியார் (நபி முஹம்மது) மீது இவ்வேதத்தை இறக்கி வைத்தான். அதில் அவன் எத்தகைய (குறைபாட்டையும்) கோணலையும் வைக்கவில்லை.
(அல்குர்ஆன் : 18:1)

اَفَلَا يَتَدَبَّرُوْنَ الْقُرْاٰنَ وَلَوْ كَانَ مِنْ عِنْدِ غَيْرِ اللّٰهِ لَوَجَدُوْا فِيْهِ اخْتِلَافًا كَثِيْرًا
இந்தக் குர்ஆனை அவர்கள் ஆழ்ந்து கவனிக்க வேண்டாமா? இது அல்லாஹ் அல்லாதவரிடமிருந்து வந்திருந்தால் இதில் பல (தவறுகளையும்) முரண்பாடுகளை(யும்) அவர்கள் காண்பார்கள்.
(அல்குர்ஆன் : 4:82)

Rahmath Rajakumaran 3 . நினைவகம் (Memory)
இதில் அதிகளவிலான தரவுகளைச் சேமித்துவைப்பதுடன் உரிய நேரத்தில் அவற்றை மிகவிரைவாகவும் எடுக்கக்கூடியதாகவுள்ளது.

குர்ஆனின் மெமரி எனப்படுவது இதன் வசனங்களின் அமைப்பு முறையில் எளிதாக மனதில் பதியும்வாறு அருளப்பட்டிருக்கிறது. குர்ஆன் மெமரி என்பது அடியார்களின் மனதில் பதிந்திருப்பதுதான்

◌َ اَحْسَنَ الْحَدِيْثِ كِتٰبًا مُّتَشَابِهًا مَّثَانِىَ  تَقْشَعِرُّ مِنْهُ جُلُوْدُ الَّذِيْنَ يَخْشَوْنَ رَبَّهُمْ ثُمَّ تَلِيْنُ جُلُوْدُهُمْ وَقُلُوْبُهُمْ اِلٰى ذِكْرِ اللّٰهِ ذٰ لِكَ هُدَى اللّٰهِ يَهْدِىْ بِهٖ مَنْ يَّشَآءُ وَمَنْ يُّضْلِلِ اللّٰهُ فَمَا لَهٗ مِنْ هَادٍ
அல்லாஹ் அழகான விஷயங்களையே (இந்த) வேதத்தில் இறக்கி இருக்கின்றான். (இதிலுள்ள வசனங்கள் ஒன்றுக்கொன்று முரண்பாடில்லாமல்) ஒன்றை மற்றொன்று ஒத்ததாக (இருப்பதுடன், மனதில் பதிவதற்காக ஒரே விஷயத்தை) மென்மேலும் (பல வகையில்) கூறப்பட்டுள்ளது. அல்குர்ஆன் : 39:23)

4. மனிதனின் முக்கியமான திறன்களான சுயமாகச் சிந்திக்கும் ஆற்றல், காரணங்களைக் கண்டறிதல், சுயமாக உருவாக்கல்; போன்றவற்றைக் கணனி கொண்டிருக்கமாட்டாது.

ஆனால் குர்ஆன் மனிதனை சுயமாக சிந்திக்க சொல்லுகிறது .
اَفَلَا تَذَكَّرُوْنَ
நீங்கள் இதனை கவனித்துச் சிந்திக்க வேண்டாமா?
(அல்குர்ஆன் : 37:155)

اَفَلَا يَتَدَبَّرُوْنَ الْقُرْاٰنَ اَمْ عَلٰى قُلُوْبٍ اَ قْفَالُهَا
மேலும் அவர்கள் இந்தக் குர்ஆனை ஆராய்ந்து பார்க்க வேண்டாமா? அல்லது அவர்கள் இருதயங்கள் (இருக்கின்றனவே) அவற்றின் மீது பூட்டுப் போடப்பட்டு விட்டனவா?
(அல்குர்ஆன் : 47:24)

5 . கணனியானது நிகழ்ச்சித் திட்டத்தின்படியே செயற்படுகின்றது. எனவே நிகழ்ச்சித் திட்டங்கள் பிழையாக இருப்பின் எப்போதும் பிழையான பெறுபேறுகளையே கணனி தரும்.

குர்ஆனும் முன்பே எழுதி வைக்கப்பட்ட நிகழ்ச்சி நிரலின்படி செயல்படுகிறது.
அது ஒரு நொடி முந்தோ , பிந்தோ செய்யாது .

وَرَبِّىْ لَـتَاْتِيَنَّكُمْۙ عٰلِمِ الْغَيْبِ‌ لَا يَعْزُبُ عَنْهُ مِثْقَالُ ذَرَّةٍ فِى السَّمٰوٰتِ وَلَا فِى الْاَرْضِ وَلَاۤ اَصْغَرُ مِنْ ذٰ لِكَ وَلَاۤ اَكْبَرُ اِلَّا فِىْ كِتٰبٍ مُّبِيْنٍ
(எனினும்) "மறுமை நமக்கு வராது" என்று இந்நிராகரிப் பவர்கள் கூறுகின்றனர். (நபியே!) நீங்கள் கூறுங்கள்: "அது வரும். என் இறைவன் மீது சத்தியமாக! நிச்சயமாக அது உங்களிடம் வந்தே தீரும். என் இறைவன் மறைவானவை அனைத்தையும் அறிந்தவன். அவன் அறியாது வானங்களிலோ பூமியிலோ உள்ளவற்றில் ஓர் அணுவளவும் தப்பிவிடாது. அணுவைவிட சிறியதோ அல்லது பெரியதோ (ஒவ்வொன்றும் "லவ்ஹுல் மஹ்ஃபூள்" என்னும்) தெளிவான குறிப்புப் புத்தகத்தில் பதிவு செய்யப்படாமல் இல்லை."
(அல்குர்ஆன் : 34:3)

அல்-ஆதியாத்தி - அதிவேகமாக பாய்ந்து செல்பவை 10-01-2020

(அதிநவீன விஞ்ஞானத்தின்
இன்றைய வளர்ச்சி 01)

திருக்குர்ஆனின் 100 -வது அத்தியாயம் அல்-ஆதியாத்தி



وَالْعٰدِيٰتِ ضَبْحًا ۙ
மூச்சுத்திணற விரைந்து ஓடுபவற்றின் (குதிரைகள்) மீது சத்தியமாக-
فَالْمُوْرِيٰتِ قَدْحًا ۙ
பின்னர், (குளம்பை) அடித்து நெருப்புப் பறக்கச் செய்பவற்றின் மீதும்,
فَالْمُغِيْرٰتِ صُبْحًا ۙ
பின்னர், அதிகாலையில் விரைந்து (எதிரிகள் மீது) பாய்ந்து செல்பவற்றின் மீதும்-
فَاَثَرْنَ بِهٖ نَقْعًا ۙ
மேலும், அதனால் புழுதியைக் கிளப்புகின்றவற்றின் மீதும்,
فَوَسَطْنَ بِهٖ جَمْعًا ۙ
அப்பால் (பகைப்படையின்) மத்தியில் கூட்டமாக நுழைந்து செல்பவற்றின் மீதும் சத்தியமாக- (குர்ஆன் : 100: 1-5)

மேற்கண்ட வசனத்தில் " மூச்சுத்திணற விரைந்து ஓடுபவற்றின் (குதிரைகள்) என்பதை அக்காலத்தில் உருவகப்படுத்தியிருக்கிறார்கள் அதனால் அந்த வசனத்தில் குதிரையை அடைப்புக்குக் குறிக்குள் அடக்கி இருக்கிறார்கள் போலும் . மேலும் விரைந்து பாய்ந்து , நெருப்பு , புழுதி (புகை) , ....போன்ற வார்த்தைகள் குதிரைக்கு பொருந்தும்மாறு விளக்கம் கொடுத்துள்ளார்கள் .

'ஆதியாத்' குதிரைதானா என்பது குறித்து அக்காலத்திலேயே நபித்தோழர்களிடமே சர்ச்சை இருந்திருக்கிறது !

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் :
"ஒருமுறை நான் கஃபாவின் ' ஹிஜ்ர் ' எனும் வளைந்த பகுதியில் அமர்ந்திருந்தேன்.அப்போது ஒரு மனிதர்
" மூச்சிரைக்கப் பாய்ந்து செல்பவை என்று அல்லாஹ் கூறுகிறானே அது எதைக் குறிக்கிறது ? "

" அது குதிரைகளைக் குறிக்கிறது.அவை பகல் பொழுதில் இறைவழியில் எதிரிகளை தாக்குகின்றன. பின்னர், இரவானதும் தம் இருப்பிடங்களுக்குத் திரும்புகின்றன .அப்போது மக்கள் இரவு உணவுத் தயாரிக்க நெருப்பை மூட்டுகின்றனர் "

உடனே அவர் என்னிடமிருந்து சென்று , ஜம்ஜம் நீர் அருந்தும் இடத்தில் அலீ (ரலி) அவர்களிடம் அதே கேள்வி....

" மூச்சிரைக்கப் பாய்ந்து செல்பவை என்று அல்லாஹ் கூறுகிறானே அது எதைக் குறிக்கிறது ? "

அலீ (ரலி) அவர்கள் : " எனக்கு முன்னர் யாரிடமாவது இதே கேள்வியை கேட்டீரா ? "

" ஆம் .இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் கேட்டேன் . அதற்கு அவர் , 'குதிரையைக் குறிக்கிறது ' என்றார்கள் .

" நீர் சென்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களை அழைத்து வாரும் "

அவரைக் கூட்டி வந்ததும் , இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் , " உமக்குத் தெரியாத விஷயத்தில் மக்களுக்கு நீர் தீர்ப்பளிக்கின்றீரா ? மூச்சிரைக்கப் பாய்ந்து செல்பவை என்பது போர் தொடர்பாக அருளப்பெற்றதாக நீர் கருதுகிறீர் .அல்லாஹ்வின் மீது ஆணையாக , இஸ்லாத்தில் நடந்த முதல் யுத்தம் பத்ர் .அதில் நம்மிடம் இரு குதிரைகளே இருந்தன. ஒன்று சுபைருக்குரியது .மற்றொன்று மிக்தாதுக்குரியது .

அப்படியிருக்க மூச்சிரைக்கப் பாய்ந்து செல்பவை அல் அதியாத் என எவ்வாறு அல்லாஹ் பன்மையாக கூற முடியும் ?"

எனவே மூச்சிரைக்கப் பாய்ந்து செல்பவை என்பது போரைக் குறிக்கவில்லை ஹஜ்ஜில் அரஃபாவிலிருந்து முஸ்தலிப்பாவுக்கு விரைந்து செல்பவை ஒட்டகங்களாக இருக்கலாம் " நூல் : தஃப்சீர் தபரீ

இன்றைய நவீன காலத்தில் விரைந்து பாய்ந்து , நெருப்பு , புழுதி (புகை) , ....போன்ற வார்த்தைகள் வேறு ஒரு விளக்கத்தை நவீன விஞ்ஞானம் கொடுக்கிறது . உற்று கவனிக்கவும் .

ஒலியைவிட 27 மடங்கு வேக ஏவுகணைச் சோதனை வெற்றி

உலகளவில் ஹைபர்சோனிக் ஏவுகணை சோதனைகளில் வெற்றி பெற்ற முதல் நாடு என்ற பெருமையை ரஷ்யா பெற்றுள்ளதாக அதிபர் புதின் பெருமையாக தெரிவித்துள்ளார்.

ரஷ்யா ஹைபர்சோனிக் ஏவுகணை சோதனைகளை வெற்றிக்கரமாக நடத்தியதாக சில தினங்களுக்கு முன்னர் ஊடகங்களில் செய்தி வெளியாகியது. இந்த நிலையில் இந்த வெற்றியை ரஷ்ய அதிபர் புதின் தனது அதிகாரிகளுடன் பெருமையுடன் பகிர்திருக்கிறார்.

இதுகுறித்து ரஷ்ய அதிபர் புதின் உயர் ராணுவ அதிகாரிகளிடம் கூறும்போது,
"நாம் தற்போது இந்த நவீன உலகில் தனித்துவமான வரலாற்றை கொண்டுள்ளோம் .

வானத்தில் இருந்து விழும் நெருப்பு பந்து போல அதிவேகமாக இலக்கை தாக்கி அழிக்கும் சக்தி கொண்டதாக இந்த ஏவுகணை இருக்கும் எனவும் புதின் கூறியுள்ளார். இந்த அவங்கார்ட் ஹைப்பர்சோனிக் ஏவுகணை மணிக்கு 7,000 மைல்கள் தாண்டும். ரஷ்யாவின் ராணுவ உயர் அதிகாரிகளுடனான ஆலோசனைக் கூட்டத்திற்குப் பின் பேசிய புதின், உலகில் எந்த நாடும் இந்தப் புதிய ஏவுகணையை அழிக்க முடியாது எனவும் கூறியுள்ளார்.

அமெரிக்காவின் ஏவுகணையை விட அதிநவீன தொழில்நுட்பம் மூலம் இந்த ஹைப்பர்சோனிக் ஏவுகணை தயாரிக்கப்பட்டுள்ளது. மற்ற ஏவுகணைகளால் இதை எளிதில் கண்டுபிடிக்கவோ , அழிக்கவோ முடியாது .முடிஞ்சா தடுத்துப் பாருங்க , அதன் இலக்கை அது அடைந்தே தீரும் .

உலகளவில் ஹைபர்சோனிக் ஏவுகணை சோதனைகளை வெற்றிகரமாக நடத்திய முதல் நாடு என்ற பெருமையை ரஷ்யா பெற்றுள்ளது. நம்மை யாராலும் நெருங்க முடியாது. ரஷ்யா புதிய வகை ஆயுதங்களை உருவாக்குவதில் உலகை வழி நடத்துகிறது" என்று தெரிவித்துள்ளார்.

கடந்த 2018 ஆம் ஆண்டு மார்ச் மாதமே ஹைப்பர்சோனிக் ஏவுகணை குறித்து புதின் முதன் முறையாக பேசி இருந்தார்.

இந்த ஏவுகணை சப்த ஒலியின் வேகத்தையும் விட 27 மடங்கு வேகத்தில் பயணிக்கும் எனவும் கூறப்படுகிறது.
(The intercontinental weapon can fly 27 times the speed of sound)

ஏவுகணை சோதனையில் ரஷ்யாவின் போட்டி நாடுகளாக கருதப்படும் அமெரிக்காவும், சீனாவும் ஹைபர்சோனிக் ஏவுகணை சோதனைகளில் ஈடுபட்டுள்ளன .ஆனாலும் இன்னும் கண்டுப்பிடிக்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

" மூச்சிரைக்கப் பாய்ந்து செல்பவை" யின் விளக்கம் .....

ராக்கெட் என்பது செயற்கைக்கோள்களை வான்வெளியில் செலுத்தப் பயன்படும் ஏவுவாகனம். நாம் பூமியில் பயன்படுத்தும் வாகனம் இயங்க காற்று அவசியம். ஆனால் விண்வெளியில் காற்று கிடையாது என்பதால் ராக்கெட் அவசியமாகிறது.

விண்ணிற்கு செல்ல தேவையான பல டன் எடையுள்ள எரிபொருளையும், ஆக்சிஜனையும் சுமந்து செல்லும் வகையில் ராக்கெட் வடிவமைக்கப்பட்டிருக்கும்.

அந்த எரிபாருளையும் ஆக்சிஜனையும் சரியான முறையிலும் அளவிலும் சேர்க்கும்போது, அது எரிந்து, மிகுந்த வெப்பத்தில் வாயு உருவாகும். அந்த வாயுவை அதிகமான அழுத்தத்துடனும் வேகத்துடனும் வெளியேற்றுமாறு ராக்கெட்டின் செயல்பாடு இருக்கும் Propulsion அப்படி வேகமாக வரும் வெப்ப வாயுக்களால் பின்னோக்கி தள்ளப்பட்டு ராக்கெட் முன் நோக்கி சீறிப் பாய்கிறது

குதிரைக்குப் பதிலாக ஏவுகணையை வைத்துப் பாருங்கள் . ஏவுகணை விஷயத்தில் விரைந்து பாய்ந்து , நெருப்பு , புழுதி (புகை) , ....போன்ற வார்த்தைகளுக்கு விளக்கம் தெளிவான விளக்கத்தை நவீன விஞ்ஞானம் புதுமையாக சொல்கிறது . இந்த விளக்கத்தை உள்வாங்கி இப்போது மேற்கண்ட திருக்குர்ஆன் வசனங்களைப் படித்துப் பாருங்கள் .

அல்-ஆதியாத்தி என்றால் அதிவேகமாக பாய்ந்து செல்பவை என்றுதான் அர்த்தம். அது ஏவுகணையாகவும் இருக்கலாம்

72 பிரிவுக் கூட்டங்கள் (பகுதி 3) 10-01-2020

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 127 )

காரிஜிய்யாக்கள் என்பவர்கள் இஸ்லாத்திற்குப் புறம்பானவர்கள்
ஜும்ஆத் தொழுகை தொழுவதும் , இமாம் ஜமாஅத்தோடு மற்ற தொழுகை தொழுவதும் தரிபாடாகாது .

எல்லோரும் முனாபிகுகள்தாம் .அதாவது மனம் வேறு , வாக்கு வேறுபட்டவன் என்ற கொள்கையுடையவர்கள் .

ஜின்னோ, சைத்தானோ வஸ்வாஸ் போன்ற மன ஊசலாட்டத்தை மனிதர்களுக்கு ஏற்படுத்த முடியாது என்ற கொள்கைக்காரர்கள் .

அல்லாஹு தஆலாவிற்கு ஸிபத்துகள் இல்லை என்றும் ஒரு வஸ்துவைப் படைக்கு முன் அவன் அதை அறிய மாட்டான் . அல்லாஹுதஆலா கேட்கிறவன் அல்ல, பார்க்கிறவன் அல்ல, பார்க்கப்பட்டவனும் அல்ல , ஆனாலும் அறிகிறவன்தான் என்கிறார்கள் .

மீஸான் தராசு , ஸிராத் பாலம் , நன்மை தீமைகளின் பட்டோலை அதைப் பற்றி கேள்வி கணக்கு இவைகள் எல்லாம் இல்லை . கபரில் கேள்வி கேட்பதில்லை . அதாபு என்ற வேதனையெல்லாம் கிடையவே கிடையாது .சொர்க்கமும் நரகமும் படைக்கப்படவே இல்லை என்கிறார்கள் .

குர்ஆன் படைக்கப்பட்டது .இறந்து போன ஜடங்கள் உக்கி மடிந்து போகும் . அல்லாஹுதஆலா வேறு ஜடங்களைப் படைத்து , ரூஹை அதில் புகுத்தி வேதனையோ , நன்மையையோ கொடுப்பான் என்கிறார்கள் .

ஜீவனுடன் இருப்பவர்கள் செய்யும் துஆவும் , தானதர்மமும் இறந்தவர்களுக்கு ஒரு பிரயோஜனமும் கொடுக்காது .

முஸ்லிமானவர்களில் ஆணானாலும் , பெண்ணானாலும் ,சீமானானாலும் , ஏழையானாலும் மார்க்க யுத்தம் (பீஸபீல்) செய்யாமல் இருக்கக் கூடாது என்ற கெட்ட கொள்கையுடையவர்கள் .

பெண்கள் பரிமள புஷ்பத்திற்கு ஒப்பானவர்கள் . ஆகையால் திருமணம் செய்யாமலும், அடிமைப் பாத்தியம் இல்லாமலும் மோந்தும் கொள்ளலாம் புணர்ச்சியும் செய்யலாம் என்கிறார்கள் .

பூமியெங்கும் தொழுவதற்குரிய இடமாக இருப்பதால் , எந்த இடத்திலும் சிறுநீர் கழிக்கக் கூடாது . சிறுநீரை ஒரு கரத்தில் பெய்து அதை அப்படியே தண்ணீரில் விட்டு விட வேண்டும் என்கிறார்கள் .

முஹம்மத் இப்னு ஸைத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார். (என் பாட்டனார்) அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் ஹரூரிய்யாக்கள் (‘காரிஜிய்யாக்கள்’) குறித்துக் கூறியபோது, ‘(வில்லில் இருந்து புறப்பட்ட) அம்பு வேட்டைப் பிராணியின் உடலில் இருந்து வெளியேறுவதைப் போன்று இவர்கள் இஸ்லாத்தை விட்டும் (சுவடே தெரியாமல்) வெளியேறிச் செல்வார்கள்’ என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள்’ என்று கூறினார்கள்.

'நபிமார்கள் நுபுவத்திற்கு முன் நபியும் அல்ல, மஹஸூமும் அல்ல 'என்கிறார்கள்

அலீ (ரலி) அவர்களை முஆவியா (ரலி) அவர்கள் எதிர்த்தது நியாயம்தான் என்பார்கள் . மேலும் நபி (ஸல்) அவர்களுக்குப் பிறகு நபித்தோழர்கள் ஒருவருக்கொருவர் மார்க்க விஷயத்தில் விகற்பப் பட்டுப் போராடிக் கொண்டார்கள். அதனால் யதார்த்தம் இன்னது என்று அறியக்கூடவில்லை ஆகையால் அவர்களில் ஒருவரையாவது நாம் விரும்பவும் மாட்டோம். வெறுக்கவும் மாட்டோம் என்ற சொல்லக் கூடிய கொள்கையுடையவர்கள் .

அபூ ஸலமா(ரஹ்) மற்றும் அதாஉ இப்னு யஸார்(ரஹ்) ஆகியோர் அறிவித்தார்கள்:

" நாங்கள் இருவரும் அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்களிடம் சென்று ‘ஹரூரிய்யாக் கூட்டத்தார் (காரிஜிய்யாக்கள்) பற்றி நபி(ஸல்) அவர்களிடமிருந்து ஏதேனும் செவியேற்றுள்ளீர்களா?’ என்று கேட்டோம்.

அதற்கு அவர்கள் ஹரூரிய்யாக்கள் என்றால் யாரென்று எனக்குத் தெரியாது. (ஆனால்,) நபி(ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறக் கேட்டுள்ளேன் என்றார்கள்.

இந்தச் சமுதாயத்திற்கிடையே ஒரு கூட்டத்தார் கிளம்புவர். -(சமுதாயத்திற்கிடையே என்று கூறினார்களே தவிர,) இந்தச் சமுதாயத்திலிருந்து என்று கூறவில்லை- அவர்களின் தொழுகையுடன் உங்களின் தொழுகையை நீங்கள் ஒப்பிட்டுப் பார்த்து உங்களுடைய தொழுகையை அற்பமானதாகக் கருதுவீர்கள். (அந்த அளவிற்கு அவர்களின் வழிபாடு களைகட்டியிருக்கும்.) அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். ஆனால், அது அவர்களின் ‘தொண்டையை’ அல்லது ‘தொண்டைக் குழியை’த் தாண்டிச் செல்லாது. வேட்டைப் பிராணியைவிட்டு (அதன் உடலைத் தைக்கின்ற) அம்பு (உடலின்) மறுபுறம் வெளிப்பாட்டு) சென்றுவிடுவதைப் போன்று இந்த மார்க்கத்தைவிட்டு அவர்கள் வெளியேறி விடுவார்கள். அம்பெய்தவர்

அந்த அம்பை; அதன் முனையை; அதன் (முனையைப் பொருத்தப் பயன்படும்) நாணைப் பார்ப்பார். அவர் (இவ்வாறு) சந்தேகப்பட்டு நாண் பொருத்தப்படும் இடம் வரை, அவற்றில் இரத்தம் ஏதேனும் பட்டுள்ளதா? என்று பார்ப்பார். (ஆனால், எந்த அடையாளமும் இராது) "

ர.ரா

72 பிரிவுக் கூட்டங்கள் (பகுதி 2)

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 126 )



றாபிலிய்யா (ஷியா ) கூட்டத்தினர்கள் இஸ்லாத்தை விட்டு விட்டவர்கள் .இமாம் ஜமாஅத் தொழுகையை சுன்னத்தல்ல என்றும், மோஸா (காலுறை) யின் மேல் தண்ணீரைத் தொட்டு மஸ்கு செய்வதை ஜாயிதல்ல என்றும் , தராவீஹ் தொழுகையை சுன்னத்தல்ல என்றும் , மூன்று தலாக்கையும் ஒரே வார்த்தையிற் சொல்வதை ஜாயிதல்ல என்றும், தொழுகையில் இடது கைமேல் வலது கையை வைத்துக் கட்டுவதை ஜாயிதல்ல என்றும் கொள்கையை வகுத்துக் கொண்டவர்கள் .

அபூபக்கர் (ரலி) , உமர் (ரலி) , உதுமான் (ரலி) ஆக இந்த மூவரையும் லஃனத் (அல்லாஹுு தஆலாவின் கோபம் ) உண்டாகட்டும் என்று சொல்லிவிட்டு , அலீ (ரலி) அவர்களை மாத்திரம் ஒப்புக் கொள்ளுகிறார்கள் .

மேலும் அலீ (ரலி) அவர்கள் இலாஹாயிருந்து வானத்தினில் இறங்கி லாஹூத் (தெய்வத்துவம்) உடைய ஸூரத்தை (உருவத்தை ) விட்டு புறப்பட்டு, நாஸூத்துடைய (மனிதத்துவம்) ஸூரத்தில் நுழைந்து, இறைவனுக்குரிய சில செய்கைகளைச் செய்து விட்டு வானத்தில் ஏறி தங்கள் இருப்பிடஞ் சேர்ந்தார்கள் என்ற கொள்கையுடையவர்கள் .

அலீ (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுடைய நபித்துவமான நுபுவத்தில் கூட்டாயிருந்தார்கள்.
நுபுவத்து அலீ (ரலி) அவர்களுக்குத்தான் வந்தது , அதை ஜிப்ரயீல் (அலை) அவர்கள் முஹம்மது நபிக்கு மாற்றி கொடுத்து விட்டார் என்ற கொள்கையுடையவர்கள் .

அஹ்லுல் பைத்து (நபிகளாரின் வாரிசுகள்) என்பவர்கள் அலீ (ரலி) அவர்களின் வாரிசுகளே. அஹ்லுல் பைத்துடைய இல்மை அறிந்தவர்கள் யாராக இருந்தாலும் அவர்கள் தம்மை நபி என்று சொன்னாலும் , சொல்லாவிட்டாலும் அவர் நபிதான் என்ற கொள்கையுடையவர்கள்.

நபி (ஸல்) அவர்களுடைய காலத்திற்கு முந்தி நபி ஆதம் (அலை) வரையும் , பிந்தி கியாமத்வரையும் ஒவ்வொரு காலமும் நபி இல்லாமல் இருந்ததில்லை
அதைப் போல இமாம் ஹஸன் (ரலி) ஹுஸைன் (ரலி) அவர்கள் முதற்கொண்டு அவர்கள் வமிசத்தில் கியாமத்து நாள் வரையும் ஒவ்வொரு இமாம் இல்லாமல் ஒவ்வொரு காலமும் இருந்ததில்லை.

அந்த இமாம்கள் இல்முகளை அல்லாஹுு தஆலா இடத்திலிருந்து , நேரிலாவது , அல்லது ஜிப்ரயீல் (அலை) மூலமாவது அறிந்து கொள்வார்கள். அந்த இமாம்களை எவன் அறியாமல் இறந்து போவானே அவன் இறப்பு ஜாஹிலிய்யத்தான (மூடத்தனமான ) இறப்பாக இருக்கும் என்ற கொள்கையுடையவர்கள்.

அலீ (ரலி) அவர்களும் , அவர்களது பிள்ளைகளும் , அவர்களின் வம்சாவழி கூட்டத்தார்களும், உலகில் மீண்டும், மீண்டும் பிறந்து வந்து , தங்கள் பகைவர்களை வேதனை செய்வார்கள் .
அலீ (ரலி) அவர்களுடைய , அவர்களது பிள்ளைகளுடைய ரூஹ்கள் துன்யாவில் மீண்டும் வந்து வேறு வேறு ஜடங்களில் பிரவேசித்துத் தங்கள் பகைவரை வேதனை செய்வார்கள் என்ற கொள்கையுடையவர்கள்.

அலீ (ரலி) அவர்கள் மௌத்தாகவில்லை, ஜடத்துடனும் ,ஜீவத்துடனும் , வானத்தில் இருக்கிறார்கள் . ஓடித் திரிகிற ஒவ்வொரு மேகத்திலும் இருக்கிறார்கள். இடி அவர்களின் சப்தம்தான் என்ற கொள்கையுடையவர்கள்.

(இன்னும் சொல்ல வேண்டிய சேதிகள் நிறைய உண்டு )

72 பிரிவுக் கூட்டங்கள் (பகுதி 1)

(இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் 125) 02-01-2020



"இஸ்ரவேலர்கள் எழுபத்திரண்டு கூட்டங்களாக பிரிந்தார்கள். எனக்குப் பின் என்னுடைய உம்மத்துகள் எழுபத்தி மூன்று கூட்டமாக பிரிவார்கள். அதில் ஒரு கூட்டத்தார் மாத்திரம் சுவர்க்கவாசிகள். மற்றைய எழுபத்திரண்டு கூட்டத்தினரும் வழி தவறியவர்களாவார்கள்" என நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அருளிய போது, அண்மையில் இருந்த ஸஹாபாக்கள், "யா ரசூலல்லாஹ்! அந்த ஒரு கூட்டத்தினர் யார்? என்பதை எங்களுக்கு தெரிவியுங்கள்" எனக் கேட்க, நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "நானும் என்னுடைய ஸஹாபாக்களும் நடக்கின்ற வழியை பின்பற்றி நடப்பவர்கள்தான் அந்தக் கூட்டத்தினர்" எனக் கூறினார்கள். இந்தக் கூட்டத்தினரையே நாம் ஸுன்னத் வல் ஜமாஅத் என்ற பெயரோடு அழைக்கின்றோம்.

நபி (ஸல்) அவர்களின் சுன்னத்துக்கு விரோதமான நூதனமான கொள்கை கோட்பாடு கொண்டவர்கள்.இவர்களை "அஹலுல் பிதுஅத்து " எனப்படும் .

இக்கூட்டத்தார்கள் 1) றாபிலிய்யா (ஷியா ) 2) காறிஜிய்யா 3) கதறிய்யா
4) ஜபரிய்யா 5) முஃத்திலா
6) முஷப்பிஹா இந்த 6 கூட்டத்தார்கள் ஒன்றிற்கு 12 கூட்டமாக 72 கூட்டமாய் பிரிந்தார்கள்.

இந்த 72 கூட்டத்தாரின் கொள்கையில் குபுரும் உண்டு , பிஸ்கும் (பாவம்) உண்டு

1) றாபிலிய்யா (ஷியா ) முஸ்லிம்கள்

நபி (ஸல்) அவர்கள் தனக்குப் பின் அலீ (ரலி) அவர்களை தலைவராக நியமித்தார்கள் என்பதை அடிப்படையாகக் கொண்ட இஸ்லாமின் பிரிவு இது .

ஷியா இஸ்லாம் மதத்தின் முக்கியமான உட்பிரிவுகளுள் ஒன்று. இது இஸ்லாமிய மதப்பிரிவுகளுள் சன்னி இஸ்லாத்துக்கு அடுத்தபடியாக அதிகமானோர் பின்பற்றும் பிரிவாகும்.

ஷியா என்ற சொல் “அலீயை பின்பற்றுவோர்” என்று பொருள்படும் அரபு மொழிச் சொல்லில் இருந்து தோன்றியது. ஷியாக்கள் நபி (ஸல்) அவர்களின் மருமகன்களில் ஒருவரான அலீயே அவரின் உண்மையான வாரிசு என்று நம்புகிறார்கள்.

இந்திய முஸ்லிம்களில் 90 சதவீதம் பேர் சன்னி முஸ்லிம்கள். பத்து சதவீதத்தினர் ஷியா முஸ்லிம்கள் ஆவர்கள் . ஷியா முஸ்லிம்கள் உலக முஸ்லிம் மக்கள்தொகையில் 10-20% உள்ளனர். மத்திய கிழக்கு நாடுகளின் மக்கள் தொகையில் இவர்கள் 38% ஆகும்.

ஷியா பிரிவினர் அதிகம் வாழும் முஸ்லிம் நாடு ஈரான் ஆகும்.
சன்னி, ஷியாக்களுக்கு இடையே பல நூறாண்டுகள் சண்டையும் சச்சரவும் இருந்து வருகிறது. ஷியாக்களின் ஆட்சி நடைபெறும் நாடுகள் ஈராக் மற்றும் இரான். இரானுக்கு அடுத்தபடியாக, இராக், லெபனான், பாகிஸ்தான், சிரியா, ஏமன், இந்தியா,
வங்காள தேசம் என பல நாடுகளில் ஷியாக்கள் உள்ளனர்.

சன்னி-ஷியா வேறுபாடுகள்

அல்லாஹ் ஒருவனே ஏக இறைவன், அவனால் அருளப்பட்டது குர்ஆன், அவனது இறுதித் தூதர் முஹம்மது நபி என்ற இஸ்லாத்தின் அடிப்படையை எல்லா பிரிவுகளும் ஏற்றுக் கொள்கின்றன. சன்னிகளும் ஷியாக்களும் அல்லாஹ் ஒருவனே; குர்ஆனும் ஒன்றே; இறுதித் தூதரும் ஒருவரே; மக்கா இறையில்லமும் (கஅபா) ஒன்றே.

முஹம்மது நபிக்குப் பிறகு, இஸ்லாமிய ஆட்சியாளராக (கலீபா) யாரை ஏற்பது என்பதில் வேறுபாடு ஏற்பட்டது. முஹம்மது நபியின் நெருங்கிய தோழரும் மாமனாருமான அபுபக்கர் (ரலி) அவர்களை முதல் கலீபாவாக சன்னிகள் ஏற்கின்றனர். ஷியா பிரிவினரோ, நபி (ஸல்) அவர்களின் மற்றொரு தோழரும்

மருமகன்களில் ஒருவரான அலீயே நபியின் வாரிசு என்கின்றனர். இதில் தொடங்கிய சர்ச்சை பல நூற்றாண்டுகளுக்கு நீடித்து வருகிறது.

அலீ (ரலி) அவர்களின் ஆட்சிக் காலத்தில் அவர்களது ஆட்சிக்கு எதிராக காரிஜியாக்கள் புரட்சி செய்த போது, அலீ (ரலி) அவர்களது ஆட்சிக்கு ஆதரவாக ஒரு கூட்டம் செயல்படத் தொடங்கியது. இவர்களே ஷியாக்கள் ஆவர். ஷியா என்றால் கூட்டத்தினர் என்று பொருள். அலீ (ரலி) அவர்களுக்கு ஆதரவான கூட்டம் என்பதால் "ஷீயத் அலீ - அலீயுடைய கூட்டத்தினர்' என்று அழைக்கப்பட்டனர்.

இவ்வாறு தோன்றிய ஷியாக்கள் காலப் போக்கில், அலீ அவர்களையும் அவர்களது குடும்பத்தார்களையும் கடவுள் நிலைக்குக் கொண்டு சென்று விட்டனர். நபி (ஸல்) , அலீ (ரலி) அலீயின் மனைவி ஃபாத்திமா (ரலி) , மகன்கள் ஹஸன் (ரலி) ஹுசைன் (ரலி) ஆகிய ஐவருக்கும் தெய்வத் தன்மை இருப்பதாக ஷியாக்கள் நம்புகின்றனர்.

அலீ அவர்களுக்குக் கிடைக்க வேண்டிய நபித்துவம் அவர் சிறு வயதினராக இருந்ததால் நபி (ஸல்) அவர்களிடம் வழங்கப்பட்டது என்பதும் ஷியாக்களின் நம்பிக்கையாகும்.

சன்னி இஸ்லாத்தின் தொழுகைக்கான அழைப்பில் (பாங்கு):
"அல்லாஹு அக்பர்' என்று தொடங்கும் பாங்கின் பொருள், "இறைவன் மிகப் பெரியவன்! வணக்கத்துக்குரியவன் இறைவனைத் தவிர வேறெவரும் இல்லை. முஹம்மது இறைவனின் தூதர். தொழ வாருங்கள். வெற்றி பெற வாருங்கள்' என்பது. இதில், ஷியாக்கள் மேலும் ஒரு வரியைச் சேர்த்துக் கொள்கிறார்கள். "முஹம்மது நபி அல்லாஹ்வின் இறுதித் தூதர்; அவரது வாரிசு அலீ ' என்பதே அவ்வாசகம்.

ஐந்து வேளைத் தொழுகையை, மூன்று வேளைகளில் (இரண்டை ஒரே வேளையில்) தொழுது விடுகின்றனர் ஷியாக்கள். தொழுகையில், ஸஜ்தா எனும் சிரம் பணியும் நிலையில், "காகே ஷிபா' எனப்படும் புனித கர்பலாவின் மண்ணால் செய்யப்பட்ட "சில்' (ஓடு) ஒன்றை வைக்கிறார்கள். சன்னிகள் இவ்வாறு செய்வதில்லை. ஷியா பிரிவு 12 இமாம்களை பின்பற்றுகிறது.

பன்னிரண்டு இமாம்கள்

1 ) அலீ (ரலி)

அலீ நபி (ஸல்) அவர்களின் பெரிய தந்தையின் மகனும், நபி (ஸல்)
அவர்களின் மருமகனுமான அலீ (ரலி)
அவர்கள் நான்காவது கலீபாவாகப்
பதவி வகித்தார்கள் . மற்றும் இறுதி கலீபாவும் ஆவார்கள். கிபி 656 முதல் கிபி 661 வரை ஆட்சி செய்தார்கள் . கிபி 661-ம் ஆண்டு இவர்கள் படுகொலை செய்யப்பட்டார்கள்

2) ஹஸன் (ரலி)

அலீ (ரலி) அவர்களின் மூத்த மகனும் , நபி(ஸல்) அவர்களின் பேரனும் ஆவார்கள்

3) ஹுஸைன் (ரலி)

அலீ (ரலி) அவர்களின் இளைய மகனும் நபி(ஸல்) அவர்களின் பேரனும் ஆவார்கள்

4) ஸஜ்ஜாத் (ரலி)

ஹுஸைன் (ரலி) அவர்களின் மகனாவார்கள்

5) முஹம்மத் பாக்கிர் (ரலி)

ஹுஸைன் (ரலி) அவர்களின் மகனாவார்கள்

6) ஜஃபர் ஸாதிக் (ரலி)

முஹம்மத் பாக்கிர் (ரலி) அவர்களின் மகனாவார்கள் . சிறந்த சட்ட மேதை. சன்னி பிரிவாலும் போற்றபடுபவர்.

7) மூஸா அல் காழிம் (ரலி)

ஜஃபர் ஸாதிக் (ரலி) அவர்களின் மகனாவார்கள் . கும்ஸ் எனும் ஜகாத் பொருட்களை வசூலிக்க நடைமுறையை உருவாக்கியவர்கள்.

8 ) றிழா (ரலி)

மூஸா அல் காழிம் (ரலி) அவர்களின் மகனாவார்கள் .கலீபா மஹ்முத் ரஷீதா அவர்கள் இளவரசராக நியமிக்கப்பட்டவர்கள் .

9) ஜவாத் (ரலி)

றிழா (ரலி) அவர்களின் மகனாவார்.அப்பாசிய கலீஃபாவின் துன்புறுத்தலுக்கு ஆளானவர். பெருந்தன்மை மற்றும் பக்திக்கு புகழ்பெற்றவர்.

10) ஹாதி (ரலி)

ஜவாத் (ரலி) அவர்களின் மகனாவார்கள் இவர் கலீஃபா அல் முத்தாஸ்ஸின் ஆணையின்படி விஷம் கொடுத்துக் கொல்லப்பட்டார்.

11) ஹஸன் அல் அஸ்கரீ (ரலி)

தந்தை ஹாதியின் மரணத்திற்கு பிறகு தனது வாழ்நாளில் பெரும்பகுதி கலீபாவால் இவருக்கு கட்டுப்பாடு விதிக்கப்பட்டது. பின்னர் இவரும் கலீஃபா அல் முத்தமீதுவின் ஆணையின்படி விஷம் கொடுத்துக் கொல்லப்பட்டார்.

12) இமாம் மஹ்தி

இறுதி இமாம் மற்றும் வாக்குறுதியளிக்கப்பட்ட மஹ்தி என்பவர் ஆவார். இவர் மீண்டும் இஸ்லாம் சரியான ஆட்சியை மீண்டும் நிலைநிறுத்தி, பூமியை நீதி மற்றும் சமாதானத்துடன் வழங்குவார். என நம்பப்படுகிறது.

(ஷியாக்களைப் பற்றி இன்னும் சொல்ல வேண்டியதுள்ளது)

ர.ரா



NOTE:

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |